# காஞ்சி
# மணிமொழியார்



71-வது
ஆண்டு
பிறந்தநாள்
மலர்
1970

பொதுவாழ்வில் உண்மை-நன்மை
இரண்டும் உயிர்நாடிகள். இவை இருப்பினும்
சில புகார்கள் வரும், அதைப்பற்றியெல்லாம்
கவலைப்படக்கூடாது. தான் செய்தது என்ன?
செய்யவேண்டியது என்ன? என்பதை அறிந்து
நேர்மையோடு செயல்பட்டுக்கொண்டுபோனல்
போதும். மனச்சாட்சிக்குப் பயந்து செயல்பட்டால்
போதும். நேர்மையுடன் கடமைகளைச் செய்து
கொண்டு செல்வோரைப் பழிச்சொற்கள் ஏதும்
செய்து விட முடியாது.

காஞ்சி மணிமொழியார்.

உண்மைக்கும், நேர்மைக்கும் உழைக்கும் உயர்திரு
காஞ்சி மணிமொழியார் அவர்கள் மேலும் பல ஆண்
டுகள் சிறப்பாக மக்களுக்குத் தொண்டு செய்ய அவ
ரது 71 வது பிறந்த நாளில் எங்களது நல்வாழ்த்
துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேம்.

# கோ-ஆப்டெக்ஸ்

## கைத்தறி ஆடைகள்

தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிட், சென்னை-8

தலைவர் : **எஸ்.கே.சம்பந்தன்** பி.ஏ., எம்.பி.

முத்து

தி.மு கழகத் துணைப் பொதுச் செயலாளர்

# காஞ்சி மணிமொழியார்



## 71ம் ஆண்டு பிறந்தநாள் மலர்

# திருவடிகளுக்குக் காணிக்கை

தொண்டால் தமிழர்களின் உள்ளத்தைக் கவர்ந்த பெரியவர் காஞ்சி மணிமொழியார் அவர்களின் 71-வது பிறந்த நாள் விழா—தமிழகத்தின் வரலாற்றில் பொன்னெழுத்தில் பொறிக்கப்பட வேண்டிய திருநாளாகும்.

அரை நூற்றுண்டுக்கு மேல் மக்கள் தொண்டில் ஈடுபட்டு, எதற்கும் கலங்காத திட மனத்தோடு, களைப்பும், சலிப்பும் இல்லாமல், அயராது உழைத்த அப்பெரியவருக்கு நன்றி காட்டும்—வணக்கம் செலுத்தும்—இந்த விழாவில் ஒவ்வொரு தமிழனும் பூரிப்பும் பெருமிதமும் கொள்கிறுன்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் பிறந்து—இருபதாம் நூற்றுண்டில் தம் தளராத உழைப்பால் தமிழர்களின் வாழ்வில் புத்தொளியையும் புதுமணத்தையும் சேர்த்து—இருபத்தோராம் நூற்றுண்டைக் காணப் போகும் இப்பெரியவரின் வாழ்க்கை—நமக்கெல்லாம் ஒரு பாட நூலாகும்.

தெளிந்த அறிவு, இன்னலை இன்பமாக மதிக்கும் மனேபாவம், துறவு உள்ளம், தியாக சிந்தை இவையனைத்துங் கொண்ட பெரியவர் காஞ்சி மணிமொழியார் அவர்களின் திருவடிகளில் இந்த மலரைக் காணிக்கையாக வைக்கிறேம்.

இந்தத் தியாகச் செம்மலைப் பற்றிய வாழ்த்துரைகளும், கருத்து மிகு கட்டுரைகளும், கவின்மிகு கவிதைகளும் நல்கிய மாண்புமிகு அமைச்சர்களுக்கும் அறிஞர் பெருமக்களுக்கும் கவிஞர்களுக்கும் மலர்க் குழுவின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேம்.

தமிழரின் நெஞ்சில் என்றும் நிலைத்து நின்று மணம் பரப்பப் போகும் இந்தத் தங்க மலருக்கு வண்ணமிகு ஓவியங்கள் தீட்டித் தந்த அருமை ஓவியர்கள் முத்து, ஜீவன் ஆகியோருக்கும், சிறப்பான முறையில் புகைப் படங்கள் எடுத்துத் தந்த புகைப்பட வல்லுநர்கள் ஆர். ஆர். ராஜா, பிரஸ் போட்டோ பீரோவினர் ஆகியோருக்கும், அழகு மிளிர அச்சிட்டுத் தந்த அருள் பிரின்டிங் ஒர்க்ஸ், ஐடியல் பிரின்டர்ஸ், ஆர். ஆர். அச்சகம் ஆகிய அச்சக உரிமையாளர்கள்—தொழிலாளர்களுக்கும் எங்களுடைய செழித்த அன்பை, சிறந்த நன்றியைச் செலுத்திக் கொள்கிறேம்.

பெரியார் மணிமொழியார் அவர்களின் தியாக உள்ளத்திற்கு—தளராத அரை நூற்றுண்டுப் பொதுத் தொண்டிற்கு–பிறந்த நாள் காணிக்கையாக—மட்டற்ற மகிழ்ச்சியோடு இந்த எழில் மலரை அவரது திருவடிகளில் வைத்து வணங்குகிறேம்.

அன்புள்ள,
கே. ஜி. இராதாமணாளன்,
தலைவர், மலர்க்குழு.



# காஞ்சி மணிமொழியார்

## 71ஆம் ஆண்டுப் பிறந்தநாள் விழாக் குழு

**காப்பாளர்கள்**

எம். ஜி. இராமச்சந்திரன், M.L.A.
S. K. சம்பந்தம், B.A., M.P.
S. S. M. சுப்பிரமணியம்

**தலைவர்**

முரசொலி மாறன், M.A. M.P.

**துணைத் தலைவர்கள்**

K. இராசாராம், B.A., M P.
V. பாலசுந்தரம், மேயர்
காஞ்சி கல்யாணசுந்தரம், M.P.
D. V. நாராயணசாமி, M.L C.
இராம அரங்கண்ணல், M.L.A.
K. A. கிருஷ்ணசாமி, M.A., B.L.
P. சிவசங்கரன். M.P.
நீலநாராயணன் M.L.C.
சலகண்டபுரம் ப. கண்ணன்
V. முனுசாமி, M.C.
சைதை சம்பந்தம்
எம். குமார்
T. M. பார்த்தசாரதி
P. வீரராகவன்

**செயலாளர்கள்**

R. D. பாஸ்கரன், M.C.
சோ. கி. மூர்த்தி, M.C.

**துணைச் செயலாளர்கள்**

V. P. அகிலன்
K P. தூயமணி
M. தணிகைமலை
மா. இராசன்

**பொருளாளர்கள்**

சா. கணேசன், M.C.
செ. கண்ணப்பன்

## மலர் வெளியீட்டுக் குழு

**தலைவர் :**

கே. ஜி. இராதாமணாளன்

**துணைத் தலைவர் :**

N. V. N. சோமு, B.A., B.L., M.C.

**செயலாளர்கள் :**

சா. கணேசன், M.C.
புலவர் மீ. ச. நடேசன்

**உறுப்பினர்கள் :**

சிறுவை மோகனசுந்தரம்
மா. செங்குட்டுவன்



என் 71-வது பிறந்தநாளான இன்று வாழ்த்துச் செய்திகள் அனுப்பியும், நேரில் வந்து மாலைகள், கைத்தறித் துணிகள் அணிவித்தும் வாழ்த்திய தமிழக அமைச்சர்கள். தலைவர்கள், அன்பர்கள், பிற கட்சித் தோழர்கள், தமிழறிஞர்கள், பொதுமக்கள் அனைவருக்கும் என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளு கிறேன்.

தமிழகம், சங்க காலத்தில் பெற்றிருந்த வலிவையும் பொலிவையும் சர்வதேசப் புகழையும் மீண்டும் பெற்று ஓங்கி வளர்வதற்குரிய எல்லா முயற்சி களையும் தி. மு. கழகம் என்னும் ஆற்றல் மிக்க இயக்கத்தின் வாயிலாகத் தமிழ்மக்கள் செய்யவேணடும் என்பதே என் பிறந்தநாள் செய்தியாகும். கருத்து வேறுபாடின்றி இந்நல் முயறசிகளில் எலலோரும் ஈடுபடவேண்டு மென அனைவரையும் வேண்டிக் கொள்ளு கிறேன்.



தி. மு. க. அரசு, சென்ற மூன்றுண்டு களாகத் தமிழ்மக்களின் நல்வாழ்வுக்கான சிறந்த பணிகளை ஆற்றிவருகிறது சென்ற இருபதாண்டுகளாகக் கிடைக்காமல் இருந்த சேலம் இரும்பாலையைப் பெற்றுத் தந்திருக் கிறது. இத்தகைய நல்லரசைத் தொடர்ந்து ஆதரிக்கவேண்டியது தமிழ் மக்களின் தனிப் பெருங் கடமை என்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். தமிழகம் புத்தொளி பெறுவ தாகுக! தி. மு. கழக அரசு வலிவும் பொலிவும் பெறுவதாகுக!

சென்னை
9—6—70

காஞ்சி மணிமொழியார்








1957 பொதுத் தேர்தலில் அண்ணா - கலைஞருடன் மணிமொழியாரின் தீவிர பிரசாரம்



# வாழும் வரலாற்றுச் சின்னம்





மாண்புமிகு முதலமைச்சர்

**கலைஞர். மு. கருணாநிதி**

1937-38ம் ஆண்டுகளில் தமிழகத்து மொழிப் போராட்டமெனும் மிக நீண்ட வரலாற்றுக் காவியம் தொடங்கியது. அந்தத் தொடர்கதையின் கதாநாயகர்களில் மிகச் சிலரே இன்றும் வாழும் வரலாற்றுச் சின்னங்களாக விளங்குகின்றனர். அந்தச் சின்னங்களிலே சின்ன உருவமும் சன்னமான குரலும் பொன்னான நெஞ்சும் மின்னும் விழிகளும் படைத்தவராய், பட்டாளச் சிப்பாய் போலத் துடிப்பு மிகு நடையும், துவளாச் சுறுசுறுப்பும், தொண்டாற்றும் ஆர்வமும் தியாக மனப்பாங்கும் ஒருங்கே ஓருருவாய்த் திரண்டெழுந்து நிலைநிற்கும் வண்ணமிகப் பெற்றவர் நமது அருமைப் பெரியவர் காஞ்சி மணிமொழியார் ஆவார்கள்.

பெரியார் அவர்களிடத்திலே எப்படி வயதுக்கும் உழைப்புக்கும். வயதுக்கும் தொண்டுக்கும், வயதுக்கும் சுறுசுறுப்புக்கும் சம்பந்தமில்லாத ஒரு நிலைமையினைக் காணுகின்றோமோ, அதேபோன்ற நிலைமையை நமது அருமைக் காஞ்சி மணிமொழியார் அவர்களிடத்திலே காணுவதோடு அவர் வயதுவரை நாமும் வாழ்ந்தால் அதே பண்புகளோடு வாழவேண்டும் என்ற விருப்பத்தினையும் பெறுகின்றோம்.

1962-ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலில் கழகம் 50 இடங்களைச் சட்டமன்றத்தில் பெற்று, நான் எதிர்க்கட்சித் துணைத் தலைவராகப் பொறுப்பேற்றுப் பணியாற்றிய நாளில் நமது மணிமொழியார் அவர்களும் சென்னை, தியாகராயநகரின் பிரதிநிதியாக வீற்றிருந்து சட்டமன்றத்தில் சிறப்புமிகு பணிகள் பல ஆற்றியுள்ளார்கள். நெசவாளர் பிரச்சினையானாலும், கழகப் பிரச்சினையானாலும் அல்லது தன்னைத் தேர்ந்தெடுத்தனுப்பிய தொகுதியினுடைய பிரச்சினையானாலும் அங்கே காஞ்சி மணிமொழியாரின் குரல் கட்டாயம் ஒலிக்கும். பேரறிஞர் அண்ணா அவர்களின் பெருமதிப்புக்குப் பாத்திரமானவர்களிலே மிக முக்கியமானவர் நமது பெரியவர் மணிமொழியார் அவர்கள்.

தலைமைக் கழகப் பொருளாளராக நான் இருந்ததால் சென்னையிலுள்ள ஏதாவது ஒரு தொகுதியில் நான் தேர்தலில் போட்டியிட்டால்தான் தலைமைக் கழக அலுவல்களைக் கவனிக்கவும், பிற தொகுதிகளுக்குப் பிரச்சாரத்துக்குச் செல்லவும் வாய்ப்பாக இருக்குமென்று அண்ணா அவர்கள் கருதினார்கள். அதற்கேற்ப சைதாப்பேட்டைத் தொகுதி நண்பர்கள் நான் அங்கே போட்டியிட

வேண்டுமெனப் பெரிதும் விழைந்தனர். அப்படியானல் காஞ்சி மணிமொழியாரும் அதே தொகுதியில்தான் நின்ருக வேண்டும். அண்ணு அவர்கள் காஞ்சி மணிமொழி யாருக்குச் சமாதானம் கூறிவிட்டு விருகம் பாக்கத்தில் நடந்த கழக மாநாட்டில் "சைதாப்பேட்டைத் தொகுதியில் திருவாளர் பதினேரு லட்சம் நிற்பார்" என்று என் பெயரை விளம்பரப் படுத்திவிட்டார்கள்.

தொகுதியில் வேட்பாளர் அறிமுகக் கூட்டம்; கோடம்பாக்கத்தில் நான் மேடைக் குப் போனபோது திடுக்கிட்டேன். பெரியவ ரான மணிமொழியாரை அங்கே காண வில்லை. எங்கே என்று கேட்டேன். வரவில்லை என்ருர்கள். நான் மனமுடைந்து போய்ப் பேசும்போது குறிப்பிட்டேன். "இந்தத் தொகுதியிலே நிற்கின்ற உரிமை படைத்தவர் காஞ்சி மணிமொழியார் அவர்கள். ஆனல் கழகம் என்னை இங்கு நிற்குமாறு ஆணையிட் டுள்ளது. காஞ்சி மணிமொழியார் என்னை விட எவ்வளவோ பெரியவர். அவர் இங்கு இருந்தாரானல் அவர் கைகளைப் பற்றி என் கண்களில் ஒத்திக்கொண்ட பின்புதான் பேசத் துவங்கியிருப்பேன். ஆனல் என்ன காரணத்தாலோ அவர் இங்கே வரவில்லை. இருந்தாலும் அவர் இருக்கும் திசைநோக்கி வணங்கிவிட்டு, ஆனலும் உடைந்த உள்ளத் தோடுதான் பேசுகிறேன்" என்று குறிப் பிட்டேன்.

மறுநாள் காலையிலிருந்து என் கார் கோபாலபுரத்திலிருந்து புறப்பட்டு நேரே கோடம்பாக்கம் போகும். தயாராக இருக்கும் மணிமொழியாரை ஏற்றிக்கொண்ட பின்பு தான் தொகுதிக்குள் தெருத்தெருவாக நுழையும். தேர்தல் முடியும் வரை அவரது அயரா ஒத்துழைப்பால் நான் வெற்றி கண்டேன்.

ஏறத்தாழ 35 ஆண்டுகளாக எவ்விதத் தொய்வுமின்றிச் சென்னை மாநகரத்தில் கழகப் பணியாற்றிவரும் பெரியவரின் அருந் தொண்டை மதித்து, திராவிட முன்னேற்றக் கழகத் தலைமை அவரைத் துணைப் பொதுச் செயலாளராக்கிப் பெருமை பெற்றுள்ளது.

அந்த 71-வயது இளைஞரின் அடியொற்றி நாமும் நடைபோடுவோம். அவரது ஆர்வமும் திறனும் நமக்கும் ஏற்பட விழைவோம். இந்தத் தமிழகத்தின் கோடானு கோடி மக்க ளுக்கும் ஓய்வின்றிப் பணியாற்ற உறுதி கொள்வோம். வாழ்க பெரியவர் காஞ்சி மணிமொழியார்!

*அறுபது ஆண்டுகள் வாழ்வது அரிது என்றல் அந்த வாழ்க்கையைப் பயனுள்ள வாழ்க்கை யாக வாழ்வது அதைவிட அரிது. அந்தப் பயனுள்ள வாழ்க்கையை மற்றவர்கள் அறிந்து கொள்ளுமாறு வாழ்வது அதைவிட அரிது. அப்படி அறிந்ததை மற்றவர்க்கு எடுத்துச் சொல்லிப் போற்றிப் புகழும் பெருந்தன்மை படைத்தவர்களாக இருப்பது கண்டுமகிழும் நிலையில் வாழ்வது எல்லாவற்றிலும் அரி தாகும். அத்தகைய தலைசிறந்த நிலையைப் பெற்று வாழ்பவர் மணிமொழியாராவார்கள்.*

*– அண்ணு – 17-5-60*





# மாசில்லா மணிமொழியார்





மாண்புமிகு கல்வியமைச்சர்

**நாவலர் இரா. நெடுஞ்செழியன்**

தி. மு. கழகக் காப்பாளர்களில், வயதில், பேரறிஞர் அண்ணா அவர்களுக்கு மூத்த அண்ணாக்களில் மிக மூத்த அண்ணாவாக இன்று விளங்கிவருபவர் மதிப்பிற்குரிய காஞ்சி மணிமொழியார் அவர்கள் ஆவார்கள்.

திராவிட இயக்கத்தோடு சேர்ந்து வளர்ந்த தலைவர்களின் பட்டியலில் தோழர் காஞ்சி மணிமொழியார் அவர்கள் முக்கியமான ஒரு இடத்தைப் பெற்றுள்ளார்கள். அவர் எழுபதாண்டு நிறைவுபெற்ற ஒரு இளைஞராகத்தான் எல்லோருடைய கண்களுக்கும் காட்சியளித்து வருகிறார். இளமையிலே முதுமை உள்ளம் கொண்டவர்களையும், முதுமையிலே இளமை உள்ளங்கொண்டவர்களையும் நாம் காண்கின்றோம். தோழர் காஞ்சி மணிமொழியார் அவர்கள் இரண்டாவது வகையைச் சேர்ந்தவர்.

அவர் சென்ற ஐம்பது ஆண்டுக்காலமாகப் பொதுவாழ்க்கையில் ஈடுபட்டுப் பொதுத் தொண்டு ஆற்றிவருகிறார். சுயமரியாதை இயக்கம், நீதிக்கட்சி, தமிழர் இயக்கம், திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் ஆகியவற்றின் வளர்ச்சியிலே தோழர் காஞ்சி மணிமொழியார் அவர்களுக்கும் ஒரு சிறப்புக்குரிய பங்கு உண்டு.

எதையும் ஆர்வத்தோடு ஆனால் ஆரவாரமில்லாமல், அழகாக ஆனால் ஆத்திரப்படாமல், சுறுசுறுப்போடு ஆனால் படபடப்பில்லாமல், அமைதியாகவும் அடக்கமாகவும் தெளிவாகவும் திட்பமாகவும் செய்துமுடிக்கும் திறன் அவருக்கு உண்டு. எவரிடத்திலும் அன்போடு பழகும் இனிய பண்பும், கழகம் இடும் பணியைச் செவ்வனே செய்து முடிக்கும் திறனும், கொள்கையினிடத்துத் தணியாப் பற்றும் நீங்கா ஆர்வமும், கண்ணியத்திற்கும் கட்டுப்பாட்டிற்கும் மதிப்புத்தரும் பெருந்தன்மையும், நல்ல தமிழ்ப் பற்றும், பகுத்தறிவு வழியிலே சீரிய நாட்டமும், கொள்கை வெற்றிக்காக இன்னல்களை ஏற்கும் உறுதி உள்ளமும் அவரிடத்தில் காணப்படும் சீரிய பண்புகளாகும். இவற்றையெல்லாம் கருதித்தான் அவரிடத்தில் கழகத்தின் துணைப் பொதுச் செயலாளர் பொறுப்பை ஒப்படைப்பது மிகவும் பொருத்தமுடையதாக இருக்கும் என்ற முடிவுக்கு நானும், கலைஞர் அவர்களும் வந்தோம்.

1938-ஆம் ஆண்டில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் அவரது

(அடுத்த பக்கம் பார்க்க)



# அந்தகாரத்தில் அகல் விளக்கு ஏற்றியவர்



மாண்புமிகு நிதியமைச்சர்

**கே. ஏ. மதியழகன்**

மறுமலர்ச்சி இயக்க மெனும் அருணோதய நேரம். எங்கணும் பகுத்தறிவு ஒளிக்கிரணங்கள் வீசிய தருணம். ஏன்? எதற்கு? எப்படி என்ற வினாக்கள் விசாரணை அறிவை எழுப்பிக் காண்டிருந்த காலம். வீணான சம்பிரதாயங்கள் பல சரிந்து, வேண்டாத பழக்க வழக்கங்கள் மேற்கொண்டு நகரமுடியாமல் மரணச் சுவாசம் விட்டுக் கொண்டிருந்த வேளை. மறுமலர்ச்சி இயக்கமெனும் மொட்டு இதழ் விரித்து மணம் வீச ஆரம்பித்துக் கொண்டிருந்த சமயம்.

இந்த நேரத்தில்தான் புதுமைக்கு வித்தூன்ற ஒரு பகுத்தறிவு அணி கிளம்பிற்று. தங்கள் வேலை நிச்சயமாக வெற்றி பெறும். தங்களின் கருத்துக்களிலே

(அடுத்த பக்கம் பார்க்க)

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

குடும்பமே ஈடுபட்டு அரும்பணி புரிந்துள்ளது என்றால், அவரது குடும்பத்திற்கும் இயக்கத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பைக காணலாம். அவர் பலமுறை சிறைக்குச் சென்றிருக்கிறார்.

அவர் நடத்திவந்த 'போர்வாள்' என்னும் கிழமையிதழ் திராவிடக்கழகம், பின்னர் திராவிட முன்னேறறக் கழகம் ஆகியவற்றின் கொள்கைகளைப் பரப்பவும், குறிககோள்களை விளககிக் காட்டவும், திட்டஙகளை நிறைவேற்றவும் மிகவும் உறுதுணையாக இருந்து வந்தது.

அவர் தமிழகச் சட்டமன்றப் பேரவை உறுப்பினராக இருந்து ஆற்றிவந்த அரும் பெரும் பணிகளை நான் வியந்து பாராட்டியிருக்கிறேன்,

'மாணிக்கவாசகம்' என்று தாய்-தந்தையர் வைத்த பெயரை 'மணிமொழியார்' எனறு அவரே மாற்றி வைத்துக்கொணடதிலிருந்து அவரது தமிழ்ப்பற்றை எவரும் நன்கு உணரலாம்.

கழகத்தவர், கழகத்தினரல்லாத பிற கட்சியினா ஆகிய எல்லோாககும் அவரிடத்தில ஒரு தனிபபற்றும், நம்பிக்கையும், மதிப்பும் உணடு.

காஞ்சி தந்த நல்லவர்களிலே ஒருவராகத் திகழும் மதிப்பிற்குரிய மாசில்லா மணிமொழியார் அவாகள், பல்லாண்டு, பல்லாணடு இனிது வாழ்வாராக என்று மனதார, வாயார வாழ்த்துகின்றேன்.

அவரது தொண்டுள்ளம் என்றென்றும் வாழ்க! அவரது சீரிய முயற்சிகள் எனறென்றும் வளர்க! அவரது உயரிய தொண்டுகள் என்றென்றும் வெல்க!

நியாயம் இருக்கிறது. நேர்மை இருக்கிறது. உண்மை இருக்கிறது. ஊராருக்குத் தேவையான நன்மை இருக்கிறது. என்றேனும் ஒருநாள் குவலயம் தங்கள் கொள்கையை ஏற்கும் என்ற குலேயாத நம்பிக்கையும் குன்ருத உறுதியும் அந்தப் பகுத்தறிவு அணியினருக்கு தெம்பையும், உற்சாகத்தையும் ஊட்டிக் கொண்டிருந்தது.

இந்த நம்பிக்கை இதயத்திலே வலுவூட்ட, அந்தகாரத்திற்கிடையே அகல விளக்கை ஏந்தியபடி தமிழ் மண்ணில பயணத்தைத்துவக்கிய அந்தப் பகுத்தறிவு அணியிலே ஒருவராக நமக்கு அடையாளம் காட்டிக்கொண்ட பெருமகனுர்தான், நமது அன்பிற்கும் மரியாதைக்கும் உரியவரும், கழகத்தின் துணைப் பொதுச் செயலாளருமான காஞ்சி மணிமொழியார் அவர்கள்.

தமிழ் நாட்டின் முன்னேற்றத்திற்காகவும் தமிழ்ச் சமுதாயத்தின் நல்வாழ்விற்காகவும் கடந்த நாற்பத்தைந்து ஆண்டுகளாக மணிமொழியார் புரிந்து வந்துள்ள மெச்சத் தகக சேவைகளை தமிழ் உணர்வுள்ள எவரும் இன்றைக்கு மறந்திருக்க நியாயமில்லை.

காஞ்சி நகர் தமிழ்ப் புலவரும் தலைசிறந்த வணிகருமான செங்கல்வராயரின் கடைசி மகனுக 9-5-1900 த்தில் பிறந்து, பச்சையப்பன் பள்ளியில் பயின்று—தமிழ் ஆர்வமுள்ள முதல் மாணுக்கராகத் தேர்ச்சி பெற்று—தமிழ்ப் பேரறிஞர் வெண்பாப்புலி வேலுச்சாமி அவர்களிடம் தமிழ் இலக்கியங்களை—முறைப்படிக் கற்றுத் தெளிந்தார் நமது மணிமொழியார்.

பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போதே மாணவர் தமிழ்ச் சங்கத்தின் செயலாளராகத்தமதுபொதுப்பணிக்கான நுழைவு வாயிலில் பிரவேசித்தார்.

பத்தாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோதே மிக்க எதிர்ப்புக்களுக்கிடையே 1918-ல் 'தமிழ் இளைஞர் சங்கம்' ஒன்றையும்—சர். பி. தியாகராசர் வாசக சாலை ஒன்றையும் தொடங்கி 1930 வரை அவற்றின் செயலாளராக இருந்து தமிழ்ப் பணிக்குத்தன்னைக் கூர்மைப்படுத்திக் கொண்டார்.

'கச்சிக் கலாவல்லித் தமிழ்ச் சங்கம்' என்ற ஒன்றினையும், நூல் நிலையம் ஒன்றினையும் துவக்கி அவற்றின் மூலம் பலரும்போற்றி வியந்திடும் வண்ணம் சொற்பொழிவுகளாற்றி பகுத்தறிவுக் கருத்துக்களையும், அறிவியல் விளக்கங்களையும்— குறள் சிறப்புகளையும் பொதுமக்களின் பரிசீலனைக்கு அளித்து வந்தார்.

இப்படியாக மணிமொழியார் அவர்களின் பொதுவாழ்வு பள்ளிக்கூடப் பருவத்திலேயே ஆரம்பமாகிவிட்டது.

1921ல் சொந்தச் செலவில் ஆரம்பப் பள்ளிக்கூடம் ஒன்றைத் துவக்கி அதைச் செவ்வனே நடத்தி வந்தார். 1924 முதல் 1927வரை வாலாஜா இந்துமதப் பாடசாலையிலும் 1927 முதல் 1930வரை காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியிலும் தமிழாசிரியராகப் பணிபுரிந்து வந்தார்.

அந்தப் பருவத்தில்தான் திராவிடர் இயக்க வளர்ச்சிப் பணியில் மட்டற்ற உற்சாகத்துடன் உழைத்து வரத் தலைப்பட்டார்.
பனகல், சர். ஆற்காடு ராமசாமி, சுரேந்திரநாத், டி. வி. சுப்பிரமணியம், ஜே. எஸ். கண்ணப்பர் போன்ற அக்காலப் பிரமுகர்களை வைத்து பகுத்தறிவுப் பிரச்சாரப் பொதுக்கூட்டங்களை நடத்தி வந்தார்.

என்னுடைய நண்பரும், நம் நாடு இதழ் பொறுப்பாசிரியருமான காஞ்சி கல்யாண சுந்தரம் எம். பி. அவர்கள் காஞ்சிபுரம் பள்ளியில் நமது மணிமொழியாரிடம் பயின்ற மாணவர் என்ருல் உங்களுக்கு ஆச்சரியமாகக்கூட இருக்கும். ஆனுல் உண்மை.

1930க்குப் பிறகு ஆசிரியப் பொறுப்பிலிருந்து விலகிய நமது மணிமொழியார் முழு நேரப் பொதுவாழ்வில் ஈடுபட்டார்.

தமிழகம் என்று மட்டுமல்லாமல், யாழ்ப்பாணம், மலேயா, சிங்கப்பூர் முதலிய நாடுகளுக்கெல்லாம் சுற்றுப்பயணம் செய்து, தமிழ்—தமிழர் மேன்மை, தமிழர் முன்னேற்றம், அதற்கான வழிமுறைகள் பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியவர் மணிமொழியார். அவருடைய விளக்கவுரைகள்—விவேக வாசலின் நுழைவிற்கான திரை நீக்கங்களாக அமைந்து—தமிழ் மக்களிடையே விழிப்புணர்ச்சியினைக் கணிசமான அளவிற்கு உண்டாக்கிற்று என்று கூறுவதில் சிக்கனம் காட்ட நான் விரும்பமாட்டேன். இடர்ப்பாடுகளுக்கிடையே நடைபெற்ற அந்த அறிவுப் பணிகள் அவரின் திட சித்தத்தையும்-தமிழர்

மேம்பாட்டில் அவருக்கிருந்த உறுதியையும் காட்டுகின்ற வெளியீடுகளாகும்.

1933ல் 'செங்குந்த மித்திரன்' என்ற மாத இதழின் ஆசிரியராக அவர் தீட்டிய தலையங்கங்கள் தமிழ் மக்களின் புதிய பயணத்திற்கான கை விளக்குகளாக அமைந்தன.

1938ல் முகிழ்த்த இந்தி எதிர்ப்புப் போர்ப் படைக்கு தன்னை ஒரு சேனை வீரராக்கிக்கொண்டவர் பெரியவர் மணிமொழியார் அவர்கள்.

அவர் குடியிருந்த பவழக்காரத் தெரு இல்லத்திலிருந்தே மாபெரும் இந்தி எதிர்ப்பு ஊர்வலம் ஒன்றைத் திரட்டி நடத்தித் தமிழர்களின் பாராட்டுதல்களைப் பெற்றார். சென்னையில் நடைபெற்ற முதல் இந்தி எதிர்ப்பு ஊர்வலமே அதுதான்!

அதுமுதல் எண்ணற்ற இந்தி எதிர்ப்புக் கூட்டங்களை நடத்தி விளக்கமளித்தார்.

பேராசிரியர் மயிலை சிவமுத்து, செ. தெ. நாயகம் போன்றோருடன் தோளிணைந்து நமது மணிமொழியார் எழுப்பிய சங்கநாதங்கள் தமிழர்களின் சிந்தனையைத் தூண்டிவிடும் உணர்ச்சி உரைகளாகத் திகழ்ந்தன.

அக் காலத்தில் இந்திஎதிர்ப்பு அறிக்கைகளையும், நூல்களையும், பொதுகூட்ட அறிவிப்புகளையும்—பிறர் அச்சடிக்க அஞ்சி ஒதுங்கியபோது-நமது மணிமொழியார் அவர்கள் அவைகளை தமது சொந்த அச்சகத்திலேயே அச்சிட்டுத் துணிவுடன் வெளியிட்டு வந்தார்கள்.

1937ல் 'யங் கிரிடிக்ஸ் அசோசியேஷன்' (Young Critics Association) அமைப்பின் சார்பில் 'நவயுகம்' என்ற வாரஏட்டைத் துவக்கி அதற்கு நம்மை ஆட்கொண்ட அண்ணனும் பேரறிஞர் அண்ணா அவர்களை ஆசிரியராக்கி சமுதாய மறுமலர்ச்சிக்கான எழுத்துச் சேவையினைப் புரிந்தவர் பெரியவர் காஞ்சி மணிமொழியார் ஆவார்கள்.

அதனையடுத்து "போர்வாள்" என்ற வார ஏட்டினைத் துவக்கி, தமிழ் காத்து தமிழகத்தை வாழ்விக்கப் புறப்பட்ட நமது கழகத்திற்கான அறிவாயுதங்களை வடித்துக்கொடுக்கின்ற பணிக்குத் தன்னை ஒப்படைத்துக் கொண்டார்.

1948ல் அவினாசிலிங்கம் அவர்கள் கல்வி அமைச்சராக இருந்தபோது எழுந்த இரண்டாவது இந்தி எதிர்ப்புப் போரிலும் மணிமொழியார் அவர்களின் பங்கு கழகக் குறிப்புகளிலே மரியாதைக்குரிய வகையில் பதிவாக்கப்பட்டிருப்பதை யாரும் மறந்திருக்க முடியாது.

17-7-1948ல் சென்னை செயின்ட்மேரி மண்டபத்தில் மறைமலை அடிகளார் தலைமையில் கூடிய வரலாற்றுச் சிறப்புடைய இந்தி எதிர்ப்பாளர் மாநாட்டின் செயலாளராக இருந்து அம் மாநாட்டினை வெற்றிகரமாக்கிய பெருமைக்கும் நமது மணிமொழியார் அவர்கள்தான் சொந்தக்காரர் என்று கூறுவதில் களிப்பெய்துகின்றேன்.

அம் மாநாட்டில்தான், பெரியார், அண்ணா, புரட்சிக்கவி பாரதிதாசன், மறைமலை அடிகளார், திரு. வி. க, ரெவரண்ட் அருள் தங்கையா, முதலிய பல தரப்பட்ட கருத்தினைக் கொண்டவர்களும், தமிழ்உணர்வால் ஒன்றாக இணைந்துநின்ற காட்சியினைத் தமிழகம் கண்டது.

இதற்கு மணிமொழியார் அவர்களின் உழைப்பும் பேரூக்கமும்தான் காரணமென்பது மிகையாகாது என்று கருதுகின்றேன்.

1949ல் சென்னை பிராட்வேயில் அரசியல் தலைவர்களையும், தமிழ்ப் புலவர்களையும் ஒருங்கிணைத்து இவர் நடத்திக் காட்டிய 'திருவள்ளுவர் மாநாடு'ம் வரலாற்றுச் சிறப்புக்குரிய மாநாடாகும்.

இப்படி சுயமரியாதை இயக்கம் தொடங்கிய காலம் முதல் இன்றுவரை அவர் இந்த நாட்டுக்கும், குறிப்பாக தமிழ் மொழிக்கும், அதிலும் சிறப்பாக நமது கழகத்தின் வளர்ச்சிக்கும் புரிந்து வந்துள்ள சேவைகளும்—பயணத்திற்கிடையே அவர் ஏற்றுக்கொண்ட கஷ்ட நஷ்டங்களும், தியாகங்களும், நன்றிக் கடனுடன் கௌரவிக்கப்பட வேண்டிய மகத்தான பொதுத் தொண்டாகும்.

வாழ்க்கைப் பயணத்தில் எழுபத்தியோராவது மைல் கல்லில் கம்பீரத்துடனும், சாந்தத்துடனும், சிரித்த முகத்துடனும் நின்றபடி—நமக்கெல்லாம் உறுதுணையாய், உற்சாகம் தரும் சக்தியாய் விளங்கிவரும் பெரியவர் காஞ்சி மணிமொழியார் அவர்களை இந்த மகிழ்ச்சிக்குரிய நன்னாளில் வாழ்த்திப் பாராட்டுவதில் பெருமிதம் கொள்கின்றேன், மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றேன்.

முதல் தலைமுறையின் அடையாளங்களில் ஒருவராகத் திகழ்ந்துவரும் பெரியவர் மணிமொழியார் வாழ்க! நீடு வாழ்க! என வாழ்த்தி எனது அன்பினை அவரின் விழாக் கோலச் சிறப்புகளோடு இணைக்கின்றேன்,



# கட்டுப்பாடுமிக்க கடமைவீரர்



மாண்புமிகு பிற்பட்ட வகுப்புகள் நலத்துறை அமைச்சர்

**என். வி. நடராசன்**

திராவிட முன்னேற்றக் கழகம் ஆல் போல் வளர்ந்து இன்று ஆட்சிப்பீடத்தில் அமர்ந்து நல்லாட்சி நடத்தும் வலிவும் பொலிவும் பெற்றுள்ளது. அரசியல் உலகில் இவ்வரலாற்றுச் சிறப்புமிக்க அத்தியாயத்தை உருவாக்கி நிலைபெறச் செய்வதற்கு நமது மாபெருந்தலைவர் பேரறிஞர் அண்ணா அவர்கள் தமது வாழ்வையே அர்ப்பணித்துள்ள விவரங்களை, நமது நாடு மட்டுமல்ல, உலக நாடுகளிலுள்ள அரசியல் மேதைகளும் இன்று உணர்ந்துள்ளார்கள் என்று கூறின் மிகையாகாது.

நமது இயக்கத்திற்கு மட்டுமின்றி நாட்டுக்கும், சமுதாயத்திற்கும் இப்பெருமையினை உரிமையாக்க நமது அண்ணா அவர்கள் கடந்துவந்த பாதைகள் கரடுமுரடானவைமட்டுமல்ல; பேராபத்தை விளைவிக்கக்கூடிய பயங்கரமான பாதைகளாகும். அவைகளைத் தமது பண்பாலும், பாசத்தாலும், சொல்லாலும், செயலாலும், எழுத்தாலும் எழுச்சியாலும் இதற்கும் மேலாக நமது மதிப்பிற்குரிய மாபெருந்தலைவர் பெரியார் அவர்களிடம் தூய்மையாகப்பெற்ற அனுபவத்தாலும் ஆற்றலாலும் கடந்து, வெற்றி பல பெற்று, கழக அரசை-மக்களரசைக் கண்டு, அதனை இனிதே நடத்தி, எதிர்காலத்தில் தொடர்ந்து நடத்துவதற்கான வழிவகைகளையும் வகுத்துத் தந்து மறைந்துவிட்டார்.

பேரறிஞர் அண்ணா அவர்களின்கடந்த 40 ஆண்டுகாலப் பொதுப்பணியில் உடனிருந்து தொண்டாற்றி வரும் தலைவர்களில் ஒருவரும், எனது அருமை நண்பரும், கழகத் துணைப் பொதுச் செயலாளருமான காஞ்சி மணிமொழியார் அவர்களின் 71 வது ஆண்டுப் பிறந்தநாள் விழா சீரும்சிறப்புமாக நடைபெறுகிறதென்றால் கழகத் தோழர்களுக்கு மட்டுமல்ல, பொதுவாழ்வில் பங்கு பெற்றுள்ள அனைவருக்குமேமகிழ்ச்சியளிக்கக் கூடியதாகும்.

காஞ்சி மணிமொழியார் அவர்களை 1936-ஆம் ஆண்டிலிருந்து அறிவேன். நமது இயக்கத்தின் பல்வேறு முக்கிய பணிகளில் கடந்த 33 ஆண்டுகளாக மதிப்புமிக்க பெரியார், பேரறிஞர் அண்ணா ஆகியோரின் அன்புக் கட்டளைக்கிணங்க அருந்தொண்டாற்றி வருகிறார்கள். அமைதியானவர்;

(அடுத்த பக்கம் பார்க்க)



# தமிழன்னையின் பீடுகாத்த பெருந்தகை



மாண்புமிகு தொழில் அமைச்சர்

**எஸ். மாதவன்**

ஒரு கட்சியில் அல்லது இயக்கத்தில் சேர்ந்து அதனுல் பெருமை அடைவோர் பலர்; தாம் சேர்ந்துள்ள கட்சிக்கோ, இயக்கத்திற்கோ தம் குணநலனுல் பெருமை சேர்ப்போர் சிலர். அத்தகைய ஒரு சிலரில் சிறந்து விளங்கும் சான்ருேர் உயர்திரு காஞ்சி மணிமொழியார் அவர்கள்.

கடந்த ஐம்பது ஆண்டுகளாக, நம் சமுதாய அநீதிகளைத் துடைப்பதற்கென எழுந்த எல்லா இயக்கங்களிலும் மணிமொழியார் அவர்களின் சீரிய பணி சிறந்த இடம் பெற்றுள்ளது. தமிழ் மொழியின் ஏற்றத்திற்கு இடையூறுகள் விளைந்த பொழுதெல்லாம் முழுமூச்சுடன் இடையூறுகளை எதிர்த்துச் சிறை சென்று தமிழன்னையின் பீடு காத்த பெருமை அன்னாருக்கு உண்டு.

தோற்றத்தில் எளிமை, சொல்லில் இனிமை, செயலில் தூய்மை – இப்பண்புகளுக்கு எடுத்துக் காட்டாக இலகுபவர் காஞ்சி மணி மொழியார். காஞ்சி மணியின் ஒளியை இழந்து நிற்கும் நமக்கு, காஞ்சி மணியின் மொழியாக அவர் நம் அனைவருக்கும் நீண்டநாள் வழிகாட்டி வாழ வேண்டும் எனப் பணிவுடன் வாழ்த்துகிறேன்.

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

ஆனல் கொள்கையில் – இலட்சியத்தில் தளரா உறுதிமிக்கவராவார்.

நம் அருமை அண்ணா அவர்கள் கடமை, கண்ணியம். கட்டுப்பாடு—'எதையும் தாங்கும் இதயம் வேண்டும்' என்று கழகக் கண்மணிகளுக்கெல்லாம் வலியுறுத்தி வந்த அப் பொன்மொழிகளுக்கேற்ப காஞ்சி மணிமொழியார் அவர்கள் கட்டுப்பாடுமிக்க கடமை வீரராகத் திகழ்ந்துவருகிருர்கள்.

அவர்கள் நடத்திவந்த 'போர்வாள்' ஏடு, இயக்கத்திற்கு முக்கிய தொண்டுபுரிந்த சிறந்த ஏடுகளில் ஒன்ருகும். உடல் தளர்ந்தாலும், உள்ள உறுதியிலிருந்து சிறிதும் தளராமல் தடம் புரளாமல் கண்ணும் கருத்துமாயிருந்து, கழகத்திற்கும் கழக அரசுக்கும் கலைஞர் ஆட்சிக்கும் உற்ற துணைபுரிந்து வரும் காஞ்சி மணிமொழியார் அவர்களும், அவரது அருமைத் துணைவியார் அவர்களுகு அவரது குடும்பத்தினரும் நீடுழி வாழ்க! வாழ்க என்று உளமார வாழ்த்துகின்றேன்.



# சுட்டுவிரல்காட்டிய பாதையில்...




மாண்புமிகு உள்ளாட்சித்துறை அமைச்சர்

**மா. முத்துசாமி**


நண்பர்கள் சிலர் என்னை அணுகி காஞ்சி மணிமொழியார் அவர்கட்கு 70 ஆண்டுகள் நிரம்பி 71-வது ஆண்டு தொடங்க இருக்கிறது என்று தெரிவித்த போது, எனக்கேற்பட்ட வியப்பிற்கு அளவே இல்லை. என்னால் நம்பவும் முடியவில்லை. அமைதி தவழும் முகமும், ஆரவாரமில்லாத அரசியல் போக்கும், எடுத்தெறிந்து பேசாத இயல்பும், இயக்கத்திற்காக எதையும் செய் யும் தியாகப்பண்பும், குள்ளமான உருவமும், குறுகுறுத்த பார்வையும் கொண்டு ஏறத்தாழ 50 ஆண்டுகள் பொதுவாழ்க்கையில் ஈடு பட்டு அருந் தொண்டாற்றி இன்னும் ஐம்பது ஆண்டுகள் சோர்வின்றிப் பொது வாழ்வு ஆற்ற வல்லமை பெற்றவராகக் காட்சிதரும் அவருக்கு எழுபது ஆண்டுகள் நிரம்பிவிட்டதாக அறிவித்தபோது வியப் பேற்படுவதில் ஆச்சரியமில்லை.

பேரறிஞர் அண்ணா அவர்கள் பிறந்த திருத்தலத்தில் பிறந்த இவர் முதன்முதலில் செங்குந்தர் சமூகத்தினரின் மறுமலர்ச்சிக் காகப் பாடுபட்டுத் தமது பொதுவாழ்க்கை யைத் தொடங்கினார்கள். தமிழின்மீது தணி யாத பற்றுகொண்ட மணிமொழியார், இந்தி எதிர்ப்பு இயக்கம் தென்னாட்டில் மலர்ந்த பொழுது அதில் முழு மூச்சுடன் இறங்கினார். 1948ஆம் ஆண்டு திரு அவினாசிலிங்கனார் கல்வியமைச்சராக இருந்தபொழுது, இரண் டாவது இந்தி எதிர்ப்புப் போராட்டம் துவங்கப்பட்டது. அந்தப் போரில் மணி மொழியார் தீவிரமாக இறங்கி வரலாற்றுச் சிறப்புமிக்க இந்திஎதிர்ப்பு மாநாட்டினைக் கூட்டி பல்வேறு கட்சித் தலைவர்களையும் கலந்துகொள்ளச் செய்தவராவார். ''மாங் குயில் கூவிடும் பூஞ்சோலை அது எமை மாட்ட நினைக்கும் சிறைச்சாலை'' என அவர் தம் பொது வாழ்க்கையில் ஆறு முறை சிறை சென்றிருக்கிறார். அதில் நான்குமுறை தமிழ் காக்க இந்தி எதிர்ப்புப் போராட்டங்களில் ஈடுபட்டுச் சென்றிருக்கிறார் என்றால் அவர் கொண்டுள்ள தமிழ்ப்பற்றின் ஆழம், தமிழுக் காக அவர் ஆற்றிய தொண்டு நமக்கு நன்கு விளங்கும்.

முதலில் பத்திரிகை ஆசிரியராகப் பணி புரிந்த இவர் அறிஞர் அண்ணா அவர்களை ஆசிரியராகக் கொண்டு அந்தக் காலத் திலேயே மிகுந்த பொருள் நெருக்கடிக் கிடை யிலும் எதிர்ப்புகளுக்கிடையும் ''நவயுகம்'' என்ற வார ஏட்டைத் திறம்பட நடத்திக் காட்டியவராவர். மணிமொழியார் அவர்களை

ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த "போர் வாள்" என்ற வார இதழ் முன்னேற்றக் கழகத்தின் போர்க்குரலாக விளங்கி வந்தது.

1962-ம் ஆண்டு நடைபெற்ற பொதுத் தேர்தலில் தியாகராய நகர் சட்டமன்றத் தொகுதியில் அன்றைய ஆளுங்கட்சியின ரால் நிறுத்தி வைக்கப்பட்ட பெரிய பண முதலாளியை வீழ்த்திவெற்றி பெற்றுச் சிறந்த தொண்டாற்றியவராவர்.

ஒருமுறை அறிஞர் அண்ணு அவர்கள் பேசும்போது "ஞாயிற்றுக்கிழமை ஒரு கட்சி யும் திங்கட்கிழமை வேறொரு கட்சியும் செவ்வாய்க்கிழமை மற்ருெரு கட்சிக்குத் தலேவராகவும் மாறும் வழக்கம் கொண்ட வர்கள் உள்ள இந்த நாளில், ஒரே கட்சியில் அதுவும் ஏசல்களேயும் இழிமொழிகளேயும் தாங்கி, அடக்குமுறைகளேக் கண்டு அஞ் சாது, எந்தப் பயனேயும் கருதாது நாட்டு மக்கட்கு சேவை செய்யும் மனப் பக்குவத்தை (மட்டுமே கொண்டு) முப்பது ஆண்டுகள் தொடர்ந்து ஒரே கட்சியில் இருந்தால் அதுவே பெரிய தியாகம்" என்ருர்கள்.

அதற்கேற்பக் காஞ்சி மணிமொழி யார் அவர்கள் கடந்த ஐம்பது ஆண்டு களாகப் பொது வாழ்க்கையில் தாம் ஏற்றுக் கொண்ட தலேவனின் சுட்டு விரல் காட்டிய பாதையில் சுடர்முகம் காட்டி இலட்சியப் பயணத்தைத் தொடர்ந்தவராவர்.

மணிமொழியாரின் எழுத்து, நெளிந்து கிடந்த சமுதாயத்தை நிமிர்த்தவல்ல ஆற்றல் மிக்கதாய் விளங்கிற்று.

அவரது பேச்சு ஆதிக்கக்காரர்களுக்கு அறை கூவலாகவும் அனுதைகளுக்கு அரவணேப்பாகவும் திகழ்ந்தது! அவர் தான் ஏற்றுக்கொண்ட பொறுப்புக்களே எத்துணே இடுக்கண்கள் வந்தாலும் அத்தனேயையும் பொறுமையோடு தாங்கிக்கொண்டு வெற்றி கரமாகச் செய்து முடிக்கும் செயல் வீரராவர்! ஆற்றல் மிக்க சாதனேகளே அமைதியாகத் தொடர்ந்து ஆற்றி வீங்கு புகழ் கொண் டிருப்பவர் மணிமொழியார் அவர்கள் ஆவார்.

பேரறிஞர் அண்ணு அவர்களின் மறை வுக்குப் பிறகு, வயதிலும் அனுபவத்திலும் நம்மை எல்லாம் வழிநடத்திச் செல்லத்தக்க பெரியவர்கள் இல்லே என்ற குறையை காஞ்சி மணிமொழியார் போன்றவர்கள் போக்கி வருகின்ருர்கள். இவரது அயராத உழைப்பையும் ஆற்றலேயும் கண்டுதான் கழகத்தின் தலேவர் கலேஞர் அவர்களும் பொதுச் செயலாளர் நாவலர் அவர்களும் கழகத்தின் துணேப் பொதுச் செயலாளர் பொறுப்பை இவருக்கு அளித்துள்ளனர்.

எழுபது வயது நிரம்பிய அவருக்கு எடுக்கப்படவிருக்கும் விழா, அவர் எந்த இலட்சியங்களுக்காகப்பாடுபட்டாரோ அவை நிறைவேறும் விழாவாக, வருங்கால சந்ததி யினர் அவர் முறையைப் பின்பற்றி நடந்து புகழ்பெற அமையும் நல்விழாவாக நடக்க விரும்புகிறனே.

வாழ்க அவர் பல்லாண்டு!

வளர்க அவர் தொண்டு! !





# நம்ப முடியவில்லை



மாண்புமிகு கூட்டுறவுத்துறை அமைச்சர்

**சி. பா ஆதித்தனர்**

காஞ்சி மணிமொழியார் அவர்களுக்கு 70 வயதாகி விட்டதா? என்னல் நம்ப முடியவில்லை. அவர் பம்பரம் போல் சுழன்று, கழகப் பணியாற்றும் பாங்கினைப் பார்த்த எவரும், அவருக்கு 70 வயதாகி விட்டது என்பதனை நம்பமாட்டார்கள்.

கழகத்தின் துணைப் பொதுச் செயலாளராகப் பணியாற்றி வரும் காஞ்சி மணிமொழியார் அவர்கள் தன் வாழ்க்கையை ஆரம்பப் பள்ளி ஆசிரியராகத்தான் தொடங்கினர்.

1937 ஆம் ஆண்டு அண்ணு அவர்களை ஆசிரியராகக்கொண்டு 'நவயுகம்' என்ற வார ஏட்டினை நடத்தினர். "கடுமையான பண நெருக்கடிக்கு இடையிலும் கழகத்தின் கருத்துக்களைப் பரப்பிட அந்த ஏட்டினை நடத்தி வந்தார்" என்று அண்ணு, காஞ்சி மணிமொழியாரைப் பாராட்டி இருக்கிருர்.

இந்தி எதிர்ப்பு தமிழ் நாட்டில் தீவிரமாக பரவாத நேரத்திலேயும் ஊர்வலங்கள்-பொதுக் கூட்டங்கள் நடத்தி, இந்தி எதிர்ப்புக்கனலைத் தமிழர்களின் உள்ளத்தில் பரப்பினர். 1948 ஆம் ஆண்டு முதல் இன்றுவரை 6 முறை சிறை சென்றுள்ள பெரியவர் காஞ்சி மணிமொழியார், 3 முறை இந்தி எதிர்ப்புக்காகச் சிறை சென்றுள்ளார்.

1962 முதல் 67 வரை 5 ஆண்டு காலம் தமிழகச் சட்ட மன்ற உறுப்பினராகப் பணியாற்றிய அவர் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து தொண்டாற்றிட, என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.







# அனுபவக் களஞ்சியம்



மாண்புமிகு அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர்

**கே. வி. சுப்பையா**

இன்றைய துணைப் பொதுச் செயலாளரும் நீண்ட நெடுநாளைய கழகத் தலைவர்களில் ஒருவருமான அண்ணன் காஞ்சி மணிமொழியார் அவர்களின் 71–வது ஆண்டுப பிறந்த நாள விழா என அறிந்து மிகக மகிழ்ச்சியடைகின்றேன். விழாவினையொட்டி மலா வெளியிடுகின்ற குழுவினரின் முயற்சி வெற்றி பெற என் வாழ்ததுக்கள். சிறப்பு மலா், அறிவியக்க மணத்தோடு மலா்வதாக.

சுயமரியாதைக் காலம் தொட்டு இன்று வரை வளா்ந்துள்ள கழக வரலாற்றில் இடம் பெற்றவா் அண்ணன் மணிமொழியாா்.

காஞ்சி மணிமொழியாா் அவா்கள் பொதுநலப் பணியில் புடம் போட்டு எடுக்கப்பட்டு மாற்றுக் குறையாமல் நிற்பவா்; அனுபவக் களஞ்சியம்!

நம்மில் பலா் பிறக்காதபோதே அவா் தன்மான இயக்க வீரராக விளங்கினா். அவருடைய பொது நலப் பணியின் வயது 52 என்ற நிலை, அவரை, தந்தை பெரியாா் போன்ற தலைவா்களின் வரிசைக்கு உயா்த்துகின்றது.

திராவிட முன்னேற்றக் கழகம் பேரறிஞா் அண்ணா அவா்கள் தலைமையில், ஜனநாயக முறையில ஆட்சியைக் கைப்பற்றி, இன்று கலைஞா் கருணாநிதி அவா்கள் தலைமையில் அகிலம் புகழ ஆட்சி நடத்துகிறது என்றால், காஞ்சி மணிமொழியாா் போன்ற மாவீரா்களின் உழைப்பும் வியா்வையும் தான் அதற்கு அடிப்படை அமைத்துத் தந்தது எனபதை மக்கள் அறிவாா்கள்.

காஞ்சி மணிமொழியாருக்கு எடுக்கும் 71ஆம் ஆண்டுப் பிறந்த நாள் விழா, வாழையடி வாழை என வளரும் தன்மான இயக்கத்துக்குப் புதிய வலிமை சோ்க்கும் என்பது உறுதி.

அவா் நீண்ட காலம் வாழ்ந்து நாட்டுக்கும், கழகத்திற்கும் சேவை செய்ய நல்ல உடல் நலம் பெற வாழ்த்துகின்றேன்.

வாழ்க, காஞ்சி மணிமொழியாா்!



# இளைஞர்களின் முன்னோடி!



மாண்புமிகு தொழிலாளர் நல அமைச்சர்

**க. வேழவேந்தன்**

'தன்மான' இயக்க காலம் முதல் தன்னை யே பொதுவாழ்விற்குக் காணிக்கை யாக்கிய வர் காஞ்சி மணிமொழியார் ஆவார்.

பகுத்தறிவுத் தொண்டராய், பல்வேறு ஏட்டாசிரியராய் கழகத் தலைவராய் வளர்ந் தோங்கி, இலட்சோபலட்சம் இளைஞர் களுக்கு முன்னோடியாகத் திகழ்பவர் காஞ்சி மணிமொழியார்.

'லட்சமா இலட்சியமா? என்ற கேள் விக்கு விடைகாண முயன்றோரில் தன்னை இலட்சிய வாழ்விற்கென்று உருவாக்கிக் கொண்டவர் காஞ்சி மணிமொழியார் ஆவார்.

'மொழிப் போர்' என்ற மானப் போர் மூண்டபோது, விழியான தாய்மொழியைக் காக்க வெகுண்டெழுந்து வீர காவியம் படைத்தவர் காஞ்சி மணிமொழியார் ஆவார்.

ஒரே பாதை, ஒரே தலைவன், ஒரே இலட்சியம் என்ற அரசியல் கற்புக்கு இலக் கணமாகத் திகழ்பவர் காஞ்சி மணிமொழி யார் ஆவார்.

அடக்கத்தால், அயராத உழைப்பால், ஆழ்ந்த தொண்டுள்ளத்தால் இயக்கத்தில் நிலையான இடத்தைப் பெற்றுக், கழகத்தின் துணைப் பொதுச் செயலாளராக உயர்ந்திருப்பவர் காஞ்சி மணி மொழியார் ஆவார்.

அவர் 'போர் வாள்' என்கிற ஏடெடுத்து அறியாமைப் பேயை விரட்டிய நாட்களில், மாணவனாக இருந்த நானும் அந்த ஏட்டிலே எழுதி இன்பம் பெற்றவன்.

வயது ஆனாலும், வாடாத தொண்டுள் ளத்தால் வாலிபராகத் திகழ்பவர் காஞ்சி மணிமொழியார் ஆவார்.

70 ஆண்டுகளைக் கடந்து செல்லும் மணிமொழியாரின் புகழ், விழுது பல பெற்ற ஆலமரம்போல் ஓங்கி உயர்ந்துள்ளது.

வாழ்க அவர் புகழ்ப் பணி!

வெல்க அவர் தூய உள்ளம்!

# எனக்கும் ஓர் அண்ணன் இருக்கிறார்!

சி. பி. சிற்றரசு
தமிழக சட்டமன்ற மேலவைத் தலைவர்

கச்சித் திருநகர்—பல்லவர் பெருநகர்—எம்பெருமான் கோயில், ஈசன் கோயில் என எண்ணற்ற தேவாலயங்கள் நிறைந்த அழகு நகர்—அறிஞர் அண்ணா அவர்கள் பிறந்த அரியநகர்—நான் பிறந்த பூமி! அந்தத் திரு நகரில்தான் அண்ணன் காஞ்சி மணிமொழியாரும் தோன்றினார் என்பது ஒரு தித்திக்கும் செய்தி யாகும்.

திராவிட முன்னேற்றக் கழகத்தவர் அனைவருமே என்னை அண்ணன் என்று அழைக்கிறார்கள். அதேபோல் நான் அழைக்க ஓர் அண்ணன் இருக்கிறார் என்று எண்ணும்போது மட்டில்லா மகிழ்ச்சியடை கிறேன். என் பிறந்த நாளில் கலைஞர் அவர் கள் தென்னகத்தின் பழந் தலைமுறையினர் என்று குறிப்பிட்டது என்னை மட்டிலுமே குறிப்பதாக நான் கொள்ளவில்லை. அண் ணன் காஞ்சி மணிமொழியாரையும், திரு வாளர் ஜி. பி. சோமசுந்தரம் அவர்களையும் சேர்த்துக் குறிப்பிட்டதாகவே கொள்கிறேன்.

பழந் தலைமுறையினர் பலர், கால வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டு விட்டனர். எஞ்சியுள்ள நான், திரு ஜி. பி. சோமசுந்தரம், அண்ணன் மணிமொழியார் போன்ற சிலர், ''நாமாவது மிஞ்சினோமே—சாவின் சன்னிதானத்தில் நுழையாமல் இருக் கிறோமே—நம் அருமந்த தம்பியர்கள் நல் வாழ்வு பெற்று நாடாளும் பான்மையை எண்ணி இறும்பூது எய்துவதாய் நம் ஆயுள் வளர்கிறதே—வளரட்டும்'' என்ற களிப்பால் தான் தொடர்ந்து வாழ்ந்து கொண்டிருக் கிறோம் என்று கொள்வதில் தவறில்லை.

அந்த வகையில் அண்ணன் மணி மொழியார் கழக வேலைகளில் ஈடுபட்டு என்றும் பணி செய்துகொண்டுவருகிறார். நீறுபூத்த நெருப்புபோலப் பணிபுரிந்து வரு கிறார். எங்கே புகை இருக்கிறதோ அங்கே நெருப்பு இருக்கிறது என்ற உண்மையைப் போல், எங்கே மணிமொழியார் இருக் கிறாரோ அங்கே கழகப்பணி இருக்கிறது என்று பொருள். வயதில் அவர் என்னிலும் எட்டாண்டுகள் மூத்தவர்; நான் இளையவன். ஆனால் தோற்றத்தில் நான் மூத்தவன். அவர் இளையவர். காலப் பரிசோதனையில் கழக வேலையில் என்னைக் கடமை அரித்துத் தின்று விட்டது. அவரும் என்னைப்போலக் கடுமை யாக உழைத்தவர்தான் எனினும் அவரை முதுமைத் தோற்றம் அண்ட அஞ்சி ஒதுங்கி நிற்கிறது.

மணிமொழியார் ஈன்ற பேராசிரியர் இளஞ் செழியன் முதலிய செல்வங்கள், கல்வியிற் சிறந்து, அறிவாற்றல் மிக்கோராய்த் திகழ் கின்றனர். ஒரு தந்தையின் கடமை எதுவோ, ஒரு தாயின் கருணை எதுவோ, அதைப் பரிபூரணமாகப் பெற்றவர்கள். அந்த மக்கள். ''ஈன்ற பிள்ளைகள் நல்லவர்கள்; கற்றவர்கள்; கடமையுணர்ந்தவர்கள்; பெற்றோரைப் பேணி வாழ்பவர்கள்'' என ஊரார் போற்றிப் பாராட்டும் வளமான சொற்களைச் செவி மடுக்கும் பெற்றோருக்கு, அவற்றினும் இனிய இன்பம் வேறொன்றும் இருக்கமுடியாது. அவ்வளவு கவர்ச்சியான குடும்பம் அண்ணன் மணிமொழியாரின் குடும்பம். வறுமை வந்திடின், பொதுவாழ்வில் அதைப்

பெருமையாக ஏற்றுக்கொண்டு அனுவள வும் கலங்காமல் பணியாற்றும் பண்புடைய யவர் அவர். கடுஞ்சொல் இல்லாத கனி மொழி பேசும் இயல்புடையவர். தொல்லை களையும் துயரங்களையும் இன்முகத்தோடு சகித்து ஏற்றுக்கொள்ளும் நெஞ்சுரம் படைத் தவர். அனைவருமே அவரிடம் மட்டற்ற அன்பைப் பொழியும் மாண்பு மிக்கவர். அவ்வாறு அவர்மீது அன்பைப் பொழிபவர் களின் நீண்ட வரிசையில் நானும் ஒருவன்.

இயக்கப் பயணத்தில் நெடுந்தூரம் நடக்கலாம் என்று எண்ணிப் பயணத்தைத் தொடங்கியவர்களில், சிலர் நடுவழியில் மறைந்துவிட்டனர். சிலர் இளைப்பாற உட் கார்ந்து விட்டனர். ஓரிருவர் பாதை தவறிப் போய்ப் படுகுழியில் வீழ்ந்துவிட்டனர். அண்ணா அவர்கள் "வேலைக்காரி" திரைப் படத்தில் எழுதியதைப்போல் பச்சைக்கொடி என நினைத்து அவர்கள் பச்சைப் பாம்பைத் தீண்டிவிட்டனர். அது கக்கும் நஞ்சின் வேகத்தைத் தாளமுடியாமல் எதை எதையோ பேசுகின்றனர். அவர்கள்பால் இரக்கப்படுகின்றோம். கூடுவிட்டுக் கூடு பாயும் அந்த வேலையைச் செய்யாமல், 'நமக கென்று ஒரு கழகம்—நாமே வளர்த்த கழகம் நமக்கு ஒரே தலைவர்—ஒரே வழிகாட்டி—அவர் அறிஞர் அண்ணா' என்ற உறுதி படைத்தவராய், தளபதியின் கட்டளை பிறந்த வுடன் இராணுவ வீரன் உயிரைத் துச்சமென மதித்துப் போர்க்களம் போவதுபோல், அண்ணா அவர்களின் ஆணை பிறந்த போதெல்லாம் உடனடியாக அதை நிறை வேற்றி வைத்தவர், காஞ்சி மணிமொழியார். திராவிட முன்னேற்றக் கழகத் தொடக்க காலத்திலும் சரி, அதற்குமுன் நாம் இருந்த திராவிடர் கழகத்திலும் சரி, அதற்கு முன் பிருந்த தென்னிந்திய நல உரிமைச் சங்கத் திலும் சரி, அதற்கு முன்பிருந்த சுயமரியாதை இயக்கத்திலும் சரி, ஒரே சீராக, தடம் விட்டுப் பிறழாமல் நடந்துவந்த இன்றுள்ள மிகச் சில கொள்கைவீரர்களில் மிகச் சிறந் தவர் அண்ணன் காஞ்சி மணிமொழியார் அவர்கள்.

பொதுத் தொண்டு புரிவதிலேயே தன் வாழ்நாளின் பெரும்பகுதியைக் கழித்த அவர் இன்னும் பல்லாண்டுகள் உடல்நலத்தோடும் உள்ள உறுதியோடும் வாழ்ந்து, நாட்டுக்கும் தமிழ்மக்களுக்கும் அவர்கள் இன்னும் பெற வேண்டியுள்ள நலன்களுக்கும் அயராது உழைத்து, இன்றுள்ள இளந் தலைமுறை யினருக்கு நல்வழி காட்டி நடத்திச் செல்ல வேண்டும்—என்னும் நம் ஆசையை. அவா பெற்றுள்ள புகழின்மேல் நிறுத்தி நீவிர் நீடுழி வாழ்க என வாழ்த்துவோமாக!



# கழகத்தின் ஆணிவேர்

**பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார்**, எம். ஏ. எல். டி.

ஒரு கப்பலைக் கடலில் பார்ப்பவர்கள் அலைபரப்புக்கு மேல் பார்ப்பது கப்பலின் உயரத்தில் கால் பங்கைத்தான். அதன் பெரும் பகுதி, முக்கால் பகுதிக்கு மேல் நீரின் அடியில் மறைந்து கிடக்கிறது, ஆனால் கப்பலுக்கு எடையும் சமநிலையும் தரும் பகுதி, மறைந்து கிடக்கும் இப்பெரும் பகுதிதான்.

காற்றில் ஆடி அலைந்து, கொப்பும் கிளையுமாக. தழை பூ காய் கனி குலுங்க நிமிர்ந்து நிற்கும் மரத்தைப் பார்ப்பவர்கள், அம்மரத்தின் மிகப் பெரும்பகுதியும் உயிர்ப் பகுதியுமான வேர்ப் பரப்பைக் காணமுடியாது. அப் பகுதி, நிலத்தின் பகுதி. நிலத்தின் அடியில் மரத்தைச் சுற்றிலும் ஆழமாகவும், மரத்தின் அடியைவிடப் பல காத தூரம் படர்ந்தும் கிடக்கின்றது. ஆனால் மரத்துக்கு உறுதி தருவது, உணவளித்து உயிர் காப்பது, உயிர் நிலையாய் உள்ளது, இந்த வேர்ப் பரப்புதான்; சிறப்பாக, ஆணிவேர்தான்.

ஆம்! தமிழகத்தின் தற்போதைய தி.மு.க. ஆட்சி, கபபலின் இத் தலைப் பகுதி போன்றது; மரத்தின் இக் கிளை தழைப் பகுதி போன்றது. அதன் உடற் பகுதி. நீர்ப்பரப்பின் அடியில் அல்ல, நிலத்தின் அடியில் அல்ல, சென்ற காலம் என்னும் வரலாற்றின் அடியில் அமைந்து கிடக்கிறது. திராவிட முன்னேற்றக் கழகத்தின் தாயாகிய திராவிடர் கழகம், அதன் தாயாகிய தமிழ் இயக்கம், அதன் தாயாகிய தன்மான இயக்கம், இத்தனைக்கும் மூதாதையாகிய பழைய நீதிக் கட்சி இயக்கம், இவை அனைத்தின் மூலத் தாயாக உள்ள தமிழ் இன—திராவிடர் இன வாழ்வு — இத்தனையும்சேர்ந்ததுதான் தி.மு.க. வாழ்வின் உடற்பகுதி.

மாண்புகழ் படைத்த அறிஞர் அண்ணா அவர்களும், தமிழக முதல்வர் — மாண்புமிகு கலைஞர் மு. கருணாநிதி அவர்களும் வளர்த்து வந்துள்ள திராவிடர் கழகமும் திராவிட முன்னேற்றக் கழகமும், இத் திராவிடப் பேரியக்கத்தின் தலைப்பகுதியாகும். பகுத்தறிவுத் தந்தை பெரியார் ஈ.வே.ரா. அவர்கள் வளர்த்த தன்மான இயக்கமும் தமிழ் இயக்கமும் அதன் இடைப்பகுதியாகும். சேப்பாக்கச் செம்மல் டாக்டர் சி. ஏ. நடேசனார், வெள்ளுடை வேந்தர் சர் பி. தியாகராயர், அறிவுலக மன்னர் டாக்டர் டி.எம். நாயர் ஆகியோர் வளர்த்த நீதிக்கட்சி, அதன் தொடக்கப்பகுதியாகும்.

இன்று தி.மு.க. வாழ்வில் இளைஞருடன் இளைஞராகவே நின்று அரும்பணியாற்றி வரும் முதுபெரும் இளைஞராகிய காஞ்சி மணிமொழியார் அவர்கள், திராவிட இயக்கத்தின் தலைப் பகுதி, இடைப் பகுதி, தொடக்கப் பகுதி ஆகிய மூன்று பகுதிகளிலும் ஊடுருவி நிற்கும் ஆணி வேராகத் திகழ்பவர் ஆவார். நம் தி.மு.க. ஆட்சிக் கப்பலுக்கு அவர் ஒரு கொடிமரம். நம் திராவிட இயக்கமாகிய கோபுரத்திற்கு, அவர், அக்கோபுரத்தின்

உச்சியை அடி நிலத்துடன் இணைக்கும் ஒரு மின்தாங்கி.

அமெரிக்காவில் ஒரு சமயம், பெண்கள் இயக்கத் தலைவியார் ஒருவரிடம் புதுமை இயக்க வீரர் ஒருவர் சென்று, "பெண்கள் ஏன் குடியரசுத் தலைவராக, அமைச்சராக, நீதிபதியாக, இதழாசிரியராக இடம் பெறக் கூடாது?" என்று கேட்டாராம். அதற்குப் பெண்கள் தலைவி புன்முறுவலுடன், "பெண்கள் செய்யாத வேலைகள் அல்ல அவை. உண்மையில் நெடுங்காலமாக இந்த வேலைகளைச் செய்து வருபவர்கள் பெண்கள்தான். இவ் வேலைகள் அனைத்தையும் ஆண்கள் செய்வதுபோல் காணப்பட்டாலும், அவர்களுக்குப் பின்னால் நின்று, உரிய முறையில் அவர்களை இயக்கி வருபவர்கள் பெண்களே. பெயரையும் புகழையும் ஊதியத்தையும் அதிகாரத்தையும்தான் அவர்கள் ஆண்களுக்குக் கொடுததிருக்கிறார்கள்; உண்மையான பொறுப்புகளையும் கடமைகளையும் அவர்களே தான் ஏற்று வந்துள்ளார்கள்" என்று தெரிவித்தாராம்.

திராவிட முன்னேற்றக் கழகத்திலும், நீதிக் கட்சி முதலிய அதன் தாய் இயக்கங்கள் அனைத்திலும் காஞ்சி மணிமொழியார் அவர்கள் ஆற்றியுள்ள—ஆற்றி வருகிற தொண்டு, அப் பெண்கள் தலைவியார் தெரிவித்ததுபோன்ற உள்ளீடான-உண்மையான-அடிப்படையான தொண்டாகும். பெயரையும் புகழையும் செல்வத்தையும் அதிகாரத்தையும் பிறருக்குத் தந்துவிட்டு, பொறுப்புகளையும் கடமைகளையும் தான் ஏற்றுக்கொள்வதே, எப்போதும் அவருடைய இயல்பாக இருந்து வந்துள்ளது. திராவிட முன்னேற்றக் கழகத்திலும் அதன் தாய் இயக்கங்கள் யாவற்றிலும் தலைவர்களிடையே பின்னணித் தலைவராக, அறிஞரிடையே—கலைஞரிடையே பின்னணி அறிஞராக—கலைஞராக, தொண்டரிடையே முதல் தொண்டராக—தொண்டர்களை ஊக்குவிக்கும் வன்தொண்டராக, இதழாசிரியராக, பேசசாளராக, எழுத்தாளராக, நடிகராக இயங்கி வந்திருப்பவர் அப்பெருமகனார் வயதில் முதிர்ந்தும் உணர்விலும் செயல் திறனிலும் புத்திளைஞராகவே நம்மிடம் வாழ்ந்து வருபவர் அவர்.

மணிமொழியார் அவர்கள் ஒரு நூற்றாண்டு. இந்த இருபதாம் நூற்றாண்டு பிறப்பதற்கு முன்னரே, முந்திய நூற்றாண்டின் கடைசி ஆண்டாகிய 1900-ல் பிறந்தவர் அவர். இருபதாம் நூற்றாண்டுக்கு இப்போது 70 வயது ஆகிறது. இருபதாம் நூற்றாண்டின் இம் முன்னோடி வீரருக்கோ வயது 71 ஆகிறது. இந்நூற்றாண்டு இது வரை ஆற்றியுள்ள தொண்டுகள் எல்லாவற்றையும் இவர் ஆற்றி வந்திருக்கிறார். வயதிலும் தொண்டிலும் இந்நூற்றாண்டை முந்தி நிற்கும் இவ் இளம் பெரியார், நூற்றாண்டு இனி ஆற்ற இருக்கும் தொண்டுகளிலும் முந்தி நிற்பாராக. நூற்றாண்டுடன் நூற்றாண்டாக அவர் வாழ்க!



# பழகுதற்கு இனியவர்

ம. பொ. சிவஞானம்

காஞ்சி மணிமொழியார், பருவத்தால் முதியவர்; பணியால் மூத்தவர். ஆம்; தியாகராய நகர் சட்டமன்றத் தொகுதியில் எனக்கு முன்னே தேர்ந்தெடுக்கப்பட்டு, எனக்கு வழிகாட்டும் வகையில் பணிபுரிந்தவர்.

தி. மு. கவினரிடம் நான் கண்டுவரும் தனிச் சிறப்புக்களில் ஒன்று, அவர்கள் குடும்பங் குடும்பமாகக் கட்சிப் பணியில் ஈடுபடுவதாகும். அதனுல், குடும்ப நிகழ்ச்சிகளுக்கும் கட்சி நிகழ்ச்சிகளுக்கும் வேற்றுமை காண இயலாதபடி, ஒற்றுமை நிலவி வருகின்றது. அன்பர் மணிமொழியார் இதற்கு விலக்கன்று. அவரது முதல் மகன் பேராசிரியர் மா. இளஞ்செழியன், தந்தையின் அடிச்சுவட்டிலே நின்று தமிழ்த் தொண்டாற்றி வருவதே சான்று.

மணிமொழியார், தமிழிலே சிறந்த புலமை பெற்றவர்; தம் தாய்மொழியென்ற காரணத்தால், அதனிடத்து அளவற்ற பற்றுடையவர். அந்தப் பற்று காரணமாக, தமிழின் வளர்ச்சிக்கு—வாழ்வுக்குப் பணியாற்றி வருபவர்.

அவர் பழகுவதற்கு இனியவர்; பண்பாட்டிற் சிறந்தவர். "போர்வாள்" ஆசிரியராக இருந்தபோதும், "செங்குந்த மித்திரன்" ஆசிரியராக இருந்தபோதும் அன்பர் மணிமொழியாரை நான் அறிந்துகொள்ள முடிந்தது. சிறந்த பேச்சாளர்; எழுத்தாளர்; உழைப்பாளர். அடக்கத்தையே அணிகலனுகக் கொண்டவர். இத்தகைய உயர்குணச் செல்வரைப் பாராட்டுவதிலே மகிழ்ச்சியடைகின்றேன்.

அன்பர் மணிமொழியார் எழுபது வயதையடைந்தும் இளமையோடு காணப்படுகிருர். அவர் ஒரு நூறு வயதுக்கு மேலும் வாழ்ந்து, தமிழ்மொழிக்கும் தமிழினத்துக்கும் தொண்டாற்ற வேண்டும். அவர் வாழ்க; அவரது பணி சிறப்புறுக! அவருடைய வருங்காலம் ஒளியுடையதாகுக!

---

# அயராத அமைதித் தொண்டு

புலவர் அன்பு கணபதி

1938ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களில் சென்னை வந்தேன்; ஆச்சாரியாரின் கட்டாய இந்தியை எதிர்த்துத் திருச்சியிலிருந்து நடந்தே வந்த நூற்றுவர் கொண்ட தமிழர் பெரும்படையில் ஒரு தொண்டனுக வந்தேன். வீரத் தமிழன்னை டாக்டர் தருமாம்பாள் போன்ற பெருமக்களைக் காணவும் பழகவும் ஆன வாய்ப்புக் கிடைத்தது. அந்தக் காலம் முதலே பெரியவர் காஞ்சி மணிமொழியார் அவர்களின் அயராத—ஆனுல் அமைதியான தமிழ்த் தொண்டினைக் கண்டு வருகின்றேன்.

இடையில் தமிழகத்தில் எத்துணையோ மாற்றங்கள் என்ருலும் மணிமொழியாரின் தொடர்ந்த தமிழ்த் தொண்டும் சமூக—அரசியல் தொண்டுகளும் தடம் மாருது நடந்து வருகின்றன.

இத்தகைய பெரியார்கள் நாட்டுக்கு மிகவும் தேவைப்படுகின்ருர்கள். நான் வயதில்குறைந்தவன் என்ருலும் நாம் வாழ—நம் இனம், நாடு, மொழி வாழ—வளர அப்பெரியாரை வாழ்த்துகின்றேன்.




உயர்திரு. காஞ்சி மணிமொழியார் அவர்களோடு நான் நாற்பது ஆண்டுகளாக நெருங்கிப் பழகி வருகிறேன். பல்வேறு துறைகளில் அவர் ஆற்றிவரும் அரும்பெருந் தொண்டுகள் எல்லோரும் வியக்கத்தக்க சிறப்புடையவை என்பது சிறிதும் மிகையாகாது.

‘செயற்கரிய செய்வார் பெரியர்’ என்றார் வள்ளுவர்.

‘கற்றல் கேட்டலுடையார் பெரியார்’ என்றார் ஞானசம்பந்தர்.

கற்றல் கேட்டல் நிரம்பி, செயற்கரிய பல செய்து, புகழ் மணக்க வாழ்ந்துவரும் பெரியார் காஞ்சிமணிமொழியார் ஆவார்.

பல ஆண்டுகட்கு முன்பு, சென்னை பிராட்வேயில் நடைபெற்ற ஒரு மாநாடு, அவர் செயற்கரிய செய்யும் செயல்திறம் படைத்தவர் என்பதைக் காட்டுவதற்குப் போதிய சான்றாகும். மாநாட்டுக்குக் கட்டணம் விதிக்கப்பட்டிருந்தும் வெள்ளம்போல் திரண்டிருந்த மக்கள் கூட்டத்தில் பலர் நுழைவுச்சீட்டு கிடைக்காமல் ஏமாற்றம் அடைந்து அலைந்து கொண்டிருந்த காட்சி எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. இத்தனைக்கும் அம் மாநாடு, சாதாரண மக்களில் பெரும்பாலோர் அந்தக் காலத்தில் நன்கு அறிந்திராத ‘திருக்குறள்’ பற்றிய மாநாடாகும். என்றாலும் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்ததற்குக் காரணம், மாநாட்டின் சிறப்பான ஏற்பாடுகளும், அதில் பேசுவதற்கு அழைக்கப்பட்டிருந்தவர்கள் எல்லோரும் புகழ்மிக்க பேரறிஞர்களாக இருந்ததுமேயாகும். இத்தகைய சிறப்பான ஏற்பாடுகளைச் செய்து முடித்தவர் காஞ்சிமணிமொழியாரே யாகும். அவர் அம்மாநாட்டின் செயலாளராகஇருந்து எல்லோரும் பாராட்டத்தக்கவகையிலும் சாதாரண மக்களைக் கவரத்தக்க முறையிலும் நடத்திக் காட்டிய செயல் திறனை என்னால் போற்றாமல் இருக்க முடியாது.

நான், அவர் தலைமைதாங்கி நடத்திக் கொடுத்த பல தமிழ்த் திருமணங்களில் கலந்து கொண்டிருக்கிறேன். அங்கெல்லாம் அவர், திருக்குறள் எடுத்துக் காட்டும் வாழ்க்கை நெறிகளை விளக்கிக்காட்டி மணமக்களுக்கு அறிவுரை கூறும்போது அவரை நான் ஒரு குறளோவியமாகவும், குறள்நெறி வாழ்க்கையை நடத்திக் காட்டும் தமிழ்ப் பெருமகனாகவும் என் உள்ளத்தில் உருவகப் படுத்திக் கொண்டிருக்கிறேன்.

நான் உருவகப்படுத்திக் கொண்டது தவறல்ல என்பதை அவர் வாழ்க்கை நிரூபித்துக்கொண்டு வருகிறது. எவருக்கும் இன்னா செய்யாது, அன்பினால் அனைவரையும் அரவணைத்து, கருமம் சிதையாமல் கண்ணோட வல்ல திறமை பெற்று, உள்ளுவதெல்லாம் உயர்வே உள்ளி, செருக்கும் சினமும் சிறுமையு மில்லாமல், பணிவுடையராக நின்று, அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையாகிய ஐந்து சால்புகளைப் பெற்று, உயர் பண்புகளின் உறைவிடமாக விளங்கும் காஞ்சி மணிமொழியார் அவர்களைக் குறள் நெறி வாழ்வினர் என்று கூறுவது சாலப் பொருத்தமாகும்.

வாழ்க மணிமொழியார் குறள்நெறி போற்றி மேலும் பல்லாண்டு! அவருடைய உயரிய எண்ணங்கள் வெல்க!




எங்கள் அன்பிற்குரிய பெரியார் உயர் திரு. காஞ்சி மணிமொழியாரின் (1960) மணிவிழாவின்போது—

"இந்தி எதிர்ப்புத் தனிப்போரில்
என்போற் பெண்கள் ஈடுபடல்
தந்தை காஞ்சி மணிமொழியார்
தந்த ஊக்கத்தால் அன்றோ?
அந்தப் பெரியார் இந்நாளில்
அறுபதாண்டு நிறைவுற்றார்;
எந்நாளும் செந்தமிழ்போல
இனிது வாழி! வாழியவே!!"

எனத் தாமரைக் கண்ணியாரும் (மணி விழா மலர், பக். 43),

"உறுதிகொண்ட உள்ளத்தார்;
உலைவின்றியற்றும் செயலுடையார்;
சிறுமைச் செயலகள கண்ணுற்றால்
சீறிபபாயும் சீலத்தார்;
கறுவுநெஞ்சம் சிறிதுமிலார்;
கன்னித் தமிழின் காப்பாளர்;
அறுபதாண்டில் இளைஞர்காண்!
அவரே காஞ்சி-மணிமொழியார்"

(மணிவிழா மலர், பக். 27)

என வல்லை-பாலசுப்பிரமணியனும் என்னும் நாங்கள் இருவரும் பாடல்கள் வழங்கினோம்.

அதிலிருந்து பத்தாண்டுகளுக்குப் பின்னரும், அப்பாடல்களில் 'அறுபது' என்னும் சொல்லுக்குப் பதிலாக 'எழுபது' என்னும் சொல்லை அமைத்துக் கொள்வதைத் தவிர வேறு எதுவும் மாறுதல் செய்யத் தேவையில்லாதபடி, நமது விழாத்தலைவர் வாடாமல் வதங்காமல், நரையாமல் நலுங்காமல் இருப்பது கண்கொள்ளாக் காட்சியாகும். இவ்வாறே இன்றுமுதல் பத்தாண்டுகளுக்குப் பின்னர் 'எண்பது' என்னும் சொல்லை அமைத்துக் கொள்ளும் நற்பேறு எங்களுக்குக் கிட்டும். "என்றும் இளையாய், அழகியாய்" என்று நக்கீரர் முருகனை நோக்கிப் பாடியது நம் தலைவருக்கு முற்றும் தகும்.

இவ்வாறு காலத்தை வென்றவர் காலனையும் வென்று, தமிழுக்காக—தமிழருக்காக—தமிழர் ஆட்சிக்காக நிலமிசை நீடு வாழ்வாராக!

---

# விழா எடுப்பது நம் கடமை

**செட்டிநாட்டரசர் டாக்டர் ராஜா சர் எம். ஏ. முத்தையா செட்டியார்**

உயர்திரு காஞ்சி மணிமொழியார் அவர்களின் 71-வது ஆண்டுப் பிறந்த நாள் விழா சிறப்புற நடப்பதையறிய மகிழ்ச்சி. அவ்விழாவையொட்டிச் சிறப்பு மலர் ஒன்று வெளியிட விழாக்குழுவினர் முடிவு செய்திருப்பது சாலப்பொருத்தமாகும். 1919 ஆம் ஆண்டு முதல் இன்றுவரை, நீதிக் கட்சி, சுயமரியாதை இயக்கம் போன்ற இயக்கங்கள் அனைத்திலும், பற்பலக் கழகங்களிலும் அயராது பணியாற்றிவருபவரும், பலமுறை சிறை சென்றவரும், நாட்டிற்காகவும் தம் நாட்டின மக்கள் நலனுக்காகவும் தம்மையே அர்ப்பணித்துக் கொண்டவரும் ஆகிய மணிமொழியார் அவர்களுக்கு இதுபோன்ற விழாக்கள், பாராட்டுக்கூட்டங்கள் பல நடத்திப் பாராட்ட நாம் கடமைப் பட்டுள்ளோம். இன்னும் பல்லாண்டு அவர்கள் திடகாத்திரத்துடன் இருந்து நாட்டிற்குப்பலதுறைகளில் சேவை செய்துவர வேண்டும் என்று விரும்புகிறேன்,

## இருபதாம் நூற்றாண்டுப் பிசிராந்தையார்

டாக்டர் இலக்குவனர், எம்.ஏ.,எம்.ஓ.எல்.,பி.எச்.டி

என் அருமை நண்பர் காஞ்சி மணிமொழியார் அவர்கள் எழுபதாம் ஆண்டைக் கடந்து எழுபத்தொன்றில் புக இருக்கின்ருர்கள் என்ற செய்தி எனக்கு வியப்பையும் மகிழ்ச்சியையும் அளித்தது. அவர்கள் தோற்றத்தில் மிக முதியவராகக் காணப்பட்டிலர். ஐம்பதாண்டுக் குட்பட்டவராகவே காணப்படுகின்ருர். இருபான் ஆண்டைக் குறைத்திடும் இளமைக் கோலத்தில் அவர் இருப்பதே அவருடைய அமைதி நிறைந்த உள்ளத்தையும், பிறர்க்கென வாழும் பெற்றிமையையும் வெளிப்படுத்தும். இருபதாம் நூற்ருண்டுப் பிசிராந்தையாராக இலங்கும் அவர் தமிழாசிரியராகப் பணிபுரிந்து அரசியலில் நுழைந்தது, தமிழக வரலாற்றில் பொன்னெனப் பொறிக்கத்தக்கது ஆகும். ஆசிரியர்களில் தமிழாசிரியர்கள் ஒதுக்கப்பட்டவர்களாகவே இருந்தார்கள். அவர்களில் ஒருவர் அரசியலில் புகுந்து தமிழ் மொழியின் ஏற்றம் கருதிப் பல்வேறு பணிகளைப் புரிந்து புகழ் பெற்றுள்ளமை தமிழாசிரியர் இனத்துக்கே பெருமை தருவதாகும். தான் உண்டு தன் குடும்பமுண்டு என்று இல்லாமல், இதழாசிரியராய், மாநாட்டுச் செயலாளராய், தன்மதிப்பு வீரராய், நீதிக்கட்சிக் காவலராய், தி. மு. க. தலைவராய், சட்டமன்ற உறுப்பினராய், அரசியல் அறிஞராய், அறிஞர் அண்ணுவின் அன்புத் தோழராய், அயராது உழைத்து இன்று கலைஞரின் மதிப்புக்கும் பாராட்டுக்கும் உரியவரான இவர், எளிமையும் இன்முகமும் அன்புள்ளமும் கடமையுணர்வும் அணிகலன்களாய்ப் பூண்டுள்ளார். பொதுநலத் தொண்டில் தம்மை ஆட்படுத்தித் தூய உள்ளத்துடன் உழைப்பவர் என்றும் இளைஞராய் விளங்குவர் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கும் இவர், இன்னும் எழுபது ஆண்டுக்கு மேலும் எல்லா நலன்களும் பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டு பைந்தமிழ்போல் வாழ்வராக.

---

## ஆக்கங் கொண்ட குடும்பம்

அழகரடிகள், குருகுலம், திருக்குறள் பீடாதிபதி

திரு. காஞ்சி மணிமொழியார் சென்னைச் 'செங்குந்த மித்திரன்' அச்சகத்தில் இருந்தபோது பார்க்க நேர்ந்தது. கிளர்ச்சி எழுச்சிகள் உடையவராய்க் காணப்பட்டார். வணிகராய், ஆசிரியராய், தமிழாசிரியராய், இதழாசிரியராய், அமைப்பாளராய், பரப்புரையாளராய், செயலாளராய், நடிகராய், சட்டமன்றத்தவராய், பல துறையிலும் விளங்கிய, விளங்கிவருகின்ற அவர் சிறப்பு அத்தனையும், தமிழகத்தின் வளர்ச்சிக்கு ஏதுவாயின. யார் எச்சிறப்பிலிருந்தாலும், அது, தாம் தோன்றிய நாட்டுக்கு, மொழிக்கு, மக்களுக்கு, நாகரிகத்துக்குத் துணைபோகவில்லையென்ருல், அவர் புகழெல்லாம் பழிக்குரியன; வாழ்வெல்லாம் வீண். காஞ்சி மணிமொழியார் தம் வாழ்வை வீணுக்கவில்லை; பழிப்படவில்லை. தமிழகம் அவர் தமிழ் உணர்ச்சியால், ஊக்கத்தால், கிளர்ச்சிகளால், செயல் திறனுல், ஏற்றம் பெற்றுள்ளது!

1942-ல் சென்னையில் நடந்த எமது 'சிவஞான போதச்' சொற்பொழிவுகளில் ஈடுபட்டு, அதன் நிறைவு விழாவைச் சிறப்பித்த ஆக்கமானவர்களில் அவரும் ஒருவர்! தாம் ஆக்கமாக நடப்பதோடு, மற்றவர்களையும் ஆக்கப்படுத்தும் சிறப்பு, அவர்க்கு மேலும் புகழ் அளித்து வந்திருக்கிறது. அவர் குடும்பமே அப்படி ஆக்கங் கொண்டது தான்.

இப்போது, 70 ஆண்டுகள் நிறைவுற்ற பெருவாழ்வு அவருடையது! ஆயினும், இன்றும் அவர் இளமையுள்ளம் பல பணிகளில் ஈடுபட்டிருக்கிறது! நீடு வாழவும், இனிது வாழவும், புகழ் ஓங்கி மேலும் பயன்பட வாழவும், எமது உளங்கனிந்த வாழ்த்து!

## முல்லை மலர்போல் புகழ் மணக்க வாழி

டாக்டர் நாராயணசாமி, சென்னை.

முல்லையினும் வெள்ளையெனும் உள்ளமுள ஐயா!
இல்லையினி தொல்லையெனச் சொல்லிடவே நாளும்
ஒல்லும்வகை அறவினைகள் ஓவாது செய்தீர்!
அல்லும்பக லும்கழகம் வெல்லஉழைத் தீரே!
புதுயுகத்தைப் படைத்திடவே போர்வாளை எடுத்தீர்!
'நவயுக'த்தில் அண்ணாவின் நற்கருத்தைக் கொடுத்தீர்!
ஓர் யுகத்தில் முடியாத உயர்பணிகள் முடித்தீர்!
கலிதுடைத்த குறுமுனிபோல் நிலைபுகழே படைத்தீர்!
செந்தமிழை உணவாகச் சேர்த்துண்ணுந் தமிழா!
சிந்தனைசெய்! இந்திநஞ்சு இங்கிருக்க லாமோ?
அஞ்சுவதேன்! விழித்தெழுக! போர்வாளைச் சுழற்றி
வந்தவழி ஓட்டிடுக எனமுரசு ஆர்த்தோய்!

* * *

காஞ்சிப் பெரியார் மணிமொழியார்
கன்னித் தமிழ்போல் வாழியவே!
வாஞ்சைத் தொண்டு வளர்ந்திடுக!
வளமை நாளும் பெருகிடுக!
நாஞ்சில் குமரி தெற்கெல்லை
நல்ல இமயம் வடக்கெல்லை
நீஞ்சும் முல்லை மணம்போல
நின்றன் புகழும் ஓங்குகவே!

---

## என் கடன் என்பார்க்கு விழாக் கடன்

டாக்டர் பா. நடராஜன்

நண்பர் காஞ்சி மணிமொழியாருக்கு எழுபதாண்டு நிறைவு விழாவெடுக்கும் செய்தி அறிந்து மகிழ்ந்தேன்.

பணிசெய்து கிடப்பதே என் கடன் என்பார்க்கு விழாக்கடன் ஆற்ற விழைந்தனர் நண்பர் குழாம்.

அனைவருக்கும் என் பாராட்டு.

என் நண்பருக்கு எழுபது ஆண்டுகள் ஆகிவிட்டனவா? மெய்யாகவா? தொண்டில் முதிர்ந்தோர் ஆண்டில் என்றும் இளைஞரா யிற்றே!

நேற்றுப்போலிருக்கின்றது; ஒன்றிய தமிழன்பில் தொடங்கிய எங்கள் நட்பு.

முப்பதாண்டுகள் புணர்ச்சி பழகுதல் இன்றி உருண்டோடின.

மீண்டும் சட்டமன்றத்தில் கூடினோம்; ஐந்தாண்டு அளவளாவி மகிழ்ந்தோம்.

ஒத்த உணர்ச்சி உண்மையென வென்றது; அரசியல் வேற்றுமை நாடகப்பொருளா கியது.

எங்கிருந்தும், எப்பணி செய்தும், இறுக இறுகப் பிணைத்தலல்லாது, தமிழன்பு பிரிக்க வல்லதோ?

தமிழ் என்ற நறுஞ் சாந்தில் அன்பு என்ற தேனைப் பிசைந்து, தொண்டு என்ற மூச்சை உயிர்த்து, இரும்பு போன்றதொரு உறுதி வாழ்வுக்காக நான்முகனால் படைக்கப்பட்டவர் மணிமொழியார்.

அவர் புகழுடம்புக்கு ஆண்டுகளை எண்ணுவானேன்?

என்றும் வாழ்க காஞ்சி மணிமொழியார்! இளைஞனாய் வாழ்க என்கெழுதகை நண்பர்!

# மாண்புடன் வாழ்க

நாரண துரைக்கண்ணன்

காஞ்சி மணிமொழியாருக்கு எழுபதாண்டு நிறைவுற்ற செய்தியறிந்து பெரிதும் மகிழ்ந்தேன். நிறைவாக நல்வாழ்வு வாழ்ந்த அப்பெருமகன் 71-ம் ஆண்டில் அடியெடுத்து வைக்கும் நன்னாளை உவகையுடன் வரவேற்று என் நல்வாழ்த்துதலை வழங்குகின்றேன்.

மணிமொழியார் முதலில் தமிழாசிரியராக வாழ்க்கையைத் தொடங்கிப் பின் தாம் பிறந்த குலமக்களின் முன்னேற்றத்துக்காக செங்குந்த குல மகாஜன சங்கச் சார்பில் நின்று சிறந்த தொண்டாற்றிய காலத்திலிருந்து நான் இவரை அறிவேன். தமிழர் நலனுக்காக, தமிழ் மொழி ஆக்கத்துக்காக, இவர் பெரியார் தலைமையிலும் பேரறிஞர் அண்ணா தலைமையிலும் இருந்து ஆற்றியுள்ள அமைதியான தொண்டுகளையும் செய்துள்ள தியாகங்களையும் மற்றவர்களைவிட நான் நன்கறிந்திருக்கிறேன்.

நான் வாழ்ந்து வருந் தொகுதிக்குப் பிரதிநிதியாக விருந்து சென்னை சட்டமன்றத்தில் மணிமொழியார் புரிந்துள்ள செயல்கள் என்றென்றும் நினைவில் வைத்துப் போற்றத் தக்கவை.

அன்னாரின் பெறலருஞ்செல்வரான **பேராசிரியர் இளஞ்செழியன்** தந்தை வழிநின்று சிறந்த பொதுநலப் பணி புரிந்துவருவதைத் தமிழன்பர்கள் நன்கு அறிவர்.

இத்தகைய பெருந் தொண்டர்களை, நல்லவர்களைச் சிறப்பித்துப் போற்றுவது நன்றியறிவுள்ள தமிழ்மக்கள் கடமையாகும்.

மணிமொழியார் மாண்புடன் வாழ்க!

# அற்புத விளக்கு

**புலவர் தணிகை உலகநாதன்**

எழுபதைக் கடந்த இளைஞர், இருபதாம் நூற்றுண்டுப் பிசிராந்தையார் — திரு காஞ்சி மணிமொழியார் அவர்களை நினைக்கும்போதெல்லாம் நெஞ்சம் இனிக்கிறது. அவர்தம் அருமை பெருமைகளைக் கேட்கும் போதெல்லாம் செவிகள் இன்பம் அடைகின்றன. அவரைக் காணும் போதெல்லாம் கண்கள் களிக்கின்றன.

தமிழன்னை கொலுவீற்றிருக்கும் தற்காலம் தமிழ்மக்களுக் கொரு பொற்காலம். தமிழகம் இன்று அமைதியும் இன்பமும் நிழலாடும் பூஞ்சோலையாகக் காட்சியளிக்கிறது. இந்தப் பூஞ்சோலை பொலிவுடன் விளங்க அன்று இரவா, பகலா; மழையா வெயிலா; வெள்ளமா புயலா என்று அயராது பாடுபட்ட அறிஞர் பெருமக்களில் மணிமொழியாருக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு.

காஞ்சி மணிமொழியார் ஓர் அற்புத விளக்கு. அந்த விளக்கு வீசிய தமிழ் ஒளியில் வீறு பெற்றெழுந்த தமிழ் மக்கள் பலர்; தமிழ் இளைஞர்கள் மிகப்பலர். வெண்கலக் குரல் படைத்த அவர்தம் தமிழ் முழக்கம் கேட்டுத் துரும்பும் வீறுபெற்று எழும். தமிழ் நெஞ்சம் கொண்ட மணிமொழியார் ஒரு தண்ணளியாளர்.

மணிமொழியார் ஒரு தமிழ்மறவர். தமிழுக்கு இன்னல் நேர்ந்த போதெல்லாம் தாய் தடுத்தாலும் விடேன் என்று போர்க் கொடி உயர்த்தி வாகை சூடியவர். 'மாங் குயில் கூவிடும் பூஞ்சோலை எம்மை மாட்ட நினைக்கும் சிறைச் சாலை' என்று இந்திப் போராட்டத்தின் தளபதியாக இருந்து இன்னல்களைக் கண்டு புன்னகை பூத்தவர்.

மணிமொழியார் ஒரு நல்லாசிரியர்; கவிஞர்; சீர்திருத்தக்காரர்; தொண்டுச்செல்வர். தம் பேச்செல்லாம் மூச்செல்லாம் தமிழ் நலத்துக்கும் தமிழர் வளத்துக்கும் ஒப்படைத்தவர்; குடும்பக் கவலை யில்லாதவர்; மணி மணியான மதலைகளைப் பெற்றவர்; மாண்புடைய இல்லத்தரசியின் ஒத்துழைப்பால் செயற்கரும் செயல்கள் பல புரிந்த செம்மல். அவர் வாழ்வு தமிழ் வாழ்வு. தமிழ்கூறும் நல்லுலகம் அவர்தம் நூற்றுண்டு விழாவையும் கண்டு களிக்க அகம் குளிர வாழ்த்துவோம்; முகம் மலர வணங்குவோம். வாழ்க மணிமொழியார்! வளர்க அவர்தம் தொண்டுகள்!

## போற்றுவோம் பாராட்டுவோம் பின்பற்றுவோம்

இக்காலத்தில் சாதிப் பற்று என்ற பெயரால் பலருக்கு இயல்பாகக் கிடைக்க வேண்டிய நலங்களும் மறுக்கப்பட்டுவிடுகின்றன. இந்நிலையில் நமது மணிமொழியார் கொள்கையும் நடைமுறையும் நமக்கு ஒரு சிறந்த விளக்கத்தைத் தருகின்றன. தமிழன் என்றொரு இனத்தையே எப்பொழுதும் மனம் கொண்டு. அவ்வினத்தின் முன்னேற்றத்திற்கே பணி புரிந்து வருதலால், அதற்குள் அடங்கும் தம்மை ஈன்றெடுத்த இனத்திற்கும் திரு. மணிமொழியார் பேராதரவாளராக அமைந்து விடுகிறார். தமிழ்நாடு முழுவதிலும் அவரது எண்ணத்தால், பேச்சால், செயலால், நன்மை பெற்றவர்கள் பலர் இருக்கக் காண்கின்றோம். அப்பெருந்தகையாரைப் பாராட்டுவோம்.

நிலவுலகில் பிறந்தவர்களில் ஒரு சிலரே நல்வாழ்வு வாழ்கின்றார்கள்; தங்கள் வாழ்வில் தங்களுக்கு நன்மை தேடிக் கொள்வதோடு பிறர்க்கும் பேருபகாரிகளாக வாழ்கின்றார்கள். அப்படி வாழ்பவர்களே மக்கள் உள்ளங்களில் அழியாத இடத்தைப் பெற்று விடுகிறார்கள். "உலகத்தார் உள்ளத்துளெல்லாம் உளர்" என்று அவர்களைத் திருவள்ளுவப் பெருமானும் பாராட்டுகிறார்.

ஒருவனுக்குத் தம்மால் ஒரு நன்மை விளையக் கூடுமென்று தோன்றினால், அதனை எவ்வாறேனும் விளைய செய்து, அந்நன்மையைப் பெறுபவன் அடையும் இன்பத்தைக் கண்டு தாமும் மகிழ்ந்து, அதனால் வரும் இன்பத்தைச் சிலரே துய்க்கின்றனர். இத்தகைய இன்பத்தைத் தம் வாழ்நாள் முழுதும் துய்த்து வருகிறார் ஒருவர் எனில் அவரைப்பற்றி எண்ணுவதும், அவரைப் புகழ்ந்துபேசுவதும், அவர் பண்புகளைப் பைந்தமிழில் எழுதுவதும் நமக்கு வாய்க்கும் பேறுகள் அன்றோ? காஞ்சி மணிமொழியார் தம் காலமெல்லாம் ஒப்புரவு செய்து அதன் வடிவமாகவே திகழ்கிறார். அவரைப் போற்றுவோம்.

— ந.ரா.ப. தணிகை அரசு

பெருமக்களைப் போற்றிப் பாராட்டுகிற வழக்கத்தை நாம் கொண்டிருக்கிறோம். அவ்வாறு செய்வதால் அப்பெரியார்களுக்கு நன்மை ஏதும் இல்லை. மகனுக்கு வேண்டியவற்றையெல்லாம் அன்பால் செய்கிற தந்தை, தன் மகன் தன்னைப் போற்றுவதாலோ பாராட்டுவதாலோ மகிழான். ஆனால் தன்னைப் பின்பற்றித் தன்னைப் போல் அவனும் உபகாரியாக-நல்லவனாக விளங்கினால் அதனைக் கண்டு மகிழ்வான். அத்தகைய பெருநோக்குடையாரே நம் மணிமொழியார். எனவே அவர்களைப் போற்றுவதோடு, பாராட்டுவதோடு, பின்பற்றுவோம்.

அண்ணல் மணிமொழியார்பல்லாண்டுகள் பெருவாழ்வு வாழ்ந்து சிறப்பாராக என வாழ்த்துவோம்.

---

## நாற்பதாண்டுத் தொண்டு

*தமிழறிஞர் கி. ஆ. பெ. விசுவநாதம்*

கடந்த நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகவே நாட்டிற்கும், மொழிக்கும், மக்களுக்கும் நற்றொண்டு புரிந்து வருகின்ற நண்பர் திரு. காஞ்சி மணிமொழியார் அவர்களுக்கு அண்மையில் 71-ஆம் ஆண்டுப் பிறந்தநாள் விழா நடைபெறவிருக்கிறது என்ற செய்தியும் அதன் நினைவாக மலர் ஒன்று வெளிவரவிருக்கிறது என்ற செய்தியும் என்னை மகிழ்விக்கின்றன.

விழா இனிது நடைபெற வேண்டுமெனவும், மலர் நல்லறிஞர்களின் கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்து சிறப்படைய வேண்டுமெனவும், அன்பர் மணிமொழியார் எல்லா நலன்களும் பெற்று இன்னும் பன்னெடுங் காலம் நல்வாழ்வு வாழ வேண்டுமெனவும் முழுமனதுடன் வாழ்த்துகிறேன்.




திராவிட முன்னேற்றக் கழகத் துணைப் பொதுச்செயலாளர் திரு. காஞ்சி மணி மொழியார் அவர்களின் 71 ஆம் ஆண்டுப் பிறந்த நாள் விழாச் சிறப்பு மலர் வெளியிட விருப்பது குறித்துப் பெரிதும் மகிழ்கிறேன். தமிழகத்தின் முன்னேற்றத்திற்காக அப் பெரியவர் ஆற்றியுள்ள அரும்பணிகளை நான் நன்கு அறிவேன். மறைந்த மாமேதை பேறறிஞர் அண்ணு அவர்கள், திரு. மணிமொழியார் அவர்களின் சீரிய பணிகளைப் பற்றிப் பல ஆண்டுகளுக்கு முன்பே என்னிடம் பாராட்டிக் கூறியது நன்கு நினைவிருக்கிறது. 1949 ல் திரு. மணி மொழியார் அவர்கள் முன் நின்று சென்னை யில் நடத்திய திருவள்ளுவர் மாநாட்டில் நானும் கலந்து கொள்ளும் பேற்றினைப் பெற்றேன். நீண்ட பல ஆண்டுகளாக மக்களுக்கு அயராது பணி புரிந்து வரும் அவர்கள், நாடகத் துறையிலும் இடம் பெற்றுர் களென்பது பெருமைக்குரியதாகும். இத்தகைய சிறப்பு வாய்ந்த பெரியவர் திரு. மணிமொழியார் அவர்கள் நூருண்டுகளுக்கு மேல் வாழவும், உடல் நலத்தோடும், உளத் திண்மையோடும் விளங்கவும் எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

## சீரிய இயல்பினர்! சிறந்த பண்பினர்!

எம். பக்தவத்சலம், எம். ஏ., பி. எல்.,
முன்னுள் முதலமைச்சர்

உயர்திரு காஞ்சி மணிமொழியார் அவர்களின் பிறந்த நாள் விழா நடைபெற இருப்பது பற்றியும், அவருடைய அருமை பெருமைகளைப்பற்றி ஒரு சிறப்பு மலர் வெளியிடப் படுவது பற்றியும் அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். அன்னுர், கணக்குப்படி எழுபது ஆண்டுகள் நல்வாழ்க்கை வாழ்ந்திருக்கிற போதிலும், தோற்றத்திலும் உணர்ச்சியிலும் இருபது வயது இளைஞராகவே இருக்கிருர். சீரிய குணங்களும் அடக்கப்பண்பும் உடைய திரு மணிமொழியார் அவர்கள், இன்னும் பல்லாண்டுகள் குறைவற்ற வாழ்க்கை வாழ நல்வாழ்த்துக் கூறுகிறேன்.

## நாடறிந்த நற்றெண்டு

க. உரோ. எட்மண்ட், பி. ஏ., பி. எல்.,
சட்டப் பேரவைத் துணைத்தலைவர்

பெரியவர் காஞ்சி மணிமொழியார் அவர்களுடைய 71-ஆம் ஆண்டுப் பிறந்த நாள் விழாவை ஒட்டி மலர் வெளியிடுவது கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். தி.மு. கழகமும் தமிழர்களும் அன்னுரின் சேவையை நன்கு அறிவார்கள். அன்னுரது தொண்டு, கழகத்திற்கும் தமிழ் மக்களுக்கும் என்றும் கிடைக்கப் பல்லாண்டு வாழ வாழ்த்துகிறேன்.

# அடக்கம் நிறைந்த அரசியல் தலைவர்

கே. ராஜாராம் எம்.எல்.சி

காஞ்சி மணிமொழியார் அவர்களைப் பற்றித் தமிழகத்தில் அறியாதார் இருக்க முடியாது. பழுத்த சைவக் குடும்பத்தில் பிறந்த அவர் நீண்ட பல ஆண்டுகளாகவே சுயமரியாதைக்காரராக இருந்து வருகிறார். அரசியலில் மிகவும் அடக்கமானவர். இந்த அடக்க உணர்ச்சி இன்றைய அரசியல் உலகில் காண்பது அரிது. சைதாப்பேட்டைத் தொகுதியிலிருந்து சட்ட மன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சிறந்த முறையில் பணியாற்றியிருக்கிறார்.

அவர் அரசியல்வாதி மட்டுமல்லாது தமிழ்ப் புலமை பெற்றவரும் கூட. நல்ல எழுத்தாளருமாவார். "போர்வாள்" என்ற பெயரில் தி. மு. க. சார்பு வாரப் பத்திரிகை ஒன்றை அவர் திறம்பட நடத்தி வந்தார்.

அரசியல் திறமை, எழுத்துவன்மை, தமிழ்ப்புலமை ஆகியவை மட்டுமின்றி நல்ல நிருவாகத் திறமையும் கொண்டவர். வயதில் மூத்தவரானாலும் செயல்திறனிலும் தோற்றத்திலும்கூட இன்னும் இளமைத் துடிப்புடன் காணப்படுகிறார். அவருக்கு வயது எழுபது ஆகிறதென்பதை என்றால் நம்பவே முடியவில்லை.

நல்ல பண்பாளராகிய அவர் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து தமிழ்ச் சமுதாயத்துக்குப் பணியாற்ற வேண்டுமென்று உளமார வாழ்த்துகிறேன்.

வாழ்க காஞ்சி மணிமொழியார்!

# அருந்திறல் படைத்த அண்ணல்

டாக்டர் ப. சிற்சபை

அன்பிற் சிறந்த சகோதரர் — அருந் தமிழ்த் தலைவர் காஞ்சி மணிமொழியார் அவர்களுக்கு எழுபது ஆண்டுகள் நிறைவு பெற்று எழுபத்தோராவது பிறந்தநாள் விழா நடைபெறவிருக்கும் செய்தியறிந்து அள விலா மகிழ்ச்சி அடைகின்றேன். ஆற்றல் வீரராகிய அன்னருடைய அயர்விலாத் தொண்டினை நான் நெடுங்காலமாகக் கண்டு மகிழ்ந்து போற்றிப் பாராட்டி வருகின்றேன். எவ்வெப்போது தமிழர் இயக்கம் உரிமைப் போராட்டங்களைத் துவக்கியதோ அப்போ தெல்லாம் அப் பெருமகனார் முதலணி யிலேயே பங்குகொண்டு உரிமைக் குரல் எழுப்பி இன்னல் பல ஏற்று இடையருது தொண்டாற்றியதையும், நிகழ்காலத்திலும் அவ்வாறே இடையருது தொண்டு புரிந்து வருவதையும் பார்க்கின்றபோது அன்னர் இவ்வளவு வயதானவர்களென்று எவருமே கருத இயலாது. அருந்திறல் அண்ணல் மணிமொழியாரின் உள்ள உறுதியும் தொண்டு உள்ளமும் செந்தமிழ் ஆர்வமும் என் போன்றவர்களுக்கு எழிலும் பயனும் மிகுந்த வழிகாட்டிகளாக அமைந்துள்ளன.

1962 முதல் ஐந்து ஆண்டுகள் சட்ட மன்ற உறுப்பினராக இருந்து புகழ்மிக்க பணி புரிந்துள்ள, மணிமொழியார், நிகழ் கின்ற காலத்திலும் சட்டமன்ற உறுப்பின ராக வருவதற்கு வாய்ப்புக் கிடைத்திருக்கு மாறுல் அறிஞர் அண்ணு அவர்களின் முதல் அமைச்சர் அவையில் நிச்சயம் இடம் பெற்றிருப்பார். என்பது என் நம்பிக்கை. தமிழக முன்னேற்றத்திற்காகச் சென்ற ஐம்பது ஆண்டுகளாகப் பல்வேறு துறை களின் வாயிலாக அருந்தொண்டு புரிந்துள்ள மணிமொழியார் அவர்களுக்கு அந்த வாய்ப் பும் கிட்டியிருந்தால் அதன் வாயிலாக மேலும் பல சிறந்த செயல்களைத் தமிழ் மக்களுக்குச் செய்ய வசதி கிடைத்திருக்கும்.

மணிமொழியார் அவர்களுடைய பேச் சும் எழுத்தும் தமிழ் மக்களிடையே பெரும் எழுச்சியை உண்டாக்கியுள்ளன என்பதை அனைவரும் அறிவர். இத்தகைய அருங் குணச் செம்மல் மேலும் பல்லாண்டுகள் உறுதிபடைத்த உடல்வலிவுடன் வாழ்ந்து தமிழ்மக்களுககுத் தொடர்ந்து சிறந்த தொணடாற்ற என் மனமார வாயார வாழ்த்துகிறேன்.

# மக்கள் பணியே மகேசன் பணி

கா. அ. சண்முக முதலியார்

திருவாளர் காஞ்சி மணிமொழியார் அவர்கள், ஒரு தமிழறிஞர்; ஆற்றல் மிக்க பேச்சாளர்; எழுத்து வன்மை மிக்கவர்; பண்பட்ட நெஞ்சினர்; பழகுவதற்கு இனியவர்; மக்கள் பணியே மகேசன்பணி; என்று கருதுபவர்; மக்களின் நன்மைக்காக உழைக்க வேண்டுமென்ற ஆர்வமுடையவர்; சமூகப்பற்றுடையவர். இவருடைய இயற்கைப் பண்பு நலன்களும், இவர் வளர்த்துக் கொண்ட ஆற்றல்களும் பொது வாழ்வில் பல ஆண்டுகளாகக் கலந்து அரும்பயன் விளைத்து வருகின்றன. செங்குந்த மரபினருக்கு இவர் செய்துள்ள நற்பணிகளைச் சிறப்பாகப் பாராட்ட வேண்டும். இவருடைய அரிய முயற்சியினல் சென்னை சேத்துப்பட்டில் மாணவரில்லம் ஒன்று உருவாகி வருகின்றது. எழுபதாண்டு நிறையப் பெற்ற நண்பர், எண்பதாண்டு விழாவும் ஆற்றி, மேலும் பல்லாண்டுகள் வாழ்க வாழ்க என வாழ்த்துகிறேன்.

---

## அன்பும் அடக்கமும் நிறைந்தவர்

**து. ப. அழகமுத்து**

*அரசாங்கத் தலைமைக் கொறடா*

தி. மு. கழகத் துணைப் பொதுச் செயலாளர் பெரியவர் காஞ்சிமணிமொழியார் அவர்களின் 71 ஆம் ஆண்டுப் பிறந்த நாள் விழா நடைபெறுவதில் நான் பெரிதும் மகிழ்கின்றேன். அன்பு, அடக்கம், எளிமை ஆகிய பெரும் பண்புகளோடு இயக்கப் பணியாற்றும் மணிமொழியார் நீண்ட நெடுங்காலம் வாழ்ந்து நாட்டுக்கு நற்பணியாற்ற வேண்டுமென வாழ்த்துகின்றேன்.

## அன்பும் பண்பும் மிக்க மறவர்

**புலவர் மறைதிருநாவுக்கரசு**

நண்பர் திரு. காஞ்சி மணிமொழியாரைச் சென்ற முப்பதாண்டுகளாக அறிவேன். அன்பும், பண்பும்மிக்கமறவர். தாம் கொண்ட கொள்கைக்காகச் சற்றும் அயராது அஞ்சாது முழுமூச்சுடன் பணியாற்றுபவர். அவர் புன்முறுவல் பூத்தமுகம் மறக்க முடியா மகிழ்ச்சி தருவதாகும். தமிழ்ச் சான்ருேராய அவர் நெடிதினிது வாழ்க எனச் சிவபெருமான் சேவடிகளை இறைஞ்சுகின்றேன்.




**Prof. C. D. RAJESWARAN,**
Former Principal, Pachiappa's College, Madras.

Thiru Kanchi Manimozhiar who is completing 70 years of life in May 1970 has always been an indifatigable worker for the cause of Backward Classes and the down trodden. Taken up by the policy of Justice Party he became an ardent worker in the early days of the Justice movement. My acquitance with him was from the year 1938 when he was the editor of Senguntha Mitran. He threw himself heart and soul in the anti-Hindi movement started in 1938. At about the same time Justice Party had passed into the hands of Periyar E. V. Ramaswami, the founder of selfRespect movement My friend Manimozhiar was attracted by the principles of Self Respect movement and did a lot of work to educate the people and rouse them to give up some of the stupid ideas. As a Self Respector he was one of those who put heart and soul in educating the people for the birth of a new classless and casteless society. He is one of the founders of the D.M.K. Party and was Treasurer of the D. M. K. Party for a number of years.

A forceful writer and a brilliant speaker, Manimozhiar had contributed much towards the building up of the Party as well as popularising the Political principles of Aringner Anna. He had been a co-worker with Anna from 1937 onwards. Anna always considered him as one of the old associates and placed enormous trust in him. He was never afraid of imprisonment and had been convicted on a number of occasions. As an eminent field worker he has contributed much in all the elections not only for the Assembly, but also for the Corporation of Madras and other local bodies.

His contribution as a legislator had evoked appreciation from all quarters. His public service had been for nearly half a century out of seventy years of life. We are sure Manimozhiar who looks younger for his age will be useful to the democratic Party of the D. M. K. for another two or three decades.

I hope to see him again as a legislator and I wish him a glorious future and a long and useful life in the cause of the poor and downtrodden.

# MY GOOD WISHES

M. A. MANICKAVELU, B.A.,B.L.

I am glad to note that my friend Kanchi Manimozhiar's 71st birth day is to be celebrated- Three score and ten years is a good span of life according to the Bible. I send my congratulations and good wishes and wish him many many more returns of his Birthday.

# A DISCIPLINED SOLDIER

T. PURUSHOTHAM,
Former Member, Tamil Nadu Legislative Council.

The success of a Political party depends chiefly on the discipline of the party members and it is on this fundamental basis the great leader Thiru. Aringnar Anna built up so well the D. M. K. which within the course of a few years achieved significant progress which no other party including the Congress, could be proud of. In this evolutionary process, disciplined soldiers stood by the leader with signal qualities of discipline, devotion and loyalty. Thiru. Kanchi Manimozhiar is one such pillar of D. M. K. His rare qualities of devoted serive to the cause are note wortly. When he stood fer election as a candidate for the Tamil Nadu Legislative Assembly from the enlightened Constituencey of Thiagarayanagar, a stronghold of the Congress Party, I had genuine doubts, but he came out successful by his masterful exposition to the social and cultural needs of the hour to secure which Aringner Anna set the ideals of the Rising Sun.

I have known Thiru. Kanchi Manimozhiar for several years and having watched his services in and outside the Legislativ Assembly, quite closely I could say with confidence that he has earned the unqualified love and appreciation of his constituency by his fierce fight in the cause of the uplift of poorer and backward sections of the Sceiety. He is a political savant of the highest order and I wish him long life and continued prosperity.

# A Beacon of Inspiration

R. SHUNMUGAM, M.A.B.T.,

I am happy to know that the 71st Birthday celebrations of Thiruvalar Kanchi Manimozhiar is being held on the 10th Juue 1970 at Madras. I request the committee to convey my greetings and good wishes to Thiruvalar Kanchi Manimozhiar on the occasion of his 71st Birthday. I pray God that he be blessed with many more years of life, if only because he will continue to be a beacon of inspiration and unfailing source of sweetness and light not only for this generation but also for those that are to be born.

# An Active Propagator

S.P.PILLAI, Ex.M.L.C.

I am happyto contribute the following to the Souvenir to be published in honour of Kanchi Manimoziar's 71st Birthday.

I had the pleasure of meeting Manimozhiar in company with Aringner Anna way back in 1937. Then he was connected with the publication ef the Tamil Weekly styled NAVAYUGAM edited by Anna.

Manimozhiar is a powerful speaker and talented writer. He has been, throughout the period of about four decades that I know him, an active and energetic Propagator of the principles of the parties he served, mobilizing the constructive forces of the Society in the cause of backward classes.

He is an able organizer and has been one of the pillars of the D. M. K. Movement. His speeches, writings and constant field work for the success of the D. M. K in the last Elections are worth mentioning.

I send him my hearty felicitations on this happy occasion and wish him many more years of happy life and robust healtn to continue his dedicated services for the cause of society.

குதூகலமூட்டும் குடும்ப சித்திரம்

நாகேஷ் நடிக்கும்

# நவக்கிரகம்

கதை - வசனம் - டைரக்ஷன் : K. பாலச்சந்தர் B. Sc.

தயாரிப்பு : இராம அரங்கண்ணல் M. L. A.

பூவா தலையாவுக்கு அடுத்து அருள் பிலிம்ஸ் அளிப்பது

அருள் பிலிம்ஸ் சென்னை-4

அருள் பிரிண்டிங் ஒர்க்ஸ், 3. அந்தோணி தெரு, சென்னை-14.

# வரலாறு படைத்த பெரு வாழ்வு

சிறுவை மோகனசுந்தரன்

தமிழ் மொழிக்குத் தொண்டுசெய்த பல சான்றோர்களைச் சந்தித்துள்ளேன். அச் சான்றோர்களில் 1938-ல் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் ஈடுபட்ட பண்பாளர்களில் ஒருவராகிய திரு. காஞ்சி மணிமொழியார் அவர் களும் ஒருவராவர். இவர்தம் நட்பால் எனது தொண்டும் வளர்ந்தது - சிறப்புற்றது.

மணிமொழியார் தமிழ் ஆசிரியராய்த் தோன்றி, அச்சுக் கலைஞராய்ச் சிறந்து, தமிழ் அறப்போர்த் தளபதியாய்ப் புகழ் பெற்று, இதழ் ஆசிரியராய் மலர்ச்சி பெற்று, எழுத்தாளராய் மணம் வீசித் திகழ்ந்தார். "செங்குந்த மித்திரன்" இதழின் உயிர்நாடி யாய் இருந்து சமூகப் பணியில் சிறந்து விளங்கினர் இவர்.

"தொண்டு" எனும் பண்பு, தவம் செய்து பெற்ற நற்றமிழ் மகன் மணிமொழி யார். பணம் எங்கே? மின்சாரம் எங்கே? ஒலிபெருக்கி எங்கே? சுவரொட்டிகள் எங்கே? என இவையெலாம் பெரிதும் விளக் கம் பெருத காலம் ஒருகாலம். அக் காலத் தில் தொண்டரெனக் கிளம்பும் ஒருவரை— அதுவும் மொழித் தொண்டு செய்ய முந் துற்ற ஒருவரை எள்ளி நகைத்தும், கேலியும் கிண்டலும் செய்த காலம்.

விளக்கமுருத அக்காலத்தில் அறிக்கை எழுதி, அச்சுக்குத் தந்து, பிழை திருத்தி, படி எடுத்து, பலர்க்கும் வழங்கி, இடம்தேடி, கொடி நட்டு, விளக்குக்கு ஏற்பாடு செய்து, கூட்டம் சேர்த்து, கூட்டங்கள் நடத்துவது பிறந்து பிறந்து இளைக்கும் பெருங்கதை யாகும். இந்த இளைப்பையும் தாங்கி, அன் றைய ஆட்சி இவர்மீது தொடுத்த நட்ட ஈட்டு அம்புகளையும் தாங்கி, கலங்காது, கண் துஞ்சாது, பொறுமையின் சின்னமாய், தொண்டின் திருவுருவாய்த் திகழ்ந்தவர், மணிமொழியார். இடுக்கண்வரின் நகைத்து, மேலும் மடிதட்டி முந்துற்று, தொடுத்த கரு மத்தை முடிப்பதே இவர்தம் வாழ்வியல்.

எந்தவிதக் கட்டுக்கோப்புக்கும் அன்புக் கும்உட்படாது, பொருளியல் படித்துப் பொரு ளில் நாட்டமிலாது இந்த ஒரு தமிழ்ப்பறவை, இவரது தமிழ்த் தொண்டின் திறத்திற்குக் கட்டுண்டு இவருடன் இணைந்து, "நவ யுகம்" என்ற வார இதழை நடத்த முனைந் தது எனின், இவரது தொண்டின் திறத்தை எங்ஙனம் புகழ்ந்துரைப்பது. அப் பெரும் பறவைதான், இன்று சென்னைப் பரவையின் (கடலின்) மணலில் மீளாத் துயில் கொண் டிருக்கும் என் அருமை அண்ணன் பேரறி ஞர் அண்ணு அவர்கள்.

'மணிமொழியார்' என்ற பெயருக்கு முன்னல் இவர் பிறந்த ஊரின் பெயராகிய "காஞ்சி" எனும் சொல் அமைந்துள்ளது. அச் சொல்லிற்குப் பண்டைத் தமிழர் ஒரு நல்ல வரலாற்றையே படைத்துள்ளனர். அப் பெரும் வரலாற்றுக்கு உரிய அந்தக் "காஞ்சி"யைச் சுவைக்கச் சுவைக்க

இனிமை பயப்பதாய் உள்ளது. சுவை மட்டும் அல்ல. அந்த மூன்றெழுத்துச் சொல், இவர் பெயருக்கு முன்னால் அமைந்து இருப்பதால், புகழை இவர் தேடிச் செல்லாமல், புகழ் இவரைத் தேடி வந்து இருக்கிறது. புகழ் மணமும் வீசிக் கொண்டிருக்கிறது. அப் புகழ் மணத்தை உங்களுடன் சேர்ந்து நுகர முயல்கிறேன்.

**1. காஞ்சி – காஞ்சிபுரம்:**

'பொன்னெயிற் காஞ்சி' என இலக்கியம் சிறக்கப் பேசும் காஞ்சிபுரத்தில் தோன்றியவர் இவர். இந் நகர் உலகில் தோன்றிய பழைய நகரங்களில் ஒன்று. உலகம் அனைத்தும் ஊழிக் காலத்தில் அழிந்தாலும் **'காஞ்சிபுரமும் சீர்காழியும்'** அழியாது எனத் தமிழ் பேசுகிறது. இது பட்டுக்குப் பெயர் பெற்ற இடம். மணிமொழியாரின் உள்ளமும் பட்டுப் போன்றது. புகழ்பெற்ற தொண்டைமான் இளந்திரையன் அனறு ஆண்ட நகரம். இன்று பேரறிஞர் அண்ணா ஆண்ட நகரம். இக் காஞ்சி நகரை **ஹியூன்சாங்** என்ற சீன அறிஞர் சிறப்பித்துப் பேசுகிறார். வடமொழி இலக்கண ஆசிரியர் **பதஞ்சலியால்** புகழ்ந்துரைக்கப் பெற்றது இந்நகரம். இந் நகர் பற்றிய வரலாற்றுச் சிறப்புக்களையும் உண்மைகளையும் **மணிமேகலையிலும் திருத்தொண்டர் பெருங்கதையிலும்** பரக்கக் காணலாம்.

புகழ்மிக்க அமைச்சன் **சாணக்கியன்** பிறந்தது இந்தக் காஞ்சியில்தான். கி.பி. 500-ல் சிறந்து விளங்கிய பௌத்தப் பேராசிரியர் **தின்னகர்** இந் நகரில் பிறந்து நாளந்தா பல்கலைக் கழகப் பேராசிரியராய்த் திகழ்ந்தவர். இன்றும் இவரது பெரும்புகழைச் சீனமும் ஜப்பானும் மறக்கவில்லை. இன்று இக் காஞ்சியில் தோன்றிய **அறிஞர் அண்ணாவை** அமெரிக்காவும் இன்ன பிற மேலைநாடுகளும் புகழ்ந்து போற்றிப் பரவுகின்றன. காஞ்சியில்பிறந்த **தருமபாலன்** என்ற மற்றொரு பௌத்தப் பேராசிரியர், நாளந்தா **பல்கலைக் கழகத்தின் தலைவராகவே** விளங்கினார். இக் காஞ்சியில் இருந்த **'கடிகை'** என்ற கல்லூரியில்தான் வடநாட்டிலிருந்தும் பலர் போந்து வடமொழி பயின்றனர் என்பது வரலாறு. புகழ்மிக்க கல்வி அறங் காவலர் பச்சையப்பர் தோன்றியதும் இக்காஞ்சியே!

இத்தகு காஞ்சியில் தோன்றியவர்தான் விழாத் தலைவர் மணிமொழியார். தமிழ் மொழியின் அறக் காவலர், தமிழின் தனி மாமணி, **காஞ்சி நகர்போல் வாழ்க வாழ்க பல்லாண்டு இனிதே!**

**2. காஞ்சி – ஆற்றுப் பூவரசு (ஒருவகை மரம்)**

இம் மரங்கள் காஞ்சியில் அதிகம் உள்ளதால், இவ்வூருக்குக் காஞ்சி எனப்பெயரிட்டனர் எனவும் கூறுவர். இந்தப் பூவரசினைக் 'குறுங்காற் காஞ்சிக் கொம்பர்', எனப் பத்துப்பாட்டு சிறப்பிக்கிறது. பூவரசின் பட்டை, வேர், பழுப்பு, பூ, காய், விதை, எல்லாம் பல மருந்துகளாகப் பயன்பட்டு மனிதகுலத்தை வாழ்விக்கிறது. மணிமொழியாரின் மனைவி, மகன், மகள் அனைவருமே தமிழ் இனத் தொண்டர்கள். பூவரசு மரம் மிக்க வலிமையாக, கடினமாக, நெடுநாள் உழைக்கக் கூடியதாக இருக்கும். இதில் செல் பிடிக்காது. நமது மணிமொழியாரும் வலிமை மிக்கவர்; கடினமான உழைப்பாளர். நரைமுடி மாந்தரல்ல—இக் காலப் பிசிராந்தையாருங்கூட.

நூற்றாண்டு வளர்ந்த பூவரசன் வேர், நாட்பட்ட பெருநோயை நீக்கும். அஃதே போல் நாட்பட்ட அரசியல் துன்ப நோய் மணிமொழியாரைப் பற்றப் பறந்து போம். **பல்லாண்டு வாழும் பூவரசுபோல் புகழ் மணம் பரப்பி வாழ்க பல்லாண்டு இனிதே மணிமொழியார்!**

**3. காஞ்சி – காஞ்சிப்பூமாலை :**

வேற்று மன்னன் வந்துவிட அரசன் காஞ்சிப் பூவைச் சூடித் தன் காவலிடத்தைக் காக்கும் புறத்துறையாகும். 1938-ல் தமிழுக்கு எதிராக வந்த இந்திப் படை எடுப்பைத் தவிர்க்கக் காஞ்சி மணிமொழி

யார் எனும் நறுமலர் பயன்பட்டது. மணி மொழியாரே முன்னின்று பாசறை கண்டார். அப்போர் 'இந்தி எதிர்ப்பு இயக்கமாக' மாறி, இன்று தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டிற்கும் ஒரு மறுமலர்ச்சியையே உண்டாக்கிற்று எனின், அன்று காஞ்சி மணிமொழியார் உழைத்த உழைப்பை யாரும் மறுக்க முடியாது. அறப் போர் வீரர் மணிமொழியார் திருவுடைச் செல்வமெலாம் சிறக்கப் பெற்று வாழ்க.

**5. காஞ்சி—செவ்வழிப் பண் :**

இஃது பழம் பெரும் பண்களில் இரண்டாவதாகக் கூறப்படுவதாகும். 'தீந்தொடைச் செவ்வழிப்பாலை' எனச் சிலப்பதிகாரம் சிறக்கப் பேசும். இஃதேபோல் மணிமொழியார் அவர்களும் இசைநயம் மிக்க இனிய பண்பாளர். இவரது அனுபவம் மிக்க பட்டறிவைச் செவ்வழிப்பாலை இசை நயம் போல் அனுபவித்துப் பயன்பெறலாம். **மணிமொழியாரின் திருத்தொண்டு செவ்வழிப்பாலை உள்ளளவும் இனிது வாழ்க!**

**4. காஞ்சி—நாதாங்கி :**

இது பூட்டு, தாழ்ப்பாள், சங்கிலி, இவை மாட்ட உதவும் கதவுநிலையுறுப்பு தமிழகத்தை நாடி வரும் சில புறப் பகைகளை அணுகவிடாதபடி சிலவற்றிற்குப் பூட்டும், சிலவற்றிற்குத் தாழ்ப்பாளும், மற்றும் சங்கிலியும் போடவேண்டியதாய் இருக்கும் அதற்கு நாதாங்கி தேவை. ஆம்! மணிமொழியார் போன்ற நாதாங்கிகள் தேவை. **நாதாங்கி மணிமொழியார்—மாணிக்கவாசகனுர் புகழ் மணம் சிறந்து வாழ்க !**

'காஞ்சி' என்னும் சொல்லின் வளமும் மணிமொழியாரின் திறமும் அறிந்தோம். மேலும் ஆய்ந்து துய்ப்போம் இன்பச் சுவையினை அந்தப் பெருமகனுருடைய 71 ஆம் ஆண்டுப் பிறந்த நாள்விழா 80 ஆம் ஆண்டு முத்து விழாவுக்கு ஒரு முன்னேடி. விழாக் கொள்ளும் தலைவனும் தலைவியும் வாழ்க வாழ்க தமிழ்போல் இனிது!

**தொண்டின் உருவம் வாழ்க !**

**மணிமொழியாரின் தொண்டுள்ளம் வாழ்க!**

# கழகக் கருவூலம்
# காஞ்சி மணிமொழியார்

எம். ஏ. சண்முகம்
புதுவை தி. மு. க. செயலாளர்கள்

நீரார்கடல் மல்லைத் திருநாட்டின் பெரு நகரம், நெடுமாடக் கோபுரங்கள் நிலைத்த பெருங் காஞ்சி, ஆண்ட பேரரசின் அழகு மிகு காஞ்சி, வரலாற்றுத் தனிச் சிறப்பால் வாழ்ந்துவரும் காஞ்சி என, பல் லாற்றான் சிறந்திலங்கும் காஞ்சிப் பெருநகரம் எண்ணி வியக்கின்ற தனிச் சிறப்பதனை உடைய தாகும்.

காஞ்சி என்றால் பக்தர்களுக்கு அங்குள்ள எண்ணற்ற கோயில்கள் நினைவுக்கு வரும். அறிஞர் பெருமக்களுக்கோ, தமிழ் வளர்த்த பெரும் புலவர்தம் கருத்துக்கள் நினைவுக்கு வரும். வரலாற்று ஆசிரியர் களுக்கோ, சோழரும் பல்லவரும் ஆண்ட சிறப்பும், பல்லவ மேடும், மன்னரின் வீரமும் ஈரமும் மனத்தே தோன்றும். கலையுள்ளம் படைத்தவர்க்கோ அங்குள்ள உயர்ந்த கோபுரங்களும், அவற்றின் அமைப்பும், கலைச் செல்வங்களின் சிறப்பும் கருத்தில் பளிச் சிடும். பெண்களுக்கோ வண்ணப் பட்டுப் புடவைகள் கண்முன் படும். இவ்வாறு பலப் பல எண்ணங்களைப் பலர் உள்ளத்தில் படைத்தாலும் இன்றைய காஞ்சியை எண்ணும்போது அனைவரின் உள்ளத்திலும் அழகான ஓவியமாய்க் காட்சி தருவது அண்ணா அவர்களின் திருவுருவமே ஆம்! தென்னாட்டுக் கலைப் பூங்கா! திருவிடத்தின் தனித் தலைவன் இந் நாட்டுப் பேரறிஞர்! எங்கள் உள்ளக் கோயிலில் வீற்றிருக்கும் பெருந் தெய்வம் அண்ணா அவர்களை ஈன்ற தனிச் சிறப்பு இன்று காஞ்சிக்கு உண் டல்லவா!

அன்புத் தெய்வம்; அறிவுப் பெட்டகம் அண்ணா அரவணைத்த பெருந் தலைவர் பலருள்ளும் தலை யானவர் காஞ்சி மணிமொழி யார் ஆவர். காஞ்சி மணிமொழி யார், கருத்துக் கனிமொழியார் அழகு தமிழ்ப் பேச்சாளர்; அன் பும் பண்பும் அடக்கமும் அமைதியும் கொண்ட நல்ல உள்ளத்தார்; நல்ல தமிழ்க் கட்டுரையால் நாவன்மைப் பேச்சால் வல்லார்ப் பிணிக்கும் வகையாளர்; செல்லாக் காசாகக் கிடந்த தமிழரினம் அல்லல் நீங்கி, ஆண்டான் அடிமைத்தனம் நீங்கி நல்வழி உய்ய நாளும் உழைத்த பெருந் தலைவர். "நாட்டின் முன்னேற்றமே தமது ஏற்றம்! தாய்த் தமிழ் உயர்வே தம் உயர்வு என்ற சீரிய கருத்தால் உழைத்த சீர்சால் செம்மல், அண்ணாவை நமக்களித்த அழகுத் திருக் காஞ்சி. மணிமொழியாரையும் தந்து மனநிறைவு பெற்றது. அண்ணனின் கொள்கை வழிநின்று வழுவாது கடமை யாற்றும் மணிமொழியாரை இந்நாளில் அறிந்துகொள்வது நல்லார்க்கும், நம்மவர்க் கும் நன்றாகும்.

சோர்வடைந்த உள்ளங்களில் சுறு சுறுப்பை உண்டாக்கிக் கழகக் கருத்துக்களை ஆழ நெஞ்சில் நிலைநிறுத்தும் என்ற நினைப் பில் காஞ்சி மணிமொழியாரின் வாழ்க்கை யில் ஓரிரு நிகழ்ச்சிகளைக் குறிப்பிட விரும்பு கிறேன்.

புரட்சிக் கருத்துகளை கொள்கைப் படைப்புகளை வலிவோடும் மிகத் துணிச்ச லோடும் ஏட்டின் மூலமாக வெளியிட்ட பெருமையும் புகழும் மணிமொழியாரைச் சாரும். எதிரியை வீழ்த்தி வெற்றியைக் குவிக்கும், வீரன் கைவாள். மணிமொழியார் வடித்துத் தந்த போர்வாளோ, சனாதனிகளைச் சாடி வைதீகர்களின் மடமையை அகற்றி, மறுமலர்ச்சியைத் தந்தது.

களாச் செடியின்மேல் வாழை இலையைப் போட்டால் களாச் செடிக்கு நஷ்டமில்லை;

(அடுத்த பக்கம் பார்க்க)

# இளமைக்கு இதுதான் காரணமே

**வித்வான் அம்பைசங்கரனு**

திரு. காஞ்சி மணிமொழியார் அவர்களை 1937ஆம் ஆண்டுமுதல் அறிவேன் அப்போது அவர் பி. செ. மாணிக்கவாசக முதலியார் எனப் பலருக்கு அறிமுகமானவர். அவரிடம் சமூகத் தொண்டு தலைமையிடத்தையும் பிற தொண்டுகள் சார்பிடங்களையும் பெற்று விளங்கின. ஆண்டு முதிர முதிர அறிவு, பக்குவம் முதலியன சிறப்புற்று விளங்குமென்னும் உண்மைக்கேற்பத் தற்போது தமிழ்ப்பற்று, தமிழினப்பற்று, தமிழ்நாட்டுப் பற்றுகளையே தம் மூச்சாகக் கொண்டு விளங்குகின்ருர். ஒருமுறை உட்லண்ட்ஸ் விடுதியில் அவருக்கும் திரு. எஸ். கே. சம்பந்தம் பி.ஏ., எம்.பி. அவர்களுக்கும் ஒரு பாராட்டு விழாவைத் தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தினர் நடாத்தினர். அப்பொழுது திரு. மணிமொழியார் அவர்கள் குறிப்பிட்ட மணிமொழிகள் இன்னும் என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. அவை:-

"மனிதன் ஏதாவது தொண்டு செய்து கொண்டேயிருக்க வேண்டும். வாணுளைவீணே கழிக்கக் கூடாது. அம் முறையைப் பின்பற்றியே என் வாழ்க்கையை நடத்திச் செல்கின்றேன். என் தொண்டின் தொடர்ச்சி இறுதியாகத் தி. மு. கழகத் தொண்டுகளில் அழைத்துவந்து சேர்த்தது. எங்கேயும் தொண்டாற்றிக் கொண்டேயிருந்தால் ஒருவனுக்கு நரை, திரை, மூப்பு முதலியன விரைவில் அணுகா."

இம் மணிமொழிகள் சங்க காலச் சான்ருேர் பிசிராந்தையாரின் அரிய அறிவுரைகளை நினைப்பூட்டுகின்றனவன்ருே! என்றும் இளையராயிருத்தற்குரிய உண்மை இதுதான் போலும். இவ்வுண்மையைத் தம் வாழ்க்கைத்துறையில் கண்டு, பழகி, பயனும் துய்த்துவரும் பெரியார் திரு. காஞ்சி மணிமொழியார் அவர்கள் இன்னும் ஒரு நூற்ருண்டு நன்கினிதிருப்பர் என்பதுறுதி. அவர் வாழ்க; அவர் அயரா உழைப்பு, தொண்டுள்ளம் நனி சிறந்தோங்குக; அதனுல் தமிழ் உலகம் செழித்துயர்வதாகுக. வாழ்க உலகெலாம்.

———

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

வாழைஇலைதான் கிழியும் என்ற உவமையைப் 'போர்வாள்' இதழில் படித்தது இன்னமும் என் நெஞ்சைவிட்டு அகலவில்லை.

உழைப்பாலும், இடைவிடா ஊக்கத்தாலும், சமுதாய சீர்திருத்தத் தொண்டாலும் உயர்ந்த மணிமொழியார் சட்டமன்ற உறுப்பினராகவும் இருந்து தொகுதி மக்கட்கும் நாட்டுக்கும் நல்ல பல பணிகளை ஆற்றி நற்பெயர் பெற்றுள்ளார்.

தற்போது திராவிட முன்னேற்றக் கழகத்தின் துணைப் பொதுச் செயலாளராக இருந்து நடமாடும் பல்கலைக் கழகம் நாவலர் அவர்களோடு இணைந்து கழகக் கட்டுக் கோப்புக்கும் வலுவுக்கும் அயராது பணியாற்றி வருகின்ருர். கழகத்தின் வளர்ச்சியிலும் மேம்பாட்டிலும் கருத்தூன்றி, ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகிருர். அன்னூர் பல்லாண்டு வாழ்கவென வாழ்த்தி வணங்குகின்றேன்.

# காணிக்கை ஆக்குவோம்

ச. ஞா.

படர்தரு முல்லைக்குத் தேரும், நடமிடு மயிலுக்குப் போர்வையும் ஈந்த அருள் உள் ளம் எவர் உள்ளம்? கல்தோன்றி மண்தோன் ருக் காலத்து முன்தோன்றிய மூத்தகுடி எந் தக்குடி? வடஇமயந் தென்குமரி ஆகிய இடைநிலம் முற்றும் ஒரு குடைக்கீழ்க் கட்டி யாண்ட இனம் எந்த இனம்? அருள் உள் ளங்கொண்டு, புகழ் பெருக்கி, பிறர் போற்ற உலகம் முழுதுக்கும் அறிவையும், நாகரிகத் தையும் பல்லாயிரம் ஆண்டுகட்குமுன் அள்ளி வழங்கிய அருந்தமிழ் இனம் இன்று, பாழ் வயிற்றைக் கழுவுதற்குப் பக்கத்து நாடு களுக்குக் கள்ளத்தோணியில் செல்லும் கண்ணராவிக் காட்சி, உள்ளங்களைக் கசக் கிப் பிழிவதாக உள்ளது.

ஓங்கி உலகளந்த தமிழர் இனம், வீழ்ந்து தலைதாழ்ந்து நிற்பது ஏன்? இந்தக் கேள்வி எழாத தமிழ் உள்ளம் இருக்க முடியாது. இந்தக் கேள்விக்கு விடைகாண முயன்றவர் கள் பலர். இறுதியாக முயற்சியில் வெற்றி கண்டவர்கள் தியாகராயர், பெரியார், அண்ணா ஆகிய முப்பெரும் அறிஞர்களா வார்கள். தமிழ் மக்களின் அரசியல் விடு தலைக்குத் தியாகராயரும், சமுதாய விடு தலைக்குப் பெரியாரும், மொழி விடுதலைக்கு அண்ணாவும் அயராது உழைத்து வெற்றி முகங் கண்டார்கள்.

ஆளத் தகுதி படைத்தவர் ஒரே சமூகத் தார் என்றிருந்த நிலையை மாற்றி எல்லோ ருக்கும் ஆட்சியில் இடமுண்டு என்ற மாற் றங் கண்டார் தியாகராயர். சமுதாயத்தில் பிறப்பினால் கற்பிக்கப்பட்டு ஒரு சமூகத் தார்க்கு மற்றவர்கள் அடிமை முறிச்சீட்டு பரம்பரை பரம்பரையாக எழுதிக் கொடுத்து வந்ததை மாற்றிச் சமுதாயத்தில் சமத்துவ உணர்வை ஊட்டியவர் பெரியார்.

மொழியில், ஆங்கிலமும் இந்தியும் தமிழ்மொழியின் இடத்தைப் பிடித்துக் கொண்டு தாய்த்தமிழைத் தலைகுனிய வைத் திருந்த நிலையை மாற்றி, தமிழுக்கு ஆக்கந் தந்து, அரியணை ஏற்றி, எல்லாந் தமிழ் எங் குந் தமிழ் என்ற உயர்நிலையைப் பெற்றுத் தந்தவர் பேரறிஞர் அண்ணா அவர்களா வார்கள். அரசு ஆட்சியில் தமிழில், கல் லூரிவரை பயிற்சி மொழி தமிழ், நீதிமன்றத் தில் தமிழ், மேடைப் பேச்சுகளில் தூய தமிழ் என்ற உயர்நிலையை உருவாக்கினர் அண்ணா. 'தமிழால் முடியுமா?' என்று கேட் டவர் பலர். முடியும் என்று காட்டியவர் அண்ணா. வானளாவிய கோபுரங்களைப் பார்! தமிழன் பொறியியல் அறிவு புலனாகும். கல் பிளந்து, மலைபிளந்து கனிகள் வெட்டித் தந்ததையும், கல்லணையைக் கட்டி முடித்த தையும் எண்ணிப்பார்! கன்னித்தமிழின் விஞ்ஞான அறிவு எவ்வளவு உயர்ந்ததென் பது விளங்கும் - என்றெல்லாம் கூறி, தமிழ னின் தாழ்மை உணர்வை மாற்றி, தமிழ்

(அடுத்த பக்கம் பார்க்க)

# காஞ்சி தந்த செல்வம்

**புலவர் கோ. வில்வபதி**
செயலாளர், மாணவர் மன்றம், சென்னை.

தமிழக வரலாற்றில் காஞ்சி நகர்க்குத் தனித்ததோர் இடம் உண்டு. நீண்ட நெடுங் காலம் முதல் இக்காலம் வரையிலும் வரலாற்றுச் சிறப்பிலும் சமயப் பெருமையிலும் இலக்கிய நலத்திலும் அரசியல் மாட்சியிலும், காஞ்சி, கற்றவரும் மற்றவரும் போற்றும் மாண்புடையதாகத் திகழ்ந்து வருகிறது. இந்த நூற்றுண்டின் இணையிலா மேதை—தமிழர் உளக் கோயிலில் குடியிருக்கும் உத்தமர்—தென்னுட்டுக் காந்தி--ஈடு இணையிலாச் சொல் வேந்தர்—பேரறிஞர் அண்ணுவைத் தமிழகத்திற்குத் தந்ததன் வாயிலாக உலகத்திலேயே ஒப்புயர்வற்ற பெருமையைத் தேடிக் கொண்ட பெருநகரம் காஞ்சி.

அக் காஞ்சி மாநகரம் தந்த செல்வங்களில் ஒருவர் காஞ்சி மணிமொழியார். அவர் தமிழ் மக்கள் என்றும் நினைத்துப் போற்றக் கூடிய பெருந்தகையாராவர். தமிழ் வாழ—தமிழ் நாடு வளம் பெற —தமிழ் மக்கள் முன்னேறத் தம் வாழ்வின் பெரும் பகுதியைப் பல துறைத் தொண்டுகளில் செலவழித்த மூதறிஞர் காஞ்சி மணிமொழியார். அவர்க்கு எழுபதாண்டுகள் நிறைவுற்றதை நினைத்து அவருடைய தொண்டைப் பாராட்டப் பெரு விழா நடப்பதறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன்.

காஞ்சி மணிமொழியாரை நான் என் இளமை முதல் நன்கு அறிவேன். ஆனுல் அவரை நேரில் கண்டு அளவளாவும் பேறு 1943இல் சென்னைக்கு வந்த பின்னர்தான் கிடைத்தது. மணிமொழியார் செங்குந்தர் குலச் செம்மல்! பழம் பெருமை வாய்ந்த

முன்பக்கத் தொடர்ச்சி

துறையிலும் ஏற்றறந்தவர் அண்ணு. இந்தி-ஆங்கில மொழி ஏகாதிபத்தியங்களின் உரிமைக் குரலை அவர் ஒடுக்கினுர்.

காஞ்சிப் பெரியார் மணிமொழியார், இம் மூவகை ஏகாதிபத்தியங்களையும் - (அரசியல், சமுதாயம் - மொழித்துறை) ஒழிக்கப் பாடுபட்ட முப்பெரும் அறிஞர்களோடும் ஒன்றி நின்று, மூன்று கொடுமைகளையும் ஒழிப்பதற்காகப் பலப்பல கொடுமைகளைத் தான் ஏற்று, அயராது ஐம்பது ஆண்டுகளுக்குமேல் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போரில இடையீடின்றி முழுமூச்சாகப் பணியாற்றி, வீழ்ந்த இனத்துக்கு விழிப்பும், சோர்ந்த அரசியலுக்குச்சுறுசுறுப்பும், தாழ்ந்த தமிழ் மொழிக்கு உயர்வும், பெருமையும் தேடித்தர முன்னின்றவர் ஆவார். தண்டமிழ்த்தாய் ஈன்ற தவப்புதல்வர்-பண்பாளர்-அறிவு நலமுடையார்—ஆற்றல் வீரர் என்று எல்லோராலும் பாராட்டப்படுகின்ற பெருந்தகையாளர் மணிமொழியாரின் தொண்டு மேலும் சிறந்திடவும், வளமெலாம் பெற்று வாழ்வாங்கு பல்லாண்டு வாழ்ந்திடவும் நமது நெஞ்சத்து உணர்வுகளை யெல்லாம் காணிக்கை ஆக்குவோம்.

வாழ்க காஞ்சி மணிமொழியார்.

செங்குந்தர் குலம் சீரழிந்து, கல்வித் துறையிலே, தொழில் வளத்திலே, பொருளாதார நிலையிலே பின் தங்கிய இனமாய் நலிவுற்று வருந்தி வந்ததைக்கண்ட நம் மணிமொழியார், தம் இளம்பருவத்திலேயே சமூக முன்னேற்றப் பணிகளில் ஈடுபட்டுழைத்து வந்தார். காஞ்சியில் தமிழாசிரியராய் வாழ்வைத் தொடங்கிச் சீரும் சிறப்புமாக வாழ்ந்த அவர், தம் சமூக முன்னேற்றம் கருதி அப்பணியைத் துறந்து சமூக நன்மை கருதி முழு நேரம் உழைக்கும் தொண்டராய்ப் பாடுபட்டு வந்தார். 'செங்குந்தர் மகாஜன சங்கம்' என்ற அமைப்பை உருவாக்கி அதன் மூலமாகச் செங்குந்தர் குலத்தைத் தட்டி எழுப்பி, அவர்கள் புத்துணர்ச்சி பெற அரும்பாடு பட்ட தலைவர்கள் வரிசையில் நம் மணிமொழியாருக்குத் தக்கதோர் இடம் உண்டு.

மணிமொழியாரின் எழுத்தும் பேச்சும் எண்ணற்ற இளைஞர்களைச் சிந்திக்கத் தூண்டின; செயற்படச் செய்தன. அவருடைய அறிவுரையால் விழிப்புற்றுக் கல்வி கற்று உயர்நிலை யடைந்தவர்கள் மிகப் பலராவார். இன்று செங்குந்தர் ஓரளவு கல்வி கற்ற நல்லறிஞர்களை—உயர்ந்த பதவியில் உள்ள சிலரை—மற்றையவர் மதிக்கத் தக்க செல்வமும் செல்வாக்கும் பெற்றுச் சிறப்புடன் விளங்கும் சிலரைப் பெற்றுள்ளது என்றால், அதற்கு அந்நாளில் மணிமொழியாரும் மற்றவர்களும் உழைத்த உழைப்பே காரணம் என்பதை அச் சமூகத்தவர் மறத்தல் இயலாது.

மணிமொழியார் அவர்கள் தம் சமூக முன்னேற்றம் கருதி உழைத்ததோடு பொதுவாகத் தமிழ் மக்கள் முன்னேற்றம் கருதிப் பற்பல துறைகளிலும் ஈடுபட்டுத் தொண்டாற்றி வந்தார். ஆதியில் நீதிக் கட்சியிலும், பின்னர் திராவிடர் கழகத்திலும் தொடர்பு கொண்டு உழைத்து வந்த அவர் திராவிடர் கழகத்திலிருந்து திராவிட முன்னேற்றக் கழகம் முகிழ்த்த போது பேரறிஞர் அண்ணாவின் அருந்துணைவராய், அவர் கொள்கை வழி நின்று, நாட்டு நலம் கருதி எண்ணற்ற தியாகங்களைச் செய்துள்ளார்—செய்து வருகிறார். அதனால் அரசியல் மேதை அறிஞர் அண்ணாவின் அன்புக்கும் நன்மதிப்புக்கும் உரிய தோழராய் விளங்கினார். அறிஞர் அண்ணாவின் ஆணை வழி நின்று இவர் சாதித்த அரும்பெரும் செயல்களால் ஒப்பற்ற செயல் வீரர் என்று நாடு போற்றும் நல்லவராக விளங்கி வருகிறார்.

1938இல் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போரில் மணிமொழியார் புரிந்த மாபெருந் தொண்டுகளை எங்கள் அறிவுத் தந்தையார் முதுபெரும் புலவர் மயிலை சிவ முத்து அவர்கள் பல நாள் பாராட்டிக் கூற நான் கேட்டு மகிழ்ந்திருக்கிறேன். சென்னையில் இந்தி எதிர்ப்புக்கு வித்தூன்றி அதற்கு மூளையாய் இருந்து நடத்தியவர்கள் பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்களும் காஞ்சி மணிமொழியாருமே என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். மொழி காக்கும் போரில் ஈடுபட்டு அவர்கள் தமிழ் மக்கள் உள்ளத்தில் தூவிய விதையே செடியாய்—மரமாய் வளர்ந்து, இன்று திராவிட முன்னேற்றக் கழகமாய்ப் பூத்துக் குலுங்கி அரசியலைக் கைப்பற்றி அதன் மூலம் எண்ணற்ற நன்மைகளாகிய கனிகளை ஈந்து வருகிறது என்றால் அது மிகையாகாது என்றே கருதுகிறேன். எனவே இன்றைய நல்லாட்சிக்கு வித்திட்ட பெரியோர்களில் காஞ்சி மணிமொழியாரும் ஒருவர் என்பதனை நாம் மறத்தல் கூடாது. இன்றும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைமைக் கழகத் துணைப் பொதுச் செயலாளராய் அமர்ந்து கழகம் வலிவும் பொலிவும் பெற நம் மணிமொழியார் செய்து வரும் தொண்டுகள் கழகத்தின்பால் அவருக்குள்ள பற்றையும் பாசத்தையும் நன்கு உணர்த்துகிறது.

காஞ்சி மணிமொழியார் செயல் வீரர் மட்டுமல்லர்; நாவீறு படைத்த நாவலருமாவர். அவர் தம் சமூக நலம் குறித்தும் நாட்டு நலம் குறித்தும் தமிழகத்தின் பட்டி தொட்டி

எங்கும் சென்று பேசிய பேச்சுக்கள்-முழக்கிய வீரமுழக்கங்கள் தமிழ் மக்களைத் தட்டி எழுப்பின; உணர்ச்சி கொள்ளச் செய்தன; அவர்களிடையே மொழிப் பற்றும் இனப் பற்றும் ஊட்டின. மணிமொழியார் என்ற பெயர்க்கு ஏற்பக் கம்பீரமான குரல் இயற்கையாய் அமைந்துள்ளது. அக் குரல் ஒலியே மாற்றுக் கருத்துடையவர்களையும் தட்டி நிறுத்தி அவர் பேச்சைக் கேட்கச் செய்யும் ஆற்றலுடையதாய்—எண்ணற்றவரைத் தம் பக்கம் ஈர்க்கும் இயல்புடையதாய் அமைந்து விளங்குகிறது. அழுத்தம் திருத்தமாக—' காரண காரிய விளக்கங்களோடு அவர் பேசும் பேச்சு கேட்பவரை வயப்படுத்தக் கூடிய சிறப்பு வாய்ந்ததாகும்.

இங்ஙனம் பல துறைகளிலும் இக்கால இளைஞர்கட்கு எடுத்துக் காட்டாய்க் கூறத் தக்க நிலையில் பெருவாழ்வு வாழ்ந்து வரும் காஞ்சி மணிமொழியார் அவர்களை நான் முதன் முதலாக முதுபெரும் புலவர் மயிலை சிவமுத்து அவர்களுடன் சென்று கண்டேன். அப்போது அவர் பவழக்காரத் தெருவில் குடியிருந்தார். மாணவர் மன்றத் தேர்வு சம்பந்தமாக அவருடன் உரையாடியபோது பேராசிரியர் அவர்கள் என்னை அவர்க்கு அறிமுகப்படுத்தி வைத்தார். என்னை நேரில் அறியாதவராயினும் என்னைப் பற்றிய செய்திகளை எல்லாம் முன்பே நன்கு உணர்ந்திருந்த மணிமொழியார் அவர்கள் என்னோடு அன்புடன் அளவளாவினர். அப்போது அவருடைய அறிவாற்றலையும், தொண்டுள்ளத்தையும், எழுச்சி மிக்க எண்ணங்களையும் நன்கு அறியும் பேறு பெற்றேன். 'வெண்கலக் கடையில் யானை புகுந்தாற் போல' என்று கூறுவார்களே அதற்கு முற்றிலும் பொருத்தமாகக் கணீர் என்ற குரலில் பேசும் அவர் பேச்சு என் சிந்தனையைக் கவர்ந்தது. அவருடைய உணர்ச்சி என் உள்ளத்தைத் தொட்டது. நானும் என்னாலான வகையில் நாட்டு நலத் தொண்டில் ஈடுபட்டுழைக்க வேண்டும் என்ற நல்லுணர்வு பிறந்தது. அன்று முதல் இன்றுவரை நான் ஓரளவு பொதுநலத் தொண்டு புரிந்து வருகின்றேன் என்றால், மணிமொழியார் அதற்கு ஒருவழியில் காரணம் என்பதை நான் நன்றியுணர்வுடன் கூறிக் கொள்கின்றேன்.

மாணவர் மன்றத்தோடு நெருங்கிய தொடர்புகொண்டு அதன் வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாய் இருந்து வரும் பெரியார்களில் மணிமொழியார் அவர்கள் குறிப்பிடத் தக்கவராவர். மன்றம் தோன்றிய தொடக்க காலத்திலிருந்து அது தத்தித் தவழ்ந்து விழுந்து எழுந்த காலங்களில் எல்லாம் கைதூக்கி விட்டு, இன்று அதன் பெருவளர்ச்சி கண்டு, பெற்ற தந்தையைப் போல உள்ளம் பூரித்து நிற்பவர் மணிமொழியார். முதுபெரும் புலவர் மயிலை சிவமுத்து அவர்களின் ஆருயிர் நண்பராய் பக்கத்துணையாய் நின்று, அவர் புரிந்த ஆக்கப் பணிகள் பலவற்றிற்கு ஊக்க மூட்டியவர் மணிமொழியார். அவருடைய அந்தத் தூய உள்ளத்தை மன்றம் என்றும் நினைந்து போற்றுகின்றது.

இங்ஙனம் தமிழ் மக்களின் நல்வாழ்விற்குப் பல வழியிலும் ஆக்கம் தரும் பெரியார் காஞ்சி மணிமொழியார் அவர்கள் 'காஞ்சி தந்த பெருஞ்செல்வம்' என்று கூறுவது தவறில்லையன்றோ? அவர் எழுபதாண்டு நிறைவுற்றும் இன்னும் இளைஞரைப் போலவே எழுச்சி மிக்க பணிகள் புரிந்து வருகின்றார். இந்த இளமையுணர்ச்சி என்றும் அவரிடம் நின்று நிலவ வேண்டும் என்று விரும்புகின்றேன்.

பெரியார் காஞ்சி மணிமொழியார் அவர்கள் நீண்ட ஆயுளும் நல்லுடற் பேறும் எல்லாவகை வளங்களும் வாய்க்கப் பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க என வாழ்த்துகின்றேன். நாட்டுக்கும் மொழிக்கும் சமூக முன்னேற்றத்திற்கும் அவருடைய தொண்டுகள் மேலும் பயன்பட்டுப் பேரும் புகழும் பெருகி வாழ்க வாழ்க என வாழ்த்துகின்றேன். அவர்தம் அன்புச் செல்வங்களாகிய நன்மக்களும் நலம் பல பெற்று வளமெலாம் சிறக்கக் குடும்பப் புகழோங்க வையத்துள் வாழ்வாங்கு வாழ்க என வாழ்த்துகின்றேன்.

வாழ்க மணிமொழியார் !

வளர்க அவர் தொண்டு !

B

# தலைநாள் போன்ற விருப்பினன்

புலவர் தில்லை தா. அழகுவேலன்

தமிழும் தமிழரும் தமிழ்நாடும் தழைத்து இனிது ஓங்க ஒல்லும் அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாம் செம்மையுறச் செய்து வரும் பெரியார் காஞ்சி மணிமொழியார் ஆவார். பொன்னின் குடத்திற்குப் பொட்டிட்டுப் பார்ப்பதுபோல் அண்ணல் காஞ்சி மணிமொழியாரின் எழுபத்தோராம் ஆண்டில் நாம் அவரைப் பாராட்டிப் பெருமையுறுகின்றோம்.

'தமிழன் என்றொரு இனமுண்டு, தனியே அவர்க்கொரு குணமுண்டு' என்னும் மொழிக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக இலங்குபவர் நம் பெரியார் காஞ்சி மணிமொழியாராவார்.

நான் 1947 இல் சென்னை முத்தியாலுப் பேட்டை உயர் நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றிவந்த பொழுது, தமிழ் நெறிக் காவலர் பேராசிரியர் முது பெரும் புலவர்மயிலை சிவமுத்து அவர்கள், என்னையும் நண்பர்கள் கவிஞர்முடியரசன், புலவர் திருமாவளவன் ஆகியவர்களையும் அழைத்துக் கொண்டு பவழக்காரத் தெருவிலிருந்த 'போர் வாள்' அச்சகத்திற்குச் சென்றார்கள். அங்குப் பேராசிரியர் மா. இளஞ்செழியன் எம். ஏ. அவர்களையும் பெரியார் காஞ்சி மணிமொழியார் அவர்களையும் அறிமுகம் செய்து வைத்தார்கள். 'என்னரும் பெண்ணை போன்று இட்ட ஞான்று இட்டதே தொன்மையுடையார் தொடர்பு' என்னும் மொழிக்கு இலக்காகவும், 'தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ' என்னும் முது மொழிக்கு ஏற்பவும் இந்நாள் அளவும் அவர்கள் இலங்கி வருகின்றார்கள்.

தமிழக வரலாற்றிலும், மொழிநூல் வரலாற்றிலும் பெரியார் காஞ்சி மணிமொழியார் அவர்களுக்குச் சிறப்பான தனியிடம் உண்டு. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரும் அவர்கள் ஆற்றிய தொண்டின் பெருமை கலங்கரை விளக்கம்போல் வழி காட்டி நிற்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

'என் கடன் பணிசெய்து கிடப்பதே,' 'யாதும் ஊரே யாவரும் கேளிர்,' 'யாமார்க்கும் குடியல்லோம்' என்னும் உயரிய தமிழ்க் கொள்கையைக் குறிக்கோளாகக் கொண்டு ஒழுகும் பெரியார் காஞ்சி மணிமொழியார் அவர்கள், புகழெனின் உயிருங் கொடுப்பார்; பழியெனின் உலகுடன் பெறினும்கொள்ளார்; அஞ்சா நெஞ்சினர்; அயரா உழைப்பினர்; தமிழ்ப் பற்றும், தன்மான உணர்வும், விழிப் புணர்ச்சியும், ஏறு நடையும், எஃகு உள்ளமும் கொண்டவர். கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டை உறுதியாகப் பெற்று ஒழுகுபவர். 'கற்றபின் நிற்க அதற்குத் தக'—என்னும் வள்ளுவர் வாய்மொழிப்படி நடப்பவர். இதற்கோர் எடுத்துக்காட்டே சாலும் எனக் கருதுகிறேன். பேராசிரியர் கா. நமச்சிவாயமுதலியார் அவர்கள் முதல் வகுப்புப் புத்தகத்தில் எழுதிய 'கண்ணன் தின்னும் பண்டம் என்ன? கண்ணன் தின்னும் பண்டம் வெண்ணெய்' என்னும் பாடத்தைப் படித்த நம் மணிமொழியார் அவர்கள் அதைப் பற்றிச் சிந்தித்தார். வெண்ணெயைத் தாமும் உணவாகக் கொண்டார்; குணங் கண்டார். உடலோம்பும் முறையை ஒவ்வொருவரும் அவரிடமிருந்து கற்றுக் கடைப் பிடித்தல் மிகமிக இன்றியமையாததாகும்.

பெரியார் காஞ்சி மணிமொழியார் அவர்கள் இன்னுமொரு நூற்றாண்டு இனிது வாழ்ந்து, தமிழ் மொழியை இந்தியத் துணைக் கண்டத்தின் ஆட்சிமொழியாகவும், ஐ. நா. மன்றத்தின் அமைப்பு மொழியாகவும் ஆக்குவித்து வாழ்க! வாழ்க! என, எல்லாரும் வாழ்த்தி இறைஞ்சுவோமாக.

### வெண்பா

காஞ்சி மணிமொழியார் கண்ணின்
மணியனையார்
காஞ்சித் தலைவன் கருத்துடையார்-நாஞ்சில்
உழுபடைபோல் மக்கள் உள்ளத்தில் புரட்சி
எழுப்பினர் ஏந்தல் இனிது.
போர்வாளை ஏந்திப் புகழ்சேர்த்தார்;
என்றென்றும்
சீர்திருத்தக் கொள்கை செழித்தோங்க -
ஓர் நொடியும்
ஓயா துழைத்தநல் உத்தமர்! தாய்த்தமிழின்
சேயானர் வாழ்க செழித்து!

## நன்றி பாராட்டுவோம்

ஈ.வெ.சோமசுந்தரம் பி.ஏ.

இத்தகைய இயல்பான—இன்றி யமையாத-இயற்கை முறைச்சேவை களான சமூகசீர்திருத்தப் பணிகளில் ஈடுபட்டு, எதிர்ப்புகளுக்கும் ஏச்சு களுக்கும் மறுப்புகளுக்கும் மாச்சர் யங்களுக்கும் சளையாமல் மசியாமல் இடையருது உழைப்போர் பாராட்டிப் போற்றப்படத் தக்கவராவர். அங்கிலேயில் பல ஆண்டுகளாக அயராது சமூகப் பணி யாற்றிவரும் நமது 71-ம் ஆண்டுவிழாத் தலைவரான காஞ்சி மணிமொழியார் அவர் களும் அவருடைய சேவைகளும் பெரிதும் பாராட்டத் தகுதி பெற்றனவாகும்.

காஞ்சி மணிமொழியார் அவர்களு டைய 71-வது பிறந்தநாள் விழா நடப்பதைக் கேட்டு அகமிக மகிழ்கின்றேன். அவருடன் 40 ஆண்டுகள் பழகும்பேறுபெற்றேன். அவ ரது இடையருச் சேவையும் தளர்விலாத் துணிவும் ஓய்விலா உழைப்பும் அளவிலாச் சீர்திருத்த ஆர்வமும் போற்றிப் பாராட்டு தலுக்கு உரியன.

பிற்போக்கான சமூகத்தில் பிறந்ததால் சீர்திருத்த வேகம் நிறைந்த அவரது தொண்டு, இன்றியமையாத தேவையாகித் தொடர்ந்து பல்லாண்டு சமூக முன்னேற்றத் திற்குப் பயன் அளித்து வருகிறது. நம் சமூக சீர்திருத்த சேவைகளும் முயற்சிகளும், சமூக வேறுபாடுகளும் ஏற்றத்தாழ்வுகளும் நிறைந்த நம்நாட்டில் இயற்கையாகத் தேவைப்பட்ட வைகளே ஆகும்.

வளர்க அவரது சேவை. விரிக அவரது சேவை வாய்ப்புகள். வாழ்க அவரும் அவ ரது குடும்பத்தார் அனைவரும். அவரும் அவரது சுற்றமும் நண்பரும் இன்பும் பண்பும் வளமும் நலமும் உடல்மன உரமும் உவகை யும் பெற்று நீடு வாழ்ந்து சமூக சேவை ஆற்ற இறை அருள் பொழிய வாழ்த்துகின் றேன்.

---

## அனைத்துக்கட்சியினர் அன்பைப் பெற்றவர்

வி.எஸ். சங்கரசுப்பிரமணிய முதலியார் பி.ஏ.,பி.எல்.,

நாற்பது ஆண்டுக்காலமாகக் காஞ்சி மணிமொழியார் அவர்களோடு நான் நெருங் கிய தொடர்புடையவன். அப் பெருமகனுர் என் மதிப்பிற்குரிய நண்பர்;நசிந்துவரும் நெச வுத் தொழிலாளிகளின் வாழ்கைத் தரத்தை உயர்த்தவும் தான் பிறந்த சமுதாயத்தினர் நல்வாழ்வு பெறவும் அயராது உழைத்து வரும் உத்தமர்; பல்வேறு அரசியல் கொள் கையினரை உடைய தன்னுடைய பெருஞ் சமுதாயத்தில் எல்லோருடைய அன்பையும் அபிமானத்தையும் பெற்ற திருமகனுர். அவர் கள் வாழ்க்கையில் அரசியல் வேறுபாடுகள், சமுதாய வேலைகளின் குறுக்கே நின்றதில்லை. செங்குந்தர் சமூக மாநில மாநாடுகள் சிறப் பாக நடைபெறத் திரை மறைவிலிருந்து எல்லா வேலைகளையும் முன்னின்று செய்து வந்தவர் அவர். அன்னரின் பொதுப்பணி, சட்டசபையில் பணியாற்றும் வாய்ப்பை அவருக்கு அமைத்துக் கொடுத்தது. இறை வன் அவர்களுக்கு நிறைந்த வாழ்வையும் உடல்நலத்தையும் நல்கி அருள் புரிவானுக,

# கனி முத்திரை பதித்தவர்

அடக்கம் அமரருள் உய்க்கும் என அறிஞர் பெருமக்கள் சொல்வர். அதனைச் செயலாற்றித் தந்த பெருமை நமது மணி மொழியார் அவர்களைச் சாரும். அவா திரா விட சமுதாயததுக்கு ஆற்றி உள்ள அரும் பணிகள் அளவிட முடியாதனவாகும். எந்தத் துறையில் அவர் இறங்கினாலும் அதில் அவருக்கு உரிய சிறப்பான முத்திரையைப் பதியவைத்து விடுவார். அவர்மீது அளவற்ற அன்பு கொண்ட சைதை மக்கள் அவரை மீண்டும் சட்டமன்றத்துக்குத்தேர்வு செய்யும்நிலையில் இருந்தும் நமது முதல்வர் கலைஞர் அவர்களுக்காக அந்தத் தொகுதியை விட்டுக் கொடுத்துக் கலைஞரின் வெற்றிக்காக அயராது பாடு பட்டார். அவரது அரசியல் பெருந்தன்மையை எப்படிப் பாராட் டுவது! அகராதிகளில் அதற்குரிய சொல் இருக்குமா என்பது ஐயப்பாடு! அறிஞர் அண்ணாவின் உற்ற நண்பரும் உயிர்த் தோழ ருமாய் மணிமொழியார் அவர்கள் செயல் பட்டதைத் தமிழ் நல்லுலகம் அறியும். உணர்ச்சி உள்ள அவரதுகட்டுரைகள் ''போர் வாள்'' மூலம் நாட்டுமக்கள் உள்ளத்தில் நிறைவு பெற்றதை நாடு பார்த்திருக்கின்றது; நனி சிறந்தவை எனப்போற்றி புகழ்ந்திருக்கின் றது. மூத்த தலைவர்களில் ஒருவரான நமது மணிமொழியார் அவாகள், முதுமையில் இருப் பினும் இளமையின் முறுவலோடு பணியாற்றி நாமெல்லாம் பின்பற்றத் தக்க வழிகாட்டியாக விளங்குகிருர்கள். கழகத் துணைப் பொதுச் செயலாளரான நம் காஞ்சி மணி மொழியார் நீடு வாழ்க! அவரது எழுபத்தி ஓராவது பிறந்தநாள் நல் விழாவில் அனை வரும் பங்கு பெற்று நிறைவு செய்வோமாக.

நெல்லை நெடுமாறன்
நிலா இயக்குநர்

---

## தலைசிறந்த உழைப்பாளர்

**சோ. இலக்குமிரதன் பாரதி** எம்.ஏ., பி.எல்.

திரு. காஞ்சி மணிமொழியாரின் எழு பத்தோராவது பிறந்த நாளைக் கொண்டாடு வது நமக்கு மகிழ்ச்சி தரும் கடனாகும்.

நாட்டின் அரசியல் விடுதலை, தமிழர் களைப் பழைய பிற்போக்கு மனுதர்மப் பார்ப் பனீயத்திற்கு உட்படுத்தி விடுமென அஞ்சிய நாள் உண்டு தன்மான இயக்கம், மக்களிடை யே புதிய உணர்ச்சியை உண்டுபண்ணி மறு மலர்ச்சியை விளைவித்து, அந்த அச்சத்தைப் போக்கியது. கிடைத்த தன்னாட்சி உரி மையை நவீன முற்போக்கு முயற்சிகளில் பிணைக்கும் வாய்ப்பையும் வலிமையையும், விழித்தெழுந்த தமிழகம், திராவிட முன் னேற்றக் கழகத்திடம ஒப்புவித்தது பற்றி அதிசயப் படவேண்டியதில்லை.

தமிழகம் இன்று விழித்தெழ உழைத்த மக்களில் தலைசிறந்தவரான திரு. காஞ்சி மணிமொழியார், நீடு வாழ்ந்து, தமிழ் நாடு உலகில் உயர்ந்து சிறப்புறுமாறு அரும் பணியாற்ற விழைந்து அவரைப் பாராட்டு வோம்.

# உயர்ந்த வழிகாட்டி

**நெ. து. சுந்தரவடிவேலு,** எம்.ஏ.,எல்.டி.,
*சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்*

காஞ்சி மணிமொழியார் தமிழ் ஆசிரியராக வாழ்க்கையைத் தொடங்கிப் பல மாணவர்களுக்குத் தமிழ்ப் பற்றையும் தமிழ் அறிவையும் ஊட்டினர். கல்விக்கூடத்தோடு அவர் நின்று விடவில்லை; பொது வாழ்விலும் ஈடுபட்டு சமுதாய முன்னேற்றத்துக்கும் தமிழ்ப் பாதுகாப்புக்கும் பெரிதும் உழைத்திருக்கிறர்; பாடுபட்டிருக்கிறர். அவரது அரைநூற்ருண்டுப் பொதுத் தொண்டு தமிழர்களுக்கும் தமிழுக்கும் பெரிதும் உதவியது. சட்டமன்ற உறுப்பினராக ஐந்து ஆண்டுகள் இருந்து ஆற்றிய பணி மறக்கப் பாலது அன்று. பொதுத் தொண்டு அவரைப் பலமுறை சிறைக்குக் கொண்டு சென்றது. ஆயினும் அஞ்சா நெஞ்சுடன் பொதுத்தொண்டை அவர் இன்னும் நடத்தி வருகிறர். அவர் மேலும் பல்லாண்டு உடல் நலத்தோடும் உள்ள உவகையோடும் தமிழருக்கும் தமிழுக்கும் தொண்டாற்ற விழைகிறேன். 71வது வயதில் அடியெடுத்து வைக்கும் அவருக்கு என் வணக்கம்.

---

## எளியோரை உயர்த்தும் ஏந்தல்

**இரா. பூவராகமூர்த்தி** பி. ஈ.,
*முன்னுள் தலைவர், தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம்*

உயர்திரு காஞ்சி மணிமொழியார் அவர்களின் 71-வது பிறந்த நாளையொட்டி, சிறப்புமலர் ஒன்று வெளியிடுவதைக் கேட்டுப் பெரிதும் மகிழ்வடைகிறேன்.

அவர்களுடைய தமிழ்த் தொண்டு நாடறிந்த ஒன்ருகும். 1962 முதல் அவர்கள் எங்கள் தொகுதிச் சட்டமன்ற உறுப்பினராக இருந்து, அவர்கள் ஆற்றிய பணி போற்றற் குரியது.

கடந்த பிப்ரவரித் திங்கள் 1969 முதல் அவர்களுடன் நான் நெருங்கிப் பழகும் வாய்ப்பினைப் பெற்றேன். அவர்கள் அப்போது வீட்டு வசதி வாரியத்தின் உறுப்பினராக நியமிக்கப் பட்டார்கள். அது முதல் அவர்கள் ஏழை, நடுத்தர மக்களுக்கான வீட்டுவசதிப் பிரச்சினைகட்குத் தீர்வு காணுவதில் மிகவும் அக்கறையுடன் செயல்பட்டு வருகிறர்கள். குறிப்பாக சேரி வாழ்வோர்களுடைய வீட்டு வசதிப் பிரச்சினைகளை விரைவாகவும், அதிக அளவிலும் தீர்க்க வேண்டுமென்பதில் தணியாத ஆர்வம் கொண்டவர்கள்.

அவர்களுடைய சீரிய ஆலோசனைகள், வீட்டு வசதி வாரியம் செயல்படுவதற்கு மிகவும் உறுதுணையாக இருக்கின்றன.

அவர்களுடைய தமிழ்த் தொண்டும், தாய் நாட்டுப் பணியும், மேன்மேலும் வளர, அவர்கள் நூருண்டு காலம் வாழ வாழ்த்துகின்றேன்.

# மனம் இளையா இளைஞர்

க. வச்சிரவேல் முதலியார் பி.ஏ., எல்.டி.

காஞ்சி மணிமொழியார், பண்டைக் காலப் புலவர்கள் வேண்டியவாறு, வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பினராகிய தமிழ்க் குடி மகனுர்; எழுபதாண்டு வாழ்வாங்கு வாழ்ந்து வரும் மனம் இளையா இளைஞர்; இளைய வர்க் கெல்லாம் ஓர் எடுத்துக்காட்டு.

வாழ்வென்பது போதிய அளவு கிடைக் கப் பெருத ஏதுக்களி லிருந்து போதிய முடிவு களைக் காணும் திறனை அவாவும் கலை (Life is an art which requires man to draw sufficient conclusions from insufficient premises) என்பது மேலை நாட்டு அறிஞன் ஒரு வன் உரை. மணிமொழியார் வாழ்க்கை அத்தகைய தொரு கலை. மக்களையும் சூழ்நிலையினையும் செம்மையாக உணர்ந்து செயற்படும் துளக்கமில் உளத்தினர். தமிழ் இளைஞர் இன்னேர் அன்னேரை முன் மாதிரியாகக்கொண்டு, உணர்ந்து உழைக்க முற்படின், தமிழகம் உயரும்.

மணிமொழியாரும் அவர்தம் உறவின ரும் நீடினிது வாழ்க!




''அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப் பேணித் தமராக் கொளல்'' என்ற வள்ளுவர் வாய் மொழிக் கேற்ப, மதிப்பு மிகு நம் பெரியார் உயர்திரு காஞ்சி மணிமொழியார் அவர்கள் சேர்ந்த எந்த இயக்கமும் பொன்மலை போல் உயர்ந்தோங்கி ஒளி விடும் என்பது வெள்ளிடைமலை. பல்லாண்டுகளுக்கு முன் உயர்திரு மணிமொழியார் அவர்கள் தம் அருமைத் திருமகனார் இளஞ்செழியன் எம். ஏ. அவர்களுடன் எங்கள் ஊராகிய காவித்தண்டலத்தையடுத்த உறை காட்டுப் பேட்டைக்கு வந்து, தம் அரிய சொற்பெருக்கின் மூலம் எங்களுக்கெல்லாம் விழிப்புணர்ச்சியை ஊட்டியதுடன், தாம் மணிமொழியார் என்ற பெயரையும் நிலை நிறுத்தினார்.

திருவாளர் காஞ்சி மணிமொழியார் அவர்கள், தற்கால இளைஞர்கட் கெல்லாம் முன்னோடி; வருங்கால மக்களுக்குவழிகாட்டி. பொறுமை, செயலாற்றும் திறமை, சொல்வன்மை, மொழிப்பற்று, தியாக உணர்ச்சி முதலிய சிறந்த பண்புகளே உருவாகக் கொண்ட உயர்திரு காஞ்சி மணிமொழியார் அவர்களுடைய 71 ஆம் ஆண்டு வெள்ளணி விழா சிறப்புற நடைபெறுவதாகுக.

தமிழகம் அவர் சிறந்த தொண்டினைப் பல்லாண்டுக் காலம் பெறுக.

# சிறந்தவர் சீரியர்

சிந்தாமணிச் செல்வர் —மகாவித்வான்

மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை

கண்ணியர் காஞ்சி மணிமொழி யாரின்
எண்ணுறு மெழுபத் தொன்ரும் ஆண்டின்
பிறந்தநாட் சிறப்புப் பெருஞ்சிறப் பாகுக!
சிறந்தவர் யார்க்கும் சீரிய நண்பர்
செந்தமிழ் காக்கும் செம்மல் சிறிதும்
இந்திக் கிடங்கொடா ஏர்பெறு வீரர்
மாண்புறு வாழ்வில் மன்னிய நாளில்
வீண்எனக் கருதப் பெறுநாள் கண்டிலம்
தமிழே அவர்தம் தண்ணிய மூச்சுத்
தமிழே அவர்தம் தகைசால் பேச்சு
தமிழர் நலனே தந்நலம் என்பவர்!
அமிழ்தினும் இனிய தமிழினை வளர்த்தலே
இமிழ்கடல் ஞானத் தெண்ணுறு தொழில்எனப்
பேச்சால் எழுத்தால் பெட்புறு தொண்டால்
ஏச்சுறு வகையில் எழுபான் ஆண்டும்
நன்முறை கழிபபி நாடெலாம் புகழப்
பொன்புரை குணத்துடன் பொலியு மண்ணல்
மண்ணுமங் கலவிழாப் பண்ணுற அமைய
மண்ணவர் மகிழ மற்றும் பல்லாண்
டெண்ணிய வெல்லாம் இனிது நிறைவுறத்
தண்ணரு ளோடு தகவுடன் வாழ
எல்லாம் வல்ல இறைவன் அருள்கெனப்
பல்லாண் டிசைத்துப் பரவுவன் இனிதே

---

# புதிய தமிழகத்தின் சிற்பி!

சி. ஆர். சண்முகம்
செயலாளர், தி.மு.க. கிளை, புத்தூர். ஆந்திர மாநிலம்

உயர்திரு. மணிமொழியாரின் 71-ஆம் ஆண்டுப் பிறந்தநாள் விழா நடைபெறுவது கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். இதுநாள் வரையில் அவர் பொது மக்களுக்கும், குறிப்பாகத் திராவிட நாட்டிற்கும், தமிழர்க்கும், தமிழுக்கும், கழகத்திற்கும், கழக வளர்ச்சிக்கும், கழக எழுச்சிக்கும் ஆற்றிய பல சிறப்பு மிக்க தொண்டுகள் என் கண்முன் காட்சி தருகின்றன. புதிய தமிழகத்தை உருவாக்கும் அந்தப் புத்துலகச் சிற்பியின் தொண்டுகளும் ஆக்கப் பணிகளும் பலப்பல. இத்தகைய பணிகளைத் தொடர்ந்து ஆற்ற அவர் இன்றுபோல் என்றென்றும் வாழ்வோடும், வளமோடும், வலிவோடும், பொலிவோடும், பேரோடும், புகழோடும், சீரோடும், சிறப்போடும், வெற்றி பல பெற்றுப் பல்லாண்டு வாழ்வாங்கு வாழ மனமார, வாயார வேண்டி விழைகின்றேன்.

# முறையாக சில ஆண்டுகள்

வல்லை பாலசுப்பிரமணியம். ம.அ.

என் போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரிய உயர்திருவாளர் காஞ்சி மணிமொழியார் அவர்களின் 71-வது பிறந்தநாள் கொண்டாட்ட விழா மலருக்குக் கட்டுரை எழுதும்படிப் பணிக்கப்பெற்றதைப் பெறற்கரிய பேறு எனக் கருதுகிறேன்.

விழாத் தலைவர், மனைமாட்சி மங்கலத்தின் நன்கலமான அறிவறிந்த மக்கள் செல்வத்தினுல் பொலிவுற்றுத் திகழ்பவர். இளஞ்செழியன் என்னும் குமாரசாமியும், நடராசனும், தமிழ்ச்செல்வியும் நான் பார்த்து வளர்ந்த குழந்தைகள்; இஞ்ஞான்று வாழ்க்கையின் பல துறைகளில் சிறப்பெய்தி விளங்குகின்றுர்கள். மனத்துக்கினிய இம் மதலைகளுக்கு என் உள்ளங்கனிந்த வாழ்த்துக்கள்!

மணிமொழியாரது குழந்தைகளின் எண்ணிக்கையை நோக்கும்போது, இப்போது பேசப்படும் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை அவர் அப்போதே கையாண்டிருப்பாரோ என ஐயுறத் தோன்றுகிறது. அல்லது, 'மூன்று குழந்தைகள்' என்னும் எண்ணிக்கை இயல்பாகவே அமைந்து விட்டதோ? யாதென அறியேன். இது அகப்பொருள் சார்ந்த செய்தி யாகையால், இதில் யான் மட்டுமீறித் தலையிட்டு ஆய்வுசெய்தல் அடாது. எனினும், "அடுத்த குழந்தை இப்போது வேண்டாம்; மூன்றுக்கு மேல் எப்போதும் வேண்டாம்" என்று விளம்பரங்களிலும் ஒலிபெருக்கிகளிலும் படக்காட்சித் திரைகளிலும் காட்டப்படும் வாசகம், எழுத்துக்கு எழுத்து கடைப் பிடிக்கப்பட்டிருப்பதைக் கண்டு அதிசயிருக்கிறேம்.

உண்மையில், காப்பாற்றமுடியாத அளவுக்குக் குழந்தைகளைப் பெற்று தொல்லைப்படுதல் ஆகாது என்னும் கருத்து தமிழகத்தில் இன்று நேற்று முளைத்ததன்று. தொல் பழங்காலந்தொட்டே இருந்து வந்திருக்கிறது.

(1) "....……… …
பூப்பிளக்க எழுகின்ற
புற்றீசல்போலப்
புலபுலெனக் கலகலெனப்
புதல்வர்களைப் பெறுவீர்;
காப்பதற்கோ வழியறியீர்;
கைவிடவுமாட்டீர்;
கவட்டுத் தொன்மரத்திடுக்கில்
கால் நுழைத்துக் கொண்டே
ஆப்பதனைப் பிடித்திழுத்த
குரங்கதனைப்போல
அகப்பட்டீர்; கிடந்துழல
அகப்பட்டீரே!"

எனப் பட்டினத்தார் பாடியதாக ஒரு பாடல் வழக்காற்றிலிருக்கிறது.

(2) "ஒரு மைந்தன் தன் குலத்துக்குள்ளான் என்பதும் ஓரான்" என மனுநீதி கண்ட புராணத்தில் 'ஒரு குலத்துக்கு ஒரு மைந்தன்' சிறப்பித்துப் பேசப்படுகிறுன்.

(3) பன்றி பல குட்டிகள் போடுவதையும் குஞ்சரம் ஒரேவொரு கன்று பெறுவதையும் அறப்பளீசுர சதகம் ஒப்பிட்டுக் காட்டுகிறது.

(4) குசேலரின் மனைவியாகிய சசீலை 27 பிள்ளைகளைப் பெற்றுவிட்டு அவைகளுடன் படும் அவதியை, சோகமும் நகைச் சுவையும் கலந்துறவாட, மகா வித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் குசேலோபாக்கியானத்தில் படம் பிடித்துக் காட்டுகிறுர்.

×

(5) இராமனைக் காட்டுக்குப் போகச் செய்த சதியில் தனக்கும் பங்கு உண்டென்று கோசலை குற்றம் சாட்டியதைக் கேட்ட பரதன் நடுநடுங்கி, ''தாயே, அப்படி எனக்குப் பங்கு உண்டென்றால், அளவற்ற குழந்தைகளைப் பெற்றவர்கள் போகிற நரகத்துக்குப் போவேன்'' என்று சூளுரைக்கிறான்.

ஆனால், இத்துறையில் தற்காலத்துக்கும் முற்காலத்துக்குமுள்ள ஒரேவொரு வேற்றுமை என்னவென்றால், தற்காலத்தில் குழந்தைகள் பிறப்புக்கேதுவான ஆண்பெண் பாலுணர்ச்சி மிக்கோங்குவதற்குரிய சாதனங்கள் தங்கு தடையின்றிக் கட்டவிழ்த்து விடப்பட்டுள்ளன. அருவருப்பான சுவரொட்டிப் படங்கள், ஆபாசமான திரைப்படக் காட்சிகள், கையினால் தொடுவதற்கும் கண்களால் காண்பதற்கும் தகுதியற்ற வண்ணப்பட அட்டைகள் கொண்டுள்ள நஞ்சனைய கதைப் புத்தகங்கள், திருமணமான உடனேயே தனிக் குடித்தனம் ஆகியவை அச் சாதனங்களில் சில ஆகும். இவ்வளவையும் செய்துவிட்டு, மக்கள் பிறப்பைக் கட்டுப்படுத்துவதற்குச் செயற்கை முறைகள் விளம்பரப் படுத்தப்படுகின்றன. இம் முறைகளில் சிலவற்றைப்பற்றி நினைக்கவும் நெஞ்சு வலிக்கிறது; எழுதவும் கை கூசுகிறது.

மாறாக, முற்காலத்தில் வீடு நிறைய உறவினர்கள் இருந்தபடியால், ஆண்பெண் கூட்டம் அடிக்கடி நேர்வதற்கு வாய்ப்புகள் ஏற்படமாட்டா. மேலும், எண்ணெய் நீராடு நாள், மயிர் வழித்துக் கொள்ளும் நாள், நோன்பு நாட்கள், தீட்டுநாட்கள் ஆகியவற்றில் உடலுறவு கூடாதெனத் தடை விதிக்கப்பட்டிருந்தது. இக் கட்டுப்பாடுகளுக்கெல்லாம் இரு பாலாரும் மதிப்புக் கொடுத்து நடந்துவந்ததனால், மட்டுமீறிய குழந்தைகளின் பிறப்பு இயல்பாகத் தடுக்கப்பட்டு, பிறந்த சில குழந்தைகளும் நன்கு கண்காணிக்கப்பட்டு, உளவளமும் உடலுரமும் வாய்ந்து, நெடிதுநாள் வாழ்ந்தன,

குடும்பக் கட்டுப்பாட்டுக் கொள்கை பல நூற்றாண்டுகளுக்கு முன்பேகூட தமிழகத்தில் பரவலாக நிலவியிருந்ததென்பதற்கு ஓர் இலக்கியச் சான்று காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

திருநாவுக்கரசு நாயனார் கி. பி. 7-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் வரலாற்றினைச் சீர்மை பெறப் பாடிய சேக்கிழார் பெருமான் கி. பி. 12-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். நாவுக்கரசரின் தமக்கையாராகிய திலகவதி பிறந்ததைப்பற்றிச் சொல்லிவிட்டு, நாயனார் பிறந்த மாண்பினைச் சேக்கிழார் பாடத் தொடங்குகிறார். இதோ சேக்கிழார் குரலையே கேட்கிறோம்.

''திலகவதியார் பிறந்து **சிலமுறை ஆண்டு** அகன்றதன் பின் ..''

திலகவதியின் பிறப்புக்கும் நாவுக்கரசரின் பிறப்புக்கும் இடையில் சில ஆண்டுகள் கழிந்தன என்று சொல்லவந்த சேக்கிழார், சும்மா கழிந்தன என்று சொல்லாமல், **கழியவேண்டிய முறைப்படிக் கழிந்தன** எனறு சொலகிறார். ஆகவே, அக்காலத் தமிழகத்தில், ஒரு குடும்பத்திலே ஒரு குழந்தை பிறந்தால், இத்தனை ஆண்டுகள் கழிந்த பின்னர்தான் மற்றொரு குழந்தை பிறக்கவேண்டுமென்னும் ஒரு நியதி இருந்ததெனத் தெற்றென விளங்குகிறது. மேற்கண்ட **''சிலமுறை ஆண்டு அகன்றதன்பின்''** என்னும் சொற்றொடர் ''Proper spacing between two child births'' என்னும் ஆங்கில வாசகத்தை நமக்கு நினைப்பூட்டவில்லையா? அப்படித் தக்க இடைவெளியிட்டுப்பிறக்கும் குழந்தை நோஞ்சானாயிராமல், வலிமையும் அறிவாற்றலும் வாய்ந்த குழந்தையாயிருக்குமென்பதில் தடை யாது?

நாவுக்கரசருக்குப் பிள்ளைத் திருநாமம் **''மருள்நீக்கியார்''** என்பது. தம் தமக்கையாருக்குப் பிறகு தக்க இடைவெளியிட்டுப் பிறந்ததனால்தான், மருள் நீக்கியார் 81 ஆண்டுகள் நெடிது வாழ்ந்தார்; தெய்வீக ஆற்றல்

[அடுத்த பக்கம் பார்க்க]

# நமது போர்வாள்

கவிஞர் ஆனந்தம்

1944-45-ஆம் ஆண்டுகளில் அறிஞர் அண்ணாவின் 'திராவிடநாடு' ஏடு இளைஞர் தம் இதயங்களைச் சுண்டியிழுத்து, எழுத்துல கில் மாபெரும் மௌனப் புரட்சியினை விளைத் துக் கொண்டிருந்த நேரம். நானும் சிறுசிறு கவிதைகளை அவ்வப்போது எழுதுவதுண்டு. அப்போது மா. குமாரசாமி என்ற பெயரில் அருமையான கட்டுரைகள் சில 'திராவிட நாடு' இதழில் வெளிவரக்கண்டு, அண்ணா வின் அடிச்சுவட்டில் நடைபோடும் இந்த அருமைத் தம்பி யாரோ என ஆர்வம்மிகும் என் உள்ளத்துள் வினைக்குறி எழவே, எங் கள் ஊராப்பக்கம் அண்ணா அவர்கள் ஒரு முறை வந்தபோது "யார அண்ணா இந்த மா. குமாரசாமி?" என்று கேட்டேன்.

"தெரியாதா? நமது காஞ்சி மணிமொழி யார் அவர்கள் மகன்தான்! புலிக்குப் பிறந் தது பூனையாகுமா?" என்றார்கள். என் நெஞ் சம் மகிழ்ச்சியில் பூரித்தது. வழிவழியாக நமது இயக்கப் பரம்பரை வளர்ந்து வருவதை எண்ணி உடலே பூரித்தது.

அந் நாட்களில் மா. குமாரசாமி என் னும் பெயரில் அரிய கட்டுரைகள் தீட்டிவந்த இளைஞர்தான் பின்னர் மா. இளஞ்செழியன் என்னும் பெயருடன் நாட்டு மக்களுக்கு நன்கு அறிமுகமாகியிருக்கிறார்.

1947 -ல் தந்தை மணிமொழியாரும் மகன் இளஞ்செழியனுமாக அந்த இயக் கத்தை வளர்த்திடப் "போர்வாள்" ஏட்டி னைத் துவக்கினர். வாள்முனையிலும் வலி மையான வார்த்தைக் கோவைகளை வார்த் தெடுத்து வழங்கி இந்நாட்டு மக்களைக் குத்தி எழுப்பினர். பெயரளவில் மட்டுமல்லாமல் 'போர்வாள்' ஏடு, பயனளவிலும் பெருத்த வெற்றியினை ஈட்டியது.

பேரறிஞர் அண்ணா அவர்களின் நுழை வால் உரமும் திறமும் பொலிவும் வலிவும் பெற்ற திராவிடர் கழகம், தன்பால் இளைஞர் களை ஈர்த்தது என்பது உண்மையேயாயினும் குறிப்பிடத்தக்க சில முதியோர்களை, அண்ணாவைவிட ஆண்டில் மூத்த தகை யாளர் சிலரையும், அண்ணாவின் பாசறை யில் தொடர்ந்து தங்கிடச் செய்தது.

அத்தகைய முதியவர்களில் தலைசிறந்த வராக நமது பெருந்தகையாளர் காஞ்சி மணிமொழியார் அவர்களை மதிக்கிறேன். அவரை முதியவர் என்று கூறவும் எனக்கு வெட்கமாக இருக்கிறது. அவரது உழைப் பையும் சுறுசுறுப்பையும் காணும்போதும், ஏறத்தாழ 45 ஆண்டுகட்கு மேலாக இடை யருது தொண்டாற்றும் மனப்பான்மையைப் பார்க்கும்போதும் இதிலே நூற்றிலே ஒரு பங்கு நம்மிடம் அமைந்தால் போதும் என்ற ஏக்கம் மேலிடுகின்றது.

அண்ணாவைப் பறிகொடுத்துத் தவிக் கும் நமது உள்ளங்களுக்கு நமது இளைஞர் திரு. காஞ்சி மணிமொழியார் ஆறுதலாக விளங்குகின்றார் என்பது மிகைபடக் கூறுவ தாகுமா?

---

[முன் பக்கத் தொடர்ச்சி]

பெற்றவராகத் திகழ்ந்தார்; நாவீறுடையவ ராக விளங்கினார். அவர் திருவாயினின்றும் கடல் மடைதிறந்தாற்போல் தீந்தமிழ்ப் பாடல் கள் ஆயிரக்கணக்கில் வெளிவந்தன. அவரால் தழைத்த கலைத்துறைகள் மிகப் பல. அருந்தவத்தோர் நெறி வாழ்ந்தது. உலகினை மூடியுள்ள இருள் படலத்தைக் கிழித்துக் கொண்டு மேல்நோக்கி எழும் உதயசூரியனைப் போல அவர் தோன்றினார்' என்றெல்லாம் சேக்கிழார் பரவசமாகப் பாடுகிறார். இதோ, அவர் முழுப் பாடலையும் கேட்போம்.

"திலகவதியார் பிறந்து சிலமுறை
ஆண்டு
அகன்றதன் பின்,
அலகில் கலைத்துறை தழைப்ப,
அருந்தவத்தோர் நெறிவாழ,
உலகில் வரும்இருள்நீக்கி
ஒளிவிளங்கு கதிரேபோல்,
மலரும் மருள்நீக்கியார்
வந்து அவதாரம் செய்தார்."

# கடமை கண்ணியம் கட்டுப்பாடு

இ. எ. பாலகிருட்டினன்

மறைமலையடிகளாரின் தமிழார்வம், திரு. வி. கலியாணசுந்தரனாரின் நாட்டுப் பற்று, நாவலர் சோமசுந்தர பாரதியாரின் அஞ்சாத நெஞ்சம், பெரியார் ஈ. வே. ரா. வின் பகுத்தறிவு வேகம், அறிஞர் அண்ணாவின் பரந்த உள்ளம்—இத்தனையும் ஒன்று திரண்டு ஓர் உரு எடுத்தாற்போல் அமைந்திருப்பவர் காஞ்சி மணிமொழியார் அவர்கள். அடக்கத்தில் அவர் பசு போன்றவர்; வீரத்திலோ சிங்கம் போன்றவர்; உழைப்புத்திறனிலோ யானைபோன்றவர்; சுறுசுறுப்பிலோ அவர் ஒரு தேனீ.

கடமை உணர்வின் சின்னமாகத் திகழ்பவர் காஞ்சி மணிமொழியார். தமிழ்நாட்டுக்கும் தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் ஆற்றவேண்டிய கடமைகள் அத்தனையையும், தன் திறமை முழுவதையும் பயன்படுத்தி ஆற்றியிருப்பவர்—ஆற்றிவருபவர் அச் செந்தமிழ்ச் செம்மல்.

கண்ணியம், அப் பெருந்தகையாளரின் பொதுவாழ்வில் இரண்டறக் கலந்துவிட்ட ஒரு சீரிய பண்பு. அவருடைய பேச்சு, எழுத்து, செயல், நடைமுறை, நோக்கு, போக்கு அத்தனையிலும் கண்ணியம் என்னும் பெருந்தன்மை நீக்கமற நிறைந்திருப்பதை நாடு நன்கறியும்.

கட்டுப்பாடு—ஆம்—அந்த உயர்ந்த பண்பின் நடமாடும் இருப்பிடமாகத் திகழ்பவர் மணிமொழியார். அறிவிலும் ஆற்றலிலும் தொண்டிலும் வயதிலும் அவரைவிடப் பலமடங்கு குறைந்த நிலையினராக உள்ளவர்களிடத்திலும், கட்டுப்பாட்டுணர்வின் காரணமாக அப் பெருமகனார் எவ்வளவு அடக்கத்தோடும் பெருந்தன்மையோடும் நடந்து கொள்கிறார் என்பதைக் கண்டு வியந்து போற்றிப் பின்பற்றுகிற பல்லாயிரக் கணக்கான இளைஞர்களில் நான் ஒருவன்.

கடமை, கண்ணியம், கட்டுப்பாடு—இது பேரறிஞர் அண்ணா அவர்களால் தமிழ் நாட்டுக்குத் தரப்பட்டுள்ள தாரக மந்திரம். இத் தாரக மந்திரத்தின் திரு உருவமாகத் திகழ்பவர் திருவாளர் மணிமொழியார்.

மணிமொழியார் அவர்களின் மூத்த மகனார்—பதினைந்தாண்டுகளாக என்னுடன் நெருங்கிப் பழகிவரும் என் கெழுதகை நண்பர்—பேராசிரியர் மா. இளஞ்செழியன் எம் ஏ. அவர்களும் பெரியவர் மணிமொழியாரும் இணையாசிரியர்களாக இருந்து நடத்திய 'போர்வாள்' இதழ் தமிழகத்தில் எத்தகைய வீர உலா வந்து, தமிழ் இளைஞர்களின் இதயங்களையெல்லாம் எப்படி இலட்சிய முரசங்களாக மாற்றியமைத்தது என்பதை எண்ணும்போது நெஞ்சம் சிலிர்க்கிறது. அவர்கள் இருவராலும் நடத்தப்பட்ட "போர்வாள்" சமுதாயக் கொடுமைகளை வெட்டி வீழ்த்திவந்த கூர்வாளாகக் காட்சி அளித்தது என்றால், அவர்களால் வெளியிடப்பட்ட "திராவிடர் நாட்குறிப்பு" கருத்துக் குவியல்கள் நிறைந்த பகுத்தறிவுப் பெட்டகமாக அமைந்து, பொதுவாகத் தமிழ் இளைஞர்களுக்கும், சிறப்பாக மாணவ மாணவிகளுக்கும் பெரும் பயன் நல்கி வந்தது.

1938ல் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போரைத் தொடங்கி மணிமொழியார் அவர்கள் ஆற்றிய அரும்பணியும், 1948ல் மீண்டும் இந்தி எதிர்ப்புப் போர் மூண்டெழுந்தபோது அம்முறையும் முழு மூச்சுடன் அதில் ஈடுபட்டு அஞ்சாமல் சிறை சென்ற அவர்தம் மொழிப் பற்றும் என்னால்—என்னால் மட்டுமா—தமிழ்மக்கள் அனைவராலும் என்றும் மறக்க இயலாதவை.

பெரியார் மணிமொழியாரின் 71 வது பிறந்தநாள் விழாவை இப்போது கொண்டாடி மகிழும் தமிழகம், அன்னாரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடிச் சிறக்கும் பேற்றினையும் நிச்சயம் பெறும் என நம்புகிறேன். வாழ்க மணிமொழியார்! ஓங்குக அவர் புகழ்!

# பொன்னடிகளை வணங்குகிறேன்

## கே. பி. தாயமணி

என் வழிகாட்டியும், உளங்கவர்ந்த தலைவரும், தொண்டுள்ளம் நிறைந்தவருமாகிய காஞ்சிப் பெரியார் மணிமொழியார் அவர்களுடைய 71-ம் ஆண்டுப் பிறந்தநாள்விழா கேட்டு மட்டற்ற மகிழ்ச்சியும் பூரிப்பும் அடைகிறேன். தலைவர்களோடு தலைவராகியும் தொண்டர்களோடு தொண்டராய் விளங்கும் அவர் உயர் பண்பும் ஒப்புயர்வற்ற தொண்டும் உழைப்பும் நாம் பின்பற்றத் தக்கனவாகும். யாருக்கும் எந்த நேரத்திலும் தயங்காது உதவும் தண்ணணியாளர் அவர். இந்தத் தண்ணளிக்குச் சில உதாரணங்களைத் தர விரும்புகிறேன்.

1965ஆம் ஆண்டு. கடுமையான அரிசித் தட்டுப்பாடு, தமிழக மக்களைப் பொதுவாகவும் சென்னை நகர மக்களைச் சிறப்பாகவும் வாட்டி வதைத்துவந்த நேரம். சென்னைமா நகரின் பிற பகுதிகளைப்போலவே கோடம்பாக்கம் பகுதியையும் அரிசிப் பஞ்சம் கசக்கிப் பிழிந்துவந்தகாலம். அத்தகைய சூழ்நிலையில் ஒருநாள் இரவு. கோடம்பாக்கத்தில் உள்ள உணவுப் பங்கீட்டுக் கடை ஒன்றில் அரிசி மூட்டைகள் பற்பல வந்து இறங்கின. இறங்கிய காட்சியைக் கண்ட அக்கம் பக்கத்து மக்கள் தத்தம் உணவுப் பங்கீட்டு அட்டைகளுடன் ஓடோடி வந்தார்கள் அரிசியை வாங்க. ஆனால் அந்தோ பரிதாபம், கடையின் உரிமையாளர், அரிசியை விற்க மறுத்துவிட்டார். வற்புறுத்திக் கேட்டவர்களிடத்தில் ஏதேதோ சாக்குப் போக்குகள் கூறி விரட்டிக்கொண்டிருந்தார். வேதனை நிரம்பிய இந்த விபரீத நிலையை அறிந்த நான் ஓடோடி வந்து, என் இதயம் கவர்ந்த இனிய தலைவர் மணிமொழியார் அவர்களிடத்தில் செய்தியைத் தெரிவித்து, ஆவன செய்யுமாறு கேட்டுக்கொண்டேன். அப்போது இரவு மணி பத்தரை என்றாலும் சிறிதளவும் தயங்காமல் என்னுடன் புறப்பட்டார் மணிமொழியார். நேரே குறிப்பிட்ட கடைக்கு வந்தார். உரிமையாளரிடம் சொற்போர் புரிந்தார். அரிசி மூட்டைகளை அப்போதே பிரித்து மக்களுக்கு விற்றாகவேண்டும் என்று உரிமை முழக்கம் புரிந்தார். இரவு மணி பத்தரை ஆகிவிட்டதே—இனி எப்படி விற்பது அரிசியை என்று கூறித் தட்டிக் கழிக்க முயன்ற கடைக்காரரிடம், எந்நேரமானாலும் விற்றே ஆகவேண்டும் என்று சங்கநாதம் புரிந்தார். இறுதியில் மணிமொழியாரின் உரிமை முழக்கம் வென்றது. ஏமாற்றத்தோடு வீடு திரும்பியவர்களெல்லாம் செய்தி கேட்டுக் கடைக்கு ஓடி வந்தனர். அட்டைகள் வைத்திருந்த அனைவருக்கும் அரிசி இரவு 12 மணிவரை விற்கப்பட்டது. மக்களின் துயர் தீர்ந்தது. நூற்றுக்கணக்கான இதயங்கள் மணிமொழியாரை மீண்டும் மீண்டும் வாழ்த்தின; வாழ்த்தி வணங்கின; வணங்கிப் புகழ்ந்தன. மக்களின் துயரங்களைத் தீர்ப்பதில் மணிமொழியாருக்கு உள்ள பேரார்வத்தையும் பெருந்திறனையும் இந்த நிகழ்ச்சி தெள்ளத் தெளிவாக விளக்குகிறது.

1966 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம். பெருமழை பெய்ததால் சென்னை சைதாப்











பேட்டைத் தொகுதியின் குடிசைப் பகுதிகள் வெள்ளக் காடாக மாறி, அங்குள்ள ஏழை மக்கள் உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க இடமுமின்றித் தத்தளித்தபோது மணிமொழியார் அவர்கள் ஆற்றிய தொண்டு, என்றென்றும் போற்றிப் புகழத் தக்க ஒன்றாகும். அச் சமயத்தில் மணிமொழியார் அவர்கள் முழங்கால் அளவுக்கு மேலும் தண்ணீர் நிறைந்த பகுதிகளில்கூட நேரில் நடந்துசென்று, துயர் நிறைந்த மக்களைக் கண்டு ஆறுதல் கூறி, உடனடியாக அவர்கள் சென்று தங்குவதற்குப் பள்ளிகளையும் கல்லூரிகளையும் திறந்துவிட ஏற்பாடு செய்ததோடு, உணவு தேவைப்பட்டவர்களுக்கு உணவு, உடை தேவைப்பட்டவர்களுக்கு உடை, புதிய குடிசைகள் கட்டிக்கொள்வதற்கான கடன் வசதி முதலியவற்றையெல்லாம் உரிய அதிகாரிகள்மூலம் பெற்றுத் தந்தார். இருபத்திமூன்று நாட்கள் இந்தத் துயர் தீர்க்கும் பணியைத் தொடர்ந்து புரிந்தார் மணிமொழியார். அந்தப் பணியில் அவருக்குத் துணையாக இருந்து பங்கேற்கும் வாய்ப்பைப் பெற்ற நான், அவருடைய தளராத தொண்டுணர்ச்சியையும் பிறர்க்கு உதவி மகிழும் பெருங் குணத்தையும் எண்ணி எண்ணி வியந்தேன்.

மணிமொழியார் அவர்கள் எந்தச் செயலில் ஈடுபட்டாலும் அதில் ஒரு புதுமை மணம் கமழும். பிறருக்குத் தோன்றாத புதிய புதிய எண்ணங்கள் அவருடைய உள்ளமெனும் பூஞ்சோலையில் பூத்துக் குலுங்கும். பல ஆண்டுகட்குமுன் அச் செந்தமிழ்ச் செம்மல் அன்னாரின் முதல் மகனார் **பேராசிரியர் மா. இளஞ்செழியன்** அவர்களோடு இணைந்து நின்று நடத்திய **"போர்வாள்"** இதழ், இந்த உண்மைக்கு ஒரு சீரிய சான்று. திராவிடர் இயக்க ஏடுகளிலேயே, அரசியல் கேலிச் சித்திரங்களை வாரந்தோறும் தவறாமல் வெளியிட்டு மக்களிடத்தில் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்திய முதல் ஏடு "போர்வாள்"தான். இயக்கத் தலைவர்களின் படங்களைப் பெரிய அளவிலும் அழகிய முறையிலும் வெளியிட்டு, மக்கள் அவற்றை வெட்டியெடுத்துக் கண்ணாடி போட்டுத் தங்கள் இல்லங்களில் மாட்டி வைத்துக்கொள்ள வசதி செய்த முதல் ஏடும் "போர்வாள்"தான். "திராவிடர் நாட்குறிப்பு" என்னும் அற்புதமான டைரியை முதன்முதலில் வெளியிட்ட பெருமைக்கு உரியவரும் நம் அருமை மணிமொழியார் அவர்கள்தான்.

இத்தகைய புதுமைகள் பல செய்து, தொண்டுகள் பல ஆற்றி, திராவிடர் இயக்கத்தை ஓங்கி வளரச் செய்துள்ள மணிமொழியார் அவர்கள், நூறாண்டுகளுக்கு வாழ்ந்து நம்நாட்டுக்கும் மொழிக்கும் மேலும் ஒளியூட்டி, எல்லோருக்கும் நற்பணியாற்ற வழிகாட்டுமாறு தமிழகமே வாழ்த்துகின்ற இந்த நன்னாளில், நானும் என் தலை தாழ்த்தி அன்பைக் காணிக்கையாக்கி அவர் பொன்னடிகளை வணங்குகின்றேன்.

*பொதுவாழ்வில் புகழொளி நிரம்பிய இடம் 'ஒன்று' தனக்கு இருந்தாகவேண்டும் என்று தேடி அலைந்தவரல்ல மணிமொழியார். அவருக்கென்று ஓர் இடம் தந்தால் ஏற்றுக்கொள்வார், இல்லையேல், அதைப்பற்றி சிறிதளவும் கவலைப்படாமல், தான் இருக்கும் இடத்திலிருந்தே சிறந்த பணியாற்றுவார்.*

— அண்ணா

மணிமொழியார் மணிவிழாவில்.

# அந்தநாள் அனுபவங்கள்

கே.ம். கண்ணபிரான்

திரு. காஞ்சி மணிமொழியார் அவர்களுக்கு 71-வது பிறந்த நாள் விழா நடைபெற இருக்கின்றது. நாமெல்லாம் மிக மகிழ்ச்சியோடும் பூரிப்போடும் கலந்து கொள்ளப்போகும் பெருவிழா நடைபெறப் போகிறது.

வளர்ந்துவரும் நமது இயக்கத்திலே தொடக்க நாள் முதல் தொடர்ந்து பெரும் பணியாற்றி வருபவர்களில் எனது அன்பிற்குரிய பெரியவர் திரு. மணிமொழியார் அவர்கள் தனிச் சிறப்புப் பெற்றவர்கள். பொறுப்பேற்கும் காரியங்கள் எவையாயினும் மிகத் திறமையுடன் செய்து முடித்துக் காட்டுவதில் மிகவும் வல்லவர். திராவிடர் கழகத் துவக்க நாட்களில் சென்னையில் திராவிடர் கழக மாநாடுகள் கினிமா சென்டிரல், சன் தியேட்டர் போன்ற சினிமா தியேட்டர்களில் காலை 10 மணி முதல் பகல் 1 மணி வரையில் நடைபெறும். இரண்டு மணிக்கு மேல் பகல் காட்சி ஆரம்பிக்கப்பட வேண்டியிருப்பதால் ஒரு மணிக்கெல்லாம் கொட்டகையைவிட்டு வெளியேறிவிட வேண்டும். இந்தக் குறுகிய நேரத்தில் மாநாட்டுத் தலைவர், மாநாட்டுத் திறப்பாளர், முன்மொழிதல் வழிமொழிதல், பெரியார் அண்ணா போன்றபெரியவர்களின் நீண்ட நேரச் சொற்பொழிவுகள், மாநாட்டுத் தீர்மானங்கள், நன்றியுரை ஆகிய அனைத்தும் நடந்து முடிந்துவிடும். இப்படிப்பட்ட மாநாடு ஒன்றில் யாரோ ஒருவர் மாநாட்டிற்குப் பதினோரு ரூபாய் நன்கொடையாகக் கொடுத்தார் என்பதற்காகப் பெரியார் அவர்கள் அ... மணி நேரத்திற்கு மேலாக அவர... வள்ளல்தன்மையைப் புகழ்ந்துபாரா... டிப் பேசினார்கள் என்றால் அப்பே... திருந்த சென்னை மாவட்டக் கழகத்தின் பொருளாதார நிலையை நன்... உணர முடியும். இத்தகைய அந்த... காலத்துப் பெரும் நிகழ்ச்சிகள்... லெல்லாம் பெரும் பொறுப்பேற்று... பணியாற்றியதுடன் பற்றுக்குறை ஏற்படு... வதையெல்லாம் ஈடு செய்வதிலும் பெ... பங்கேற்றுக் கொள்வார் நமது மணி மொ... யார் அவர்கள்.

பெரியாரின் ''திருமணச் செய்தி'' அ... வரையும் கண் கலங்க வைத்தது. கழகத்தவரின் எதிர்ப்பு எண்ணத்தைத் தெரிவித்து... திருமணம் நடைபெறாமல் தடுக்க வேண்... மென்பதற்காக, அண்ணா அவர்களி... எண்ணப்படி, அப்போது ஏற்காட்டில் முகா... மிட்டிருந்த பெரியார் அவர்களைச் சந்திப்ப... தற்கு ஐவர் கொண்ட தூதுக்குழு ஒன்று... சென்னையிலிருந்து புறப்பட்டது. ஷ குழுவி... இடம் பெற்றிருந்த எங்களுக்கெல்லா... தலைமைப் பொறுப்பேற்றவர் திரு மணிமொழி... யார் அவர்கள். தலைவர் மட்டுமல்ல—எல்லா... வற்றிற்கும் அவரேதான்.

கழக ஆரம்ப காலத்தில், மாவட்டத்தி... கென்று ஒரு தனி இடம் இல்லாத நேரத்தில்... மாவட்டக் கூட்டங்கள் முதலில் முத்துமாரி... செட்டித்தெருவிலிருந்த 'மாலை மணி' அலு... வலகத்திலும், பிறகு தங்கசாலைத் தெரு 202 எண்ணுள்ள தலைமைக் கழக அலுவலகத்தி... லும் கூடுவது என்று இருந்தாலும், எதி... காலத் திட்டங்களுக்கான செயல்முறைக... வகுப்பது போன்ற ஆலோசனைக் கூட்ட... கள் பவழக்காரத் தெருவில் அப்போதிருந்த நமது மணிமொழியார் அவர்களின் இல்லத்தில் தான் நடைபெறும். பெரும்பாலு... அவரது எண்ணங்களும் முடிவுகளும்தா... மாவட்டக் கழகத்தின் தீர்மானமாக ஏற்று... கொள்ளப்படும்.

1938, 1942, 1948 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பு அறப்போராட்டங்கள், தி. மு. கழக ஆரம்பகாலத்தில் நடைபெற்ற வடநாட்டுத் தலைவர்களுக்கான கருப்புக்கொடி ஆர்ப்பாட்டங்கள் போன்ற நிகழ்ச்சிகளுக்கெல்லாம் ஆட்களைத் தேர்ந் தெடுப்பது, வகைப்படுத்தி முன்னின்று காரியமாற்றுவது ஆகிய பணிகளை ஏற்றுக் கொண்டிருந்த நான்கைந்து பேர்களில் நமது மணிமொழியாரும் ஒருவராவார்.

இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டதற்காகப் பெருவாரியான தோழர்கள் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டோம். சாப்பாட்டிற்கான நேரம். வழக்கப்படி நீண்ட கியூவில் அனைவரும் நிற்கின்றனர். நண்பகல் —கோடைக்கால வெய்யில்—வெட்டவெளி. எனக்கு முன்னால் தட்டைக் கையில் ஏந்திய வண்ணம் நமது மணிமொழியார் நின்று கொண்டிருக்கிறார். "பெரியவர் மணிமொழியார்—பாவம் எவ்வளவு துன்பப்படுகிறாரோ என்னென்ன நினைந்து வருந்துகின்றாரோ" என்று நினைக்கும்போது என் உள்ளம் வருந்தும். சாப்பிடும் நேரம் முடிந்ததும் அவரவர்கள் மூலைக்கு மூலை சிறுசிறு கூட்டமாகப் பேசிக் கொண்டிருக்கும் நேரத்தில் நமது மணிமொழியார் அவர்கள் வருவார்கள். "என்ன கண்ணபிரான், என்ன ஒரு மாதிரியாக இருக்கின்றீர்கள். எல்லோருமாகச் சேர்ந்து ஒரே இடத்தில் தானே இருக்கிறோம். கவலைப்பட என்ன இருக்கிறது" என்று பேசசைத் துவங்கி, நாங்களெல்லாம் சிறை வாழ்க்கையின் துன்பத்தில் துவண்டுவிடக் கூடாது என்பதற்காகப் பெருமுயற்சி எடுத்துக் கொள்வார்கள். நாங்கள் அவருக்காக வேதனைப்படும் அதே நேரத்தில் எங்களுக்காகக் கவலைப்படும் அவரது நல்ல உள்ளத்தை நினைத்து நான் உள்ளூரச் சிரித்து மகிழ்வேன்.

இத்தகைய பெரியவருக்கு இன்று விழா எடுக்கிறோம். இந்த மங்களகரமான நேரத்தில் அவர் இன்னும் பல்லாண்டு வாழ அவரை வாழ்த்துகிறேன்; வணங்குகின்றேன்.

# பிறர்நலம் பேணும் பெருந்தகை

கோ. முத்துப்பிள்ளை பி.ஏ.

சென்னை நகரின் மக்கள் தொகையும் எல்லையும் பெருகிக்கொண்டே போகின்றன. இன்று எங்கும் புதுப்புதுப் பகுதிகளைப் பார்க்கின்றோம். முதிய பகுதிகளில முன்னிற்பது முத்தியாலுப்பேட்டை என்னும் பகுதியாகும். வளமார் சொற்பெருக்காற்றி மக்களின் உள்ளங்களை அள்ளிக் கொண்ட வள்ளலார் திருவடி தோய்ந்த பகுதி அது. அந்தப் பகுதியில்தான் வள்ளலாரைப் பின்பற்றிச் சீர்திருத்தக் கருத்துகளைச் சிறப்புற விளக்கி வரும் காஞ்சி மணிமொழியார் அவர்களும் பல்லாண்டுகள் வாழ்ந்துவந்தார். வடங்கை வீசும் வடசென்னைக்குத் தொண்டாற்றி வந்த அவர், இன்று தென்சென்னையில் குடியேறி மக்கள் தொண்டினை மகிழ்வுடன் தொடர்ந்து ஆற்றி வருகிறார். முத்தியாலுப் பேட்டையில் ஒரு சிறப்பு நிகழ்ச்சியென்றால், முத்தியாலுப்பேட்டையில் ஒரு மாநாடு என்றால், முத்தியாலுப்பேட்டையில் ஒரு மன்றம் தொடங்கப்பெறுகிறதென்றால், அது மணிமொழியார் முன்னின்று நடத்தும் நிகழ்ச்சியாகத்தான் இருக்கும். முத்தமிழ் முழங்கும் இடத்திலெல்லாம் மணிமொழியார் வீற்றிருக்கக் காணலாம்.

தமிழகம் போற்றும் தனிப்பெரும வள்ளுவர் மாநாட்டை முத்தியாலுப்பேட்டையில் சீரும் சிறப்புமாக நடத்திக் காட்டினார் மணிமொழியார். இதைத் தொடர்ந்து நாடெங்கும் வள்ளுவர் மன்றங்கள் தோன்றின. முத்தியாலுப்பேட்டையிலேயே நாங்களும் ஒரு மன்றத்தை நிறுவினோம். அதற்கு ''முத்தியாலுப்பேட்டை திருவள்ளுவர் இளைஞர் கழகம்'' என்று பெயரிட்டோம். கிழமைதோறும் திருக்குறள் வகுப்புகள் நடைபெற்றுவந்தன. சிறப்புக் கூட்டங்களும் ஆண்டு விழாக்களும் ஏற்பாடு செய்யப் பெற்றன. இம் மன்றத்தைச் சிறப்புற நடத்த ''ஆரம்பக் கல்வி'' ஆசிரியர் திரு. பி. வீரராகவன் அவர்களும் காஞ்சி மணிமொழியார் அவர்களும் அருந்துணை புரிந்தனர்; பல்லாற்றானும் உதவி செய்தனர். அம் மன்றத்தின் தொடக்க விழாச் சொற்பொழிவாற்றித் துவக்கி வைத்தவர் மணிமொழியார் அவர்களே. தண்டமிழ் வளர்ச்சியில் தணியாத ஆர்வங் கொண்ட மணிமொழியார் எங்களை ஊக்குவித்து எல்லா உதவிகளும் செய்தார். எங்கள் முயற்சிகளில் ஏதேனும் ஓர் இடையூறு ஏற்பட்டால், மணிமொழியாரிடம் ஓடோடிச் செல்வோம். அவர் எங்களைப் பரிவுடன் வரவேற்று, அன்புரை வழங்கி அனைத்து இன்னல்களையும் அடியோடு களைந்து, அருமையான பாட்டையினை எங்களுக்கு அமைத்துக் கொடுப்பார். போற்றற்குரிய உதவிகளனைத்தும் செய்து கொடுத்துவிட்டு, தமக்கென்று ஒரு சிறு விளம்பரமும் செய்துகொள்ள மாட்டார். ''எல்லா ஏற்பாடுகளையும் இந்த இளைஞர்கள் தாங்களாகவே செய்து முடித்தார்கள்'' என்று கூட்டத்திலே வந்து பேசுவார். ''இளைஞர் கழகம்'' என்று ஏன் பெயர் வைத்தீர்கள்? என்று எங்களை அடிக்கடிக் கேட்பார். ''உங்களைப் பார்த்துத்தான் இந்தப் பெயரை வைத்தோம்'' என்று சொல்வோம். பூரிப்படைவார்.

மணிமொழியார் அவர்களோடு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகவே நான் பழகியுள்ளேன். அவருடைய இனிய பண்புகள் அனைவரையும் கவரவல்லன. பெரியோராயினும் சிறியோராயினும் மலர்ந்த முகத்தோடு அன்புடன் வரவேற்பார். இனிய உரைகளையே பேசுவார். வெற்றுரைகளை அவரிடம் காணவே முடியாது. ''தொண்டு'', ''தமிழ்'' என்று துடித்துக்கொண்டே இருப்

பார். அவருடன் உரையாடுவோர்க்கும் அவருடைய சொற்பொழிவுகளைக் கேட் போருக்கும் இத்துடிப்பினை உண்டாக்கிவிடு வார். மற்றவர் முன்னேற்றத்தில் அவர் கொண்ட ஆர்வத்தினைத்தான் அவருடைய தனிச் சிறப்பாக நான் கூறுவேன். ''தமக் கென வாழாப் பிறர்க்குரியாளர்'' என்னும் தொடரின் நயத்தினையும் முழுப் பொருளையும் காஞ்சி மணிமொழியாரிடமே காணலா மென்று கூறின் அது மிகையாகாது.

மணிமொழியாரின் இலக்கியத் தேர்ச்சி யினைக் குறித்து ஒரே ஒரு எடுத்துக்காட்டு தர விரும்புகின்றேன். புறநானூற்றிலே ஒரு அருமையான பாட்டு—அனைவர்க்கும் தெரிந்த பாட்டு—குழந்தைச் செல்வத்தின் பெருமையினை விளக்கும் பாட்டு. மதலைய ரின் குதலைமொழியிலே மயங்காதார் யார்? ''தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்'' என்று குறிப்பிடுகிறார் வள்ளுவர். ''மக்கள் மெய்தீண்டல் உடற்கு இன்பம்'' என்றும் அவர் கூறுகிறார். எவ்வளவுதான் பொன் னும் பொருளும் நமக்கு இருந்தும் என்ன பயன்? அறுசுவை உணவு வகைகளைப் பல ருக்கும் வழங்கும் வாய்ப்பினைப் பெற் றிருந்தும் என்ன பயன்? குழந்தையில்லாவிட் டால் இன்பம் ஏது? சிறுவர்கள் நம்மை மயக்குவார்கள். குறுகுறுவென நடப்பார் கள். சிறுகையினை நீட்டுவார்கள். நாம் உண்ணும்போது நம் உணவினைத் தொட்டுத் துழாவுவார்கள். வாயிலே கௌவிக்கொள் வார்கள். நெய்ச்சோற்றை மெய்யிலே பூசிக் கொள்வார்கள். இத்தகைய மக்கட் செல் வத்தைப் பெறாதவர்களின் வாழ்க்கை பெருங் குறையினையுடைய வாழ்க்கையாகும். பாட் டினைப் பார்ப்போம்.

---

''படைப்புப்பல படைத்துப்
பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வர்
ஆயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து,
சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும்
கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில்
மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை
இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத்
தாம்வாழும் நாளே''

''தாம் வாழும் நாளே'' எனக் கடைசியில் அமைந்துள்ள தொடருக்கு அருமையான விளக்கம் தருவார் மணிமொழியார்.

''இந்த வாழ்க்கையில் நாம் அடைய வேண்டிய இன்பத்தையே இப் பாட்டுப் படம் பிடித்துக் காட்டுகின்றது. வேறொரு பிறவியைப் பற்றி இங்குப் பேச்சே கிடையாது'' என்று நயம்பட விளக்குவார். அவருடைய பெயருக்கேற்ப, இலக்கியச் செய்திகளை மணி மணியாக எடுத்துக்காட்டுவார்.

எங்கள் மன்ற ஆண்டு விழாவில் (முத்தியாலுப்பேட்டை திருவள்ளுவர் இளைஞர் கழக ஆண்டு விழாவில்) ஒருமுறை நாவலர் கலந்து கொண்டு சிறப்புரை நிகழ்த்தினர். இன்னொரு முறை சி. பி. சி அவர்களும் திரு. டி. கே. சீனிவாசன் அவர்களும் கலந்து கொண்டனர். அதற்கடுத்த ஆண்டு விழாவிற்கு அண்ணாவை அழைக்க வேண்டுமென நாங்கள் பேரவா கொண்டோம். வழக்கம்போல் மணிமொழியாரை அணுகினோம். அவர் ஆதரவு நல்கினர். ஒரு நாள் இரவு பத்து மணிக்குப் புறப்பட்டோம். மணிமொழியார் என்னை அழைத்துச் சென்றார். என். வி. என். அவர்களும் வந்தார். மூவரும் சென்றோம். பேராசிரியர் அன்பழகன் அவர்கள் வீட்டிலே அண்ணா தங்கியிருந்தார். மாடிக்குச் சென்று அண்ணாவைக் கண்டோம். அங்கே நாவலர், பேராசிரியர், கே. ஆர். ஆர். ஆகியோர் இருந்தனர். அண்ணா மதுரை மாவட்டச் சுற்றுப் பயணத்தை முடித்து வந்த நேரம் அது.

சுற்றுப்பயண நிகழ்ச்சிகளை அண்ணா மிகவும் சுவையாக விளக்கிக் கூறினர். நேரம் போனதே தெரியவில்லை விடியும் நேரம் வந்துவிட்டது. மணிமொழியார் எங்கள் மன்றத்தைப் பற்றி விளக்கமாக எடுத்துக்கூறி அண்ணாவிடம் தேதி கேட்டார்! மதுரை மாவட்டச் சுற்றுப் பயணத்தில் தேதி கேட்ட நிகழ்ச்சிகளையெல்லாம் அப்பொழுதுதான் அண்ணா சொல்லி முடித்திருந்தார்! என். வி. என். அவர்களும் எனக்காக வாதாடினர். ''நவம்பரில் வைத்துக் கொள்ளலாமே'' என்று அண்ணா கூறினர். அதன் பின்னர் நானே நேரடியாக வாதாடினேன். அண்ணாவால் சமாளிக்க முடியாத நிலைமை ஒன்றுமில்லையல்லவா? ''நவம்பர் பக்கத்திலே தானே இருக்கிறது'' என்று சொல்லிவிட்டுப் புன்னகை புரிந்தார். ''பக்கம்'' என்பது இரண்டு மாதத்திற்கு மேல் என்னும் பொருளில் அமைந்திருந்தது! அண்ணாவிடம் ''இல்லை'' என்னும் விடையைப் பெறுவதிலே நமக்கு ஏற்படும் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை! ''சரி'' என்று அண்ணா சொல்லிய நேரத்தைவிட ''இல்லை'' என்று அண்ணா சொல்லிய நேரத்தில்தான் நாம் மிகுதியான மகிழ்ச்சியடைந்துள்ளோம். 'அண்ணாவிடம் சொல்லிவிட்டோம். அண்ணா எண்ணிப் பார்த்தார். அண்ணாவே இல்லை என்று சொல்லிவிட்டார்'' என்றெல்லாம் நாம் எண்ணி மகிழ்ச்சி அடைந்துள்ளோம். எங்கள் மன்றத்திற்காக என்னை அண்ணாவிடம் அழைத்துச் சென்று மன்றத்தின் பணி விவரங்களை அண்ணா அறியுமாறு விளக்கிக் கூறிய மணிமொழியாரின அன்பினை என்னால் என்றும் மறக்க இயலாது.

தமிழன்பர்கள்தாம் மணிமொழியாரின் உறவினாகள். தமிழ்த் தொண்டு ஒன்றே அவர் உள்ளம் உவக்கும் பணி. மக்கள் அவரிடம் காட்டும் அன்புதான் அவர் தேடிக் கொண்ட சொத்து

உழைப்பின் செல்வராம் மணிமொழியார் வாழ்க! என்றும் இளைஞராய்த் திகழும் மணிமொழியார் பல்லாண்டு வாழ்க! அவர் நூறுண்டுகளுக்கு மேலும் இன்று போல் இளமையோடு வாழ்க!




என கெழுதகை நண்பர் திருவாளர் காஞ்சி மணிமொழியார் அவர்கள், தூய்மையும் வாய்மையும் நிறைந்த பெருந்தலைவர் என்று தமிழ் மக்களால் போற்றிப் புகழப் படும் பெருஞ்சிறப்பு வாய்ந்தவர். பேரறிஞர் அண்ணா பிறந்த காஞ்சியில் பிறந்த இப் பெருமகனார், தம் இளமை தொட்டே தமிழர் இன முன்னேற்றத்திற்காகவும் செந்தமிழ் மொழியின் சீரிய வளர்ச்சிக்காகவும் அயராது பாடுபட்டு வருபவர். அன்னார் காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் பயின்று கொண்டிருந்தபோது — தம் பதினேழாம் வயதில் தொடங்கிய சமுதாயப் பணி இன்று வரை இடையீடின்றி மக்களுக்குக் கிடைத்து வருகிறது என்பது, எண்ணி எண்ணி மகிழ்வதற்குரிய மாண்புமிகு செய்தியாகும். நீதிக் கட்சி, சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக்கழகம் ஆகிய அமைப்புகளின் வாயிலாக அந்த அருங்குண அண்ணல் ஆற்றிய தொண்டுகளும் செய்த தியாகங்களும் அளித்த உழைப்பும் இருபதாம் நூற்றாண்டின் தமிழக வரலாற்றில் அழியாத அடையாளங்களை ஏற்படுத்திவிட்டன.

நேற்று ஒரு கட்சி — இன்று மற்றொரு கட்சி என்பதாகக் கூடுவிட்டுக் கூடுபாயும் நோக்கும் போக்கும் படைத்தவர்கள் பலரைப் பெற்றுள்ள இன்றைய அரசியல் உலகில், மணிமொழியார் அவர்கள், ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளாக ஒரே இயக்கத்தில எத்தகைய சலனமும் இன்றித் தொடர்ந்து பணியாற்றி வருகிறார்கள் என்பது பெரு வியப்பிற்கும் பெருமகிழ்ச்சிக்கும் உரிய செய்தி மட்டுமல்ல; இந்திய அரசியல் தலைவர்கள் அனைவரும் பின்பற்றிச் செல்வதற்குரிய சீரிய பாதையும் ஆகும்.

**"போர்வாள்"** என்னும் கிழமை இதழைப் பல ஆண்டுகள் வலிவும் பொலிவும் நிறைந்த வகையில் நடத்திவந்த மணிமொழியார் அவர்கள், அந்த இதழ் வாயிலாக, அனல் தெறிக்கும் நடையில் அரசியல் எதிரிகளைச் சாடியதையும், தென்றல் தவழும் நடையில் செந்தமிழின் மேனமையை எடுத்து விளக்கியதையும் கண்டு மகிழ்ந்த எணணற்றோரில் நானும் ஒருவன். எழுத்தாற்றல் எத்துணை வலிமை மிகுந்தது எனபதை அவருடைய "போர்வாள்," அதன் ஒவ்வோர் இதழ் வாயிலாகவும் முரசறைந்து தெரிவித்துக் கொண்டிருந்தது.

மொழி உரிமை காக்க இந்தித் திணிப்பை எதிர்த்துச் சிறை சென்ற இவருடைய தமிழார்வத்தையும், மேடைகள் தோறும் சிங்கமெனச் சீறி முழக்கமிட்ட இவர்தம் பேச்சுத் திறனையும் தமிழ்மக்கள் என்றும் மறவார் என்பது உறுதி. சிறந்த பேச்சாற்றலும் சீரிய எழுத்துத் திறனும் பெற்றுப் பொலியும் இப் பெருந்தகையாளர், எடுத்த பணியினைச் சிறப்பாக முடித்து வைக்கும் செயலாற்றலில் தன்னிகரற்றவர் என்பதை நான் நன்கு அறிவேன்.

[அடுத்த பக்கம் பார்க்க]




''பழுமரம் போல்-பல்லார் பயன்
துய்ப்பத்தான் வருந்தி வாழ்வதே-
நல்லாண் மகற்குக் கடன்.''

—நாலடியார்

''தனி மனிதன் வாழ்வு ஒரு நாவலைப் போன்றது'' என்று மராட்டிய நாவலாசிரியர் ஒருவர் சொல்கிறார். ஆனால் தனி மனிதனது நீண்டநாள் வாழ்வின் நாவலை யாரும் அதிக மாகப் பொருட் படுத்துவதில்லை. அம் மனித ரது வாழ்வால் உலகம் எவ்வளவு 'பயன்' அடைந்தது? என்று தேர்ந்தே-அம்மனிதரைப் போற்றுவார்கள். சுரங்கம் எத்தனை ஆயிரம் அடி ஆழம்? எவ்வளவு கிலோமீட்டர் நீளம்? என்று யாரும் கணக்கெடுத்துச் சுரங்கத்தை மதிப்பதில்லை. சுரங்கத்திலிருந்து கிடைக்கும் கனிப்பொருளின் மதிப்பே சுரங்கத்திற்குப் பெருமை கொடுக்கிறது! அதுபோல் காஞ்சிப் பெரியவரது நீண்டநாள் வாழ்வின் முக் கால் பாகம் தமிழுலக நல்வாழ்வுக்கே ''அர்ப் பணம்'' ஆயிற்று.

---

முன் பக்கத் தொடர்ச்சி

தமிழ் மறவரின் தனிச் சிறப்புமிக்க பாசறையாகத் திகழும் தி. மு. க. வின் துணைப் பொதுச் செயலாளராக அமர்ந்து தன் அரும்பணிகளைத் தொடர்ந்து ஆற்றி வரும் மணிமொழியார் அவர்கள், எழுபது ஆண்டுகளைக் கடந்து எழுபத்தோராவது ஆண்டில் அடியெடுத்து வைக்கிறார் என் பதை அறிந்து என் உள்ளம் கழிபேருவகை கொள்கிறது. அறிவாலும் ஆற்றலாலும் தொண்டாலும் வயதாலும் சிறந்து உயர்ந்து நிற்கும் இப் பெரியார் இன்னும் பற்பல ஆண்டுகள் இனிது வாழ்ந்து தமிழ்மக்களை வாழ்விக்க வேண்டும் என்று மனமார வாழ்த்துகிறேன்.

காஞ்சிப் பெரியவரது சேவையையும், அதனால் நம்நாடு எவ்வளவு பயனடைந்தது என்பதையும் விரிவாகச் சொல்லப் புகுந்தால் அதுவே ஒரு நூலாக முடியும்! ஏனெனில் நானும் பழைய நீதிக்கட்சியை அடிநாளி லிருந்தே தெரிந்தவன். அக் காலத்திருந்த நீதிக் கட்சியின் பெருந்தலைவர்களிடத்துத் தனியே யிருந்து பல கருத்துக்களைக் கேட்டு விளக்கம் அடைந்தவன். சுயமரியாதை இயக் கத்தில் பெரும் பங்கு கொண்டவன். காலஞ் சென்ற சாமி கைவல்யத்தின் முதல் பிரசுர மான கட்டுரையை அவர் சொல்லி எழுதி யவன் நான். எதற்காகச் சொல்கிறேன் என்றால், காஞ்சிப் பெரியவரைப்பற்றியும், அடி நாட்களிலிருந்து அவரது பொதுப் பணியைப் பற்றியும் தெரிந்த என் போன்றவர் கள் அம் மாமணியின் சிறப்பை, சுருக்கிக் கட்டுரை வடிவில் எவ்வாறு எழுதுவது என்ற மயக்கத்தை விளக்குவதற்குத்தான்! இளைஞர் உலகு பயன்படவே இச் சிறப்பு மலர் வெளியீடாக வருவதால் அவர்களது கருத்துத் தெளிவுக்கு மட்டும் இரண டொன்றைச் சொல்லிக் கொள்கிறேன்.

காஞ்சி மணிமொழியாரின் அரிய சேவையைத் தனித்தனியே பிரித்து எடுத்து, சீர்தூக்கி, எடைபோட்டுப் பார்ப்பது, தனி வைரக்கல்லை ஏதோ இரண்டு மூன்று சரிவில் மட்டும் பட்டை தீர்த்து ஒளி உமிழச் செய்வது போன்றதை ஒக்கும்! அவரது ஐம்பத்திரண்டு ஆண்டு வாழ்வையும் ஒருங்கு சேர்த்து, முழுமையாக்கிக் கண்டாலொழிய அவரது அன்பு நிறைந்த உள்ளத்தையும், உழைப்பின உயர்வையும், இவ்வரும் பெருங் குணங் களால் விளைந்த மேம்பாட்டையும் முழுதும் உணர்ந்தவர்களாக மாட்டோம்.

உதாரணமாக அஃறிணைப் பொருளான பனைமரம் இன்று நுங்கு, பதனீர், பனை வெல்லம், விட்டம் சட்டம் எல்லாம் கொடுக் கிறது என்று தெரிந்தால் மட்டும் அப் பனை மரத்தின் முழுப் பெருமையையும் அறிந்தவர் களாவோமா? அம் மரம் ஆதிநாளில் தன் ஓலையை மட்டும் ''தர்மம்'' செய்யா திருந்தால் சிலமபுச் செல்வமேது? தமிழ்ப் புலவர்கள் சூடாமணியையும் வளையா பதியையும், மேகலையையும் பூட்டி முல்லைப் பூவையும் குறிஞ்சி மலரையும் தூவி, அழகு பார்த்துக் கும்பிடுவது எப்படி முடிந் திருக்கும், ஏன்? இன்று நம் தமிழக அரசு உலக நூலான தமிழ்மறை ஓதிய வள்ளுவனை

வணங்கி வருகிற 'பேறு'தான் எவ்வாறு அடைந்திருக்கும்!

இதுபோல் காஞ்சி மணிமொழியார், தன் வாலிபப் பருவத்தில் மூர்க்கமாக எழும் தன் ஆசையை அடக்கி, சுயநலப் பேரவாவினின்று விடுதலை பெற்று, முற்றும் தன்னை "தன் இனத்தின் நலனுக்கு உழைப்பது" என்று திட சங்கற்பம் கொண்டு, "தமிழ்மக்கள் சேவையே தன் வாழ்வு" என்கிற தியாக வெள்ளத்தில் குதிக்காமல் இருந்திருந்தால்–இன்று தமிழ் மூவேந்தரும் ஒரு மணிமகுடத்தின் கீழ் வீற்றிருத்தலைப் போல்—ஆட்சிப் பீடத்தில் வீற்றிருந்து நம் தமிழகஅரசு செங்கோல் ஓச்சுவதைக் கண்குளிரக் கண்டு நாம் போற்றி வாழ்த்துவதுதான் எவ்வாறு நேர்ந்திருக்கும்? பல இளைஞர்களுக்கு இது புரியாது! ஆனால் என்போன்று, நீதிக்கட்சியின் அடிநாளிலிருந்து இன்று உன்னத வட்டத்தில் 'கம்பீரமாக' விளங்கும் தி. மு. க வளர்ச்சிவரை கண்கூடாகப் பார்த்துவரும் என் சகாக்களான முதியவர் திரு. எஸ். வி. லிங்கம் போன்றவர்களுக்கு எளிதில் புலனாகும். அவர்கள்கருத்தும் இதுவே!சென்னை மவுண்ட் ரோடில் அறிஞர் அண்ணா அவர்கள் சிலையைத் திறந்துவைத்த நீதிக்கட்சியின் பெருந் தலைவராக விளங்கிய சர். ராமசாமி முதலியார் ஆற்றிய சொற்பொழிவில் "என் தலைவர் (My leader) அண்ணாதுரை அவர்களின் சிலைத் திறப்பு விழா ஆற்றுவதில் பெருமை கொள்ளுகிறேன்." என்று பெருமிதத்தோடு கூறிய சொற்களே, நீதிக்கட்சியும், அதனின்றும் ஒட்டிப் பிரிந்த கிளையான சுயமரியாதை இயக்கமும் சிறுவட்டங்களாக நின்று, தி. மு. க. என்னும் மிகுந்த பெரு வட்டத்துள் கலந்து ஐக்கியமாகி விட்டன என்பதற்குச் சாட்சியாகும். வேதாந்திகள் சொல்வதுபோல் பூரணமான நீதிக்கட்சி தி. மு. க. என்னும் பரிபூரணத்தோடு கலந்துவிட்டது! இப் பேரின்ப நிலைக்குக் காஞ்சிப் பெரியவர் போன்றவர்களது அன்பின் கனிவும், உழைப்பின் ஒளியுமே ஏதுக்களாயின.

தனிப்பட்ட முறையில் காஞ்சி மணிமொழியாரின் வாழ்க்கையிலிருந்து இளைஞர்கள் தெரிந்து கொள்ளவேண்டிய அறிவுக் கருத்துக்கள் சில உண்டு. காஞ்சிப் பெரியவர், வாழ்வின் வெற்றிக்கு வழிகாட்டி! நாம் இந் நில உலகில் வாழ்வதற்கு ஓர் 'உரிமை' வேண்டுமானால் நாம் பிறருக்கு உதவியாக இருந்தாக வேண்டும். வாழ்வின் பயனை நாம் அடைந்து அனுபவிக்க விலை கொடுத்தே யாகவேண்டும். "மக்கள் சேவை" என்பது தான் நாம் கொடுக்கும் விலையாகும். காஞ்சி மாமணி, தன்னை, தன் இனம் வாழும் தமிழ் நாட்டோடு அன்பு என்னும் பொற் சங்கிலியால் இறுகப் பிணைத்துக் கொண்டவர்; தான் பணிபுரிய நீதிக்கட்சியை நிலைக்களனாக ஆதியில் தேர்ந்து எடுத்துக்கொண்டவர். அம்மாமணியின் இடையறாத உழைப்பின் மகிமையால் இன்று தமிழ்நாடு தனிமுதற் பொருள் என மாற்றாரும் போற்றும் காட்சியைக் கண்டு, ஆனந்த உருவினராக நிற்கிறார்! அம்மேதையின் வாழ்வின் பேறு தமிழக இளைஞர் செல்வங்களுக்கும் வாய்க்க வேண்டுமென அறிவான தெய்வத்தை வேண்டுகிறேன்.

இன்னும் ஒன்று சொல்லவேண்டும். தன் தேவைக்குப் பிறரை எதிர்நோக்கி நிற்பது தமிழனது மரபு அல்ல. பல கட்சிகளில் பொதுமக்கள் சேவையில் ஈடுபட்டுத் தொண்டர்களாக வாழ்பவர்கள் பெரும்பாலும் பஞ்ச தாசர்களாகவே காட்சியளிக்கின்றனர். காஞ்சி மணிமொழியார் சுயமரியாதை இயக்கத் தலைவருள் ஒருவர். தன் சுய தேவையைத் தன் உழைப்பால் நிறைவேற்றிக் கொண்டவரே தவிரப் பொது வாழ்வின் செல்வாக்கைத் தனக்கு ஏணியாகப் பயன்படுத்தியவரே அல்ல. இதனைச் சுயமரியாதை இயக்க சிங்கங்களாக விளங்கிய காலஞ்சென்ற அழகிரிசாமி, பொன்னம்பலனார், இப்போதிருக்கும் எஸ். வி. லிங்கம் முதலியவர்கள் பலமுறை என்னிடம் கூறியதுண்டு.

இறுதியாக, காஞ்சிப் பெரியவரது வாழ்க்கை, தனிப்பட்ட முறையிலும் சரி, பொதுவாழ்விலும் சரி, முற்றிலும் வெற்றி சால்வாழ்வு என்றே கூறவேண்டும்.

தமிழ் அன்னை காஞ்சி மணிமொழியார் போன்ற நன்மக்களை ஈன்று நம்நாடு நம் தாய்நாடு- நம் தமிழுலகம் என்றென்றும் சீரும் சிறப்பும் பெற்று நீடூழி வாழ அருள் புரியட்டும்! அன்பும், அறிவும், உழைப்பும் வற்றாத செல்வங்களாக என்றென்றும் தமிழகத்தில் மங்களகரமாக விளங்கட்டும். அந்தச் செல்வங்களத்தனையும் மணிமொழியாரின் வாழ்வில் தங்கி வளம் பெருக்கட்டும். அவருடைய கீர்த்தி நாளும் ஓங்கட்டும்.

# மாசற்ற நெஞ்சுடையார்

தூய தமிழ்க் காவலர் கு.மு. அண்ணல்தங்கோ

அன்பு சான்ற அன்பர் — அறிவு சான்ற நண்பர் மணிமொழியார் அவர்களைச் சென்ற நாற்பத்தி மூன்று ஆண்டுகளாக யான் நன்கு அறிவேன். யான் நம்மருந் தமிழகத் தலை நகரில் (சென்னையில்) 1927-ல் தமிழ்ச் சுய ராஜ்சியா நாளிதழின் துணை எழுத்தாளராக இருந்தபொழுது, 'செங்குந்த மித்திரன்'' இதழைத் தோற்றுவிப்பதற்காக ஒரு கூட்டம் சென்னையில் திருவாரூர்ச் செம்மல் திரு. தி. நா. சபாபதி முதலியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அக் கூட்டத்தில் மணிமொழியார் அவர்கள் கலந்து கொண்டார்கள். யானும் பங்கு கொண்டேன். அக் கூட்டத்தில்தான் அவரைக் கண்டு அளவளாவும் பேற்றினை முதலிற் பெற்றேன். அன்பர் மணிமொழியார் பின்னர் ''செங்குந்த மித்திரன்'' எழுத்தாளராகவும் செங்குந்த மித்திரன் அச்சகப் பொறுப்பாளராகவும் விளங்கிய காலங்களிலும், 1937-ல் அறிஞர் அண்ணாத்துரை அவர்களை ஆசிரியராகக் கொண்டு ''நவயுகம்'' கிழமைத் தாளை வெளியிட்ட நாட்களிலும் எங்கள் நட்பு தொடர்ந்து செழிக்கலாயிற்று. ஆனால் 1938-ல் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின்போதுதான் நாங்கள் இருவரும் சால நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் எளிதில் வாய்த்தன. தமிழ், தமிழ் இனம், தமிழ் நிலம், தமிழ்க் கலை, திருக்குறள், தன்னுணர்வு இயக்கம், தமிழ்த் திருமணம், இந்தி எதிர்ப்பு, ஆரியக் கலை எதிர்ப்பு, தூய தமிழ்க் காப்பு இன்னோரன்ன பற்பல இயக்கங்களிலும் மாநாடுகளிலும் கூட்டங்களிலும் யான் அருமை நண்பர் மணிமொழியாரோடு சென்ற நாற்பத்தி மூன்று ஆண்டுகளாக நெருங்கிப் பழகிப் பங்கேற்று என் கடமைகளை ஆற்றியுள்ளேன்.

சில கொள்கைகள் பற்றியும் சில தலைவர்கள் என்பவர்களின் போக்குகள் பற்றியும் சில நேரங்களில் மணிமொழியாருக்கும் எனக்குமிடையே கடுமையான வழக்காட்டுரைகள் நடைபெற்றிருக்கின்றன. என்றாலும் அன்றும் இன்றும் என்றும் அன்பர் மணிமொழியாரும் யானும் உடன் பிறந்தாரைப் போலவே பழகிவருகிறோம். என்பால் மணிமொழியாருக்குள்ள அன்பும் அவர்பால் எனக்குள்ள அன்பும், அக் கருத்து வேற்றுமைகளின் விளைவாகத் தினைமுனையளவும் குன்றியதில்லை. மாறாக எங்களிடையே உள்ள அன்பு, அன்றுதான் புதியதாகக் கண்ட அன்பர்கள்பால் தோன்றித் திகழும் தூய அன்பாக—இனிய அன்பாக—நனி கனிவு உடைய அன்பாக என்றும் துலங்கி வருகிறது.

மணிமொழியார் அவர்களின் கொள்கைப்பற்று, வேறு எவருடைய பற்றிற்கும் குறைந்ததன்று. அப் பற்றுணர்ச்சி பல நேரங்களில் அவரைப் புத்துணர்வு மிக்க ஒரு புத்தம் புதிய இளைஞராக மாற்றி விடும். முதிர்ந்த வயதிலும் ஓர் இளங்காளையைப்

போல் நண்பர்களுடனும் எதிர்க் கட்சியாருடனும் உணர்ச்சிப் பெருக்குடன் உரையாடுவதும் அன்னாரின் இயல்புகள். அவர் ஒருவரைத் தம் தலைவராகத் தேர்ந்தெடுத்து விட்டாராயின், பின்னர், அத் தலைவருக்குத் தற்காப்புப் போர் புரிவதில் மணிமொழியாருக்கு நேர்நிற்பார் யார் ஐயா எனக் கருதத் தோன்றுமாறு காப்பளிப்பார்.

எழுச்சியும் உணர்ச்சியும் நிறைந்த நற்றமிழ் நம்பி மணிமொழியார் அவர்களின் கொள்கைப் பிடிப்பையும், உள்ள உறுதியையும், மாசற்ற நெஞ்சத் துடிப்பையும், நேர்மையுணர்வையும், குறும்புத்தனமோ குழப்பமூட்டும் கயமையோ இல்லாத கட்சி வளர்ச்சிப் பெருஞ்செயலையும், தன் பொருளிழப்பைக் கருதாத பெருந்தகைமையையும், தன்னல மறுப்பையும், அப்பெருமகனார் நடத்திய "போர்வாள்" தாள் இதழ்களில் தெளிவுறவும் பொலிவுறவும் காணலாம்.

வாழ்க பல்லாண்டு நற்றமிழர் மணிமொழியார்!

# கழகப் பெரியார் மணிமொழியார்

வில்லாளன்
எம்.ஏ., பி.எல்., எம்.பி.

காஞ்சி மணிமொழியார் அவர்கள், திராவிட முன்னேற்றக் கழகத்தின் மூத்த தலைவர்களில் ஒருவர்.

அவர்களின் 71—ம் ஆண்டுப் பிறந்த நாள் விழா கொண்டாடுவது சாலவும் சிறந்தது.

அவர்களை, என் பால பருவத்திலிருந்து நன்கு அறிவேன்.

அவர்களின் குமாரர் இளஞ்செழியன், எங்கள் படைவரிசையைச் சேர்ந்தவர்.

அவர்களின் 'போர்வாள்' கழகப் படை வரிசையினர் கரங்களில் மிளிர்ந்த நாட்கள் நினைவுக்கு வருகின்றன.

அவர்களின் பிறந்த நாளில், அவர்களின் சிறப்பியல்புகளை எண்ணுகின்ற பொழுது, அவர்களின் அடக்கமே முந்துறுகிறது.

அவர்கள், கழக அரசியலில், அடிப்படைக் கல் போன்றவராவார். ஆனால் அவர் அதனை வெளிக்காட்டிக் கொள்வதில்லை. என்றும், எதிலும், அடக்கத்துடன் இருப்பார். அவர் இன்று கழகத்தின் துணைப் பொதுச் செயலாளர்களில் ஒருவர். இப் பொறுப்பினை ஈந்தது, அவரது அடக்க குணமேயாகும்.

அவர்கள், சென்னை பவழக்காரத் தெருவிலும், மண்ணடியிலும் அச்சகம் வைத்திருந்த நாட்களில் அங்கு அடிக்கடி செல்வதுண்டு. அவருடன் உரையாடி மகிழ்ந்து திரும்புவதுண்டு. அப்பொழுதெல்லாம் கண்டது அவரது பண்பான பேச்சு. அதனை எண்ணி எண்ணி மகிழ்கிறேன்.

அதன் பிறகு, அவர்களின் வாழ்வில் குறிப்பிடத்தக்கது, அவரது அயராத தொண்டு. அவர் அந்த நாட்களில், அண்ணாநகர் ஒன்று அமைத்திட, பையும் கையுமாக அலைந்ததை இன்றும் எண்ணுகின்றேன். முதிய வயதிலும் அவரது இடையறா முயற்சியைப் பாராட்டுகின்றேன்.

அவரது சட்டமன்றப் பணி, பாராட்டத்தக்கது. அவரது, தமிழ்ப் பற்றின் எடுத்துக் காட்டாக அது விளங்கியது.

அவரைப் பற்றி நினைவு கூரும்பொழுது எனக்கு, அவரது இரண்டு 'சிதம்பர விஜயங்கள்' கவனத்திற்கு வருகின்றன.

நீண்ட நெடுங்காலத்திற்கு முன்பு, சிதம்பரத்தை யடுத்த புவனகிரியில் தன் மகனுக்குப் பெண் பார்க்க வந்தார்கள். அப்பொழுது என் இல்லத்திற்கு வந்து இருந்து மகிழ்ந்து திரும்பினார்கள்.

அதன் பிறகு, சிதம்பர கழக சமரசத்திற்கென வந்து திரும்பினார்கள்.

இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் என் மனதில் இன்றும் நிழலாட்டம் போடுகின்றன.

காஞ்சி மணிமொழியார், கழகத்திற்குக் கிடைத்த மாமணியாவார்கள்.

அவர்கள், கழகத்தின் முதியவர்கள் வரிசையில் முன்னணியில் நிற்பவர்கள்.

(அடுத்த பக்கம் பார்க்க)

×

# போற்றத்தக்க விழா

நா. சின்னைய செட்டியார்
ஆசிரியர், "பத்மஜோதி"

'மனிதர்க்கு வயது நூறல்லதில்லை' என்று சொல்லுவர். நூருண்டு வாழ்வ தெப்படி என்ற ஆராய்ச்சியே நடத்தப்படு கிறது. நூருண்டுகளுக்கு மேல் ஒருவர் நல்வாழ்வு வாழ்வது வியப்புக்குரியதாக மக்கள் எண்ணுகிருர்கள். நூருண்டு வாழ்வில் ஐம்பதாண்டுகள் தொடர்ந்து இடையீடின்றிப் பொதுநலப் பணியாற்றுவது பெரிதும் போற்றத்தக்கதும் மகிழ்ச்சியூட்டத் தக்கதுமாகும். ஐம்பதாண்டுகட்கு மேலும் பொதுப் பணியையே தன் இன்பப் பணியாக ஏற்றுச் செயல்பட்டு நாட்டுக்கும் மொழிக்கும் இனத்துக்கும் பெருநலம் காண ஒருவர் பொதுநலத் தொண்டாற்றி வருகிருர் எனருல் அத்தகைய நல்லாரை நன்றி மறவாத் தமிழர்கள் விழா எடுத்துப் போற்று வது அவர்களுடைய தலையாய கடமை யாகும். காஞ்சியண்ணல் மணிமொழியார் ஐம்பத்திரண்டு அகவைகள் பொதுநலம் பேணிக்காத்து நிற்கும் பெருமகன் ஆவார். அவருக்கு 71—ம் ஆண்டுப் பிறந்த நாள் விழா நடத்த முன் வந்த விழாக் குழுவினரை என் உளமாரப் பாராட்டுகிறேன். இது எல்லோராலும் போற்றத்தக்க ஒரு விழா வாகும்.

என் உளம் உகந்த நண்பர், மணிமொழி யார். நாங்கள் இருவரும் இணைந்து தமிழ் வளர்ச்சிப் பணியாற்றியிருக்கிருேம். 'பத்ம சோதி'யை முதன் முதல் அச்சிடும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார் அவர். கலப்பு மணம், கைம்பெண் மணம், வேறு பாடற்ற சமபந்தி உணவு, தீண்டாமை ஒழிப்பு போன்ற உயர் சீர்திருத்தப் பணி களில் என் கருத்தோடு ஒத்துழைத்து நிற்பவர். என்னுடைய ஆன்மீக, லௌகீக, சமூக இதழ்கள் வெளிவருவதற்கு ஊக்கமும் உதவியும் பெருந்துணையும் புரிந்தவர். அவர் புலமையும், ஆர்வமும், செயல்திறனும் எல்லோரும் பின்பற்றத்தக்கனவாகும். இந்த வயதிலும் அவருடைய உழைப்பைக் காண்பார் வியப்படைவர் என்றே கருது கிறேன். எல்லோரும் ஏற்றுப் பின்பற்றத் தக்க பண்புகளைப் படைத்தவர் மணிமொழி யார்.

இத்தகைய நறுங்குண நண்பர், பெருங் குணப் பெரியார், அருந்தமிழ் அண்ணல், சீர்திருத்தச் செம்மல், காஞ்சி மணிமொழி யார் பன்னெடுநாள் நலமும் வளமும் சிறக்கப் பெற்று வாழத் துணைநிற்குமாறு திருவருளை இறைஞ்சுகின்றேன்.

---

(கழகப் பெரியார் தொடர்ச்சி)

அவரைக் கழகப் பெரியார் என அழைப்பது, மிகவும் பொருத்தமுடைய செயலாகும்.

இத்தகைய பெரியோர்களுக்குப் பிறந்த நாள் விழா கொண்டாடும் பொழுதே நாம் உண்மையில் மகிழ்கிருேம்.

அவர்களின் 71—ம் பிறந்த நாள் விழா வில், அவரை மும்முறை வாழ்கவென வாழ்த்தி மகிழ்கின்றேன்.

காஞ்சி என்னும் சொல்
லின் பொருளுக்கேற்ப, காஞ்சியில்
பிறந்த மணிமொழியார், பலமுறை போர்க்
களங்களில் நின்று, மாற்றரை எதிர்த்துப்
போராடி, அவர்களில் எண்ணற்றோரை
வீழ்த்தி, விழுப்புண் பல பெற்று, அப்படிப் பெற்
றதால் தன் உள்ளத்திற்கு உறுதியும், தன்
குடும்பத்தாருக்கு மகிழ்ச்சியும், நாட்டுமக்
களுக்கு எழுச்சியும் தேடித்தந்த பெருமை
படைத்தவர் — அண்ணா — 17-5-60ல்
பேசியது.




# மாமணி

நா. ஆறுமுகம் எம்.ஏ

பார்ப்பனரல்லாத இளைஞர் சங்கம், நீதிக்கட்சி இயக்கம், தமிழ் வளர்ச்சிமன்றம், தமிழாசிரியப்பணி, இதழாசிரியத் தொண்டு, இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி, திருவள்ளுவர் மாநாடு, தி. மு. க. முதன்மைத் தலைவர்களில் ஒருவர், சட்டமன்றப் பணி, நெறியான வாழ்வு—இப்படிப் பல்வேறு துறைகளிலும் நிலைகளிலும் நின்று வாழ்ந்து சிறப்புப் பெற்ற ஒழுக்க சீலர் பெரியார் காஞ்சி மணிமொழியார் அவர்கள் ஆவர்.

மாந்தன் உண்மையான மாந்தனாய்ப் பகுத்தறிவு உணர்வோடும் விழிப்போடும் வாழவேண்டும் என்பதில் தணியாத பற்றும் குலையாத ஆர்வமும் கொண்ட இவரும், இவருடைய அருமைத் திருமகனார் **பேராசிரியர் மா. இளஞ்செழியன் எம். ஏ.** அவர்களும் ஆசிரியர்களாய இருந்து நடத்திய **'போர் வாள்'** வார இதழ தமிழகப பகுத்தறிவு இயகக வரலாறறில ஒரு முககியமான பங்கு பெற்றிருபபதை யாரால மறுக்க வியலும்? “அப்போதுதான கலலூரியை விட்டு வெளி வநத என்னைப் (அறிஞர் அண்ணாவை) பததிரிகைத் துறையிலும பொதுவாழ்விலும் ஈடுபடுத்தி முன்னேற்றமடையச் செய்வதில் அவர் எவ்வளவு ஆர்வம் கொண்டிருந்தார் என்பதை எண்ணினால் இப்போதும் எனக்குப் பெரியதோர் மகிழ்ச்சி ஏற்படுகிறது” என்று 1960ல் நடைபெற்ற மணிமொழியார் மணி விழாவின்போது அறிஞர் அண்ணா அவர்கள் இவரைப்பற்றிக் குறிப்பிட்டதைப் படிப்போர், அண்ணாவின் வாழ்வுக்கு இவர் எவ்வளவு முதன்மைப் பங்கு வகிக்கிறார் என்பதை உணர்வர். கற்றோர் வாழும் காஞ்சி, கலை மலிந்த காஞ்சி என்றெல்லாம் புகழப்படும் காஞ்சி மாநகரில் கற்றோர் கூட்டம் சமுதாய உணர்வற்று மூடப் பழக்க வழக்கச் சகதியில் சிக்கிச் சீரழிந்து வாழ்ந்து வந்ததைக் கண்டு நெஞ்சங் குமுறிய இவர், 'பேய் பிசாசு' என்று ஆட்டம் போட்ட பழமையைச் சாடுவதில் முனைப் பாக நின்று செயலாற்றினார்.

“சிந்திக்கத் தெரியாதவன் முட்டாள்; சிந்தனை செய்து சரி என்று உணர்ந்ததை மற்றவர்க்கு உரைக்க மறுப்பவன் அயோக்கியன்; சிந்தனைத் தெளிவை மாற்றி உரைப்பவன் வஞ்சகன்” என்று கூறினார் சாக்ரடிசு.

'பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும்
இலமே'

என்னும் பழம்பெரும் புறநானூற்றைப் பெற்றுள்ள நாட்டில் தனிமனித வழிபாட்டுணாவு (Personality cult) புதிய மூடப் பழக்கமாக உலகளக்கும் உருவெடுத்து அச்சுறுத்தி நிற்பதைப் பார்க்கிறோம். 'குக்கல் (நாய்) வந்து எண்ணெயை நக்குற கல்லுக்குச் சக்கரைப் பொங்கலோடா' என்று கேட்ட தமிழகத்தில் இன்று நடிகர் படங்களுக்கு மாலை போட்டுத் தேங்காய் உடைதது கற்பூரம் கொளுத்துகிற படு கேவலமான நிலைககு இளைஞர் உலகம் சென்றுகொண்டிருப்பதைக் காணுகிறோம். நம்முடைய கொள்கை கோட்பாடுகளெல்லாம் ஓடாத கடியாரங்களாயிருக்கின்றன.

இந்த அவலநிலை நீங்க கற்றோரும் மாணவரும் செயலாற்றும் துணிவையும் உறுதியையும் பெறுவதே காஞ்சி மணிமொழியாரைப் போன்ற கொள்கைச் சான்றோருக்கு நாம் காட்டும் வணக்கமாகும் என்பது என் எண்ணம்.

வளர்க மணிமொழியார்!

வளர்க அவருடைய பகுத்தறிவுக் கொள்கைகள்!

# எதிர்நீச்சல்

சி. பக்கிரிசாமி பி.ஏ. எல்.டி

காஞ்சி மணி மொழியார்! எனது ஆருயிர் நண்பரும், பார்ப்பனரல்லாத இயக்க தத்துவமேதையும், எனது வழிகாட்டியும் (Friend, philosopher and guide) ஆகிய காஞ்சி மணிமொழியார்! அகன்ற நெற்றி, கூரியகண்கள், அஞ்சாநெஞ்சம், நிமிர்ந்த நடை, மிடுக்கான பேச்சு; இவைதான் காஞ்சி மணிமொழியார்!

எனது பசுமையான நினைவுகள் பின்னோக்கி 40 ஆண்டுகள் ஓடுகின்றன. காஞ்சிபுரத்தில் பிள்ளையார் பாளையம் என்பது கைத்தறி நெசவு செய்து கைக்கும் வாய்க்கும் என்ற அளவில் வாழ்க்கை நடத்திவரும் செங்குந்தர்கள மிகுந்துள்ள பகுதி. இங்கு காஞ்சி மாநகரின் மொத்த மக்கள் தொகையுள் நான்கில் ஒரு பகுதியினர் உளர். நகரமன்ற அங்கத்தினர்கள் குறைந்தது நால்வர் இங்கிருந்து சுலபமாக வர வாய்ப்பு உண்டு. எனினும் அப் பகுதி மக்கள் அப்பதவிக்குப் போட்டியிட முன் வந்ததில்லை. காரணம் வறுமை மாத்திரம் அல்ல. அப்போது அப்பகுதியின் 'முதலியார்' சொல்லுக்கு எதிர்ப்பே கிடையாது என்பதால்! அந்த 'முதலியாரும்' அத் தொகுதி மக்களில் தக்கவரை நிற்கவைத்து சுலபமாக வெற்றிபெறச் செய்ய வாய்ப்பிருந்தும் பிற தொகுதியிலிருந்து வந்தவர்களுக்கே உதவி வந்தார்.

இப்படிப்பட்ட நிலைமையில்தான் செங்குந்த வாலிபர் சங்கம் தொடங்கப்பட்டது. அதன் முக்கிய அங்கத்தினர்களில் திரு. மணிமொழியார், திரு. க. வச்சிரவேலு முதலியார், தூ. செ. கந்தசாமி முதலியார், நான், இன்னும் சிலர் சேர்ந்து தொகுதி மக்களில் சிறந்தவர் ஒருவரை நிற்கச் செய்து பிரச்சாரத்தில் இறங்கினோம்.

'முதலியாரால்' நிறுத்தி வைக்கப்பட்டவர் 'வெள்ளையப்பனை வீசி இறைத்தால் கறுப்புக் காக்கைகள் கூடிவிடும்' என்று சொன்னதோடு தவறான பல வழிகளையும் பின்பற்றினார். 'முதலியாருக்கு' எதிராக நடக்கும் இந்த எழுச்சி கண்டு பல நண்பர்கள் பயந்து வெளியே வரத் துணியவில்லை.

ஆனால் அஞ்சா நெஞ்சமும் நேர்மையில் உறுதியும் கொண்ட மணிமொழியார் தளரவில்லை. எதிர்ப்பு கண்டு அஞ்சாது எதிர்நீச்சல் அடித்து வெற்றி காணும் உறுதி படைத்த மணிமொழியார், இந்த நேரத்திலும் அயராது எங்களையெல்லாம் ஊக்குவித்துத் தெருத் தெருவாய்க் கூட்டங்கள் போட்டு தம்முடைய சங்கநாதக் குரல் கொடுத்துக் கூட்டத்தைச் சேர்த்துத் தீவிர பிரச்சாரம் செய்தார். பயன், மகத்தான வெற்றி. பயந்து ஒதுங்கிநின்ற நண்பர்கள்கூட தைரியமாக வெளியே வந்து பாராட்டுதலில கலந்து கொள்ளக்கூடிய சிறந்த வெற்றி.

இந்த வெற்றியின் எதிரொலி, 'முதலியார்' அவர்களே தம் வாயால் 'எங்கள் பிள்ளைகள் வாலிபர் சங்கம் அமைத்து முன்னுக்கு வந்துவிட்டார்கள். இனி அவர்களுக்கு எதிராக நான் போகமாட்டேன்' என்று சொல்லி எங்களைப் பாராட்டியது தான்,

[அடுத்த பக்கம் பார்க்க]




வ. சுப்பையா

*சைவ சித்தாந்த-நூற்பதிப்புக் கழக இயக்குநர்*

என் கெழுதகை நண்பர் திருவாளர் காஞ்சி மணிமொழியாரவர்களை அறியாதார் அறியாதாரே. அவர்கட்குத் தந்தையார் இட்ட பெயர் மாணிக்கவாசகம். 1948-இல் அதனை ''மணிமொழியார்'' எனத் தூய தமிழ்ப் பெயராக மாற்றி வைத்துக் கொண்டார்.

1918 - முதல் அவர்கள் வாழ்க்கை ஓர் இயக்கமாகவே காட்சியளிக்கின்றது. அவர்கள் இயக்க இயங்காதார் இலர் என்றே சொல்லலாம். அறிஞர் அண்ணு அவர்கள் 1937 - இல் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு வெளிவந்தவுடன் திரு. மணிமொழியாரின் பிடியில் அகப்பட்டு அவர் இயக்க இயங்கி வாழ்க்கையில் புகழ் பெற்ருர் என்ருல் வேறு யார்தாம் அவர்கள் இயக்க இயங்காதிருப்பர்?

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

இச் சம்பவம் மணிமொழியார் அவர்களது போராட்டம் நிறைந்த வாழ்க்கையின் முதற்படி. இடுக்கண் வருங்கால் நகைக்கக் கூடிய ஒரு பெரும் ஆற்றல் இவருக்கு உண்டு இந்த ஆற்றல்தான் இவரை 70 ஆண்டுகள் நிரம்பிய இளைஞராகவும், பிசிராந்தையாரைப்போல் நரை திரை மூப்பை வென்ற நல்லோராகவும் இருக்கச் செய்துள்ளது.

வாழ்க பல்லாண்டு மணிமொழியார்!
வெல்க அவர்தம் குறிக்கோள்கள்!

இத்தகைய பெருமகனுராகிய திரு. மணிமொழியாரோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு 1936 முதல் எனக்குக் கிடைத்தது.

வடநாட்டு இந்திமொழியை இந்தியா முழுமைக்கும் பொது மொழியாக்க வேண்டுமென்று காங்கிரசு கட்சியினர் முடிவு செய்தனர். தமிழ் நாட்டிலே இந்தியைப் பரப்பும் பொருட்டுச் சென்னை தியாகராயநகரிலே ''இந்திப் பிரசாரசபை'' ஒன்றை நிறுவி வகுப்புக்களை நடத்தித் தேர்வுகள் நடத்தி வந்தனர்.

காங்கிரசார் தமிழ்நாட்டிலே ஆட்சிக்கு வந்ததும் இந்தி மொழியைப் பள்ளிகளில் கட்டாயப் பாடமாக்கப் போவதாகப் பேசி வந்தனர். தமிழ் நாட்டிலுள்ள வடமொழிப் பற்ருளர்கள், இந்தி பரவுவதால் வடமொழி வளர்ச்சியுற்று ஆக்கம் பெறும் என்று இந்தி மொழியை விரும்பிக் கற்றுவந்தனர். எனவே சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் அறநிலையமாகிய தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தார் 23—11—1936 இல் ''தமிழ் நாட்டுக்கு இந்தி வேண்டுமா'' என்ற தலைப்பில் சுற்றறிக்கை ஒன்று அச்சிட்டு அறிஞர் பெருமக்கட்கு அனுப்பிக் கருத்துரை எழுதியனுப்புமாறு வேண்டினர். அவ்வறிக்கையோடு கோவை திரு. க. நடராசபிள்ளை பி. ஏ., எல். டி. அவர்கள் எழுதிய ''இந்தி மொழிப் பயிற்சியா?'' என்ற கட்டுரையின் அச்சுப்படியும், கருவூர் தவத்திரு ஈழத்துச் சிவானந்த அடிகள் எழுதிய ''தமிழும் இந்தியும்'' என்ற கட்டுரையின் அச்சுப்படியும் அனுப்பிவைக்கப் பெற்றன.

மதிப்புக்குரிய திரு. சி. இராசகோபாலாச்சாரியார் அவர்கள் 26—11—36 இல் தமது கருத்தினை அடியிற்கண்டவாறு எழுதி அனுப்பிவைத்தனர்.

''இந்தி விஷயத்தை நான் நன்கு ஆராய்ந்து பெற்ற முடிவு என்னவென்ருல் தமிழ் மக்களும் தமிழ் மொழியும் இந்திய நாட்டின் வருங்கால நடவடிக்கைகளில் நியாயமான முன்னேற்றமும் நியாயமான

இடமும் பெற வேண்டியதற்குத் தமிழ் மக்கள் கற்கும் கல்வி முறையில் இந்தி பாஷையைச் சாதாரணமாகப் பேசவும் எழுதவும் கற்பது ஒரு இன்றியமையாத பகுதியாக இருக்க வேண்டும்.

''கல்வி முறையில் தாய்பாஷையேமுதல் ஸ்தானம் பெற்று எல்லாப் படிப்பும் அதைக் கொண்டே சொல்லித்தர வேண்டும். இந்தி ஒரு இரண்டாம் பாஷையாகத்தான் சொல்லித்தர வேண்டும்.

''இவ்வாறு இந்தி கட்டாயப் பாடமாவதில் தமிழுக்கு ஒருவிததீமையும் ஏற்படாது; நன்மையே உண்டாகும். தமிழர் இந்தியா முழுவதும் கவுரவமும், தொழிலும், சவுகரியமும் பெற வழி உண்டாகி, நாட்டுக்கும் நாட்டு மொழிக்கும் நன்மையே உண்டாகும்.

கோடிக்கணக்கான ஜனங்களுக்கு இந்தி தாய் பாஷை. அவர்களுடன் நாம் நெருங்கிவாழ வேண்டும். அவர்கள் அயலார்களாயிருந்தாலுங்கூட இந்த முடிவு சரியேயாகும். ஆனல் அவர்கள் அயலவர்கள் அல்லர். அவர்களும் நாமும் சேர்ந்து ஒரு சமூகம், ஒரு வரலாறு, ஒருநாடு என வருங்காலத்தில் யோக க்ஷேமம் இவைகளில் பங்குகொண்டு வாழ வேண்டும்.

ஆங்கிலமும் கல்வி கற்கும் தமிழ் மக்கள் அனைவரும் படிக்கவேண்டும். ஆனல் அது எல்லாப் படிப்புக்கும் பொது வாயிலாக இருப்பது தவறு. ஆங்கிலமும் இந்தியும் இரண்டும் தாய் பாஷைக்கு அடுத்தபடி தமிழ்மக்கள் கற்க வேண்டியது அவசியம்.''

குறிப்பு: இப்போது திரு இராஜாஜி அவர்கள் இந்திபற்றிய தமது பழைய கருத்தினை மாற்றிக் கொண்டது அறிதற்பாலது.

1937—இல் திரு. சி. இராசகோபாலாச்சாரியார் அவர்கள் தமிழ் நாட்டிலே முதலமைச்சரானதும் இந்தி மொழியைப் பள்ளிகளில் 1 முதல் 3 படிவங்களில் கட்டாயப் பாடமாக்குவதற்குச் சட்டம் இயற்றப் போவதாகத் தெரிவித்தார். உடனே சென்னையிலும் பிற இடங்களிலும் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி ஏற்பட்டது.

இந்தித் திணிப்பை எதிர்க்கும்பொருட்டுச் சென்னையில் ''தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்'' தொடங்கி அதன்வழி அறிக்கைகள் அச்சிட்டு இந்தி எதிர்ப்புக் கூட்டங்கள் நடைபெற ஏற்பாடு செய்தேன். 'இந்தி ஒழிக தமிழ் வாழ்க!' என்னும் மொழிகள் பெரிய எழுத்தில் அச்சிட்டுச் சென்னையில் பல தெருக்களிலும் ஒட்டப்பட்டன.

28—11—1937 ஞாயிற்றுக்கிழமையை ''இந்தி நாள்'' ஆகக் கொண்டாடுமாறு தமிழ்நாடு காங்கிரசு குழுத் தலைவர் திரு. சி. என். முத்துரங்க முதலியார் ஓர் அறிக்கை வெளியிட்டார். அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் பொருட்டுத் திரு காஞ்சி மணிமொழியார் ''தமிழர் கழகம்'' ஒன்றை நிறுவி, அதன் வழியாக ''இந்தி நாள் எதிர்ப்பு'' ஊர்வலமும் கூட்டமும் அதே நாளில நடத்துவதென ஓர் அறிகைகை அச்சிட்டு வெளிப்படுத்தினர், 28—11—1937 மாலை 4 மணிக்கு மணிமொழியார் இல்லத்திலிருந்து (147, பவழக்காரத்தெரு, சென்னை-1) எடுபிடிகளுடன் ஓர் ஊர்வலம் சென்னைக் கடற்கரைக்குச் சென்றது. நான்கு நான்கு பேர்களாக அணி வகுத்து ஐந்நூற்றுக்கு மேற்பட்ட தொண்டர்கள் ''இந்தி ஒழிக! தமிழ் வாழ்க!'' என்று முழங்கிக்கொணடு சென்றது ஒரு பெரும் பரபரப்பை விளைத்தது.

அனறு மாலை 6 மணிக்குக் கடற்கரையில் தமிழ்ப் பேராசிரியரும் தாகூர் சட்ட விரிவுரையாளருமாகிய உயர்திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை எம் ஏ., எம். எல். அவர்கள் தலைமையில் திருவாளர்கள் மோசூர் கந்தசாமி முதலியார் பி. ஏ., டி. எஸ். நடராச பிள்ளை பி. ஏ. பி. எல்., ரெவரண்ட் அருள் தங்கையா, பண்டிட் திருஞான சம்பந்தம் முதலியோர் இந்தி மொழி கட்டாய பாடத்தை எதிர்த்துப் பேசினர். மக்கள் பெருந் திரளாக வந்து கேட்டனர்,

கழக அமைச்சர் திரு. திருவரங்கம் பிள்ளை அவர்கள் திருநெல்வேலியில் இந்தி எதிர்ப்பின் பொருட்டுத் "தமிழ்ப் பாதுகாப்புச் சங்கம்" நிறுவி அதன் வழித் துண்டு அறிக்கைகளை அச்சிட்டுப் பரப்பி வந்தனர். அறிஞர் அண்ணா அவர்களை நெல்லைக்கு வரவழைத்து 12—10—1937, 14-10-1937 ஆகிய இரண்டு நாட்களிலும் மூன்று இடங்களில் "இந்தியைக் கட்டாய பாடமாக்க வேண்டுமா" என்னும் பொருள் பற்றிப் பேசுவதற்கு ஏற்பாடு செய்தனர். பேராசிரியர் மு. சி. பூரணலிங்கம் பிள்ளை பி. ஏ. எல். டி. அவர்கள் தலைமையில் அறிஞர் அண்ணா அவர்கள் உணர்ச்சி ததும்பப் பேசி மக்கள் உள்ளங்களைக் கவர்ந்தனர்.

சென்னையில் "தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்" தமிழ்க் கொடி (மூவேந்தர் கொடி) யினைத் துணியில் பெரிய அளவிலும், சிறிய அளவிலும் மூவண்ணங்களில் அச்சிட்டுப் பரப்பி வந்தது. தமிழ்க் கொடி அச்சிடப் பட்ட புடைவை, வேட்டி, துண்டு, மேல் வேட்டி, மேசை விரிப்பு முதலியவற்றைச் செய்து தமிழுணர்ச்சியைப் பெருக்கியது.

இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியோடு தமிழ் நாட்டுத் தனியுரிமைக் கிளர்ச்சியும் இணைந்து நடைபெற்றது. எனவே "தமிழ் நாடு தமிழருக்கே" என்ற தலைப்புடன் பெரியார் உருவப்படம் பொறிக்கப் பெற்ற நாளட்டவணை (Calendar) வெளியிடப்பட்டது. இரெட்டுத் துணியில் "தமிழ் நாடு தமிழருக்கே" என்னுந் தொடர் பொறிக்கப் பெற்ற பெரியார் பை, அறிஞர் அண்ணா பை, முத்தமிழ்க் காவலர் விசுவநாதம் பை செய்து பரப்பப் பெற்றன.

பல்வேறறிஞர்கள் இந்தி எதிர்ப்புப் பற்றிப் பேசிய எழுதிய கருத்துரைகள் ஆயிரக்கணக்காக அச்சிட்டுப் பரப்பப் பட்டன.

13—11—1938இல் சென்னை ஒற்றைவாடை நாடகவரங்கில் "தமிழ் நாட்டுப் பெண்கள் இந்தி எதிர்ப்பு மாநாடு" மறைமலையடிகளார் மகளார் திருவரங்க நீலாம்பிகையம்மையார் தலைமையில் நடைபெற்றது. அந்த மாநாட்டிலே திராவிடக் கழகத் தலைவர் திரு. ஈ. வெ. இராமசாமி அவர்கட்குப் "பெரியார்" என்ற பட்டம் வழங்கப் பெற்றது. சென்னை, திருச்சி, காரைக்குடி முதலிய ஊர்களில் இந்தி எதிர்ப்பு ஊர்வலங்களும், மாநாடுகளும் மிகவுஞ் சிறப்பாக நடைபெற்றன. தமிழ்நாட்டுப் பேரறிஞர் பெருமக்களும் தலைவர்களும் மாநாடுகளில் கலந்து பேருரையாற்றினர்.

நாவலர் சோமசுந்தர பாரதியாரவர்கள் சி. இராசகோபாலாச்சாரியாருக்கு எழுதிய வெளிப்படைக் கடிதம் (An open letter to C. Rajagopalachariar) ஆங்கிலத்திலும் தமிழிலும் அச்சிட்டு வெளியிடப் பட்டது.

தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் விரும்பிய படி மறைத்திரு மறைமலையடிகளார் இந்திய மொழிகளைப் பற்றிய நூல்களை யெல்லாம் ஆய்ந்து பொது மொழியாதற்குரிய தகுதி "இந்தி"க்கு ஒருபோதும் கிடையாது என்று திட்டவட்டமாகத் தாம் எழுதிய "இந்தி பொது மொழியா?" என்ற நூலில் விளக்கி யுள்ளார்கள்.

அதனைக் கருவூர் ஈழத்துச் சிவானந்த அடிகள் 15,000 படிகள் அச்சிட்டு விலையின்றிப் பரப்பினர். மறைமலையடிகளார் கருத்துக்கள் யாண்டும் பரவி இந்தி எதிர்ப்புக்குப் பேரெழுச்சி உண்டு பண்ணின. சென்னையில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பியக்கத்தில் காஞ்சி மணிமொழியார்க்குப் புலவர் மயிலை சிவமுத்து அவர்கள், ஈழத்துச் சிவானந்த அடிகள், தமிழக அமைச்சர் மாண்புமிகு என். வி. நடராசனவர்கள், அவர்தம் நண்பர் திரு. முருகேசன், திருவாட்டி தருமாம்பாள் அம்மையார், தாமரைக்கண்ணி அம்மையார் முதலியோர் துணையாக நின்றனர்.

சென்னை செயிண்ட் மேரி மண்டபத்தில் 17—7—1948 இல் மறைமலையடிகளார் தலைமையில் "இந்தி எதிர்ப்பாளர் மாநாட்"

டைத் திரு. மணிமொழியார் அவர்கள் செய லாளராகவிருந்து முழுவெற்றி தரும் வகை யில் நடத்திப் புகழ் பெற்றார்.

காஞ்சி மணிமொழியார் அவர்கள் இல்லத்திலே 1943 இல் "தமிழ் அறிஞர் கழகம்" நிறுவி அதன்வழித் தமிழுணர்ச்சி மாநாடுகள் சென்னையிலும் சேலத்திலும் நடத்தப்பட்டன.

சென்னையில் 1935 இல் திருவள்ளுவர் திருநாட் கழகத்தைத் தொடங்கித் தமியே னது முயற்சியினால் மூன்று ஆண்டுகள் 'திருவள்ளுவர் விழா' மிகவுஞ் சிறப்பாக நடைபெற்றது.

பின்னர் காஞ்சி மணிமொழியார் அவர் கள் முயற்சியினால், அவர்களையே செயலாள ராகப் பெற்று 1949இல் "திருவள்ளுவர் மாநாடு" சென்னையிலே நடைபெற்றது. அதன்கண் நாவலர் சோமசுந்தர பாரதியார், திரு. வி. க., அறிஞர் அண்ணா முதலியோர் கலந்து கொண்டு தமிழகம் திருக்குறளின் தனிப் பெருமையினை அறிந்து கொள்ளும் படிச் செய்தனர்.

காஞ்சி மணிமொழியாரவர்கள் செங் குந்தமித்திரன் அச்சகத்தில் மேலாளராக இருந்த காலத்தில் கழக நூல்களிற் சில வற்றை யான் விரும்பியபடி அழகாய் அச்சிட்டுத் தந்தனர். உள்ளங்கையில் அடங்குவதான மிகச் சிறிய அளவிலுள்ள திருக்குறள் மூலம் 1942 சனவரியில் செங் குந்தமித்திரன் அச்சகத்தில் அச்சிடப் பெற்றது குறிப்பிடத்தக்கது. அப் பதிப்பு பலர் பாராட்டுக்களைப் பெற்றதோடு பரிசும் வாங்கித் தந்தது.

திரு. மணிமொழியாரவர்கள் என் கொள்கைகட்கு ஒத்தவரான படியினால் அவர்களிடம் எனக்குப் பெருமதிப்பும் பேரன்புமுண்டு. இயக்கக் கூட்டங்களில் மிகவும் கொதிப்போடும் உணர்ச்சியோடும் பேசுவார். ஆனால் அவர்கள் அன்பும் பண்பும் பொறுமையும் உடையவர்கள் என் பதை அவர்களோடு பழகியவர்கள் மறுக் காமல் ஒத்துக்கொள்வர் என்று நம்புகிறேன்.

அவர்களுடன் பழகுந்தோறும், அவர் களை நினைக்குந்தோறும் யான் இன்பம் அடைவதுண்டு.

தமிழ் வளர்ச்சிக்கும் தமிழர் முன்னேற் றத்துக்கும் பல்லாற்றானும் உழைத்துவரும் காஞ்சி மணிமொழியார் மேலும் பல்வகை நலங்களுடன் பல்லாண்டு பல்லாண்டு வாழ்கவென வாழ்த்துகின்றேன்.

*அப்போதுதான் கல்லூரியை விட்டு வெளிவந்த என்னை, பத்திரிகைத் துறையிலும் பொதுவாழ்விலும் ஈடுபடுத்தி முன்னேற்றமடையச் செய்வதில் மணிமொழியார் எவ்வளவு ஆர்வம் கொண்டிருந் தார் என்பதையும், அவர் அந்தக்காலத்தில் எனக்கு ஊட்டிய ஆர்வத்தையும், உற்சாகத்தை யும் எண்ணினால் இப்போதுகூட எனக்குப் பெரிய தோர் மகிழ்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பெருமிதத்தோடு கூறிக்கொள்ள விரும்புகிறேன்*

*— அண்ணா — 17-5-60 ல்*



மணிமொழியாரின் மணிவிழாவில் பொன்னுடை போர்த்திப் பூரிப்படைகிறார் அண்ணா.

# ஞானசம்பந்தரும் மணிமொழியாரும்

தமிழ்மாவேந்தர் ஆ. விநாயக முதலியார்

"மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்
வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர்
குறைவிலை
கண்ணில் நல்லஃதுறும் கழுமலவள நகர்ப்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை
யிருந்ததே"

இப்பாடல் திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியது. இந்தப் பாடல் நல்வாழ்த்துக்கு மிகவும் சிறந்த பாடலாக அமைந்துள்ளது. மணமக்களுக்கு வாழ்த்து வழங்கும் பலரும் வழக்கத்தில் கொண்டுள்ள பாடல் இது. இந்த வாழ்த்துப் பாடலையே திரு காஞ்சி மணிமொழியாருக்கு நான் வாழ்த்துப் பாடலாக வழங்குகிறேன். தேவாரப் பாடல்கள் என்றாலே அப் பாடல்கள் பக்திக்குமட்டும் இயைந்த பாடல்கள் என்றும், சிலர் பண்டாரப் பாடல்கள் என்றும் கருதி ஒதுக்கி வந்துள்ளனர். ஆனால் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், 1300 ஆண்டுகட்கு முன்பே சமயத்தின் பேரால் அக்கால அரசர்கள் போற்றத் தக்க அளவில் பெரும் புரட்சி செய்த அருள் ஆசிரியர்கள் ஆவர். அரசர்களையும், மக்களையும் தமிழ்ப் பாடல்களின் மூலம் ஈர்த்து நாட்டில் நல்ல கலையும், உண்மையான மதமும், சமுதாயமும் நிலைக்க அரும் பாடுபட்ட நாயன்மார்களில் மேலே குறிப்பிட்ட திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் முதன்மை பெற்றவர்கள் ஆவார்கள். சமண அரசர் அழைத்தபோது "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்றும், "அஞ்சுவது யாது ஒன்றும் இல்லை. அஞ்ச வருவதும் இல்லை" என்றும் அந்த நாளில் திருநாவுக்கரசர் வீரத்தமிழ் இசைத்தார். பேச்சுரிமை இல்லாத அக்காலத்தில் சந்து சேனன், இந்துசேனன், தருமசேனன், கந்து சேனன், கனகசேனன் இவர்களுக்கு நான் தாழ்ந்தவன் அல்லன் என்றும் தமிழ்ப் பயன் அறியாத குருடர்கள் அவர்கள் என்றும் திருஞானசம்பந்தர் மதுரையில் கொஞ்சமும் அஞ்சாமல் பாடியுள்ளார்.

திருஞான சம்பந்தர் திருமண நேரத்தில், வேதியர்கள் அவர்கள் குலமுறைப்படி வேதம் ஓதும்போது அதை நிறுத்தித் தடுத்து உங்கள் வேதம் எனக்கு வேண்டாம் என்று தமிழால் பாடல் ஒன்றை அந்த மணக்கோல நேரத்தில் மாலை மாற்றுப் பதிகம் என்ற பாடலைப் பாடினார்.

இவ்வாறு அஞ்சாமல் அறிவுச் சுடர் கொளுத்திய அருள் ஆசிரியர்கள் வழிவந்த தமிழ் அறிஞர்கள் இன்றும் ஒரு சிலர் இருக்கிறார்கள்; காலத்துக்கு ஒவ்வாத பழமையைப் போக்க அயராது உழைத்து வருகிறார்கள். அவர்களை நம் நாட்டு மக்கள் பயன்படுத்தாமல் பழமையே பேசிக்கொண்டு இன்னும் முன்னேற்றப் பாதையில் செல்லாமல் போலி வாழ்க்கை வாழ்ந்துகொண்டு வருகிறார்கள். வடலூர் இராமலிங்க சுவாமிகளும் சீர்திருத்த வாழ்க்கைக்கு வழி வகுத்து அருமையான சாதனைகளைச் சய்து போந்தார். சாதியின் பெயரால் மதத்தின் பெயரால் ஏற்பட்ட கொடுமைகளை இராமலிங்க வள்ளலார் கடுமையாக எதிர்த்துள்ளார்.

அவருக்குப்பின், மதிப்பிற்குரிய மறைமலை அடிகளார் இந்தக் கொடுமை அகலப் பாடுபட்டு தமிழ்மொழிக்கும், தமிழர் இனத்துக்கும் நல்ல பிரசார மூலமாகவும் நூல்கள் வாயிலாகவும் பணிபுரிந்துள்ளார்கள். பின்னர் தென்னாட்டுக்காந்தி என்று போற்றப் பெறும் நமது அன்பு மிகுந்த அறிஞர் அண்ணா அவர்கள் தமிழ்நாட்டுக்கு மட்டும் அல்ல நமது இந்தியாவுக்கே பெரும் புரட்சியைச் செய்துவிட்டார்கள். அந்த வழி முறையில் காஞ்சி மணிமொழியார் அவர்களும் செங்குந்த இனத்துக்கு மட்டுமல்ல, தமிழகத்துக்கே தளராது தொண்டு செய்

[அடுத்த பக்கம் பார்க்க]

# மாண்புமிகு கலைஞரும் மணிமொழியாரும்

எஸ்.வி.லிங்கம்

தமிழகத்தை இன்று தி. மு. கழகம் ஆண்டு வருகிறது. ஆட்சிப் பீடத்தில் முதல்வராக அமர்ந்து திறம்பட ஆட்சிச் சக்கரத்தை உருட்டுபவர் கருணாநிதி அவர்கள் ஆகும். இவருடைய ஆட்சியின்போது என் நண்பர் மணிமொழியாருக்கு 71-ம் ஆண்டு பிறந்தநாள் விழா நடப்பது சாலப் பொருத்தமும் பெருமைப்படத் தக்கதுமாகும். மணிமொழியார் தேர்ந்தெடுக்கப்பட்ட தொகுதியிலிருந்தே அவருடைய அன்பு உதவியோடு கலைஞர் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது மட்டுமன்றி இருவருமே மிக நீண்ட நாட்களாக நெருங்கிய நட்புரிமை பாராட்டி வருபவர்கள்.

மணிமொழியார் நீதிக்கட்சியில் ஆற்றிய தொண்டுதான் இன்றைய தி. மு. க. ஆட்சிக்கு வித்தாக அமைந்தது என்பதை யாரும் மறந்துவிட முடியாது. மணிமொழியாருடன் ஏற்பட்ட முப்பது ஆண்டுப் பழக்கத்தில் அவர் செய்துள்ள தொண்டுகளைப் பற்றியோ, அவருடைய இடைவிடா உழைப்பினால் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த செங்குந்தர் சமுதாயம் தட்டி எழுப்பப்பட்டுக் கல்வியிலும் பொருளாதாரத்திலும் வர்த்தகத்திலும் முன்னேறி, மிகப் பிற்பட்ட நிலையிலிருந்து இன்று வேறு சமூகங்களின் வளர்ச்சிக்கேற்ப வளர்ந்து பெருமைமிக்க சமுதாயமாக விளங்குவது பற்றியோ, சுயமரியாதை இயக்க காலத்திலும், திராவிடர் கழக காலத்திலும் பின்பு தி. மு. கழகம் தோன்றிய ஆரம்ப காலத்திலும் சிரித்த முகத்துடன் அவர் ஏற்றுக்கொண்ட கஷ்ட நஷ்டங்களைப் பற்றியோ, இந்த ஏட்டில் விவரிக்க இடம் கிடைக்காது. அவர் போன்றோரின் உழைப்புதான் இன்று இந்தியத் துணைக்கண்டமே கண்டு வியக்கும் அளவுக்குத் திராவிட இனம் விழிப்புற்றுக் கழக ஆட்சி மலர்வதற்கு வழி வகுத்திருக்கிறது என்பது மிகையாகக் கூறியதாகாது.

மணிமொழியாரின் விழாவை நடத்த முன்வந்த கலைஞர் அவர்களது பெருந்தன்மையைப் பாராட்டுகிறேன். மணிமொழியாரைப்போல் பல துன்பங்களையும் கஷ்ட நஷ்டங்களையும் ஏற்று இன்று தலை நரைத்த சிங்கங்களாக உள்ள ஒரு சில கொள்கை வீரர்கட்கு இதுபோன்ற பாராட்டுகள் மேலும் உற்சாகமும் உணர்ச்சியும் தரத்தக்கனவாகும் என்ற உண்மையைக் கலைஞர் உணர்ததுகிறார். வயது முதிர்ந்திருந்தாலும் மணிமொழியாரைப் பின்பற்றி எல்லோரும் பொதுநலத் தொண்டில் ஈடுபட்டு வீழ்ச்சியுற்ற தமிழகத்தில் எழுச்சி யூட்டவேண்டும் என்ற கடமை உணர்வை இவ்விழா எடுத்துக் காட்டுவதாக அமைந்திருக்கிறது.

அண்ணா தந்த தாரக மந்திரம் கடமை கண்ணியம் கட்டுப்பாடு என்பதாகும். அண்ணா பிறந்த காஞ்சியில் தோன்றிய மணிமொழியார் இந்த மந்திரத்தை அப்பழுக்கின்றிப் பின்பற்றி வருகிறார். அத்தகைய உண்மை வழிகாட்டியை நான் பாராட்டுகிறேன்; இன்னும் பல்லாண்டு வாழ்க என வாழ்த்துகிறேன்.

---

[முன் பக்கத் தொடர்ச்சி]

துள்ளார்கள் என்பது தமிழ்மக்களனைவரும் நன்கு அறிந்த ஒன்றாகும். எனவே நம் காஞ்சி மணிமொழியாருக்கு அருள் துறைப்பாக்களைக் கொண்டே வாழ்த்துவது என்று திருஞான சம்பந்தர் பாடலைக் கொண்டே வாழ்த்துகிறேன். நம் பெரியார் காஞ்சி மணிமொழியாரைப் பலர் பலவிதமாக வாழ்த்தியிருப்பார்கள். அடியேன் என்னுடைய சொந்த வாழ்த்துக்களால் அல்லாமல் தொடக்கத்தில் எடுத்தாண்டுள்ள வாழ்த்துப் பாடலால் வாழ்த்தி, 70 ஆண்டு நிறைந்த இவர் 80 ஆண்டும் நிறைந்து, ஆயிரம் பிறை கண்டு, பினனர் நூறாண்டும வாழ்ந்து, தமிழ் மொழிக்கும், தமிழ்நாட்டிற்கும் பணிகள் பல புரிய மனம், மெய், மொழிகளால் வணங்குகின்றேன்.

# நீதிக் கட்சியின் இரட்டையர்கள்

அ. க. தங்கவேலர்

1918-ஆம் ஆண்டு, காஞ்சிபுரத்தில் நீதிக் கட்சியின் சார்பில் தேர்தல் பிரசாரம் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருக்கும் வேளை. நீதிக் கட்சியின் வேட்பாளர்களுக்காக நான் தெருத் தெருவாகச் சென்று வாக்குகளைத் திரட்டிக் கொண்டிருக்கும் நேரம். அத்தகைய சமயத்தில்தான் அதே ஊரைச் சேர்ந்த ஒரு கட்டிளங் காளை எனக்கு அறிமுகமானார். அறிமுகமான இரண்டொரு நாட்களுக்குள் என்னுடன் தோளோடுதோள் கோத்து நின்று அந்த இளைஞர் நான் ஈடுபட்டுவந்த அதே நீதிக் கட்சிப் பணியில் இரவு பகலாக ஈடுபடத் தொடங்கி விட்டார். நான் ஒரு வீதியில் தேர்தல் பணியில் ஈடுபட்டிருந்தால் அவர் மற்றோர் வீதியில் அதே பணியில் முழுமூச்சாக முனைந்திருப்பார். நான் ஒரு வட்டத்தில் வாக்குகளைத் திரட்டிக் கொண்டிருந்தால் அவர் இன்னொரு வட்டத்தில் அதே வேளையில் ஆர்வத்தோடு தன்னை ஒப்படைத்திருப்பார்.

அந்த நாளிலிருந்து பல ஆண்டுகள் காஞ்சி நகரத்தில் நீதிக் கட்சியின் வளர்ச்சிப் பணியில், அந்த இளைஞரேறும் நானும், ஒருவருக்கு ஒருவர் துணையாக இருந்து, ஒருவருக்கு ஒருவர் உற்சாகம் ஊட்டிக்கொண்டு, ஒருவரோடு ஒருவர் இணைந்து ஓயாமல் தொண்டாற்றி வந்தோம். நாங்கள் இருவரும் இவ்வாறு பணியாற்றி வந்ததைக் கண்ட பலர், எங்களைக் காஞ்சி நகர நீதிக்கட்சி இரட்டையர் என்றே பெருமிதத்துடன் குறிப்பிட்டுவந்தனர்.

1918-ஆம் ஆண்டிலேயே நீதிக் கட்சிப் பணியில் முழு ஆர்வத்துடன் ஈடுபட்டு மும்முரமாகப் பணியாற்றிய அந்தக் கட்டிளங் காளைதான், நம் இதயங்களையெல்லாம் கவர்ந்த இனிய தலைவராகத் திகழும் காஞ்சி மணிமொழியார் அவர்கள்.

தமிழகத்தின் அணிகலனாகத் திகழும் மணிமொழியார் அவர்கள் பிறந்த குடும்பமே பொதுவாழ்வில் ஊறித் திளைத்த குடும்பம். அன்னாரின் அண்ணனார் திருவாளர் பி. செ. முருகேச முதலியார், காஞ்சி நகரத்தின் பெரும் புகழ் படைத்த ஜவுளி வர்த்தகராகத் திகழ்ந்ததோடு, சைவ சித்தாந்த சமயத் தொண்டிலும் தமிழ் வளர்ச்சிப் பணியிலும் பேரார்வம் கொண்டு உழைத்தவர். அத்தகைய குடும்பத்தில் பிறந்த மணிமொழியார் தம் இளமைப் பருவத்திலேயே பொதுத்தொண்டில் எல்லையற்ற ஆர்வம் கொண்டு ஓயாமல் உழைக்கத் தொடங்கியதில் வியப்பென்ன இருக்க முடியும் ?

தமிழ் மக்களின் உள்ளங்களையெல்லாம் அள்ளிக்கொண்டுவிட்ட பேரறிஞர் பெருந்தகை அண்ணா அவர்கள் தென்னாட்டு மக்களுக்குக் கற்பித்துவந்த கடமை கண்ணியம் கட்டுப்பாடு என்னும் முப்பெரும் வழிகளை ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே கடைப்பிடித்து ஒழுகிய பெருஞ் சிறப்பு உடையவர் மணிமொழியார் என்பதை இச் சமயத்தில் பெருமகிழ்ச்சியுடன் எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

என் இனிய நண்பர் மணிமொழியார் அவர்கள், ஆடம்பரமில்லாத அரியதொண்டு புரிபவர்; அப்பழுக்கற்ற ஒழுக்கம் நிறைந்தவர்; சொல்லும் செயலும் ஒத்து நிற்கும் இயல்பினர்; உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசாத பெருநெறியினர்; சமுதாயத்தின் நலனையே தன்னுடைய நலனாகக் கருதுபவர். தி. மு. க. பணியில் கண்ணும் கருத்துமாக இருப்பவர்.

எழுத்தில் சிறந்து, பேச்சில் உயர்ந்து, தொண்டில் நிறைந்து நிற்கும் இப் பெருந்தகையாளர், சந்ததமும் இளமையோடிருக்கலாம் என்று சான்றோர் கூறியதற்கு இணங்க, இன்னும் நீண்டபல ஆண்டுகள் குன்றாத உடல் நலத்தோடும் குறையாத தொண்டு உணர்வோடும் வாழ்க என உள்ளன்போடு வாழ்த்துகின்றேன்.

# முதல் இந்தி எதிர்ப்புப் போர்

புலவர் P. M. பொன்னுசாமி

1938 வது ஆண்டில் தமிழ்நாட்டில் இந்தி எதிர்ப்புப் போர் துவங்கியது. அந்நாளில், சிரித்த முகம், சிந்தனை தேங்கிய பார்வை, எடுப்பான நடை, இனிமையான பேச்சு, உயரிய நற்குணம்—இவை அமைந்த ஒரு இளைஞரை சந்திக்கும் வாய்ப்பு எனக்குச் சென்னையில் கிடைத்தது. ஆம் அவர்தான் காஞ்சி மணிமொழியார்.

இந்தி எதிர்ப்புக் களம் காணச் சென்றிருந்த என்னை காஞ்சி மணிமொழியார், சி. டி. நாயகம், சுவாமி சண்முகானந்தா, அருணகிரி நாதர், அறிஞர் அண்ணா உட்படப் பலர் சென்னை ரயில் நிலையத்தில் வரவேற்றனர். மணிமொழியார்தான் முதன் முதலில் 1938ல் சென்னையில் இந்தி எதிர்ப்புப் போர்க்கொடி உயர்த்தினுர்கள.

இது நடந்து இன்றைக்கு 32 ஆண்டுகள் கடந்துவிட்டன. ஆனுல் அந்தப் பசுமையான நினைவுகள் இன்னும் என் இதயத்தை விட்டு அகலவில்லை. அதற்குள்ளாக இவர் வயது 71 என்பதை என்னுல் நம்ப வே முடியவில்லை. சரித்திர கட்டாயத்தின் காரணமாக நமது சமுதாயத்தில் பல மாற்றங்கள் நடந்துள்ளன. அவைகளில் 1938ல் முதல் இந்தி எதிர்ப்பு மாநாடு மறைமலையடிகள் தலைமையில் நடந்தபோது, அன்றைய தமிழ்நாட்டின் முதல்வராக இருந்த இராசகோபாலாச்சாரி வீட்டுமுன், இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் முதல் கட்டமாக தந்தை பெரியார் அனுமதியோடு உண்ணுவிரத அறப் போராட்டத்தைத் தொடங்கினேன். தொடங்கி மூன்று நாள் இருந்தேன். அப்பொழுது என்னுடன் எனக்கு வேண்டிய காரியங்களை முன்னின்று நடத்திஞா காஞ்சி மணிமொழியார். நான் கைது செய்யப்பட்டதை அறிந்தவுடன் கோடம்பாக்கத்தில் அவர் முன்னின்று நடத்திய இந்தி எதிர்ப்பு மாநாட்டை முடித்துக்கொண்டு, மாநாட்டுக்கு வந்திருந்த மக்களைத் திரட்டிக்கொண்டு தானே தலைமை தாங்கி ஆச்சாரியார் வீட்டுக்கு ஊர்வலம் ஒன்றை நடத்தி வந்தார் என அறிந்து மகிழ்ந்தேன். அந்நாளில் நாங்கள் விதைத்த இந்தி எதிர்ப்பு விதை, செடியாகி மரமாகி 1965ல் பெரும் வெடிப்பாக வெடித்தது. விளைவு, தமிழகத்தில் இந்தி எதிர்ப்பு அரசாக தி. மு. கழகம் 1967 மார்ச்சு 6ல் பதவி ஏற்றது.

1938க்கும் 1967க்கும் இடைப்பட்ட காலத்தில் எங்களுக்குள் ஏற்பட்ட அரசியல் தொடர்புகள் ஏராளம். அதனை எல்லாம் நினைக்கும்பொழுதே 'காஞ்சி மணிமொழியார் பல ஆண்டுகள் வாழ்க' என என் உள்ளம் வாழ்த்துகிறது. நாங்கள் திராவிட இயக்கத்தில் பங்குகொண்டு ஆற்றி இருக்கும் பணிகள் பல. இந்தி எதிர்ப்பு, சாதியொழிப்பு, சமய எதிர்ப்பு, ஆண்டான் அடிமைப் போக்குக்கு எதிர்ப்பு எனத் தமிழ்நாட்டில் எண்ணற்ற இயக்கங்களை நடத்தி இருக்கிறோம். மேலும் இந்தச் சமுதாயத்தில் இப்படிப்பட்ட போராட்டம் ஒன்றை மீண்டும் நடத்த வேண்டி வரும்போல் தெரிகிறது.

இத்தகைய போராட்டங்களையெல்லாம் முன்னின்று நடத்தி அனுபவப் பழமாக விளங்குகின்ற மணிமொழியார் இன்னும் பல்லாண்டு உடல் வளத்தோடு வாழவேண்டும் என வாழ்த்துகிறேன். அவர் மேலும் பல ஆண்டுகள் வாழ்வதன் மூலம் இந்தத் தமிழ்ச் சமுதாயம் நல்ல நிலையடைய அவர் சிறந்த வழி காட்டக்கூடும். இந்நாளில், பழம் பெரும் இயக்கத் தோழரும் பத்திரிகையாளரும் எழுத்தாளரும் பேச்சாளரும் பண்பாளரும் உழைப்பாளருமான காஞ்சி மணிமொழியார் அவர்களுக்குப் பழைய இயக்கத் தோழன் எனும் உறவு முறையில் நல்வாழ்த்துக்களைக் குவிக்கின்றேன்.




# 1

கோயில் குருக்கள் மகன் எட்டு வயதுச் சிறுவன் சொரிக்குட்டி யதீந்திரன் தெருவிலே வருகிறான். அறுபது வயது முதியவர் செல்வர் ஆறுமுகம் பிள்ளை எதிர்ப்படுகிறார். சிறுவனை வணங்குகிறார் பெரியவர்!

''அடேய்! ஆறுமுகம்!'' அழைக்கிறான் சிறுவன். திடுக்கிடவில்லை; திகைக்கவில்லை அவர்! ''சுவாமி! என்னங்க?'' அடக்கமும் பணிவுமாகக் கேட்கிறார், குரு சிஷ்யப் பண்பில்.

''நாளைக்குப் புதுவருஷப் பிறப்புடா. கோயில்லே அப்பா பஞ்சாங்கம் வாசிக்கப் போறார். கைநிறைய தட்சணையை எடுத்துண்டு, முருகன், குப்பன், கந்தசாமி, ராஜகோபால்—மத்த எல்லா ஊர்ப்பிரமுகர்களையும் நீ அழைச்சிண்டு வரணுமாம், இது அப்பாவோட கட்டளை. சொல்லிட்டேண்டா சொல்லிட்டேன். மறந்துடாதே ஆறுமுகம்!''

''ஆகட்டும் சுவாமி! தவறுமெ அழச்சுகிட்டு வர்றேன்.'' குனிந்து பணிந்து கும்பிடுகிறார் ஆறுமுகம். புன்னகைத்துச் செல்லுகிறான் குருக்கள் மகன், சொரிக்குட்டி.

# 2

புரோகிதர் பஞ்சாபகேசய்யர், வெற்றிலைப் பெட்டி, பஞ்சாங்கம், ''சுதேசமித்திரன்'' சகிதமாகத் தன் வீட்டுத் திண்ணையில் வீற்றிருக்கிறார்.

பயிர்த்தொழில் பச்சையப்ப நாடார் வருகிறார் வாழைக்குலையோடு. பெரிய கும்பிடொன்றைப் போட்டு அடக்க ஒடுக்கமாக நிற்கிறார். வாழைக்காய்கள் வீட்டுக்குள் செல்கின்றன.

''என்னடா பச்சையப்பா விசேஷம்?'' கேட்கிறார் புரோகிதர் அலட்சியமாக.

''எனக்குப் பேரன் பொறந்திருக்கான் சுவாமி. அவனுக்கொரு நல்ல பேரா வைக்கணுமுங்க'' என்கிறார் பச்சையப்பன்.

பிறந்தநாள், நேரம், நட்சத்திரம், ராசியெல்லாம் பார்க்கப்படுகின்றன.

''தட்சணை'' என்கிறார் புரோகிதர். வெற்றிலைப் பாக்குடன் இரண்டு ரூபாய்களை வைத்துப் படைக்கிறார் பச்சையப்பன். ''சுடலைகருப்பன்'' என்று நாமகரணம் சூட்டுகிறார் புரோகிதர்.

''இந்தப்பேரு நல்லா இல்லிங்களே!'' என்கிறார் பச்சையப்பர்.

புரோகிதருக்கு ஆத்திரம் வருகிறது. ''அட! சூத்திரப்பயலே! நாள் நட்சத்திரம் பார்த்து வருணதர்மம், குலாச்சாரப்படி பெயர் வச்சா, இது நல்லா இல்லேன்னு சொல்றே? கலி முத்திப் போச்சுடா முத்திப் போச்சு! நாலாஞ்சாதிப் பிள்ளைக்கு சுடலை கருப்பன்னு வைக்காமே, ஞானசுந்தரம், விப்பிரநாராயணன்னு வைப்பாங்க? அது சாஸ்திர விரோதம். அந்த மாபாதகத்தை நான்

செய்ய மாட்டேன். தர்மம் தலை குப்புறக் கவிழ்ந்து போகும். லோகத்திலே மழை மாரி பெய்யாது; பயிர் பச்சை வெளையாதுடா பாவி!''

புரோகிதர் கோபத்திற்கு அஞ்சி, அந்தப் பெயரையே ஏற்றுக் கொள்கிறார் பச்சையப்பர்.

## 3

உலர்ந்த வாயும், ஒட்டிய வயிறும், கந்தலுடை மேனியுமாக ஏழைப் பெண்ணொருத்தி தலையில் விறகுச் சுமையோடு வந்து கொண்டிருக்கிறாள். அந்த வீதி அக்ரகாரம் என்பது அவளுக்குத் தெரியாது.

பட்டை நாமம் போட்ட பாகவதர் ஒருவர் விறகு விலை கேட்கிறார். ஈன விலைக்கு அவள் ஒப்பவில்லை. ''ஐயோ! இவள் பஞ்சம ஸ்த்ரீ! பீடை, பிசாசு! அக்ரகாரத்திலே நுழைஞ்சதே தவறோன்னு! தீண்டலாயிட்டுதே! அடியுங்கள்! உதையுங்கள்! குத்துங்கள்! கொல்லுங்கள்!'' என்று ஆர்ப்பாட்டம் செய்து கூட்டம் சேர்த்து விடுகிறார்.

கல்லாலும், கழியாலும் தாக்கப்பட்டாள் அந்த ஏழைப்பெண். மண்டை உடைந்து இரத்தம் வழிகிறது. விழுந்து சிதறிய விறகுகளைப் பொறுக்கிச் சென்றுவிட்டனர் பொல்லாதவர்கள். விறகுக்குத் தீண்டல் இல்லை!

பன்றி ஒன்று உறுமிச் செல்கிறது. கழுதை கத்துகிறது. நாயொன்று குரைக்கிறது.

அவள் கேட்டாள். ''சுவாமி! நாய், கழுதை, பன்றி, பெருச்சாளிகள் நடமாடுகிறதே! அக்ரகாரத்திற்குள் நாங்கள் மாத்திரம் வரக்கூடாதா? இது அநியாயமல்லவா சுவாமி?'' என்று.

''அவைகளுக்கெல்லாம் ஜாதியில்லை. நீ ஜாதி கெட்டவள்; பறைச்சி; புலைச்சி. உன் காற்றுப்பட்டாலே தோஷம்; தீண்டல்; மனுதர்மம் கெட்டுப்போகும். ஓடு! ஓடு! நிற்காதே!'' விரட்டுகிறார் பட்டை நாமப் பாகவதர். விரட்டுகின்றனர் மற்றவரும்.

பாடுபட்டுக் கொணர்ந்த விறகுகளைப் பறிகொடுத்துவிட்டு, பசித்தவயிறும், அழுத கண்ணும், சிந்திய மூக்குமாக, இரத்தக் காயங்களைத் துடைத்தவண்ணம் நொண்டிச் செல்லுகிறாள் அந்த அபலைப் பெண்!

## 4

உபாத்தியாயர் மாத்ருபூதமும், மாணவன் மாணிக்கவாசகமும் உரையாடிக் கொண்டிருக்கின்றனர்.

''அடேய்! ''விவாக சுப முகூர்த்தப் பத்திரிகை''ன்னு போட்டா! குடும்பம் க்ஷேமமா நடந்தது. ''திருமண அழைப்பிதழ்''னு எவனோ ஒரு சூத்தரன் ஆரம்பிச்சிருக்கான். என்ன கேடுகாலம் வருமோ தெரியலே!'' என்கிறார் மாத்ருபூதம்.

''ஆமாம். அதுவும் தமிழ்; இதுவும் தமிழ்தானே சுவாமி?'' கேட்கிறான் மாணிக்கவாசகம்.

''விவாகம் சமஸ்கிருதத் தமிழ்; திருமணம் தனித்தமிழ். எதை எங்கே எப்படி வைக்கறதுடா? சமஸ்கிருதம் இல்லேன்னு தமிழ் ஏது? தர்மம் ஏது? சாஸ்திரம் ஏது? தமிழர்கள் க்ஷேமமாக இருக்க முடியாதே'' —என்கிறார் அவர்.

''எப்படி சுவாமி!''—அவன் கேட்கிறான்.

''தேவபாஷை சமஸ்கிருதம். அதனாலேயே தெய்வங்களுக்கு சமஸ்கிருத அர்ச்சனை, சமஸ்கிருதப் பாடல், சங்கீதம், சாஸ்திரம், சம்பிரதாயம் எல்லாத்தையும் நடத்தறோம். தெய்வக்கிருபை ஏராளமா கிடைத்து நாட்டிலே சுபீக்ஷம் நிலவறது. இதையெல்லாம் தமிழா மாத்தின எல்லாம் சர்வநாசமாயிடும்! பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திராள் என்ற தர்மமும், ஆதாரமும், நீதியும், நியமமும் கெட்டு, தேசமே குட்டிச் சுவராய்ப் போகுமடா மாணிக்கம்! சத்தியமா போயிடும்!'' சாபமிடுகிறார் வாத்தியார் மாத்ருபூதம்.

''தமிழே உயர்ந்தது என்கிறாரே என் தந்தையார். இதையெல்லாம் அவரிடம்

சொல்லுகிறேன் சுவாமி!'' வீடு நோக்கி ஓடு கிறுன் மாணவன் மாணிக்கவாசகம்.

தமிழகத்தில் முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் இதுபோன்ற காட்சிகள் வெகு சாதாரணம். அவற்றில் ஒரு நான்கையே இங்குக் கண்டோம்.

சாதித்திமிர், உயர்வுதாழ்வு, தீண் டாமை, தமிழுக்கிழிவு மட்டுமல்லாமல், மடமை, மதவெறி, மூட நம்பிக்கை, சுரண் டல் சம்பிரதாயங்கள், புராணப் பிரசங்கம், இதிகாசப் படிப்புகள், இழிவுதரும் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், நடைமுறைகள் யாவும் சேர்ந்து தமிழனின் இரத்தத்தையும், உழைப்பையும் உறிஞ்சி, தன்மான உணர்ச்சி யைக் குலைத்து அவனைத் தரங்கெட்ட மிருக மாக்கி வைத்திருந்தன!

இந்த நிலையை மாற்றிட, மனிதனை மனிதனுக்கிட, சுயமரியாதையை ஊட்டிட, சமுதாயப் புரட்சிக்கொடி தூக்கியவர் ஈரோட்டுப் பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்கள். அவர் வழியில் சென்று ஆற்றல் மிகப் பெற்று, சமுதாயப் புரட்சிக்கு அரசி யல் புரட்சி தேவையென்பதை உணர்ந்து, புதியதொரு கருத்துப் புரட்சியைத் தோற்று வித்து வளர்த்தவர் பேரறிஞர் அண்ணு அவர்கள்.

அந்த நாளில் இவ்விரு பெருந் தலைவர் களைப் பின்பற்றிப் பணியாற்றுவதென்பது எளிய செயலன்று. எல்லா வகையான இடையூறுகளையும், இழப்புகளையும், எதிர்ப்புகளை யும், இழிவுகளையும் தாங்கி நிற் கும் ஆற்றல் படைத்த அருந் தமிழ் மறவர்களாலேயே அது முடிந்தது.

அத்தகைய அறிவுப் படை யின் முன்னணித் தமிழ் மறவர் கள் சிலரிலே ஒருவர் காஞ்சி தந்த பெரியவர் மணிமொழி யார் அவர்கள்.

தன்மான-திராவிடப் பேரியக் கத்திற்கு மணிமொழியார் ஆற் றிய பணிகள் மகத்தானவை; மறக்க முடியாதவை; வரலாற் றில் இடம் பெறத்தக்கவை.

தமிழனைத் தாழ்வுபடுத்தித் தலைகுனிய வைத்துச் சுரண் டிப் பிழைக்கும் சூதுமதியினரை- தீய சக்திகளை - எதிர்த்துப் போரிடப் "பகுத்தறிவுப் பாசறை" அமைத்தார்; புத் துணர்ச்சி நல்கிடும் ஏராளமான புத்தகங்களை வெளியிட்டார்.

அரசியல், சமுதாயம், பொருளாதாரம் ஆகிய மும்முனைகளிலும் நம்மை அடிமை கொண்டு ஆர்ப்பரிக்கும் கொடியோர் வினை யழித்திடத் துவக்கினர் ''போர்வாள்'' என்ற வார ஏடு. பொல்லாங்கினை யெதிர்த்துப் பல்லாண்டுகள் போர் புரிந்தார், அதன் வழியே.

அறிஞர் அண்ணா அவர்களின் கருத் தறிந்து செயல்புரிந்த செம்மல் பெரியவர் மணிமொழியார். போராட்டமா? சிறைக் கோட்டமா? தியாகமா? அவை தித்திக்கும் விருந்து அவருக்கு. கடமையுணர்ந்து, கால மறிந்து, கண்ணியந்தவறுது செயலாற்றும் கர்மவீரர், அவர்.

காஞ்சி மணிமொழியாரைப் போன்ற வர்களின் ஊக்கமும் உழைப்பும், தாக்கு தலுக்கஞ்சாத தன்மான எழுச்சியும் தொண் டும் போற்றப்பட வேண்டும். அவர்களைப் போற்றுவதன் மூலம் கொண்ட கொள் கைக்கு ஏற்றமளித்திடல் வேண்டும். அந் தக் கொள்கை வாழ்ந்திடவும் வளர்ந்திட வும், கவர்ந்திட வேண்டும் நலமான இளைய பரம்பரையை!

இல்லையேல், தொடக்கத்தில் நாம் கண்ட நான்கு காட்சிகளை, நானூறாக்கி, நான்காயிரமாக்கிடக் காத்திருக்கும் தலை மறைவுக் கும்பலுக்கு வாய்ப்பளித்தவரா வோம்.

பல துறைகளில், பல வடிவுகளில், பல வகையினில் இன்னமும் பதுங்கியிருக்கிறது பகைக்குலம். நம்மவர்க்கென வாழ்ந்து காட்டியவர் மணிமொழியார். தொண்டில் சிறந்த தூயவர். அப் பெரியாரைப் போற்று வோம்; அவர் வழியைப் பின்பற்றுவோம்; பகையை வெல்வோம்.

''தக்கார் இனத்தனுய்த் தான் ஒழுகவல் லானைச்
செற்றுர் செயக் கிடந்ததில்''

—திருவள்ளுவர்




அன்பர் P. C. மாணிக்க வாசகம் (தற்போது காஞ்சி மணிமொழியார்) அவர்க ளுடன் சுமார் 40 ஆண்டுகள் தொடர்பு கொண்டுள்ள பழமை நண்பர்களில் ஒருவன் யான்.

1934 ஆம் ஆண்டில் பிற்பட்ட சமூக முன்னேற்றத்திற்காக ஒரு கழகம் அமைத்த போது (Backward classes league) அன்பர் காஞ்சி மணிமொழியார் என்னுடன் கூட்டுக காரியதரிசியாகவும், பிற்பட்ட வகுப்பினர் பத்திரிகைக்குப் பதிப்பாளராகவும் அச்சிடுவோராகவும் இருந்து சிறந்த பணி யாற்றினர்.

1936ல் அறிஞர் அண்ணாத்துரையை எனக்கு இவரும் மற்றொரு அன்பரும் அறி முகம் செய்து வைத்தனர். அண்ணா அவர் கள் பிற்பட்ட வகுப்பினர் பத்திரிகைக்கு ஆங்கிலத்திலும் தமிழிலும் சிறந்த கட்டுரை களும், தலையங்கங்களும் எழுதிச் சிறந்த பணி யாற்றினர். அன்னருக்கு எமது அஞ்சலி உரித்தாகுக.

சென்னையில், சமீபத்தில் அன்பர் காஞ்சி மணிமொழியாரின் தலைமையில் பிற் பட்ட வகுப்பினர் சங்கம் பல சிறந்த பணி களை ஆற்றி வருகின்றது.

அன்னரின் உயரிய உள்ளமும், பெருந் தன்மை மனப்பான்மையும், பொதுநலத் தொண்டின் சிறப்பும், சிறந்த பண்பாடும், அன்பர்களுடன்—பெரியோர்சி றியோர் எனப் பாராமல்—தாராளமாகப் பழகும் குணமும் போற்றத் தக்கவைகளாகும். அவர் பல்லாண்டுக் காலம் உடல்நலத்துடன் வாழ வும், மேலும் மேலும் தொடர்ந்து பொதுத் தொண்டுகள் ஆற்றவும் எல்லாம் வல்ல அருட்பெருஞ் ஜோதி தனிப் பெருங் கருணையை வேண்டுகிறேன்.



மறைந்த மாமணிகளுடன் மணிமொழியார்





# அண்ணாவின் இதயங் கவர்ந்தவர்

C.V. இராசகோபால் எம்.எல்.சி

எழுபது வயது நிறைந்தும் இளைஞராகத் திகழும் என் கெழுதகை நண்பர் திரு மணி மொழியார் அவர்கள், பேரறிஞர் அண்ணா அவர்களும் நானும் பிறந்த அதே மண்ணில்-ஆம், காஞ்சித் திருநகரில் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்தவர். எங்கள் மண்ணிலே பிறந்த அப் பெருமகனார், ஏறத்தாழ ஐம்பது ஆண்டு களுக்கு முன்னரே, தன் அறிவு—ஆற்றல்—தொண்டு—வாழ்வு அவ்வளவையும் நாட்டு மக்களுக்கே அர்ப்பணித்துக் கொள்கிறேன் என்னும் சூளுரையை எடுத்துக்கொண்டு, அச் சூளுரையை அப்பழுக்கின்றி நிறை வேற்றும் வகையிலேயே இத்தனை ஆண்டு களாக வாழ்ந்து வருகிறார் என்பதை எண்ணி யெண்ணிக் காஞ்சி மாநகரமே பெருமை யடைகிறது; பூரிப்புக் கொள்கிறது; மகிழ்ச்சி வெள்ளத்தில் நீந்தித் திளைக்கிறது. மணி மொழியார் வாழ்க்கையின் இம் மாண்புமிகு சிறப்பை நினைத்து நானும் பெருமிதம் கொள் கிறேன்; பூரிப்படைகிறேன்.

என்னுடைய எளிய பொதுவாழ்வு நீதிக் கட்சியில் தொடங்கியது; திராவிடர் கழகத் தில் மறுமலர்ச்சி எய்தியது; திராவிட முன்னேற்றக் கழகத்தில் நிறைவெய்தி நிற் கிறது என்னும் உண்மையை நான் எந்த இடத்திலும் பெருமையோடு சொல்லிக் கொள்ள விரும்புபவன். இந்தப் பெருமைக்கு எனக்கு முன்னாலேயே உரிமையாளராக நிற்பவர் உயர்திரு மணிமொழியார் அவர்கள். இன்றையதினம் ஓங்கி உயர்ந்து நிற்கும் திராவிட முன்னேற்றக் கழகம் என்னும் ஒப்பற்ற கட்டிடத்திற்குக் கடைக்கால் எடுக்கப்பட்ட நேரத்தில, அந்த அரும் பணியில் ஈடுபட்ட பெருமக்கள் வரிசையில் மிக முக்கியமானவர்களில் இவர் ஒருவர். 1938—40 ஆம் ஆண்டுகளில் தமிழ கத்தையே ஒரு குலுக்குக் குலுக்கிய முதல் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின்போது அஞ்சாத நெஞ்சுடன், அசையாத உறுதி யுடன், அளவற்ற தமிழார்வத்துடன், இடை விடாத சுறுசுறுப்புடன் சிங்க ஏறுபோல் சுழன்று சுழன்று இவர் ஆற்றிய அரும் பணியை அப்போதே கண்டு வியந்து போற்றி மகிழ்ந்தவர்களில் நான் ஒருவன்.

தென்னகம் பெற்ற தன்னிகரற்ற தலைவர்—தன் இணையற்ற திறமைகளாலும் ஒப்பற்ற பண்புகளாலும் நம் உள்ளங்களிலெல்லாம் குடி யேறி நிலைத்துவிட்ட பேரறிஞர் அண்ணா அவர்களின் இதயத்தில் குடியேறி நிலைத் திருந்த பெருமை படைத்தவர் மணிமொழியார் என்பதை நான் நன்கறிவேன். மணிமொழி யார் அவர்களின் பொதுத் தொண்டு எத்துணைச் சிறப்பு மிகுந்தது என்பதை விளக்க இதைவிட வேறென்ன சான்று தேவை?

காஞ்சி மணிமொழியார் அவர்கள் நீண்ட பல ஆண்டுகள் நன்கினிது வாழ வேண்டும்—நாட்டுத் தொண்டையும் மொழித் தொண்டையும் மக்கள் தொண்டை யும் இடைவிடாது ஆற்றவேண்டும் என்பது, காஞ்சிமா நகரத்தின் பெருவிருப்பம். என எளிய இதயத்தின் இனிய ஆசையும் அதுவே. வாழ்க மணிமொழியார் பல்லாண்டு பல்லாண்டு என மனமார வாழ்த்துகிறேன்.

×



# நாற்பது ஆண்டுகட்கு முன் நான் கண்ட மணிமொழியார்

பேராசிரியர்
**ஔவை துரைசாமி**

திரு. காஞ்சி மணிமொழியார்க்கு எழுபது ஆண்டு நிறைவுற்றமை அறிந்ததும் எனக்கு ஒரே வியப்புத் தோன்றியது. நாற்பது ஆண்டுகட்கு முன் நான் திருவத்திபுரத்தில் தமிழ்ப்பணி புரிந்தபோது, காஞ்சியில் என் கண்முன் நின்று பணிவமைந்த இன்பவுரை வழங்கிய மணிமொழியாரின் கட்டாண்மைத் தோற்றம் என் மனக்கண்ணில் காட்சி தருகிறது. அதனுல்தான், இந்த வியப்பு. திரு. காஞ்சி கலியாணசுந்தரத்தோடு கலந்து உரையாடும் போதெல்லாம், மணிமொழியாரின் உரைகளும் உண்மையுழைப்பும் ஊக்கமும் எங்கள் பேச்சின் பொருளாகும்.

மணிமொழியார் வணிகராகவும் தமிழாசிரியராகவும் கழகத் தொண்டராகவும் அரும்பணி புரிந்தவர். ஒருநாள் இரவு, அறிஞர் அண்ணு அவர்கள் முதல் அமைச்சரானமைக்கு என் வாழ்த்தைக் கூறும்போது காஞ்சி மணிமொழியாரும் இதுவே கூறினுர் என்றது, இப்போது நினைவில் தோன்றி மகிழ்விக்கிறது. கழகத்தின் வளர்ச்சியும் சிறப்பும், சுடச் சுடர்விடும் பொன்போல் இலங்குவன. அதன் தொடக்கம் கண்டு, வளர்ச்சி எண்ணிப், பயன்தருவது காணும் பேரின்பத்தில், என்னினும் மணிமொழியார் மிக்க வுரிமையுடையவர்.

தமிழார்வம் இளைஞர் உள்ளத்தில் தோன்றிப் பெருகுவதில் எனக்கிருந்த தமிழ்ப்பற்று, தமிழினத்தின் நல்வாழ்வு காண வுழைத்த கழகப் பணியில் நேர்முகமாகக் கலந்துகொள்ள விடவில்லையே யன்றிக் கழக வளர்ச்சியில் தமது வாழ்வையே உரிமை செய்த பெருமக்கள்பால் என் நன் மதிப்பும் நல்லன்பும் என்றும் குறைவதில்லை.

என் மனம் விரும்பும் மாண்பும், மதிப்பளிக்கும் மேதகவும் உடைய நண்பர் திரு. காஞ்சி மணிமொழியார் பல்லாண்டு வாழ்தல் வேண்டும். அவரது பழுத்த அறிவும் பண்பின் நீங்காத ஆக்கவுரையும் இப்போதைய தமிழினத்துக்குப் பெறலரும் பேறுகள். வாழ்க காஞ்சி மணிமொழியார்; வளர்க அவரது அரும்பணி.

> மணிமொழியார் அவர்களே!
> நாங்கள் நற்செயல்களில் ஈடுபடும்போது
> எங்களைத்தட்டிக்கொடுங்கள். நாங்கள்
> எப்போதேனும் தவறுகள் செய்தால் தடுத்து
> நிறுத்துங்கள். தேவைப்படும்போது உற்சாகம்
> ஊட்டுங்கள். ஆலோசனைதேவைப்படும்
> போது ஆலோசனை கூறுங்கள். தாங்கள்
> எங்களுக்கு வழிகாட்டியாக இருங்கள்.
> நீண்ட பொதுவாழ்வும், முதிர்ந்த
> அனுபவமும் படைத்த தங்களிடம்
> இந்த வேண்டுகோளைத்தான்
> விடுக்க விரும்புகிறேன்.
> அண்ணு - 5-9-67




"எழுபதாண்டுகள் நிறைந்த இளைஞர்" என விளங்கிச் சிறந்த பல பொதுநலத் தொண்டுகளை, அயராது அல்லும் பகலும் ஆற்றிவரும் சான்றோர் திரு காஞ்சி மணிமொழியார் அவர்களை நினைக்கும் போதெல்லாம்,

"அனுசயப் பட்டு, அது இதுஎன்னுதே
கனிமனத் தொடு கண்களும் நீர்மல்கிப்
புனிதனைப் பூவனூரனைப் போற்றுவார்
மனிதரில் தலையாய மனிதரே."

என்னும் தேவாரத் திருப்பாடலில், திருநாவுக்கரசர் பெருமான் குறிப்பிட்டருளிய "மனிதரில் தலையாய மனிதர்" என்னும் தொடரே, எனது நினைவிற் போந்து இன் புறுத்துகின்றது.

திரு. காஞ்சி மணிமொழியார் அவர்களுடன் யான் நீண்ட காலமாகப் பழகியவன். அவர்கள், பல ஆண்டுகளாக எங்கள் குடும்பத்துடன் மிக நெருங்கிய தொடர்புடையவர்கள். தமிழ்நாட்டின் முன்னேற்றத்திற்காகவும், தமிழ் மக்களின் நல்வாழ்விற்காகவும், கடந்த 52 ஆண்டுகளாக அவர்கள் அரும்பெரும் தொண்டாற்றி வருகின்றார்கள். "தனக்கென வாழாப் பிறர்க் குரியாளர்" என வழங்கி வரும் சங்ககாலச் சொற்றொடருக்கு உரிய எடுத்துக் காட்டாகத் திகழ்பவர்களுள் திரு. காஞ்சி மணிமொழியார் அவர்களும் ஒருவராவர் எனக் கூறுதல் மிகையாகாது.

காஞ்சிபுரத்தில், சிறந்த நல்ல உயர் குடியில், செந்தமிழ்ப் புலமைநலம் சிறந்த திரு. செங்கல்வராய முதலியார் அவர்களின மைந்தராகத் தவத்தால் வந்து உதித்தவர், இபபெருந்தகையார். திருந்துழாயானது முளைத்து வளரத் தொடங்கும் போதே, நறுமணம் பரப்பிக் கொண்டு தோன்றுவது போல, 'பிறந்து மொழி பயின்று', இளைஞராக இருந்த காலந் தொட்டே, இவர் பொதுநலத் தொண்டுகளில் அளவிலா ஆர்வமும் உழைப்பும் கொண்டவராக விளங்கி வந்திருக்கின்றார் என்பது, நினைத்தொறும் நினைத்தொறும் வியப்பும் விம்மிதமும் விளைக்கின்றது.

இவர்தம் தந்தையாரும், தமையனாரும், தமிழில் மிகச் சிறந்த புலமை நலம்பெற்று விளங்கியிருந்தவர்கள். ஆதலின் "குல விச்சை கல்லாமல் பாகம் படும்" எனும் பழமொழிப்படி, இவரும் இளமையிலேயே தமிழிற் சிறந்த புலமை கைவரப் பெற்றுவிட்டார். கலைபயில் தெளிவும், கட்டுரை வன்மையும், நாவன்மை மிக்க பேச்சுத் திறனும், இவர்பால் இன்றும் செவ்விதின் அமைந்து திகழ்கின்றன.

மிக இளம் பருவத்திலேயே வாணிப வளர்ச்சிக்காகவும், பொதுநலப் பணிக்காகவும், இவர் இலங்கை, பர்மா முதலிய அயல் நாடுகளுக்கும் சென்று சுற்றுப்பயணங்கள் செய்து, சொற்பொழிவுகள் ஆற்றிப் பலதிற அறிவாற்றல் அனுபவங்களைப் பெற்று வந்தார். இவர்பால் படித்த மாணவர்களும், பயிற்சி பெற்ற தொண்டர்களும், பழகிய இளைஞர்களும் ஆகிய பற்பலர், இன்று வாழ்க்கையிற் பலதுறைகளில் உயர்ந்து, ஓங்கி, முன்னேற்றமடைந்து நன்னிலையில் வாழ்கின்றனர்.

நல்ல முற்போக்குக் கொள்கைகளும், செயல் திட்டங்களும் இயல்பாகவே அமையப் பெற்ற இப்பெருந்தகையார், பிற்பட்ட மக்களின் வாழ்க்கையை வளம்பெறச் செய்வதற்காகவே, தமது வாழ்க்கையை ஒப்படைத்துக் கொண்டு, மிகப பல ஆண்டுகளாகப் பெரிதும் உழைத்து வருபவராவர்.

சிறப்பாக, இவர் செங்குந்தர் குலத்திற்காக அளப்பரிய பெருந்தொண்டுகள் ஆற்றி

யுள்ளார். ''செங்குந்த மித்திரன்'' ஆசிரிய ராகவும், செங்குந்தர் மகாசன சங்கத்தின் அமைச்சராகவும் விளங்கி, இவர் ஆற்றி யுள்ள தொண்டுகள் மிகவும் போற்றத் தக்கவையாகும். 1937-ஆம் ஆண்டு முதல் ''பிற்பட்ட சமூகங்களின் சங்கம்'' என்னும் அமைப்பைத் தொடங்கி, அதன் செயலாள ராகவும் தலைவராகவும் இருந்து, இன்றளவும் பணியாற்றி வருகின்றார். 1962 முதல் 1967 வரையில், நமது சென்னைச் சட்டமன்றத்தின் உறுப்பினராக விளங்கி, இவர் செய்துள்ள அரிய பல பணிகள் பெரிதும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. 70 ஆண்டுகள் முதிர்ந்த இப்போதும் இவர், பற்பல பொது நல நிறுவனங்களில், சீரிய பலப்பல தொண்டு களை இடையறாது செய்து வருகின்றார்.

திரு. காஞ்சி மணிமொழியார் அவர்கள், நுண்மாண் நுழைபுலம் மிக்கவர்; பன்மாண் குணங்கட்கு நிலைக்களனாகத் திகழ்பவர். பழமையும் புதுமையும் பாங்கறிந்து போற்று பவர். தூய தமிழ்ப் பண்பாட்டிலும், நல்ல சமய உணர்வு ஒழுக்கங்களிலும், தலைசிறந்து நிற்பவர். எல்லோரும் இன்புற்றிருக்க விரும்பி, ஒல்லும் வகையானெல்லாம் உழைப் பவர். பரந்த மனப்பான்மையும், பெருந் தன்மையான போக்கும் வாய்ந்தவர். எவரிட மும் கலந்து பழகி, இன்சொற்கள் கூறி, இயன்ற உதவிகள் அனைத்தும் புரியும் இனிய இயல் புடையவர். பிசிராந்தையார் என்னும் சங்க காலப் பெரும் புலவர்போல, நரையிலாத் தலையும், நவையிலா வாழ்வும் பெற்று நலம்மிக்குத் திகழ்பவர்; அறிவறிந்த புதல்வர் களும், அன்பமைந்த இல்லற வாழ்வும், பண்பமைந்த சுற்றமும் நட்பும் பிறவும் இவருக்கு நன்கினிது வாய்த்துள்ளன. வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து வருபவர் இவர்,

இத்தகைய பல சிறப்புக்களை உடைய இப்பெருந்தகையார் நீடினிது வாழ்ந்து, சிறந்த பல பொதுநலப் பணிகளை மேலும் புரிந்து வருதல் வேண்டுமென விரும்பி,

''ஒன்றுபத்து அடுக்கிய கோடிகடை
இரீஇய
பெருமைத்து ஆகுக, நின் ஆயுள் தானே''

எனப் புறநானூற்றுப் புலவர் ஒருவர் வாழ்த்தி மகிழ்ந்ததைப்போல, யானும் மனமார வாழ்த் துமபடி இறைவனை வேண்டுகிறேன்.

வாழ்க காஞ்சி மணிமொழியார்!
வளர்க, அவர்தம் புகழ்!
வெல்க அவர்தம் சிறந்த பணிகள்!!

எந்தத் துணைவியாரும் தன் கணவர் மாட மாளிகை, நில புலம் சேர்த்து நிம்மதியாக வாழ வேண்டும் என்று ஆசைப்படுவது இயற்கை, அந்த ஆசைக்குக் கணவரின் பொதுத் தொண்டால் இடை யூறு ஏற்படும்போது வருத்தப் படுவதும் இயற்கை.

இத்தகைய வருத்தம் காரண மாக மணிமொழியாரின் துணைவியார் அவருடைய பொது வாழ்வுக்கு இடையூறாக ஒரு போதும் இருந்ததில்லை. உற்சாக மூட்டி உறுதுணையாகவே இருந்தி ருக்கிறார்கள். மணிமொழியாரின், துணைவியாரும் பொது வாழ்வில் ஈடுபட்டுப் பல நற்பணிகளை ஆற் றியிருப்பது பெருமைக்குரியதாகும்.

— அண்ணாவின் செயின்ட் மேரி மண்டபப் பேச்சு.




ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றத்தின் செயலாளராகவும் புத்தக வியாபாரியாகவும் நான் இருந்த சமயம் திரு. காஞ்சிமணிமொழி யாரிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்பு கிடைத்தது. நான் பொருளாதார நெருக்கடியில் இருந்த சமயம் திரு. காஞ்சி மணிமொழியார் அவர்கள் வெளியிட்ட தமிழ் நூல்கள் பலவற்றை விற்பனைக்குத் தந்தார்கள். இதன் மூலம் என்னுடைய வருவாயை உயர்த்திக் கொள்ள நல்ல வாய்ப்பு கிடைத்தது. எத்தனையோ பேர் இவரிடம் விற்பனைக்காக நூல்களை வாங்கிக்கொண்டு கணக்குப்படி இவருக்குத் தரவேண்டிய பணத்தைத் தரவில்லை. என்றாலும் அவர்களையெல்லாம் இவர் வற்புறுத்திக் கேட்காமலே விட்டதோடு இப்போதும் நட்புரிமையோடு அவர்களைப் பாராட்டி வருகிறார்.

இவர், வாணிபம் நடத்தவேண்டிய நேரத்திலும் வாணிபம் சம்பந்தமான அலுவல்களைப் பாராமல் கட்சிப் பிரசாரத்துக்கே அடிக்கடி சென்றுவிடுவார். சிறப்பாக அறிஞர் அண்ணா அவர்களின் நூல்களையும், கலைஞர் கருணாநிதி அவர்களின் நூல்களையும் பல ஆண்டுகளுக்கு முன்பே எங்கும் பரப்பி வந்தார். அறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகளைக் குறிப்பெடுத்து நூலாக்குவதற்குப் பேருதவி புரிந்தார். நான் குறிப்பெடுத்த அண்ணாவின் சொற்பொழிவுகளை நூலாக்கி வெளியிட்டார்.

திராவிடர் நாட்குறிப்பை மிகவும் சிறந்தமுறையிலே வெளியிட்டார். மலேயா இலங்கை போன்ற வெளிநாடுகளில் இவர் வெளியிட்ட நாட்குறிப்புக்கு நல்ல வரவேற்பு இருந்தது.

இயற்கையாகவே நல்ல உடல்நலத்துடன் இருக்கும் இவர் சலிக்காமல் உழைப்பதைக் கண்டிருக்கிறேன். தலை தெறிக்கும் வெய்யிலிலே இவர் கழக சம்பந்தமாகத் தீவிரமாக ஈடுபட்டதை நான் நன்கறிவேன். இவர் உழைப்பதற்கென்றே பிறந்தவர். இப்பொழுது கழகத்தின் முன்னணியில் இருக்கும் அறிஞர்களை யெல்லாம் இவர்கள் இல்லத்திலே அடிக்கடிப் பார்த்திருக்கிறேன். பிரபல எழுத்தாளர் இராதாமணாளனின் நூல்களை வெளியிட்டு ஊக்கம் தந்த பெருமை இவரைச் சாரும்.

தொண்டுக்கென்றே பிறந்து, தொண்டுக்கென்றே வளர்ந்து, தொண்டு செய்வதிலேயே இன்பம் கண்டவர், நம் காஞ்சி மணிமொழியார். இவரைப் பார்ப்பவர்கள் 70 வயது நிரம்பப்பெற்றவராக யாரும் சொல்லமாட்டார்கள். என் கண்ணுக்கு அவர் இன்னும் இளைஞராகவே காட்சி அளிக்கிறார். நம் காஞ்சியார் கறுத்த மேனியர். ஆனால் அவர் உள்ளமோ வெளுளை உள்ளம்.

நம் மணிமொழியாருக்கு வாய்த்த நன் மகனார் திரு மா. இளஞ்செழியன், ஆங்கிலமும், தமிழும் நன்கு கற்றவர்; சிறந்த எழுத்தாளர்; முதுபெரும் கலைஞர் என்னும் எம். ஏ., பட்டம் எய்தியவர்; போர்வாள என்னும் இதழைத் தந்தையோடு இணைந்துநின்று நடத்திய தனிப்பெரும் சிறப்பினர்; பொருளாதாரத்துறையில் காஞ்சி பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்து நன்மாணவர்க்கு உறுதுணை புரிந்து வருபவர்; நூல்பல நல்கிய நுண்ணறிவாளர். இப்பெருந்தகையாரை மகனாரகப் பெற்றது நம் மணிமொழியார் அவர்களின் மாண்பையும் புகழையும் மேலும் துலக்குவதாகும். 'தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தாற் காணப்படும்' என்ற வள்ளுவர் கருத்துக்கு இலக்கணமாகத் தந்தையும் மகனும் விளங்குகிறார்கள்.

இனிய, எளிய, நல்ல தமிழில் யாவர்க்கும் விளங்கும் வண்ணம் மணிமொழியாரின் சொற்றிறம் அமைந்திருப்பதைப் பாராட்டுகிறேன்.

பெரியவர் மணிமொழியார் பெரும்புகழொடு நீடு வாழ்க!

# தன்மானம் காத்த தகைசால் வீரர்

வித்துவான் நா. சீனிவாச முதலியார்
துணைத்தலைவர், மாணவர் மன்றம், சென்னை.

உயர்திரு. காஞ்சி மணிமொழியார் அவர்களை ஏறத்தாழ நாற்பது யாண்டுகளாக நன்கறிவேன். அவர்கள் தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தின் தலைமை அலுவலகத்திலிருந்து கொண்டு அச் சமூகத்தினருக்குச் செய்த நற்றொண்டுகள் செங்குந்த குலத்தினரால் மறக்கவே முடியாதவை. இப் பெரியார் அவர்களுடன் தி. அ. சண்முக முதலியார் என்னும் பெயருள்ள முதுபெரும் புலவரும் ஒன்றியிருந்து ஆற்றிய தொண்டின் பயனால் இன்று அச் சங்கம் ஆல்போல் தழைத்துப் பல ஆயிரக்கணக்கான செங்குந்தர்களை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்கின்றது. இன்றுள்ளதுபோல் பேருந்து வண்டி வசதியே இல்லாத அந்தக் காலத்தில் உயர்திரு மணிமொழியார் அவர்கள் உயர்திரு. தி. அ. சண்முகமுதலியார் அவர்களுடன்பல நூற்றுக்கணக்கான சிற்றூர்களுக்கெல்லாம் நடந்து சென்று அங்குள்ள ஏழைச் சிறுவர்கட்கு எழுச்சி யூட்டியும் கல்வி கற்கச் செய்தும் அவர்களின் வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டியாக விளங்கினார்கள். நம் தாய்மொழியாம் தமிழ்மொழிக்கு இடையூறு நேர்ந்த காலங்களிலெல்லாம் மணிமொழியார் தளராது சென்று அரசினருடன் போராடித் தமிழின் பெருமையை நிலைநாட்டித் தமிழரின் தன்மான உணர்ச்சியினைத் தூண்டிய செயலை இத் தமிழகம் என்றும் மறவாது போற்றக் கடமைப்பட்டிருக்கிறது. தமிழகம் உள்ளவரையில் இப்பெரியார் செய்த தொண்டுகள் குன்றின் மேலிட்ட விளக்கெனத் திகழும்.

இத்தகைய பெருந்தலைவருக்கு எழுபத்தோராம் அகவையில் சிறப்புச் செய்ய எண்ணும் விழாக் குழுவினரை என் உளமாரப் பாராட்டுகிறேன். அவருக்குச் செய்யும் சிறப்பு, மொழிப்பற்றும் நாட்டுப் பற்றுமுள்ள தமிழர் அனைவருக்கும் செய்யும் சிறப்பாகும்.

"தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தாற் காணப்படும்" என்னும் வள்ளுவரின் வாய்மொழிக்கேற்ப அவர்தம் அருமைப் புதல்வர்களின் வாயிலாகவும் இப் பெரியாரின் புகழ் தமிழகமெங்கணும் பரவியுள்ளது.

இப் பெரியார் செய்த தவப்பயன் காரணமாக இவருக்கு அமைந்த நல்வாழ்க்கைத் துணைவியார் அவர்கள் தம்மில்லத்துக்கு வரும் அன்பர்களை முகத்தானமர்ந்து இனிது நோக்கி அகத்தானும் இன்சொற்கூறி வரவேற்று உபசரித்தனுப்பும் மனைத்தக்க மாண்புடன் விளங்குகிறார்கள். அதனால்தான் உயர்திரு மணிமொழியார் அவர்கள் எல்லா நலன்களும் பெற்று வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வருகின்றார்கள்.

இப் பெரியார் மேலும் மேலும் எல்லாச் செல்வங்களையும் பெற்றுப் பல்லாண்டுகள் வாழ்தல் வேண்டுமென்று நான் என் உளமார வாழ்த்துகின்றேன்,

# வாழ்க மணிமொழியார்

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்

காஞ்சிபுரம் என்றால் இந்த நூற்றாண்டில் அமரர் அறிஞர் அண்ணா அவர்களின் நினைவே வரும். ஆயினும் சுயமரியாதை இயக்கத்தின் வரலாற்றையும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் வரலாற்றையும் பகுத்தறிவுப் பகலவனின் எழுச்சியையும் முழுதுறத்தெரிந்தவர்களுக்குக் காஞ்சிமணிமொழியாரின் பெயரும் நினைவுக்கு வரும். அறிஞர் அண்ணா என்ற மலர் பூத்துப் புதுமணம் பரப்புதற்குக் கொடியாக—கொழு கொம்பாக இருந்தவர்களில் காஞ்சி மணிமொழியார் முதலிடம் பெறுபவர். காஞ்சி மணிமொழியார் பிறப்பிலேயே தறுகண்மையும் பேராண்மையும் உடையவர். தன்மான உணர்ச்சி அவரது செங்குருதியில் கலந்த ஒன்று.

அறிஞர் அண்ணா அவர்களை முதன் முதலில் எழுத்தாளராக்கி—இதழாசிரியராக்கி நாடும் நானிலமும் பெருமையுறத் தந்த பெருமை காஞ்சி மணிமொழியாருக்கு உண்டு. உருவிய வாள்களைவிட எழுதுகோல்களுக்கு முடியுடை அரசுகளும் நடுங்கும். இதனை உணர்ந்த காஞ்சி மணிமொழியார் இந்தி ஆதிக்கத்தினையும் சாதி ஆதிக்கத்தினையும் எதிர்க்கப் "போர்வாள்" தொடங்கினார். அன்று, 'போர்வாள்' எழுப்பிய எழுச்சிதான் இன்று இந்தியை நமது எல்லைக்கு அப்பால் நிறுத்தியிருக்கிறது. அவர், தமிழன்னையின் புகழினையும் தமிழினத்தின் தன்மானத்தினையும் காக்கச் சிறைச்சாலையைத் தவச்சாலையெனக் கருதிப் பல ஆண்டுகள் சிறையில் இருந்திருக்கிறார்.

காஞ்சி மணிமொழியார் எழுத்தாளர்; நாநலம் மிக்க சொற்பொழிவாளர்; நாடெலாம் திருத்தும் நல்லதோர் நடிகர்; நெஞ்சிற்கினிய நண்பர்; நல்லவர்க்கு நல்லர்; பகைவர்க்குப் புலி; அடக்கத்தின் சின்னம்; இனிய பண்பினர்; கலைஞரின் கைவிரல் இத்தகு சிறப்புக்கள் பலவுடைய காஞ்சி மணிமொழியாரின் பிறந்தநாள்விழா தமிழினத்தின் தனிவிழா! விழா பொலிவதாக. மணிமொழியார் நீலமணிமிடற் றொருவனைப் போல் வாழ்க! பல்லாண்டு வாழ்க!

# நாவீறு படைத்த நல்லோர்

முதுபெரும் புலவர்—செந்தமிழ்ச் செல்வர்
பாலூர் **கண்ணப்ப முதலியார்**
எம்.ஏ., பி.ஓ.எல்.

உயர்திரு. காஞ்சி மணிமொழியார் அவர்களை யான் ஏறக்குறைய முப்பது ஆண்டுகளாக நன்கு அறிவேன். இவருடைய பேச்சும் மூச்சும் தமிழ்மொழியின் ஆக்கத்துக்கும் தமிழ்மக்களின் முன்னேற்றத்திற்குமே பயன்பட்டு வருவனவாகும்.

இவர் இந்தி மொழியை எதிர்த்துப் போராடியதைத் தமிழ் உலகம் நன்கு அறியும். அப் போராட்டத்தில் யானும் கலந்து கொண்டு என்னாலான தொண்டினைச் செய்துள்ளேன் என்பதையும் இப்போது அறிவித்துக்கொள்ள விரும்புகின்றேன்.

காஞ்சி மணிமொழியார் வெறும் வாய்ச் சொல் வீரர் அல்லர். சிறந்த செயல்வீரர் அவர். எடுத்த காரியத்தை நிறைவேற்றாது இரார். அவரது பேச்சு விறு விறுப்பானது; ஆணித்தரமானது; எல்லோரையும் கவரத் தக்கது. நா வீறு படைத்த நல்லோர் என்று கூறின் அது மிகை ஆகாது.

இன்னோரன்ன இயல்புகளுக்கும் பண்புகளுக்கும் உறைவிடமான நம் காஞ்சி மணிமொழியார்க்கு அன்பர்கள் பிறந்த நாள் விழாவைக் கொண்டாட முன்வந்திருப்பது குறித்து யான் பெரிதும் உளம் களிக்கின்றேன். திரு காஞ்சி மணிமொழியார் இன்னும் தமிழ்மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் அருந்தொண்டு புரிய அன்னாருக்கு ஆக்கமும் ஊக்கமும் ஆயுளையும் அளிக்கத் தண்டமிழ்த் தாயின் திருவடிக் கமலங்களை வாழ்த்தி வணங்குகின்றேன்.

# *கன்னித்தமிழ்க் காவலர்

பேராசிரியர்:
க. அன்பழகன், எம். ஏ., எம். பி.
நாடாளுமன்ற தி.மு.க. குழுத் தலைவர்



எனது நெடுநாளைய நண்பர்—நிலையான கருத்துத் தெளிவும் அயராத உழைப்பும் ஆர்வம் குன்றுத உள்ளமும் கொண்ட காஞ்சி மணிமொழியார் அவர்கள் எழுபது ஆண்டுகள் நிறைந்தவராய்—எழுபத்தொன்ரும் ஆண்டு பிறந்தநாள்விழா காண்பது அறிந்து பெருமகிழ்ச்சியடைகிறேன்.

முதுமையின் வாயிலில் அவர் அடி எடுத்து வைத்தும்—அவரது முதிராத நல்லுடல் தோற்றமும்—தளராத உறுதியும் இடைவிடாத பொதுத்தொண்டும்—அவரை முதுமையின் ஓய்வுக் கூடத்தில் சேர்த்துக் கொள்ள மறுக்கின்றன.

முதுமையை நேருக்குநேர் கண்டும், தமது உள்ளத்துள் கொண்ட தொண்டு ஆர்வத்தால்—முதுமை தம்மை நெருங்காது அஞ்சி ஓடச் செய்துவரும்—திராவிடத் தந்தை பெரியார் அவர்கள், மூதறிஞர் இராஜாஜி அவர்கள், தொழில் மேதை ஜி. டி. நாயுடு அவர்கள், ஆற்காடு உடன் பிறப்புக்கள் உலகமேதைகள் ஆ. இராமசாமி முதலியார், ஆ. இலட்சுமணசாமி முதலியார் ஆகியோரை ஒப்பக் காஞ்சி மணிமொழியாரும் மேலும் பல்லாண்டு இனிது வாழ்ந்து—வெற்றி நடைபோடுவார் என்னும் நம்பிக்கையுடன் நான் அவருக்குப் பல்லாண்டு கூறுகிறேன். தமிழ்ச் சமுதாயத்தின் கண்விழிப்பு முதல், கருத்துத் தெளிவு பெற்றுத் தமிழ் ஆட்சி கண்ட இந்நாள்வரை, காஞ்சி மணிமொழியாரின் தொண்டினைத் தமிழகம் பெற்று வந்துள்ளது. சர். பி. தியாகராயர் கண்ட நீதிக்கட்சியும்—பெரியார் கண்ட தன்மான இயக்கமும்—திரு. வி. க. கண்ட தொழிலாளர் இயக்கமும்—அண்ணு கண்ட திராவிடர் இயக்கமும்—மணிமொழியாரின் பேச்சாலும் எழுத்தாலும் வளம் பெற்றன என்பது வரலாறு.

தமிழ் ஆசிரியராக, எழுத்தாளராக, சட்டமன்ற உறுப்பினராகப் பலரும் பாராட்டும் வண்ணம் நாட்டுக்கு உழைத்துவரும் நல்லியல்பும் ஒழுக்கமும் கொண்ட உத்தமர் காஞ்சி மணிமொழியார்.

தமது அருமைப் பிள்ளைகளையும் தகுதி மிக்க கல்வியறிவுடையவராக்கி அவையத்து முந்தியிருப்பச் செய்த சிறப்புடையவர். தமது தொண்டினில் தமது பிள்ளைகளும் பங்கேற்று நாட்டு நலன் நாட வழிகாட்டியவர்.

நம் நாட்டு இளைஞர்களுக்கும் கழகப் பணிபுரியும் காளைகளுக்கும் எந்நாளும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குபவர்.

அடக்கம், அமைதி, அன்பு, அறிவார்ந்த செயல், அஞ்சாமை ஆகியவற்றையே தம் இயல்பாகக் கொண்டவர்.

இந்நாளிலும்—நமது கழகத் தலைமை நிலையத்தில்—பொதுச் செயலாளருக்குத் துணையாக அமைந்து செயலாற்றி வருபவர்.

நான் பிறந்த ஆண்டினும் (1922) முன்னதாகவே தொண்டினில் ஈடுபட்டு, இன்றும் குறிக்கோள் வழுவாது, தமிழ் மொழியின் மாட்சி விளங்கவும், தமிழ் இனத்தின் உரிமை பெருகவும், தாழ் நிலையுற்றோர் மீட்சி அடையவும், சமத்துவமும் சகோதரத்துவமும் சுதந்திரத்துடன் விளையவும், பயன கருதாது பாடுபட்டுவரும் காஞ்சி, மணிமொழியார் தமது வாழ்நாளில் கண்டுள்ள மாபெரும் வெற்றியினை எண்ணிப் பெருமித உணர்வு கொள்ளும் பேறு பெற்றுள்ளார் என்பது மகிழ்ச்சியளிப்பதாகும். வாழ்க மணிமொழியார் தொண்டுள்ளம்! வளர்க அவர்தம் பொதுப்பணி!




**சிவ.-சண்முக சுந்தரன்,**
இராமநாதபுரம் மாவட்டத் தி. மு. க. அவைத் தலைவர்

உலக மொழிகளிலே ஒண்தமிழே உயர்வுடைத்து !
மலர்களுக்குள் ஏதலைமை மாண்புறுநற் றாமரைக்கே !
கனிப்பொருளில் தங்கம் ! காட்டினிலே சந்தனமரம் !
வனிதையருள் கண்ணகிதான் ! வளமாருந் தமிழ்க்கின்னல்
தரவருவார் எவரேனும் தாங்காது போர்தொடுத்து
புறமுதுகிட் டோட்டுவதில் புதுக்காவி யம்படைத்துத்
தமிழினத்திற் தலைசிறந்தார் மணிமொழியார் ! தரணிபுகழ்
உறநின்றார் ! அண்ணன் உவந்தளித்த பாராட்டும்
பெறநின்றார் ! கண்ணியத்தின் பேருருவம் ! கடமையினிற்
சிற்றெறும்பு ! கட்டுப்பாட் டினிலிரும்பு! கனிவில் அன்பில்
நற்கரும்பு ! உயர்தொண்டில் நல்லிளைஞர்க் கணியாவார் ;
களங்கண்ட மணிமொழியார் **கன்னித் தமிழ்போல**
வளம்பலவும் பெற்றினிதே **வாழ்க**வென வாழ்த்துதுமே !

# சுயமரியாதைச் சுடரொளி

**கவிஞர் கண்ணதாசன்**

வாஞ்சையும் அன்பும் வளர்ந்த உள்ளம்
மலர்ந்த புன்னகை மறையா உருவம்
நேரிய சேவை நிலைபெறும் உழைப்பு
நிமிர்ந்த பார்வை நினைவில் தெளிவு
தொண்டர் தமக்கும் தொண்டர் இவரெனச்
சுயமரி யாதை படைத்த சுடரொளி
காஞ்சித் தலைவனின் கனிந்த மணிமொழி
எழுபத் தொன்றை எட்டிய வயது
இன்னும் வளர்ந்தே இன்றேபோல
இளமைப் பொலிவும் இதயத் துணிவும்
இனிய பேச்சும் இன்முகக் கனிவும்
நின்று நிலைத்து நிம்மதி படைத்து
நெஞ்சந் தோறும் நிறைஇடம் பெற்று
நூறாண் டவ்வரை நோய்நொடி யின்றி
வாழிய எனவே வாழ்த்துதும் மனமே !

X




**கோ. செல்வம்,** எம்.ஏ., பி.எல்., பி.டி.,
வழக்கறிஞர், பத்திரிகையாளர், சேலம்

அறத்திற்குச் சான்ருகக் குறளைச் சொல்வார்
அமுதுக்குச் சான்ருகத் தமிழைச் சொல்வார்
உரத்திற்குச் சான்றென்பார் சேரன் நெஞ்சை
உதவிக்குச் சான்றென்பார் சோழன் தோளை!
திறத்திற்குச் சான்றென்னும் தென்னன் சிந்தை
திசையெங்கும் நாட்டுவது சீர்த்தி யன்ருே!
மறத்திற்குத் தோள்சான்ரும் சேவை செய்யும்
**மணிமொழியார்** அன்பிற்கே சான்ரும் கண்டீர்!

கடலென்று **மணிமொழியார்** மனத்தைச் சொன்னுல்
கத்தும்அலை ஆர்ப்பரிப்பு இல்லை ஆங்கே!
அடலேறு அவர்நெஞ்சம் என்று சொன்னுல்
அறம்பிறழும் வன்செயல்கள் இல்லை யாமே!
உடலென்று உயர்அன்பு உருவம் பெற்றே
உறவாட நம்முன்னே வந்தி ருந்து
மடல்தாழை மலரனைய முறுவல் செய்தே
**மணிமொழியார்** எனும்பெயரைப் பூண்ட தம்மா!

கருணையின் குமிழ்தானே கூர்த்த கண்கள்
கடமையின் உணர்வுதானே நீண்ட நாசி
பொறுமையின் வடிவுதானே பணிந்த நாக்கு
பொதுப்பணியின் சின்னமாமோ நிமிர்ந்த யாக்கை
பெருமையின் பிறப்பிடமோ அவரின் நெஞ்சம்
பிறர்நலத்தின் களஞ்சியமோ விரிந்த சிந்தை
மறுமலர்ச்சி முகிழ்த்தவராய் நம்முன் வாழும்
மணிமொழியார் பல்லாண்டு வாழ்க! வாழ்க!

“போர்வாளை” வடித்தளித்த படையின் வீடு
புத்தறிவைப் புகட்டவந்த கல்விக் கூடம்
சீராரும் தமிழ்ப்பாது காப்புக் கோட்டை
சிந்தைதெளி வித்திடுநல் லறிவின் தேட்டை
பாராளும் வள்ளுவரின் வழியில் நின்றே
பொதுநலத்தைப் போற்றுகின்ற கொள்கைத்தோட்டம்
யாராவார் என்றெம்மைக் கேட்டு வைத்தால்
மணிமொழியார் உண்டென்று காட்டி வைப்போம்!

# மணிமொழிப் பெரியார் வாழ்க

**மு. பி. பாலசுப்பிரமணியன்,** எம்.ஏ.,
தமிழ்த் துணைப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி,
காஞ்சிபுரம்

1. அணிமொழித் தமிழைக் காக்க
   அறப்போர்வாள் ஏந்தும் வீரர்
   பிணிமொழி இந்திப் பேயின்
   பிடரியில் அடிக்கும் தீரர்
   துணிவினைத் துணையாய்க் கொண்டு
   துடிப்புடன் வாழும் தோன்றல்
   'மணிமொழிப்' பெரியார் தம்மை
   மாநிலம் மறக்கப் போமோ?

2. எழுபதாம் ஆண்டில் கூட
   இளமையின் துடிப்பி னேடு
   பழுதிலா வாழ்க்கை வாழும்
   பண்பாளர்; தேய்தல் இல்லா
   முழுநிலா; முன்னேற் றத்தின்
   முளையினைக் கொண்ட வித்து!
   எழுகதிர் போற்றும் ஏந்தல்
   எழில்மணி மொழியார் வாழ்க!

3. உருவத்தில் குறளை ஒத்த
   உத்தமர் அண்ணு போன்ற
   உருவத்தார்; களங்கம் இல்லா
   உள்ளத்தார்; உழைப்பின் வேந்தர்;
   பருவத்தால் பண்பால் அன்பால்
   பாசத்தால் முதிர்ந்த நல்லோர்
   மருவத்தான் நட்புக் கொள்ளும்
   மணிமொழிப் பெரியார் வாழ்க!

4. போர்வாளை ஏந்திச் சென்று,
   புகவந்த இந்தி முன்னல்
   மார்தட்டி நின்ற ஏறு
   மா. இளஞ் செழியன் தன்னை
   நீர்பெற்றீர் மகனய்; இந்த
   நிலம்போற்ற வாழுகின்றீர்!
   ஊர்போற்ற உலகம் போற்ற
   உழைப்பினில் உயர்ந்தோய் வாழி!

# நவரத்தின மாலை

கணித சோதிட கலாநிதி, நாற்பா அரசர், சித்திரக் கவிசரபம்,
**பா. வெ. அப்துல்காதர்**
திருவையாறு.

(நவரத்தினம் 9. பாடல் 9. ஒவ்வொரு ரத்தினமும் ஒவ்வொரு பாடலின் முதலில் வரும்படி அமைத்துப் பாடுவதே நவரத்தின மாலையாகும்.

1. முத்துத் தமிழ்க்கடல் தனிற்பிறக்கும் முத்து மொழியார் தமிழ்த் தொண்டை
முதிய காஞ்சிக் கடற்பிறந்தே மூன்ருருண்டில் பார்ப்பனரை
நத்தா வாலிபர் சங்கமொடு நம்பி தியாக ராயர்பெயர்
நாட்டி வாசக சாலையுடன் நலமார் கச்சிக் கலாவல்லி
வித்தகி பெயர்சேர் தமிழ்ச்சங்கம் மேலதன் மன்றம் நூல்நிலையம்
விற்பன மாகத் தன்பணத்தால் விளங்கும் தொடக்கப் பள்ளியொன்று
வைத்தும் வாலாஜா பாத்பள்ளி வள்ளல் பச்சையப்பன் பள்ளிதனில்
வாத்தி யாகிப் பாரதப்பேர் மாத ஏட்டிற் பணிபுரிந்தார்.

2. பவளம் சொத்தை அதுபோலப் பலபே ருண்டு நற்பவளம்
பாரிற் காஞ்சி மணிமொழியார் பனகல் அரசர் சுரேந்திரநாத்
தவமலி டி. வி. சுப்ரமண்யம் தக்கோன் ஜே. என். இராமநாதன்
சர். இராமசாமி முதலியாரும் தண்மொழி ஜே. எஸ். கண்ணப்பன்
இவர்களை எல்லாம் வரவழைத்தே இனிய திராவிட நாடோங்க
இரவு பகலாய்ப் பணிசெய்தார் இவரிடம் கற்ருேர் நம்நாடு
நவயுவன் கல்யாண சுந்தரமும் நந்தமிழ்ச் சட்டப பேரவையில்
நற்செய லாளராப் பணிபுரியும் நடராசன் என்பதை உலகறியும்.

3. மரகதம் அனைய செங்குந்தர் மரபோர் வளம்பெறத் தமிழகத்தில்
வளாநக ரெங்கும் சென்றதொடு மணித்தமிழ் யாழ்ப்பாண் நகர்சென்றே
தருநிகர் குந்தர் மாநாட்டில் தாரணி போற்றக் கொடியேற்றி
தண்கடல் சூழ்ந்த இலங்கையெலாம் தானே சென்றும் அச்சங்கம்
பெருகச் செங்குந்த மித்திரனிற் பெரும்பணி யாற்றும் தலைவனுமாய்ப்
பேரார் மகாசன சங்கத்தில் பிரபல அமைச்ச ராயுழைத்தார்
நரிபோல் நுழைந்த இந்திதமிழ் நாட்டைவிட் டகலச் செய்வதற்கே
நம்பி ஈழத் தடிகளுடன் நல்ல ஊர்வலம் நடத்திவைத்தார்.

4. மாணிக்கம் போன்ற தமிழ்த்தாத்தா மயிலைச் சிவமுத்துத் தமிழ்முல்லை
மலர்நிகர் செ. தெ. நாயகமும் மனமொத் திவரொடு பணிசெய்தார்
ஆணிப் பொன்னும் அறிஞர்அண்ணு ஆசிரிய ராக நவயுகப்பேர்
அணிந்த இதழைத் தானடத்தி அண்ணு புகழுரை தனைப்பெற்ருர்
மாணிக்க வேலர் தன்னேடு மாந்தரிற் பிற்பட்ட சங்கச்சீர்
வளரக் கூட்டுச் செயலாளர் மணிமொழி யார்தான் இன்றுவரை
ஆணவ மகற்றும் போர்வாளெனும் அழகிய இதழை இவர்தவத்தின்
அருமை மகனும் இளஞ்செழியன் அவரொடுந் திராவிடப் பணிசெய்தார்,

5. நீல கிரிபோல் உலகறிந்த நிறைதமிழ் மறைமலை அடிகளுடன்
நிலைபுகழ்ப் பெரியார் திரு.வி.க. நிபுணர் ம. பொ. சிவஞானம்
கோலக் கவிபா ரதிதாசன் கொள்கை தவறு அறிஞர் அண்ணு
கோதில ரெவரண்ட் தங்கையா, குளிர்மொழி நாரண துரைக்கண்ணன்
சீலன் அப்துல் மஜீதிவர்கள் சேர்ந்தே இந்தி தனை எதிர்க்கச்
செயலாள ராகி மணிமொழியார் செய்த பணியுல குளமட்டும்
சாலப் புகழ்தரும் தானுகத் தனித்தே இந்திப் போராட்டம்
சகல கட்சி மதத்தினரைத் தழுவி நடத்தினர் மணிமொழியார்.

6. வயிரம் புரைய ஒளிபரப்பி வளர்திரு வள்ளுவர் மாநாட்டை
மன்திரு வி. க. ஈ. வே. ரா மாற்றுயர் பசும்பொன் அறிஞர் அண்ணு
அயராத மீனுட்சி சுந்தரனுர் அன்புள இராச மாணிக்கம்
அணிசோம சுந்தர பாரதியார் அருகன் அடிதொழும் சக்கரவர்த்தி
நயினுர் இலக்குவனுருடனே நல்லவர் மேடையில் பணிசெய்தார்
நலஞ்சேர் நீதிக் கட்சிதனை நாட்டித் தலைவ னுகிவளர்
செயமிகு தி.மு.க. சட்டக்குழு தேர்தல் பலவிலும் செயலாற்றி
செகமே புகழ்ச் சட்டமன்றம் திகழ உறுப்பின ராகிவந்தார்

7. கோமே தகமெனும் மணிமொழியார் குவலயம் போற்றப் பணிசெய்நாள்
குரங்காம் இந்தியும் கொடுங்கோலும் கோபத்துடனே ஆறுமுறை
தாமே சிறைசெலச் செய்தனவாம் தமிழ்த்தாய்த் திருமகன் மணிமொழியை
தனிப்புகழ் அண்ணு தலைமையினில் தனிவாழ்க்கைப் புயல் வழக்கு வாபஸ்
பூப்புகழ் நாடகந் தனில்நடித்தே புகழ்பெறு சிங்கம் மணிமொழியார்
புலவன் எனது பாடலினுல் புகலுவதென்ருல் அரிதரிதே
மாமேரு போன்ற இவர்கீர்த்தி மாநில மறியச் செய்வதற்கே
மக்கள் திலகம் எம். ஜி. ஆர். மாறன் சம்பந்தம்

8. புட்ப ராகம் போன்றவர்கள் புனித இராசா ராமுடனே
பொற்புள பால சுந்தரமும் பொற்காஞ்சிக் கல்யாண சுந்தரமும்
பெட்பார் நாரா யணசாமி பேர்மலி வுற்ற அரங்கண்ணல்
பெருமைசேர் கிருஷ்ணசாமி, சிவசங்கரன் பீடுள நீலநா ராயணனும்
தட்பக் கண்ணன் முனுசாமி சம்பந்தம் குமார்பார்த்த சாரதியும்
தக்கோன் வீர ராகவனும் தனிப்பாஸ் கரனும் மூர்த்தியுடன்
திட்பமார் அகிலன் தூயமணி திருத்தணி கைமலை இராசநெடு
சீரார் கணேசன் கண்ணப்பன் திகழ்விழாக் குழுவினர் தெரிவீரே.

9. வச்சிரம் போல்மலர் வெளியிடவே வாய்த்த தலைமைகே ஜிஇராதா
மணுளன் சோமு கணேசனுயர் மன்கவி நடேசன் செங்குட்டுவன்
மெச்சிடும் மோகன சுந்தரமும் மேலாம் செயல்உறுப் பினராகி
மிளிரும் மலரால் மணிமொழியார் மேதகு புகழைத் தமிழகத்தில்
உச்சிகொள் புலவோர் அரசினர்கள் உரைத்த கவிகள் கட்டுரைகள்
உலகம் அறியச் செய்ததனுல் உயர் தி மு. கழகம் நீடூழி
அச்சம் அகற்றி அரசோச்சி அறிஞர் அண்ணு புகழுடனே
அண்ணல் காஞ்சி மணிமொழியார் அணிபுகழ் நிலைபெற வாழ்த்தினனே,

# மாப்பணியாற்றும் மணிமொழியார்!

புலவர் சுந்தர சண்முகனர்,

தமிழ்ப் பேராசிரியர், புதுவை.

அண்ணு பிறந்த அணிபெறு காஞ்சியில்
அண்ணு அண்ணனுய் அமைந்து தோன்றி
மணிமொழி வழங்கி மாப்பணி யாற்றும்
மணிமொழி யாராம் மன்னிய புகழிேனாய்!
பணிவார் வணக்கம்! பாராட்டு! நன்றி!
'தமிழ்மொழி தமிழ்க்கலை தமிழினம் தமிழகம்
இமிழ்கடல் உலகில் இணையிலா மாண்பின.'
என்னும் உண்மையை யாவரும் ஏற்க
மின்னல் வீச்சென மிடுக்காய் உணர்த்திய
போரிலாப் போர்செயும் போர்வாள் எடுத்தே
யாரிலும் வல்லவர் எனும்பெயர் எடுத்தனை!
அண்ணு நிகர்ப்பவும் அகத்தியர் மானவும்
நண்ணு திருக்குறள் நற்பா புரையவும்
உருவத் தாலும் உயர்தரத் தாலும்
ஒருசே ரத்திகழ் ஒருதனிச் சிறப்பினை!
பண்பில் 'பசிபிக்'; பழகலில் தீஞ்சுனை;
அன்பில் அன்னை; அறிவினில் அண்ணு;
உறுதியில் இமயம்; உயர்வில் விசும்பு;
பொறுமையில் நன்னிலம்; புரட்சியில் போர்வாள்;
தன்மையில் தரத்தில் தங்கச் சுரங்கம்;
நன்மையில் பழுமரம்; நயத்தில் நற்றமிழ்!
இன்னும் என்னநான் இயம்புவேன்! இயம்புவேன்!
நாட்டு நலனுடன் நற்றமிழ் வளமுற
வீட்டு நலனையும் விட்டே உழைத்ததால்
நாட்டுத் தலைவனுய் நாடுனை ஏற்றதே!
சிறையுனைப் பெற்றதால் சிறப்பும் பெற்றதே!
யாதுகைம் மாறு யாஞ்செய வல்லோம்!
நிறைபல தமிழினம் நின்னிடம் கற்றதே!
சீர்திருத் தம்பல செய்தும் பேசியும்
சீர்திருத் தினையே செந்தமிழ் நாட்டினை.
தீது நீக்கித் திருத்தினை மக்களை.
எழுபதாம் ஆண்டிலும் இளையோய் வாணுள்
முழுவதும் இளைஞனுய் முதன்மைத் தலைவனுய்
வாழ்வு பலர்க்கும் வழங்கி
வாழ்கபல் லாண்டு வாழ்தமிழ் போன்றே.

# இளையப்பயிர் முளையிலே

ந. ரா. முருகவேள், M.A., M. O. L.
ஆசிரியர் : 'திருக்கோயில்' சென்னை–34

1 நிலமகட் கணியாய் ஓங்கி
நிலைபெறும் தொண்டை நாட்டில்
பலவளம் நிரம்பப் பெற்றுப்
பண்டைநற் புகழும் கொண்ட,
கலைவளர் சிறப்பின் மிக்க
காஞ்சியம் பதியில் தோன்றும்,
நலமிக வாய்த்த சான்றோர்
நம்மணி மொழியார் வாழ்க!

2 'விளையும் பயிரின் மேன்மையினை
மிகவும் நன்றாய் முளையதுதான்
தெளியும் வகையிற் காட்டும்'எனச்
சிறந்த பெரியோர் கூறுகிற்பர்;
இளமையிலேயே தமிழ் உணர்ச்சி
எய்தி, நல் நீதிக் கட்சி
வளமை அடையப் பதினெட்டாம்
வயது முதலே பெரிதுழைத்தோர்!

3 விச்சை பயிலும் சிறுவயதில்
மிகவும் பெருகும் தமிழ்உணர்வால்,
கச்சிப் பதியிற் கலாவல்லிப்
பெயராற் கவினுர் தமிழ்ச்சங்கம்,
மெச்சிப் பல்லோர் மிகப்பெரிதும்
வியந்து மகிழ்ந்து புகழும்வகை
நச்சி அமைத்த மணிமொழியார்
நலஞ்சால் பணிகள் அளப்பரிய!

4 ஆன்ற சிறப்பின் அமைந்தொளிர்ந்த
பனகால் அரசர், ஆற்காட்டில்
தோன்று நாவ லராம் சர். ஏ.
இராம சுவாமி, சுரேந்திரநாத்,
போன்ற நீதிக் கட்சியர்தாம்,
புகழ்ந்து மிகவும் போற்றும்வகை
ஏன்று பணிசெய் மணிமொழியார்,
இனிது வாழ்க நீடூழி!

5 கண்ணுய்த் தமிழைக் காத்துநின்றோர்!
கடமை கண்ணி யம்கட்டுப்பாடு
உண்ணேர் உயிர்போல் ஓம்பிவந்தோர்
உயர்ந்த பண்பின் திருவுருவாம்
அண்ணு அவர்கள், பொதுவாழ்வில்
அன்றே கலந்து கொளப்புரிந்த
தண்ணர் தமிழர் மணிமொழியார்
தமிழே போல் வாழ்கநன்றே!

6 நல்ல தமிழும் தமிழ்நாடும்
நன்கு பெரிதும் முன்னேற
ஒல்லும் வகையால் எல்லாமும்
உவந்துஈர் ஐம்பான் ஆண்டுகளாய்,
அல்லும் பகலும் கருதாமல்
அயரா துழைக்கும் பெருந்தகையார்!
மல்லற் காஞ்சி மணிமொழியார்
வாழ்க அவர்தாம் நீடூழி!

7 அரிய காஞ்சி மணிமொழியார்
அவர்கள் தமை,என் இளமைமுதல்
தெரியப் பெறுவேன்; செங்குந்தர்
குலத்தின் சிறந்த தலைவர்எனப்
பெரிதும் பிறங்கி அவர்செய்த
பெருந்தொண் டினைத்தென் றளப்
[பரிதாம்!
உரிய முறையில் அவர்தம்மை
உவந்து போற்றல் நம்கடமை!

8 இளமை முதலே தமிழுணர்ச்சி
எய்தி, நிறுவம் பலதோற்றி,
வளமை பெருகும் நல்லெழுத்தால்,
வன்மை மிகுதம் சொற்பொழிவால்,
களைவ களைந்தே, இனவுணர்ச்சி
கலிப்ப, மக்கட் பணிபுரியும்
அளவில் சிறப்பின் மணிமொழியார்
அளவில் காலம் வாழ்கநன்றே!

9 இந்த நாட்டில் இந்திமொழி
எவ்வா றேனும் புகுந்துநின்றால்
நந்தம் அருமைத் தமிழ்க்கலைகள்
நலியும் எனப் "பேனாப்போர்வாள்"
முந்த எடுத்துப் பெரிதெதிர்த்த
முதன்மை சான்ற தமிழ்வீரர்
எந்தம் காஞ்சி மணிமொழியார்
இனிதே வாழ்க பல ஊழி.

10 அருமை மிக்க திருப்புலிசை
அடிகள் ஞானி யார், ஆன்ற
பெருமை பிறங்கும் மறைமலைநல்
அடிகள் முதலாம் பெரியரெலாம்,
உரிமை யுணர்வால் உவந்துகலந்து
ஒன்றி, இனிய தமிழ்காக்க
ஒருமை செய்த மணிமொழியார்
உயர்ந்த தொண்டின் திறம்பெரிதே!



11 இனிய நல்ல திருக்குறட்சீர்
மக்கள் எல்லாம் இனிதுணர
முனிவர் எனலாம் திரு. வி. க.
முதலாம் பெரியோர் கலந்துகொள,
நனிநன் றுயர்ந்த மாநாடு
நலக்கக் கூட்டிப் பணிபுரிந்த,
துனியில் தோன்றல் மணிமொழியார்
தொண்டின் சிறப்பை என்சொல்கேம்?

12 சின்னஞ் சிறிய வயதினன்யான்!
எங்கள் சிற்றூர்ச் செங்குந்தர்
முன்னம் தமக்குள் பெரும்பிணக்கு
மூண்டு நின்றார்! மற்றதனை
மன்னும் காஞ்சி மணிமொழியார்
வந்து நலமே தீர்த்துவைத்தார்!
இன்னும் அதைஎம் ஊர்புகழும்!
எனக்கும் நினைவஃ தினிதுளதால்!

13 அறிவ தறிந்த பெருஞ்சிறப்பின்
அருமைப் பண்பின் இளஞ்செழியன்
செறிவு மிக வாலாசாபாத்
திகழும் இந்து மதப்பள்ளி,
நெறியின் என்னோ டுடன்பயின்ற
நேயம் மிகுந்த உயிர்நண்பர்!
பொறியிற் பொலியும் அவர்திறன், அப்
பொழுதே சிறந்து பொலிந்ததுவே!

14 நலமே சிறந்த குடிப்பிறப்பு,
நல்ல கல்வி, தொண்டுணர்ச்சி,
வலமே அமைந்த மனைவாழ்க்கை,
மாண்பின் மிக்க மகப்பேறு,
குலமே ஓங்கப் பெரிதுழைக்கும்
குறிக்கோள் நாடு மொழிப்பற்று,
கலைமே வுளங்கொள் மணிமொழியார்
கன்னித் தமிழ்போல் நனிவாழ்க!

15 நின்னாள் திங்கள் எனநீள்க!
நீண்ட திங்கள் யாண்டாக!
பொன்னேர் யாண்டோ ஊழிபல
போலப் பொலிக! எனவிரும்பி
முன்னாள் பதிற்றுப் பத்துஎனும்நூல்
மொழிந்த சிறந்த வாழ்த்தினையே,
இந்நாள் நினக்கும் யாம்சொல்கேம்!
இனிது நன்றே வாழியவே!

16 "ஒன்றுடனே பத்தடுக்கல் உற்றுபல
கோடிஎனும் ஊழி காலம்
நன்றுமிக வாழ்க" என நல்லசூட
புலவியனார் நயந்து முன்னாள்
நின்றபுகழ்ப் பாண்டியர்கோன் நெடுஞ்
[செழியன்
தனைவாழ்த்தி நெஞ்சு வந்தார்!
இன்றதுபோல் யாமும்நினை இன்பமிக
வாழ்த்துகின்றோம்! இனிதே வாழ்க!

# பணிவும் துணிவும்

கருப்பக்கிளர் திரு சு. அ. இராமசாமிப் புலவர்

சீரோங்கு தொண்டைவள நாட்டினிலே
மிக்கோங்கிச் சிறப்புற் றோங்கும்
பேரோங்கு பெரும்பதியாம் கச்சிநகர்
தழைக்கவந்த பெருமை வாய்ந்தோன்
ஏரோங்கு செங்கல்வ ராயனுடை
எழிலோங்கு நலத்தில் வந்தோன்
காரோங்கு புகழுடையான் காஞ்சிமணி
மொழிப்பேர்கொள் காட்சி யாளன். 1

கல்வியிலே மிக்கபுகழ்க் காஞ்சியிலே
வந்தவிவன் கல்வி கற்றுக்
கல்விதனைப் போதிக்குங் கணக்காய
னுந்தொழிலைக் கருதிச் செய்தும்
பல்வகையில் மக்களுக்குப் பணிபுரியும்
பண்பினையும் பற்றிக் கொண்டே
நல்வகையில் நலம்புரிந்தான் இவன்தொண்டு
நாட்டிற்கு நலமா யிற்றால். 2

இதழ்நடத்தும் துறைகளினும் இறங்கியத
னுல்நேரும் இன்ன லேற்றே
முதலிலே பாரதம்பின் செங்குந்த
மித்திரனும் முடிவிற் போர்வாள்
பதமுறவே நடத்தியத னுல்செய்த
பணிகளைநாம் பகரற் பாற்றே
இதமுறவே இவன்செய்த நன்னயம்போல்
தமிழ்நாட்டிற் கியாரே செய்தார் 3

செந்தமிழ்நா டதுதனை இந் நாள்தனியே
சீரோங்கச் சிறப்பு மோங்க
வந்தாட்சி புரிகின்ற திராவிடமுன்
னேற்றம்வளர் கழகத் திற்கு
அந்தநாள் முதலாக இப்பெரிய
மணிமொழியான் ஆற்றுந் தொண்டே
இந்தநாள் இவ்வளவு எழிலோங்க
இயைந்ததென இயம்பு வாரே. 4

தன்னலமே நாடாமல் தமிழர்க்குப்
பலகாலம் தக்க தொண்டு
சென்னைதனி லேயமர்ந்தே சிறப்பினெடு
செய்யுமிந்தத் திருவா ளன்தான்

[அடுத்த பக்கம் பார்க்க]

# படைநடத்தி வாழ்க

புலவர் **மா. நன்னன்** எம்.ஏ.
தமிழ்த்துணைப் பேராசிரியர்,
அரசினர் கலைக் கல்லூரி, சென்னை.

காஞ்சிநகர் கனிந்தளித்த மணிகள் தம்முள்
காஞ்சிமணி மொழியென்னு மணியு மொன்றும்
அம்மணியும் செம்மணியாய் அழகை நல்கி
மும்மையால் முழுப்பயன்கள் பலவும் நல்கி
எந்தமிழர் வாழ்வு மறுமலர்ச்சி யெய்தி
நந்தலிலா விளக்காகி ஒளியை நல்க
ஆண்டுபல அயராது பாடு பட்டு
ஆண்டு எழுபதைக் கடந்து ஆண்மையோடு
அடுத்துவரும் ஆண்டினிலே அடியும் வைத்து
அடுத்தடுத்துத் திருப்பங்கள் பலவும் தாண்டி
மாண்புடனே வீறுபெற நடத்தல் கண்டேன்

[அடுத்த பக்கம் பார்க்க]

---

[முன் பக்க தொடர்ச்சி]

இன்னமுமிப் புவிதனிலே வாணாளை
இனிமையுடன் எய்தி நின்று
பன்னாளும் பண்பினொடு பணிபுரிந்து
வாழ்கவெனப் பகரு வோமே. 5

அணிமொழியே கற்றறிந்தோன் பார்தனிலே
பேசுகிற அனைவோர் மாட்டும்
பணிமொழியே புகன்றிடுவோன் எந்நாளும்
நல்லியல்பே பதிந்து நிற்போன்
துணிமொழியே சொல்லுகிற தூய்மைமிகு
அறிவாளன் துதைந்த சீர்த்தி
மணிமொழியான் மாநிலத்தில் பலவாண்டு
மகிழ்ந்துமிக வாழி வாழி. 6

ஒன்றுசேர் எழுபதென உறுமகவை
சேருமிவன் உலகில் இன்னும்
நன்றுசேர் பலவாண்டு நற்றொண்டு
மேற்கொண்டு நன்கு செய்ய
இன்றுபோல் உடல்நலமும் மனநலமும்
பிறநலமும் இனிதி னோங்க
என்றுமே நின்றுநலம் ஈயவல
வாழ்த்திதனை இயம்பி னேனே, 7

(முன்பக்கத் தொடர்ச்சி)

மாண்புடையார் பலருவந்து போற்றல் கேட்டேன்
காண்பனவும் கேட்பனவும் கனிந்தென் உள்ளே
பூண்பனவும் கலந்தொன்ருய்ப் புதுவெள் ளம்போல்
பாய்ந்தென்றன் உள்ளமுயிர் உடல்மற் றெல்லாம்
தோய்ந்தூறும் இன்பத்தின் சுவையும் பெற்றேன்
இன்பத்தின் எழுச்சியெனும் முகட்டி லேறி
இன்றமிழின் பாட்டென்னும் கொம்பு கொண்டு
முழக்குகின்றேன் மணிமொழியார் வாழ்கவென்றே
அழைக்கின்றேன் தமிழுலகை முழக்கு தற்கே
வாழியரோ வாழி வாழியரோ வாழி!
வாழியரோ வாழி வாழியரோ வாழி!
ஆரியமும் வேறியமும் இந்த நாட்டை
வேரினையே அரித்தொழிக்கும் கரையான் போல
வேரறுக்கும் இருட்செயல்கள் செய்து செய்து
ஊர்கெடுத்துப் பேர்கெடுத்து உள்ளமெலாம் கெடுத்து
ஆர்தடுப்பார் இனியென்று ஆர்ப்பரித்து நின்றதனை
இடுப்பொடித்து விலாவொடித்து எலும்பையொடித்து
அடுப்பிலிட்ட விறகாக்கி அழித்திடுநல் வேளை,
அடுப்பினிலே கொதிக்கின்ற மணத்தின்ஆவி
அடுப்பெரித்த நமமவரை அயர்வடையச் செய்ய,
அடுப்பினிலே எரிந்திட்ட எரியடங்கி மங்க
மடுத்திட்ட விறகெழுந்து ஆடுகின்ற தையா!
மரமாவேன் காடாவேன் நும்மை எல்லாம்
மரத்தின்கீழ்க் கன்ருக்கி மாளவைப்பே னென்று,
மணிமொழியே, கூவுதையா மருட்டுதையா நாட்டை
பிணியாகிப் பிழிந்திடுமோ பெருமையெலாம் வீழ!
பொன்ருத பகுத்தறிவுப் போர்கள் இங்கே
தோன்றுவதும் அயர்வதுவும் வழக்க மாகும்
தோன்றுங்கால் துவள்வதுவும் தோன்றிப் பின்னர்
ஊன்ருது அயருங்கால் உயர்ந்தோங்கி யாடுவதும்
எம்மியல்பு என்றியம்பி என்னைப் பார்த்து
வீம்பாக நடக்குதையா என்ன செய்வேன்
நடைகெட்டு நாடிநரம் பெலாமொடுங்கி நாட்டைவிட்டு
கடைகெட்டு ஓடுமதன் காட்சி நல்கும்
படைநடத்த வருகவென வேண்டு கின்றேன்
படைநடத்தி வாழ்கவென வாழ்த்து கின்றேன்

# நூறாண்டு வாழ்க

**சா. கணேசன்** எம். எல். சி.

காரைக்குடி

எழுபத்தாண் டெய்திமகிழ்
காஞ்சி மணிமொழியார்
வாழுமுறை நூருண்டும்
வார்கடலால் — சூழுலகில்
கன்னித் தமிழ்போன்று
கற்ருேர் மனமகிழ
மன்னிப் பொலிக மகிழ்ந்து

# வழுவிலா வாழ்க்கை வளத்தினர்

புலவர் க. வெள்ளைவாரணன்
துணைப்பேராசிரியர், தமிழாராய்ச்சித்துறை
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1 தணிவிலாச் சீர்த்தித் தமிழ்வளர்க்குங் காஞ்சி
மணிமொழியார் வண்டமிழர் வாழ்வின்—அணிபெறவே
அல்லும் பகலும் அயரா துழைத்திடுவார்
எல்லோரும் போற்ற இனிது.

2 எழுபதாம் ஆண்டின் நிறைவுபெற் றென்றும்
வழுவிலா வாழ்க்கை வளத்தால் — முழுதும்
தமிழர் நலம்பெறவே தக்காங் குழைப்பார்
அமிழ்தின் மணிமொழியார் ஆய்ந்து.

3 அன்பர் மணிமொழியார் நாட்டின் அரசியலில்
இன்பம் பெருக இயல்வனசெய் — தன்பால்
தமிழகத்தார் போற்றத் தமிழெனவே வாழ்க
இமிழ்திரைசூழ் ஞாலத் தினிது.

# தண்ணார் தமிழின் காவலனே!

[பேராசிரியர், பைந்தமிழ்ப் பாவலர்
அ. கி. பரந்தாமனர் எம்.ஏ.]

### பன்னிருசீர் விருத்தம்

1 தொண்டை நாட்டுக் காஞ்சியிலே
தோன்றி வளர்ந்து கல்விகற்றுத்
தொண்டை ஐம்பத் திரண்டாண்டாய்த்
தொடர்ந்து செய்யும் பெருந்தொண்ட,
அண்ணா வளர்த்த தி. மு. க.
அரிய பண்ணை தனில்பயின்றே
ஆறு முறையும் சிறைபுகுந்த
அஞ்சா நெஞ்சத் தனிமறவ,
நண்ணார் அஞ்சப் 'போர்வாளை'
நடத்தி வந்த ஆசிரிய,
நடிக்குங் கலையும் கற்றறிந்தோய்,
நல்ல பண்பின் திருவாள,
தண்ணார் தமிழின் காவலனே,
தலைவ, காஞ்சி மணிமொழியே,
தரணி தன்னில் பல்லாண்டு
தழைத்து வாழி, வாழியவே!

### அறுசீர் விருத்தம்

2 வாழி எழுப தாண்டுற்ற
வளமார் இளைஞ, வாழியவே!
வாழி நாடு சீர்திருந்த
மாண்பின் உழைத்தோய், வாழியவே!
வாழி காஞ்சி மணிமொழியே,
வாழி வாழி நீடூழி!
வாழி நின்றன் குடியினரும்
வாழி வாழி வாழியே!

# புகழ் மிக்க தலைவ பொலிக நன்றே

புலவர் தா. சுப்பிரமணியம்,
**காஞ்சிபுரம்.**

முயற்சியினால் உயர்உருவே! முன்னேற்றக் கழகத்தின்
முன்னணியில் நின்றுபணி செய்த மேலோய்!
வியத்தகுநற் புதுமைகள்தாம் விளைதற்கு வித்தானாய்
வீரமிக்க செயல்களையே அணியாய்க் கொண்டோய்!
கயத்தனமாய் நுழைந்திட்ட இந்திதன்னைத் கடிந்தோட்ட
கலைமலியும் தலைநகரில் பாடி கூட்டிப்
புயத்தினையே தட்டியந்நாள் போர்வாளைச் சுழற்றிவென்ற
புகழ்மிக்க தமிழ்த்தலைவ! பொலிக நன்றே!

மணிவிழாவைக் கொண்டநல்லோய்! மாற்றாரும் போற்றுகின்ற
மாட்சிபல நிறைந்த தூயோய் வாழி! வாழி!!
மணிமொழியாய் உரைத்தநல்ல மாண்புமிகு கருத்துக்கள்
மறத்தமிழர் எழுச்சிக்கு மருந்தே யாகும்
அணியணியாய்த் தமிழர்படை ஆர்த்தெழவே அந்நாளில்
அமைப்புகள்தாம் பலவற்றை அமைத்துத் தந்தாய்
துணிவுடனே ஆற்றியநற் தொண்டுகளால் அன்றோஇத்
தூயதமிழ் ஆட்சியின்று மலரக் கண்டோம்.

எழுபத்தைக் கடந்தாலும் இளமையோ டினிதிலங்கும்
ஏற்றமிகு எம்தலைவ! என்றும் வாழ்க!
விழுமியநல் புகழ்வேந்தர் பேரறிஞர் அண்ணாவின்
விரும்புநல்ல பாராட்டுப் பெற்றோய் வாழி!
செழுங்கலைஞர் நாவலரும் தீந்தமிழாய் தம்பியரும்
சிறப்புடனே வாழ்த்துமூ தறிஞா! வாழ்க!
எழும்புகழ்ச்சொல் துணைவியுடன் இளஞ்செழியன் நடராசன்
இருஞ்சுற்றம் தமிழகமும் தழைக்க வாழி!



*கழகம் இன்றுள்ள எழில்மிகு நிலையைப் பெறுவதற்காக உழைத்தவர்களில் முன் வரிசையில் இருப்போரில் முதலிடம் பெறத்தக்கவர் நம் மணிமொழியார் அவர்கள்.* — அண்ணா — 17-5-60

# பாலாற்று மணலிலும் பல்லாண்டு வாழ்க

அறிஞர் அண்ணு அவர்களின் தமிழாசிரியர்

புலவர் மாமணி

திரு வீ. திருஞானசம்பந்த முதலியார்,

காஞ்சிபுரம்

*நிலைமண்டில ஆசிரியப்பா*

வாழ்க காஞ்சி மணிமொழி யார்நிதம்
வாழ்க அவர்தம் வளம்பெறு கொள்கை
போர்வாள் நடத்திய சீர்சால் வீரன்
செந்தமிழ்த் தாயின் முந்திய தவமகன்
கோடம் பாக்கம் குலவி விளங்க
அண்ணு நகரினை அமைத்த பெரியோன்
காஞ்சியி லிரவு கல்விக் கூடம்
வைத்து நடத்திய மெத்திய தொண்டன்
என்தமிழ் மாணவர் இணையி லறிஞர்
ஐந்து கண்டமும் அறிந்து புகழ்ந்த
தந்திர மேதை தமிழ்முத லமைச்சர்
அண்ணு ஆட்சித் தலைமையை அடைய
அருஞ்செய லாற்றிய திருந்திய நலத்தன்
தமிழ்நா டளித்த தலைவர்கள் பலரில்
விரல்விட் டெண்ணக் கூடிய வித்தகன்
கருணு நிதிமுத லுள்ள அமைச்சர்கள்
மாறன் முதலுள மாணெழுத் தாளர்கள்
சட்டமன் றத்தின் சுட்டிய உறுப்பினர்
மற்றுமுள்ளவர் யாவரும் மகிழ்ந்து
புகழ்ந்து போற்றும் பொற்புறு மாண்பினன்
கடமை கட்டுப் பாடு கண்ணியம்
திடமுறக் கொண்ட திண்ணிய நெஞ்சினன்
எழுபத் தொன்ரு மாண்டிலும் சலிக்கா
இளைஞ ரென்ன இருந்து பணிபல
ஆற்றும் விருப்பின் போற்றும் மேலோன்
நாடும் மொழியும் நலம்பெற வாழ்க
இளைஞர்கள் நலம்பெற என்றும் வாழ்க
பாலாற்று மணலினும் பன்னள் வாழ்க
வாழ்க வாழ்க வாழ்க நிலத்தே



# இருள் அகற்றும் ஏந்தல்

காஞ்சி மணிமொழியார் அவர்களின் 71-ம் ஆண்டு பிறந்த நாள் விழா என்பதைக் கேட்க மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். 60 ஆண்டைத் தாண்டி வாழ்கின்ற பெரியவர்கள், வாழ்க்கையின் அனுபவம் அத்தனையும் பெற்று இருப்பார்கள். குறிப்பாக அரசியல் துறையில் பல்லாண்டுகளாக 'கடமை, கண்ணியம், கட்டுப்பாடு' என்ற சமுதாய நியதிகளைக் கடைப்பிடித்து, கொள்கை மாருமல் நாட்டுப்பணி ஆற்றிவந்தவர் காஞ்சி மணிமொழியார் அவர்கள். தமிழ் வளர்ச்சியிலும், தமிழக மக்கள் முன்னேற்றத்திலும், தாயகத்தின் உரிமைப் பிரச்சினையிலும் தளராத பங்கேற்று, தமக்கு என்று ஒரு இடத்தைப் பிடித்துக்கொண்டவர் காஞ்சி மணிமொழியார். திராவிட முன்னேற்றக்கழகம் துவங்கிய நாள்தொட்டு இன்றுவரை கட்சிக்காகவும், அதன் மூலமாக நாட்டு மக்களுக்காகவும் அரும்பணி ஆற்றி வருபவர் காஞ்சி மணிமொழியார். அவருடைய மைந்தர்—காஞ்சி பச்சையப்பன் கல்லூரிப் பொருளியல் பேராசிரியர்—திரு மா. இளஞ்செழியன் எம். ஏ., அவர்கள் என்னுடன் படித்தவர். மணிமொழியாரும், அவர் மைந்தர் இளஞ்செழியனும் 'போர்வாள்' என்ற பத்திரிகையின் மூலம் கழகத்தை வளர்த்த பான்மையைக் கழகம் மறந்துவிட முடியாது. இன்றைக்குக் கழகம் நாடாளும் கட்சியாக அமர்ந்திருக்கிறது. வருங்காலத்தில் இத்தகைய ஒரு பொறுப்பும், கழகத்திற்காகக் களம் பலகாணும் நிகழ்ச்சிகளும் ஏற்படுமா என்பது ஒரு ஐயப்பாடுதான். இன்றைக்கு இருப்பவர்களைப்போல் வருங்காலம் எந்த அளவிற்குக் கழகக் கொள்கைகளிலும், நாட்டு மக்களுடைய முன்னேற்றத்திலும் ஈடுபாடு கொள்ளும் என்பது பொருத்து இருந்து பார்க்க வேண்டிய ஒன்று. ஆனல் வருங்காலம், சென்ற கால நிகழ்ச்சிகளை—நாட்டுக்காகப் பாடுபட்ட பெரியவர்களின் குறிப்புகளை அறிய வாய்ப்புகள் ஏற்படுத்திக்கொள்ளுமேயானல் நிச்சயமாக நல்ல சமுதாயத்தினை, கழகக் கொள்கைகளை மறக்காத ஒரு சமுதாயத்தைப் படைத்துக்கொள்ள முடியும். இத்தகைய நற்பணியின் ஒரு அங்கம்தான் பிறந்த நாள் விழாக்கள். கழகத்தினுடைய காவலர்கள், கழகத்தைக் கட்டிக்காத்தவர்கள், கழகத்தினிடத்தில் அன்றுதொட்டு இன்றுவரை சிறந்த ஈடுபாடு கொண்டு இருப்பவர்கள், இவர்களுடைய பிறந்த நாட்கள் கொண்டாடுவதின் மூலமாக நாட்டு மக்களிடத்தில் கழகத்தினுடைய கொள்கைகளை, உயிர்கொடுத்து அதனை வளர்த்தவர்களின் பெருமைகளை எடுத்துவைக்க முடியும். இன்று கழகத்தில் களம்பல கண்டவர்கள் அமைச்சரவையில் வீற்றிருந்தாலும், அவர்களுடைய பிறந்தநாள் விழாக்கள் உள்ளபடியே என் ஒத்தவர்கள் உள்ளத்தில் அடக்க முடியா உணர்ச்சிகளை வளர்த்துவிட்டிருக்கின்றன. இதற்கெல்லாம் காரணம் அத்தகைய பெரியவர்கள் எத்தகைய இடர்ப்பாட்டிற்கிடையிலேயும் தங்களைப்பற்றி கருதாது தாங்கள் பிறந்த தாயகத்தைப்பற்றி கருதினர்கள் என்ற ஒரே எண்ணம்தான்.

**கோதல கிருஷ்ணன்**
(உயர்நீதிமன்ற நடுவர்.)

காஞ்சி மணிமொழியார் போன்ற எண்ணற்ற இதயங்களை உருவாக்கிய எதையும் தாங்கும் இதயம் இன்று நம்மிடையில் அண்ணவாகவில்லை, நம் இதயத்தோடு ஒன்றிவிட்டது. அறிஞர் பெருந்தகை விட்டுச் சென்ற வழியில் இருள் நீக்கி விளக்கேற்றி வைக்க இருக்கும் காஞ்சி மணிமொழியார் போன்ற பெரியவர்களின் பிறந்த நாளைக் கொண்டாடுவதின்மூலம் அண்ணலின் அரும் பெரும் தொண்டினைத் தொடர்ந்து நடத்துவதற்கான வழிவகைகளைச் செய்தவர்களாவோம். காஞ்சி மணிமொழியார் அவர்கள் தனககு என்று வாழாத கழகத்தின் காவலர். எனக்கு என்று கேட்கின்ற நேரத்தில் தனக்கு என்று வைத்திருக்கின்ற பொருளையும் தட்டாமல் தரக்கூடிய உயர் எண்ணம் படைத்தவர் உயரிய எண்ணத்தை உள்ளத்திலே கொண்டு தீங்கு இழைத்தவர்களையும் மனமார, மெய்மறந்து அணைத்துக்கொள்ளும் பண்பு படைத்தவர். நாட்டுககுத் தன்னுடைய உழைப்பு அத்தனையையும் காணிக்கையாக வைத்திடும் பெரியவர் காஞ்சி மணிமொழியார் அவர்கள்.

# இணைந்த உள்ளங்கள்

ஏ. எஸ். தட்சணாமூர்த்தி
எம். எல். ஏ.

"அன்பீனும் ஆர்வமுடைமை யதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு"

மேற்கண்ட திருக்குறளுக்கு விளக்கமாக அமைவது இக்கட்டுரையாகும். இக் கட்டுரையின் நாயகராகிய பெரியவருக்கும் எனக்கும் ஏற்பட்ட தொடர்பினை எடுத்துக் கூறினல், இதுகொண்டு இற்றைக்குச்சுமார் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர் "இயற்கையின் நியதியை" மேலே கண்ட குறட்பாவினுல் எடுத்தோதிய 'வள்ளுவன்' உள்ளத்தை—நம் பண்டைத் தமிழகத்தின் பண்புகளை—தாய்த் தமிழின் உயிரோட்டத்தை அறிய வாய்ப்பு ஏற்படும் என எண்ணுகின்றேன்.

நான் ஒரு காங்கிரசுக்காரன். கடவுள் உண்மைக் கொள்கையில் அழுத்தமான பற்றுக்கொண்டவன். நாள்தோறும் சிவ பூசை செய்பவன். சிவச் சின்னங்களான, உருத்திராக்கம் அணிதல், திருநீற்றை நிறையப் பூசுதல், அம்மை அப்பனின் தோற்றமாக, நெற்றியில் சந்தனமும் குங்குமமும் சேர்ந்த, சற்றே பெரியதான பொட்டு இட்டுக்கொள்ளுதல் முதலிய புறச்சின்னங்களோடு என்றும் விளங்குபவன்.

நம் தமிழகத்தின்பாலும், அதன் தொன்மைச் சிறப்புமிக்க வரலாற்றின்பாலும் நம் தாய்த் தமிழின்பாலும் நன்றியுணர்ச்சியுடன் கூடிய பற்றும் கொண்டவன். இவற்றையெல்லாம் சொல்லுவது, என் விளம்பரத்திற்காகவன்று ; எடுததுக்கொண்ட கருத்தை இனிது விளக்குதற் பொருட்டேயாம்.

இக கட்டுரையின் நாயகர், பெரியவர், என் கெழுதகை நண்பர் காஞ்சி மணிமொழியார் அவர்களின் வாழ்க்கைக் குறிப்பைச் சிறிது நோக்கினல், புறப்பொருளில் வைத்து என்னேடு முற்றிலும் மாறுபடுகின்ற, தென துருவம், வட துருவம் போன்ற வேற்றுமை காணப்படுகின்றது என்றுலும் அன்பும் நண்பென்னும் நாடாச் சிறப்புமாகிய அகத்துறையில் நாங்கள் ஒரே துருவம். எங்கள அகப் பிணைப்பு பொய்யல்லவே! மெய் ஆயிற்றே? ஆம்; தமிழென்னும் உண்மைப் பொருள், "அறவிலை வணிகன் ஆய் அலன்" என்றும் தமிழனின், தமிழகத்தின், தாய்த் தமிழின், உயரிய, விரிந்த, தனிச் சிறப்புப்பெற்ற பண்பாடு, நண்பென்னும் நாடாச் சிறப்பினை ஈந்தது. இதுதான் அகத்துறையின் வித்தாக அமைந்துள்ளது. அன்பாக, ஆர்வமாக, நண்பென்னும் நாடாச் சிறப்பாக அமைந்துவிட்டது. 'மரத்தை மறைத்தது மாமதயானை. மரத்தில் மறைந்தது மாமதயானை" என்ற கூற்றுக்கு ஒப்ப, புறப்பொருள் மறைந்து, அகப்பொருள் மலர்ந்து, அன்பு மணம் கமழ்கின்றது.

1962-ம் ஆண்டில் தமிழகச் சட்ட மன்றத்திற்காக உள்ள தேர்தலில், காங்கிரசுக் கட்சியின் சார்பாக ஈரோட்டுத தொகுதியில் போட்டியிட்டு வெற்றியடைந்தேன். நான் முதன்முதலில் கூடிய சட்டமன்றக் கூட்டத்தில் கலந்துகொள்ளும் நோக்கத்தோடு, ஒரு நாள் மாலை என் கிராமத்து ஊரில் இருந்து புறப்பட்டு அண்மையில் உள்ள ஈரோடு நகரத்தை அடைந்தேன். அன்று இரவு புகைவண்டி நிலையத்திற்குப் போகுமுன், அரசியலில் புகழ்பெற்ற என் கட்சியைச் சார்ந்த ஒரு நண்பரைச் சந்திக்க நேர்ந்தது. அவர் சொன்னுர், "சட்டமன்றக் கூட்டத்தில் கலந்துகொள்ளப் போகிருய். ஆனல் உன் பழக்கவழக்கத்தை மாற்றிக்கொள்ள வேண்டும். இந்தத் திருநீற்றுப் பூச்சும், பொட்டுமாகப் பேரவைக்குள் சென்று உட்காருவாயானல், திராவிட முன்னேற்றக் கழகத்து உறுப்பினர்கள், "உன்னை ஏசுவார்கள், பேசுவார்கள், நகைப்பார்கள், உனக்கு மிகவும் அவமானமாகப் போகும்" என்ருர். அவர் நகைச் சுவைக்காகச் சொன்னுரோ, உண்மையாகச் சொன்னுரோ, அதை நான் அறியவில்லை. ஆனுலும் நான் சிறிதும் பொருட்படுத்தவில்லை. பேரவையில் நான் கலந்துகொண்ட முதல்நாள் தொடங்கி, கடைசிக் கூட்டம் வரை என்னை அன்போடும், பண்போடும், நேர்மையோடும் நேசித்தவர் பெரியவர் காஞ்சி மணிமொழியாரும், அவரைச் சார்ந்த திராவிட முன்னேற்றக் கழகத்து அன்பர்களுமாவார்கள் என்பதனையும், அதுபோன்றே நானும் உண்மை நண்பன் ஆனேன் என்பதையும் கூறிக்கொள்ளுகின்றேன். சட்ட மன்றததிலே நானும, இக்கட்டுரைத் தலைவரும், அவர்தம் தோழர்களும் எதிர் எதிராக அமர்ந்து "சொற்போர்" இட்டுக்கொண்டாலும், சொற்போருக்கு அடித்தளத்தில் "தாய்த்தமிழும்" "தமிழுக்கே உரித்தான "இலக்கியங்களும்", இவ்விலக்கியங்

களுக்கே உரித்தான "சில்வகை எழுத்தில், பல்வகைப் பொருளை, செவ்வன் ஆடியிற் செறித்து, இனிது விளக்கித் திட்ப நுட்பம் சிறந்தன சூத்திரம்" என்னும் வகையிலான உயர் கருத்துச் செறிவும், அந்தச் செறிவிலே காணும் இன்பமும் அழகும் எங்களை அறியாமல் இணைத்துவிட்டன. அன்புமலர்ந்த நண்பென்னும் நாடாச்சிறப்பு நிலைகொண்டது.

# இனிக்கும் இயல்புடையார்

க. இராமலிங்கம், எம்.எல்.ஏ.

திரு. காஞ்சி மணிமொழியார் என் நெடுநாளைய நண்பர். நினைக்க, இனிக்கும் இயல்புடையார். அன்பு கனியப்பழகும் பாங்கினர். அவரோடு உரையாடுவது, உவகை பெருக்கும், உணர்வளிக்கும்.

நம் அன்னை மொழியின் மாண்பினை, எதற்கும் விட்டுக் கொடுக்காத உறுதி பூண்டவர். மொழிக்கு ஏதேனும் இடர் என்றால், மடிதற்று முந்துறுவார். இந்தி அரக்கியின் இன்னலைத் தடுக்கச் சிறை செல்லவும் துணிந்தவர். தமிழுக்காகவும், தமிழருக்காகவும், தமது வாழ்க்கை நலங்களைத் துறந்து, பணிபுரிந்தவர் புரிகின்றவர்.

அவர்களது எழுபத்தொன்றாவது ஆண்டு பிறந்த நாளில் அவருக்கு என் நெஞ்சம் நிரம்பிய "பல்லாண்டு!" கூறுகிறேன். அவரினும் சிறிது மூத்தவன் நான, என்னும் நினைவு, அவரை வாயார வாழ்த்தும் துணிவு தருகிறது. அவரை எழுபத்தொரு அகவை எட்டும் 'கிழவர்' என்று எவராயினும் சொன்னாலும், அவரைப் பார்ப்பவர்கள் நம்ப மாட்டார்கள்.

என்றும் இளையவராக இருக்கும் மன நிறைவு கொண்டவராகிய அவர் தோற்றத்தாலும் இளையவராகவே விளங்குகின்றார். இப்படியே இன்னும் பன்னெடுங்காலம் நிலவி, நோயற்ற, நல உரமுற்ற மேனியுடன், மக்கள் நலம், பேரன் போத்தியர் நலங்களோடு, பல நலங்களும் நிரம்ப, பெருவாழ்வு வாழ்ந்து, நம் மொழிக்கும் நம்மவர்க்கும் தொண்டு புரிந்து வரவேண்டுமென திருவருள் திறத்தை நினைந்து இறைஞ்சுகிறேன்.



---

பெரியவர் காஞ்சி மணிமொழியார் அவர்கள் தமிழ்நாட்டின் வளர்ச்சிக்காகவும் தமிழனின் முன்னேற்றத்திற்காகவும், தமிழர் மானங் காப்பதற்காகவும், தாய்த் தமிழின் செழிப்பிற்காகவும், வளப்பத்திற்காகவும் தம் வாழ்க்கையின் மிகப் பெரும்பகுதியும் ஓயாது உழைத்தவர். அவர்தம் தமிழ்ப்பற்றுக்கு "காஞ்சி மணிமொழியார்" என்ற அவரது பெயரே சான்று பகர்கின்றது. சங்க இலக்கியங்களில் வருகின்ற கோவூர்க்கிழார், குடமோசியார் போன்ற தமிழகத்துப் பெரும் புலவர்களை நினைவு கூர்கிறது. பல நேரங்களில் சட்டமன்றக் கூட்டங்களில் இவர் பேசுகின்றபொழுது என்னை "சத்தியும் சிவமுமாய்க் காட்சி தருகின்ற ஈரோட்டுப் பெரியவர்" என்று அன்பாகச் சுட்டி அழைத்தது என் நினைவில் இன்றும் பசுமையாக உள்ளது. என்னிடத்தில் இவர் எதைக் கண்டாரோ நான் அறியேன். எத்தகைய அன்புப் பிணைப்பு எங்களுக்குள்! என் நினைவு அவர் உள்ளத்தில் ஆழ வேரூன்றியிராவிட்டால், பிறந்த நாள் விழாக் கட்டுரைக்கான கடிதம் எனக்குக்கிடைத்திருக்காதல்லவா? தமிழினம் சிறப்பாகவும், இந்திய நாடே பொதுவாகவும் போற்றுகின்ற—என்றும் போற்றப்போகின்ற மறைந்த மாமேதை அறிஞர் அண்ணா அவர்களின் கீழ், அந்தத் தமிழ்ப்பேரறிவின நிழலில் இருந்து, பல்லாயிரக்கணக்கான தொண்டர் குழாத்துடன், நம் தமிழகத்தின் சிறப்புக்காகவும், தாய்த் தமிழின வளப்பத்திற்காகவும், எல்லாவற்றிற்கும் மேலாக "மானம் அழிந்த பின் வாழாமை முன் இனிதே" என்ற தமிழ்க் கூற்றுப்படிக்கு, நம் மானத்தைக் காப்பதற்காகவும் "ஊழையும் உப்"பக்கம் காணும் வகையில் உழைத்து, நல்ல, நிலையான தமிழராட்சியை அமைக்க உதவிய தகைமை மிக்க மணிமொழியாருக்கு, அறிஞரை நினைவு கூர்ந்து, அண்ணா அவர்களை மனத்துள் அடக்கி பல்லாண்டு கூறுகின்றேன். இவர் போன்ற சிலருடைய நன்முயற்சியால், உழைப்பால், தமிழ் அறிஞர்கள், தமிழ்ப் புலவர்கள் ஆட்சிப்பீடத்தில் ஏறவும், எங்கும் தமிழே முழங்கவும், தமிழ்ப் பண்பே வளரவும் தமிழகத்துப் பண்டைய வரலாற்றுச் சிறப்புகள் மீண்டும் ஒளிவிடவும் ஆயின. அவை மேலும் புகழொடு நிலைபெறவும் வழிபிறக்கும் என எண்ணி, தமிழ்த்தாயை நினைவுகூர்ந்து இப்பெரியவருக்குப் பல்லாண்டு கூறுகின்றேன்—வாழ்த்துகின்றேன். வணக்கம். ✽

# மாணிக்கவாசகரும் மணிமொழியாரும்



ஜி. நடராச முதலியார், பி.ஏ., பி.எல்.

காஞ்சிமா நகரில் தொன்மைப் புகழ் பெற்ற சைவப் பெருங்குடியில் பிறந்து, பூசுவதும் வெண்ணீறு—பூண்பதுவும் உருத்திராக்கம்-இட்டிருப்பதும் சந்தனப் பொட்டு-கையில் பிடித்திருப்பதும் தேவாரம், திருவாசகம்—தலையில் வைத்திருப்பதும் உச்சிக் குடுமி என்று சிவ வேடப் பொலிவு உடையவராய், யான் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் பார்த்த மாணிக்க வாசகனா் இன்று வாழ்க்கையில் முன்னேறி திராவிட முன்னேற்றக் கழக துணைப் பொதுச் செயலாளராய் காஞ்சி மணிமொழியாராகத் திகழ்கின்றார்.

பெயருக்கேற்ப அந்நாளிலும் சரி, இந்நாளிலும் சரி அவருடைய எழுத்தும் வாக்கும் பேச்சும் மணி மணியாகத்தான் இருக்கின்றன. அத்தகைய இயற்கைப் பெயரின் பொருளைச் செயலளவில் நிரூபித்தவர் அவர் ஒருவர் என்றே சொல்லலாம். வாசகம் என்னும் வடசொல் 'மொழி' என்று மாறிற்றே தவிர, அவருடைய வாக்குத் திறமையும் பேச்சுத் திறமையும் எவ்விதத்திலும் மாறாமல் இன்றும் தலைசிறந்த, பொருள் செறிந்த கேட்போர் மனதை உருக்கும் பேச்சாகவே அவருடைய சொற்பொழிவுகள் அமைந்துள்ளன.

இளம் பருவம் முதற்கொண்டே காஞ்சிமா நகரில் அவர் கலந்து கொள்ளாத இயக்கம் கிடையாது. காஞ்சிமா நகரில் நீதிக்கட்சியின் ஆர்வம் மிகக இளைஞராகப் பணியாற்றி, பகுத்தறிவு இயக்கத்தில் பெரும் பங்கு கொண்டு சுயமரியாதை இயக்கத்தின் தூணாக விளங்கி திராவிடக் கழகத்தின முக்கிய இயக்குனராகி இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் தடியடிக்கு அஞ்சாமல் ஊர்வலங்கள் நடத்தி, மாநாடுகள் கூட்டி பலமுறை சிறை புகுந்து திராவிட முன்னேற்றக் கழகத்தில் ஆரம்பத்திலேயே அறிஞர் அண்ணாவுடன் சேர்ந்து இயக்கத்திற்காக உழைத்து உழைத்து இன்று துணைப் பொதுச் செயலாளராகப் பணியாற்றும் மணிமொழியார் தமது வாழ்க்கையைப் பொது நலனுக்காகவே அர்ப்பணித்தவர்.

தமிழறிஞர்கள் குடும்பத்தில் தோன்றிய மணிமொழியார், தமிழை வளர்ப்பதில் பேச்சளவில் மட்டும் அன்றி, செயலளவிலும் ஈடுபட்டவர். காஞ்சியில் கச்சிக் கலாவல்லித் தமிழ்ச் சங்கத்தையும், நூல் நிலையத்தையும் நாற்பதாண்டுகளுக்கு முன் தோற்றுவித்து இன்றுவரை தமிழுக்காக தமிழருக்காகத தோன்றிய இயக்கங்கள் எல்லாவற்றிலும் தீவிரமாகப் பங்கு கொண்டு உழைத்து வருபவர்.

தாம் பிறந்த குலத்தவரும் முன்னேற வேண்டும் என்று தமிழாசிரியர் பதவியைத் துறந்து, செங்குந்த மகாஜன சங்கத்தைத் தோற்றுவித்த வள்ளல் திருவாரூர் தி. நா. சபாபதி முதலியார் அழைப்பிற்கிணங்கி சமூக சேவையில் ஈடுபட்டு செங்குந்தர்கள் வதியும் கிராமங்கள் தோறும் போககுவரத்து வசதி குறைவாக இருந்த அந்தக் காலத்தில் கால்நடையாகவும் பலமைல்கள் நடந்து செங்குந்தர் குலமானது சமூகம், பொருளாதாரம், கல்வி ஆகிய துறைகளில் முன்னேறுவதற்காக நாற்பத்திஐந்து ஆண்டுகளாகப் பாடுபட்டவர். 'செங்குந்த மித்திரனை, ஆரம்பித்துப் பல ஆண்டுகளாக அதன் ஆசிரியராக இருந்து உழைத்தவர். இன்றும செங்குந்த மகாஜன சங்கமும், செங்குந்த மித்திரனும் வளர்ச்சியடையவும் உழைத்ததோடு நில்லாது வள்ளல் சபாபதி முதலியார் மாணவரில்லம் கட்டி முடிப்பதற்காகப் பெரும்பாடுபட்டு வருகின்றவர்.

மணிமொழியாரின் பொதுச் சேவைகள் பற்பல. அவர்கள் கலந்துகொண்ட—கலந்து கொண்டிருக்கும் இயக்கங்கள் பற்பல. அவை களை விரிக்கின் பெருகும். எனவே அவர் தனக்கென வாழாமல், பிறர்க்கென்றே வாழப் பிறந்தவர் என்று சுருங்கச் சொல்வதே பொருத்தமாகும். பொது நல சேவைக்கே தம் வாழ்க்கையை அர்ப்பணித்தவர்.

தாம் சேவை செய்யும் இயக்கங்களில் எல்லாம் அவருடைய சிறந்த சேவைக்குப் பரிசாக வழங்கப்பட்ட செயலாளர் பதவிகளை ஏற்றுத் திறம்பட நிர்வகித்துப் பணியாற்றியவர். தன்னைத் தொண்டனுகவே என்றும் கருதுபவர். யானும் அவரும் சேர்ந்து பணியாற்றிய தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்திலும், சென்னை பிற்பட்ட வகுப்பினர் கழகத்திலும் அவர் செயலாளராகவே பல ஆண்டுகள் இருந்தார். தலைமைப் பதவியை மறுப்பவர். முப்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பிற்பட்ட வகுபபினர் கழகத்தில் செயலாளராக இருந்து இப்போது தலைமைப் பதவி அவர்மேல் திணிக்கப்பட்டதால் வேறு வழியின்று அதை ஏற்றுக் கொண்டிருக்கின்றுா.

தனிப்பட்ட வாழ்க்கையில் என்றும் எளிய, ஆனுல் தூய்மையான வாழ்க்கையை நடத்துபவர். செல்வம் வந்துற்ற காலையும் செருக்கு இன்றி எளிய வாழ்க்கையையே பின்பற்றி நடத்துபவர். ஆடம்பரத்தை அறவே வெறுப்பவர். ஆக்கப்பணியை என்றும் விரும்புபவர். உடல் நலனுக்குக் கெடுதலான காபி, டீ முதலிய பானங்களை என்றுமே வெறுப்பவர். பிடிவாதமாக அவற்றை உட்கொள்ள மறுப்பவர். எழுபது வயதாயினும் அவர் வாலிபரின் உடல் தோற்றத்துடனும் நலத்துடனும் இருப்பதற்கு அவரது பிடிவாதமான ஆனுல், நல்ல முறையில் வகுத்துக்கொண்ட உணவுக் கொள்கையும், எளிய வாழ்க்கை முறையுமே காரணம் ஆகும்.

இறைவனருளால், நல்லோர்கள், ஆன்ருேர்கள், சுற்றத்தினர், நட்பினர் இவர்கள் நலவாழ்த்துக்களினுல், மணிமொழியார் மேன் மேலும் நல்ல உடல் நலனுடன் பல்லாண்டு பல்லாண்டு இருந்து மேன் மேலும் பொதுநலத் தொண்டு செய்வாராக. அவரது மனைவியும் மக்களும் சுற்றமும் இனிதே வாழ்வார்களாக.

# வாழ்வாங்கு வாழ்ந்து வழிகாட்டும் பெரியவர்

அடிகளார்
(ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்,
திருப்பாதிரிப்புலியூர்.)

செப்பரும் பெருமைசேர் ஒப்பருந் தமிழன்னை, அரியணை வீற்றிருக்குமாறு இந்நாளில் தொண்டு புரிந்தோருள் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத உயர்வு, நம் காஞ்சி மணிமொழியாருக்கு உண்டு. சிறு பருவ முதலாகவே மொழிப்பற்றும், உரிமைப்பற்றுங் கொண்டு, அரை நூற்றுண்டுக்கு மேலாக நாட்டுக்கும் மொழிக்கும் அயராது உழைதது வரும் நம் மணிமொழியார் இன்று எழுப தாண்டைக் கடக்கிருர் என்பதால், அவருக்கு வழங்கும் பாராட்டு நம் நாட்டுக்கும் மொழிக்கும் வழங்குவதேயாகும்.

வையத்துள் வாழ்வாங்கு வாழும் வகையைத் தன் பின் வருவோர்க் கெல்லாம் வாழ்ந்து வழிகாட்டும் பெருமை, நம் மணிமொழியார்க்கு உண்டு.

செந்தமிழும், சைவமும் முந்துற விளங்க அருந்தொண்டினை மேற்கொண்டு, வடவேங்கடம், தென்குமரி ஆயிடை சிவிகையூர்ந்து, மக்களைத் தமிழ்ப்பற்று கொண்டு விளங்கச் செய்த இம்மடாலய ஐந்தாங் குருநாதர், ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளுடைய திருவருளுக்கு நம் மணிமொழியாரின பெற்றேர், தமையன்மார், உறவினர், மணிமொழியார் ஆகியோரும் பாத்திரமானவர்கள். அவருக்குத் தாய்மொழியிடம் அளவிலாப பற்று எழுந்ததற்கே காரணம் அடிகளாரது சொற்பொழிவு முதலிய வெனல் மிகைக் கூற்றன்று.

மணிமொழியாருடைய தொண்டுள்ளமும், நாடு, மொழிப் பற்றுகளும் பினவரும் இளைஞர்க்கு நல் வழிகாட்டிகளாகும்.

வாழ்க அவர்தம் தொண்டு! வாழ்க அவர் தம் ஊக்கம். வாழ்க அவர்தம் சுற்றம்! வாழ்க அத் தீந்தமிழ்த் தொண்டர்!






கே. கோவிந்தசாமி,

(சென்னை மாவட்ட தி. மு. கழக முதல் செயலாளர்.)

மதிப்பிற்குரிய உயர்திரு. மணிமொழியார் அவர்களை சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகவே நான் அறிவேன்.

## 1. அவர் காட்டிய குடும்ப பாசம்

குடும்ப பாசத்துடனேயே நாங்கள் பழகி வந்தோம். தனது குடும்பத்தாருடன் அவர் என்னை அறிமுகம் செய்து வைக்கும்போது தனது குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர், பல ஆண்டுகளுக்குப் பிறகு திரும்பிவந்தால் ஏற்படுகின்ற உற்சாகப் பெருக்கையொத்த களிப்பு அவரிடம் தென்படும்.

திராவிடக்கழகத்திலும் சரி, திராவிட முன்னேற்றக் கழகத்திலும் சரி முக்கியமான கூட்டங்களில் அன்பர் மணிமொழியார் அவர்களது ஆலோசனைகளை நான் கேட்காமல் இருந்ததில்லை. நிதானமாக ஆழ்ந்து சிந்தித்துக் கூறுகின்ற அறிவுரைகள் எனது கழகப்பணியை மேலும் ஊக்குவிக்கும். முக்கிய பொறுப்புகளை நான் ஏற்றிருந்தவரை, நாங்கள் இணைந்து ஈடுபடாத கழக நிகழ்ச்சிகளே இல்லை.

## 2. சு. ம. படைக்கலம் ஒன்றாக ஆக்கினார்

அவர் ஆசிரியராக இருந்து பணி ஆற்றிய செங்குந்தமித்திரனின் தலையங்கங்கள் என்னைப் பெரிதும் கவர்ந்தன. புரட்சிகர சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களை அவர் அஞ்சாமல் வாரி வழங்கிவந்தார். சுயமரியாதை இயக்கத்தின் படைக்கலங்களில் ஒன்றாக அப்பத்திரிக்கையை பவனிவரச் செய்தார்.

## 3. காவலர் கலங்கினர்

இந்தி எதிர்ப்புப் போராட்டங்களில் அவர் ஆற்றிய பணி மெய் சிலிர்க்கதக்கதாக இருந்தன. திரு. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் கோட்டை ஸ்டேஷன் அருகே ஒய். எம். சி. ஏ. சிறுவர்கள் நகர் திறப்பு விழாவிற்காக 1950–ம் ஆண்டு ஒருநாள் காலை 9 மணிக்கு வருகை தந்தார். திராவிட முன்னேற்றக் கழகம் அவருக்குக் கருப்புக் கொடி வரவேற்புத்தர இருந்தது. கழகத்தின் மாவட்டச் செயலாளன் என்ற முறையில் கழகத் தோழர்களை சரியாக 8-30 மணிக்கு குறிப்பிட்ட இடத்தில் கருப்புக் கொடியுடன் கூடச்சொல்லி வேண்டுகோள் விடுத்திருந்தேன். ஆனால் துடிப்பும், ஆர்வமும் மிகுந்த நண்பர்கள் 7-30 மணிக்கெல்லாம் அங்கு கூடிவிட்டார்கள்.

இது போலீசாருக்கு, முன்கூட்டியே கூட்டத்தைக் கலைப்பதற்குப் போதுமான அவகாசம் தந்துவிட்டது. ரிசர்வ் போலீஸ் படை, எஸ். ஏ. பி., குதிரைப்படை இவைகளைக் கொண்டு நமது தோழர்களை ஈவுஇரக்கமின்றி அடித்தும் மிதித்தும் நொறுக்கி சின்னாபின்னப்படுத்தி விட்டார்கள். இத்தாக்குதலில் மிகவும் பாதிக்கப்பட்டவர் மதிப்பிற்குரிய நண்பர் பன்மொழிப்புலவரே யாவர். கருப்புக்கொடி நிகழ்ச்சி தோல்வியடைந்துவிட்டதாக போலீசார் எக்காளமிட்டுக்கொண்டிருந்தனர். போர்க்களம் வெறிச்சோடியிருந்தது. நடந்ததையறியாத நான் எதார்த்தமாக 8-15 மணிக்கு கருப்புக்கொடி

நிகழ்ச்சி நடக்க வேண்டிய களத்திற்கு வந்தேன். போலீசார் என்னைத் தடுத்தனர். மீறிச் சென்றேன். ஆஜானுபாகுவான ஒரு போலீஸ் சப்—இன்ஸ்பெக்டர் குண்டாந்தடியுடன் ஓடிவந்து என்னைத் தாக்க முனைந்தார். அவர்கள் செய்த அநீதிக்கு நான் விளக்கம் கேட்டேன். தலைக்கு மேலே குண்டாந்தடி எனக்கு பதில் சொல்ல முனைந்தது. அதே சமயத்தில் கருப்புக்கொடி பிடித்து போர்க் கோலம் பூண்டுவந்தார் மன்னர் மணிமொழியார். திடீரென்று எங்கு நோக்கினும் கருப்புக்கொடிகள் ஆயிரக்கணக்கில் தென்படலாயின. களிப்புக்கடலில் மூழ்கியிருந்த காவலர்கள், கதிகலங்கிப் போனர்கள். நானும் மணிமொழியார் அவர்களும், டி. எம். பார்த்தசாரதி அவர்களும் கைது செய்யப்பட்டோம். கடுமையான தடியடிப் பிரயோகத்தை ஏற்று கருப்புக்கொடி நிகழ்ச்சி வெற்றிவாகை சூடியது. அன்று மாலை மதராஸ், மெயில் போன்ற தினசரி ஏடுகளில் *"The D. M. K. agitation was similar to that of The Revilla warfare of the Chinese".* தி. மு. க. போராட்டம், சீனர்களின் கொரில்லா போருக்கு இணையாக இருந்தது என்று எழுதியிருந்தது. இந்த வெற்றியைத் தேடித்தந்தது மணிமொழியாரின் வீரச் செயலேயாகும்.

## 4. குவலயம் போற்றிய குறள் மாநாடு

1949-ம் ஆண்டு ஓா இரவு நானும் நண்பர் என். வி. நடராசன் அவர்களும் சென்னை பெரியார் மாளிகையில் பெரியாரிடம் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தோம். அவ்வமயம் குறளைப்பற்றியும், வள்ளுவரைப் பற்றியும் கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டோம் 'திருக்குறள் சொற்பொழிவு, பெரியார் பேசுவார்; அனுமதிக்கட்டணம் 8 அணு' என்று ஏதாவதொரு ஹாலில் கூட்டம் போட்டால் நிறைய வசூலாகும் என்று பெரியாரிடம் நாங்கள தெரிவித்தோம். 'அது பெரிய சங்கதி; தப்பும் தவறுமாக நான் கூறிவிடுவேன்; பண்டிதர்களும், புலவர்களும் என்னை விடமாட்டார்கள்; அவர்களுக்குப் பதில் சொல்லியாக வேண்டும்' என்று பெரியார் தெரிவித்தார். "எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும், அப்பொருள் மெய்ப் பொருள் காண்பது அறிவு" என்று குறள் கூறுகிறது ஐயா என்றேன் நான்.

சரி, திருக்குறள்பற்றி பொதுக்கூட்டம் போடலாம்; பொதுக்கூட்டம் என்ன, குறள் மகாநாடே போட்டுவிடலாம்' என்ற பெரியார் அவர்கள், சிறிது யோசித்து இத்தகைய மாநாடு என்றால் அதற்குச் சரியான பொருப்பாளர் தேவை. காஞ்சி மணிமொழியாரிடம் அந்தப்பொறுப்பை ஒப்புவிக்கலாம் என்றிருக்கின்றேன். நாளை அவரை அழைத்து வாருங்கள் என்றார். மறுநாள் அவரை அழைத்துச் சென்று பெரியாரை சந்திக்கச் செய்தோம். திருக்குறள் மாநாட்டின் முழுபொறுப்பையும் மணிமொழியார் ஏற்றுக்கொண்டு பாவலர் எஸ். எஸ். அப்துல்காதர் அவர்களின் உறுதுணையோடு சென்னை பிராட்வேயில் மிகச் சிறப்பாகவும், வெற்றிகரமாகவும், பார்த்தவர்கள் எல்லோரும் பிரமிக்கத்தக்க வகையிலும் நடத்திக் காண்பித்தார்.

திருக்குறள் இன்று உலகில் வெகுவாக சிறப்பிக்கப்படுவதற்கும், புகழப்படுவதற்கும் முதற் கருவியாக இருந்தது, இந்த மாநாடு தான். குடத்தினுள் விளக்காக இருந்த திருக்குறள், இம்மாநாட்டுக்குப் பின்புதான் குன்றின்மேல் விளக்காக மாறியது. இந்த நிலையை உருவாக்கிய பெருமையில் திரு. மணிமொழியார் அவர்களுக்கு மிகப் பெரும் பங்கு உண்டு.

## 5. திராவிட இயக்கச் சொத்து

பல மேதைகளுக்கு அவர் ஆசிரியராகவும், இளைஞர்களுக்குப் பகுத்தறிவையூட்டி தலை நிமிரச் செய்த தலைவராகவும் அவர் விளங்குகிறார்.

அவரது குடும்பமே திராவிட இயக்கத்தின் சொத்து கண்ணீர்த்துளிகளை உதிர்த்துக் கலங்கிய உள்ளத்தோடு, அறிஞர் அண்ணா அவர்களின் அரவணைபபுடன் உருவாக்கப்பட்ட திராவிட முன்னேற்றக் கழகம் இன்று அஞ்சாநெஞ்சத்துடன் அறியாசனம் ஏறியிருக்கின்றது. இதைத் தொடங்க முன்னணியில் நின்றதோடு, கட்டிக்காத்த கடமை வழுவாத சிங்க ஏறுக இருப்பவர் காஞ்சி தந்த மணிமொழியார் ஆவார். அவர் இன்று துணைப் பொதுச் செயலாளர் பொறுப்பினை ஏற்றிருக்கின்றார் என்பதையறிந்து நான் பெருமகிழ்வெய்துகின்றேன். கழகத்திற்கு இந்த அனுபவமிக்க மேதையின் நிர்வாகம், மிக்க பொருத்தமானதாகும் ஆண்டுகள் அவருக்கு எழுபது கடக்கின்றது என்றாலும், காலத்தால் அவரது இளமையைப் பறிக்க இயலவில்லை. என்றும் அவர் துடிப்புள்ள இளைஞர்தான். வாழ்க மணிமொழியார்! இன்னும் பல்லாண்டுகள் அவர் வாழட்டும், என்றும் இளைஞராக.



# தன்னலம் துறந்த தனி மகன்

எம். கல்யாணசுந்தரம்

(இந்திய கம்யூனிஸ்டு கட்சி தமிழ்நாடு மாநிலக் குழு செயலாளர்.)

நண்பர் காஞ்சி மணிமொழியார் அவர்கள் 70 ஆண்டுகள் நிரம்பி 71வது ஆண்டில் அடி எடுத்து வைப்பதை முன்னிட்டு பிறந்த நாள் விழா, சிறப்பாகக் கொண்டாட முன் வந்துள்ள நணபர்கள் அனைவருக்கும் எனது நன்றி.

காஞ்சி மணிமொழியார் அவர்களோடு நெருங்கிப்பழக எனக்கு வாய்ப்பு அதிகம் ஏற்பட்டதில்லை. அவர் ஈடுபட்ட இயக்கம் வேறு, நான் ஈடுபட்ட இயக்கம் வேறு. சட்ட மன்றத்தில் அவரும் நானும் ஐந்தாண்டு காலம் பணிபுரிந்த பொழுதுதான் அவரைப் பற்றி நான் புரிந்துகொள்ள வாய்ப்பு ஏற்பட்டது. நிதானமும், அடக்கமும் உருவாகக் கொண்ட பெரியவர். கொள்கைப்பற்றும், கழகப் பற்றும் நிறைந்தவர்.

கழகத்தின் நண்பர் ஒருவருக்கு இடம் கொடுக்கவேண்டும் என்பதற்காகத் தன்னுடைய தொகுதியை மனம் உவந்து விட்டுக்கொடுத்து. தன் நலனைக் காட்டிலும் தான் சார்ந்துள்ள கழகத்தின் நலன் பெரிது என்பதற்கு முன்னுதாரணமாக நின்றவர்.

ஆடம்பர அரசியலும், போலி விளம்பரங்களும் உண்மை ஊழியர்களை மறைத்து விட முடியாது என்பதற்கு இந்தப் பெரியவரின் விழா சான்றாகும்.

நண்பர் மணிமொழியார் அவர்களைப் பாராட்டுவதில் உண்மைத் தொண்டைப் பாராட்டுகின்ற பெருமையும், மகிழ்ச்சியும் அடைகின்றேன்.






இளமை, உழைப்பு, தொண்டு என்ற மூன்றின் நினைவு காஞ்சி மணிமொழியார் அவர்களை நினைக்கும்பொழுது வாராமற் போகாது. எழுபது ஆண்டுகள் இவருக்கு நடந்து முடிந்துவிட்டது என்பது வியப்பிற் குரிய செய்தி. இளமையோடும் துடிப்போடும் பொலிவோடும் வலிவோடும் அயராது உழைத்துவரும் இளைஞராகவே இவர் இன்றும் காட்சி தருகின்றார். எழில் தவழும் இளமையும், அயராத உழைப்பும், குன்றாத தொண்டுள்ளமும் இவருடைய சொத்துக் களாகும்.

9-5-19-ல் கல்வியிற் கரையிலா காஞ்சி மாநகரிற் பிறந்த இப்பெருமகனார், பல துறை களிலும் பாங்குறப் பணியாற்றியுள்ளார். தொடக்க நாள் முதலே தமிழில் தணியாத ஆர்வங் கொண்டவராய் விளங்கினார். இருபது வயது முடிந்த நிலையில் தொடக்கப் பள்ளியொன்று தொடங்கி ஒன்பது ஆண்டு கள் நடத்தியது, கல்விப் பணியில் இவர் கொண்டுள்ள கருத்தினை விளக்குவதாகும். ஏறத்தாழ ஆறு ஆண்டுகள் தமிழாசிரிய ராகப் பணியாற்றி நல்ல மாணவர்களை நாட்டுக்குத் தந்துள்ளார்.

இவருடைய பத்திரிகைத் தொண்டு பாராட்டற் பாலது. 'பாரதம்' முதல் 'போர்வாள்' வரை அப் பட்டியல் நீளு கின்றது. 1937 ஆம் ஆண்டில் பேரறிஞர் அண்ணா அவர்களை ஆசிரியராகக் கொண்டு 'நவயுகம்' என்னும் வார ஏட்டினைத்தொடங்கி நடத்தினார்.

இந்தி எதிர்ப்பு, அடிநாள் முதல் இவர் மூச்சாக இருந்தது. பிற்பட்ட சமூகத்திற்கு இவர் ஆற்றியதொண்டுகள் அளப்பில. எளிய நெசவுத்தொழிலில் ஈடுபட்டு வாழ்ந்துவரும் இருபது லட்சம் மக்களுக்கு மேற்பட்ட இன மான கைக்கோளர் என்னும் செங்குந்தர் இன மக்களுக்கு இவர் ஆற்றியுள்ள—ஆற்றிவரும் தொண்டுகள் மிகப் பலவாகும். அச்சமூகம் இவர்பால் என்றும் நன்றி பாராட்டக் கட மைப்பட்டுள்ள நிலையினை உள்ளடக்கிய இப் பணி தொடர்ந்துவருவது சிறப்புடைத் தாகும்.

தொடக்க நாளில் நீதிக்கட்சியிலும், பின் னர்த் திராவிடக் கழகத்திலும், அதன் பின் னர்த் திராவிட முன்னேற்றக் கழகத்திலும் திறம்படப் பல பொறுப்புக்களை வகித்த இவர், இன்று தி. மு. கழகத் துணைப் பொதுச் செயலாளராகப் பணியாற்றி வருகிறார்கள். செய்வன திருந்தச் செய்யும் ஆற்றல் பெற் றவர் இவர். எளிமையான தோற்றமும், இனிய ஒழுகலாறுகளும், நேர்மையுள்ளமும், நெருங்கிய நட்பும் இவரிடம் காணக்கூடிய வைகளாகும். தமிழ் இலக்கியத்தில் ஆராத காதல் இவருக்குண்டு. ஏழை எளியவர்க்கு இரங்கியுதவும் நெஞ்சங்கொண்டவர். ஆறு முறை நாட்டிற்காகவும் மொழிக்காகவும் சிறை சென்றவர்.

பொதுப்பணியில் ஐம்பதாண்டுகள் அய ராது உழைத்த இவர் இன்னும் பல்லாண்டு கள் பாலாற்று மணலினும் பலவாய் வகை யுற வாழ்ந்து நாட்டிற்கும் மொழிக்கும் நற் றொண்டினை மேலும் ஆற்றுவாராக. வாழ்க காஞ்சி மணிமொழியார்! வளர்க அவர்கள் தொண்டு.

O

# நான் பெற்ற பேறு

பத்மன் செல்லப்பன் (மக்கள் பணி ஆசிரியர்)

தாய்க்குலம் போற்றும் தனயன், தாய் நாடு காக்கும் தமிழன், அஞ்சுகத் தாய் பெற்றெடுத்த அருமைமகன்-அண்ணா அரவணைப்பில் வளர்ந்த தம்பி கலைஞர் மு. கருணாநிதி அவர்களால் மகுடம் தரப்பட்டு 1948-ஆம் ஆண்டு தஞ்சையிலிருந்து வெளிவந்த ஏடு "தீ."

தஞ்சை வெற்றிவேல் அச்சகத்தில் அச்சிடப்பட்டு முறையாக வெளிவந்து கொண்டிருந்த திராவிட வார ஏடான "தீ" ஆத்திக நண்பர்கள் உள்ளத்தில் ஏனோ தீ மூட்டியது. அந்த ஏடு வெளிவருவதை அவர்கள் விரும்பவில்லை. வெறுத்தனர்; முட்டுக்கட்டை இட முனைந்தனர்; வெற்றியும் கண்டனர்.

தஞ்சை பெரிய கோவில் தர்மகர்த்தாவான திரு. பக்கிரிசாமி (பிள்ளை) வெற்றிவேல் அச்சகத்தின் உரிமையாளர். அவர் மெய்யன்பர்-அறநெறிக் காவலர்-ஆத்திக அன்பர் என்று தஞ்சை மக்களால் கொண்டாடப்பட்டவர். அவரை அணுகி ஆத்திக அன்பர்கள் திராவிட ஏடான "தீ" வெற்றிவேல் அச்சகத்திலிருந்து வெளிவரக் கூடாது-அபசாரமான காரியம்-அடாத செயல் என்று விளக்கம் கூறி அச்சக உரிமையாளரது மனம் மாறுதல் அடையும்படிச் செய்து விட்டனர்.

"தீ" அணைந்துவிட்டது-இனி எரியாது என்ற சுவரொட்டிகள் சுவர்களில் ஒட்டப்பட்டன. "தீ" ஏட்டை, தஞ்சையில் நடத்தாதே என்று பயமுறுத்தும் அஞ்சல்கள் எண்ணிக்கையில் அடங்காது தினம் "தீ" அலுவலகத்திற்கு வந்து கொண்டிருந்தன.

வெற்றிவேல் அச்சகத்தின் உரிமையாளர் என்னை அணுகி சூழ்நிலையை விளக்கி அச்சகத்தை மாற்றிக் கொள்ளும்படி அன்புக் கட்டளை பிறப்பித்தார். அச்சகத்தின் கூட்டுறவில்லாமல் எந்த ஏட்டையும் குறித்த நேரத்தில் வெளியிட முடியாது என்ற உண்மையை உணர்ந்த நானும், அவகாசம் கேட்டுக்கொண்டு தஞ்சையை விட்டு சென்னையை நாடி-கழகக் காவலர்களில் ஒருவரான திரு. காஞ்சி மணிமொழியாரிடம் விளக்கம் கூறி ஆதரவு தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டேன். அவரும் ஆவன செய்வதாக உறுதி கூறியதுடன், அச்சடித்து தர அனுமதியும் பெற்றார். ஒரு சில வாரங்கள் "தீ" அலுவலகம் தஞ்சையிலும், அச்சடிப்பது மட்டும் காஞ்சி மணிமொழியாரது "பிரீ பிரண்டர்ஸி"லும் நடைபெற்றது.

"தீ" ஒருவாரம்கூட நிற்காது வெளிவர பக்கத் துணையாக இருந்த திரு. காஞ்சி மணிமொழியாருக்கு என் நன்றி என்றும் உரித்தாகுக.

"தீ" பேரறிஞர் அண்ணா அவர்களால் நிறுவப்பட்ட தி. மு. கழக ஏடாக ஐந்தாண்டுகள் வெளிவந்தன. தொடர்ந்து அச்சிடும் பொறுப்பினைத் திரு. மணிமொழியார் அவர்கள் ஏற்று தக்க கூட்டுறவைத் தந்து ஆதரித்து வந்தார்-ஏடு முறையாக வெளிவந்தது அவருடைய அன்பான உதவியினால். "தீ" வெளியிடும்போது திரு. மணிமொழியாருடன் பழகும் வாய்ப்பினைப் பெற்றேன். அத்துடன் என் திருமணத்தையும் அவர் அருகில் இருந்து நடத்தித் தந்தார். வழிகாட்டியானார். அவர் நட்பு கிடைத்ததை நான் பெற்ற பேறாகவே கருதுகிறேன்.

திரு. காஞ்சி மணிமொழியாரிடம் தெரிந்து கொள்ளவேண்டிய அறிவுப் பாடங்கள் எண்ணிக்கையில் அடங்கா. வானென உயர்ந்தும், கடலெனப் பரந்தும் பேசும் பெரும் பேச்சாளர்களில் ஒரு சிலரைத் தவிர, மற்றவர் சொல்லுடன் செயலில் நடப்பதில்லை. காஞ்சி மணிமொழியார் அவர்கள் சொல்லுவதுபோல் நடத்தையில் நடப்பவர். நான் பார்த்த நாள் முதல் இந்நாள்வரை இளமை குன்றாது இருந்துவரும் திரு. காஞ்சி மொழியார் ஆடம்பர வாழ்க்கையை வெறுப்பவர்-பாட்டாளிகளின் கூட்டாளி-பகுத்தறிவுச் செம்மல்-எளிமையை விரும்பும் உழைப்பாளி-இளைஞர்கள் அனைவரும் பின்பற்றத்தக்க சிறந்த வழிகாட்டி.

என்றும் வாலிபமாக இருந்துவரும் இவர் தனது வாலிபம் நிலைத்து நிற்க, காய கல்பம்

(அடுத்த பக்கம் பார்க்க)




நண்பர் உயர்திரு. காஞ்சி மணிமொழியார் அவர்கள் எழுபதாம் ஆண்டு நிறைவு விழா நடைபெறுவது கேட்டு மிகமிக மகிழ்வெய்துகிறேன்.

காஞ்சி மணிமொழியார் அவர்கள் கச்சிப்பதியில் பெருநகர் செங்கல்வராய முதலியார் அவர்கட்கும், கற்புமிக்க அரசாலை யம்மையார் அவர்கட்கும் 1900 ஆண்டு மே திங்கள் 9–ஆம் நாளில் "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்னும் பொய்யாமொழிக் கிணங்க பிறந்து காஞ்சிப்பதியில் உள்ள பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் ஆங்கிலமும், அருந்தமிழும் பயின்று சிறந்து தற்போது எல்லாம்வல்ல இறைவன் திருவருளால் எழுபதாண்டு நிறையப்பெற்று எல்லா நலன்களையும்குறைவறப்பெற்றுள்ளார். அவர்களை வாழ்க, வாழ்கவென மனமொழி மெய்களால் வாழ்த்துகின்றேன்.

அவர்கள் பிறந்த செங்குந்த குலத்திற்குச் சிறப்பாகவும், தமிழ் மக்களுக்குப் பொதுவாகவும் தம்வாழ்நாளை அர்ப்பணித்துத் தொண்டு புரிந்துள்ளார்கள். அவர்களை ஏறக்குறைய நாற்பதாண்டுகளாகத் தெரிந்துள்ளேன்.

1927–ஆம் ஆண்டில் சென்னையில் தோற்றி வைக்கப்பெற்ற தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் இயக்குனராகவும், அமைச்சராகவும், செங்குந்தமித்திரன் ஆசிரியராகவும், அச்சக மேலாளராகவும் இருந்து செங்குந்தர்கள் வதியும் தமிழ் நாட்டின் சிற்றூர், பேரூர்களிலும் கடல்கடந்து யாழ்ப்பாணம் முதலிய இடங்களிலும் சென்று கல்வியிற் பிற்போக்குடைய செங்குந்த குல மக்கள் உறக்கத்தினின்றும் விழிப்படைய சொற்பொழிவுகளை நிகழ்த்தி ஒன்றுபடும்படி செய்த பெருமை அவர்களுக்கே உரியதாகும். மணிமொழியார் அவர்கள் மனம்தளராது குல முன்னேற்றத்திற்குத் தொண்டு புரிந்துவந்ததோடு, திராவிட முன்னேற்றக் கழகத்தின் துணைப் பொதுச் செயலாளராக ஆற்றிவரும் பணி எல்லோராலும் பாராட்டத்தக்கதாகும். அப்பெரியாரது மூத்தமகன் திரு. இளஞ்செழியன், எம். ஏ. பட்டம் பெற்று காஞ்சிமாநகரத்தில் உள்ள பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரியராகப்பணிபுரிந்து வருகின்றார்கள். இளையமகன் திரு நடராஜன் அவர்கள் பி. எஸ்.ஸி. பட்டம் பெற்று விளங்குகின்றார்கள். ஒரேமகள் தமிழ்ச்செல்வி பி ஏ.பி டி. பட்டம் பெற்றுள்ளார்கள். காஞ்சிப் பெரியாரான இவருடைய வீட்டரசியார் திருமதி. அபிராமி அம்மாள் அவர்களும் குலத்தொண்டில் ஈடுபாடு உடையவர்களாய் குல மாநாடுகளில் நடைபெற்ற மாதர் மாநாட்டிற்குத் தலைமையேற்றுப் பெருந்தொண்டு புரிந்துள்ளார்கள் என்பதை மறக்கமுடியாது. மணிமொழியாரின் குடும்பமே ஒரு அறிவுக் கோயிலாகவும், தொண்டர் கூடாரமாகவும் விளங்கி வருகிறது.

1962–ல் தமிழ் நாட்டில் நடந்த சட்டமன்றத் தேர்தலில் தியாகராயநகர்த் தொகுதியில் கழக வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பெற்று பெரும்பணி புரிந்துள்ளார்கள்.

இத்தகைய சிறப்புடைய பெரியார் அவர்கள் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்னும் வேலிக்குட்பட்டுத் தொண்டாற்றி வருகின்றார்கள். அவர்கள், இறைவன் திருவருளால் நோயற்ற யாக்கையும், குறைவற்ற செல்வமும், நீண்ட ஆயுளும் பெற்று எண்பதாண்டு முத்து விழாவும், நூறாண்டு பெருவிழாவும் பெற்று சிறந்தோங்கி வாழ்க, வாழ்கவென வாழ்த்துகின்றேன்.

மாண்புமிகு மணிமொழியார் வாழ்க!

O

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

உண்டதில்லை-மடாதிபதிகள் போல் தங்க பஸ்பம்-தங்கத்தகடு உணவாக உண்பதில்லை. என்றும் வாலிபமாக இருக்க என்ன செய்கிறார் என்ற கேள்வியை எழுப்பினால் தீய பழக்கமில்லாது ஒழுக்கமாக இருக்கிறார்-நடக்கிறார்—மகிழ்ச்சியோடு பொதுப்பணியாற்றுகிறார். இவைகளே முதுமையை விரட்டும் மாமருந்துகளாக உள்ளன என்றே கூறலாம்.

கழகமே உயிர்-கடமையே உயிர் மூச்சாகக் கருதி அயராது தொண்டாற்றிவரும் தி. மு. கழகத் துணைப் பொதுச் செயலாளர் திரு. காஞ்சிமணிமொழியார் கடமை கண்ணியம் கட்டுப்பாடு இம் மூன்றும்-உடமை என்று அறிவாய் தம்பி! என்று சொன்ன பேரறிஞர் அண்ணா அவர்களின் அருளால் என்றும் வாலிபராக இருந்து நீடு வாழ்வாராக.







# இதயம் கவர்ந்தவர்

திராவிட முன்னேற்றக் கழகத்தின் துணைப் பொதுச்செயலாளர் காஞ்சி மணிமொழியார் அவர்களைத் தெரியாதவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள். தி. மு. கழகத்தின் தூண்களில் ஒருவர். தமிழ் மொழியையும், கழகத்தையும் தம் கண்ணின் இரு விழிகள் எனக் கருதி வளர்த்துப் பெருமை பெற்றவர். பொதுவாழ்க்கையில் பணி பல புரிந்து நீங் காப்புகழ் கொண்டவர். கொண்ட கொள்கையில் நம்பிக்கையும், ஏற்றுக்கொண்ட பொறுப்பில் இருந்து பின்வாங்காத தன்மையும், செய்யும் செயலை சிறப்பாகச் செய்து முடிக்கும் திறமையும், நேர்மையும் நிறைந்த பெருந்தகையாளர்.

'இளமையில் கல்' என்ற இலக்கணத்துக்கு ஏற்ப இவர் இளம் வயதில் கற்கவேண்டியவைகளை முறையோடு கற்றார். உயர்நிலைப் பள்ளியில் பத்தாவது வகுப்பு படிக்கும்போதே சர். பி. தியாகராயர் வாசகசாலையைத் தொடங்கி நடத்தி காஞ்சி நகர மக்களால் பாராட்டுப் பெற்றவர். இவருடைய மூத்த சகோதரர் நீதிக்கட்சியில் இருந்து அரும் பெரும் பணிபல புரிந்துவந்தார். அதைப் பின்பற்றி இவரும் அக்கட்சியில் சேர்ந்து பணியாற்றத் தொடங்கினார்.

விஞ்ஞான மேதை
ஜி.டி.நாயுடு

இவர் வாலாஜாபாத் இந்துமதப் பாடசாலையிலும், காஞ்சீபுரம் பச்சையப்பன் பள்ளியிலும் தமிழாசிரியராக இருந்து சிறப்பாகப் பணியாற்றியுள்ளார். 'பாரதம்' என்ற வார ஏட்டின் ஆசிரியராக இருந்து சிறந்த கருத்துக்களை வழங்கியுள்ளார். 1930 முதல் 1938 வரை செங்குந்தர் மகாஜன சங்கத்தின் செயலாளராக இருந்து சிறப்பாகப் பணியாற்றியுள்ளார். 1938-ல் திரு. ஈழத்து அடிகள் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியைத் தொடங்கிய போது, சென்னையில் இவர் ஒரு பெரிய இந்தி எதிர்ப்பு ஊர்வலத்தை நடத்தினார். அதுதான் சென்னையில் நடைபெற்ற முதல் இந்தி எதிர்ப்பு ஊர்வலம் என்று இந்தி எதிர்ப்பு வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளது.

1937-ல் பேரறிஞர் அண்ணா அவர்களை ஆசிரியராகக் கொண்டு "நவயுகம்" என்ற வார ஏட்டினைத் தொடங்கி சிறப்பாக நடத்தினார். பேரறிஞர் அண்ணா அவர்களின் எழுத்து ஆர்வத்தை ஊக்குவித்து வளர்த்தவர் இவரே. 'பிற்பட்ட சமூக சங்கம்' என்ற அமைப்பைத் தொடங்கி பல்லாண்டு காலமாக சீரும் சிறப்புமாக நடத்திவருகிறார். இப்போது அதன் தலைவராக இருந்துவருகிறார். 1947-ல் "போர்வாள்" என்ற வார இதழைத் தொடங்கி திராவிட முன்னேற்றக் கழக வளர்ச்சிக்கு பெரும்பணி புரிந்தார். இந்தி எதிர்ப்பு, கருப்புகொடி காட்டுவது ஆகிய காரணங்களுக்காக ஆறுமுறை கைது செய்யப்பட்டு சிறைத்தண்டனை பெற்ற பெருந்தகையாளர். பொது வாழ்க்கைக்கென அடியும், உதையும் பட்டு துன்பம் அனுபவித்த செம்மல்.

தி. மு. க.-வின் நிதிக்குழு செயலாளராகவும், முதல் மாநாட்டு பொதுச் செயலாளராகவும், சட்டக் குழுவின் அங்கத்தினராகவும் இருந்து சிறப்பாகப் பணியாற்றியுள்ளார். 1939 முதல் 10 ஆண்டுகள் சென்னை

(அடுத்த பக்கம் பார்க்க)

பெரியார் காஞ்சி மணிமொழியார் 71வது பிறந்தநாள் விழாச் சிறப்பு மலர் வெளியிடுவது கேட்டு மிகவும் பூரிப்படைந்தேன்.

நான் திரு. மணிமொழியார் அவர்களை கடந்த 25 ஆண்டுகளாக அறிவேன். கழகத்திற்கு போர்வாள் வார இதழின் மூலம் அவர் செய்த சேவையை நாடு என்றும் மறக்காது.

தோற்றத்தில் மிக எளியவர் என்றாலும், அவர் அன்றைய நாளில் தன் வார ஏட்டின் மூலம் நாட்டு மக்களுக்கு அளித்த புரட்சிக் கருத்துக்கள் கோழையையும் வீரனாக்கியது. குருடனையும் விழிபெறச் செய்தது என்றால் மிகையாகாது. ஆம், கழகத்திற்கு ஏடில்லாத அந்த நாளில் எதிர்ப்புக்கிடையில் தன் பணியைச் செய்து வந்தார்.

1947ல் துவக்கிய போர்வாள் 1959ல் ஏன் நின்றுவிட்டது என்பதைவிட, எப்படி அவ்வளவு நாள் நடந்தது என்பதுதான் ஆச்சரியம். அவ்வளவு எதிர்ப்பு இயக்கத்திற்கு அந்த நாட்களில்.

அவருடைய அருமை மகன் இளஞ்செழியனே, துப்பாக்கி வயிற்றில் பிறந்த பீரங்கி. எழுத்தாற்றல் நிறைந்தவர். இளஞ்செழியன் எழுத்தாற்றலுக்கு ஒரு எடுத்துக்காட்டு அவர் எழுதிய "தமிழன் தொடுத்த போர்" 1938ல் நாம் துவக்கிய மொழிப் போரை "தமிழன் தொடுத்த போர்" என்ற வீர வரலாறாகத் தமிழகத்திற்கு தந்தவரும் அவர்தான். அந்த வரலாற்றை இன்றைய சந்ததியினர் படித்திருக்க முடியாது.

அந்தக் காவியத்தை நான் கண்போல் காத்து வந்தேன். 20 ஆண்டுகளுக்குமுன் அதிராம பட்டினம் நண்பர் இளங்கோ எடுத்துச் சென்றார், படித்துவிட்டுத் தருகிறேனென்று, இன்னும் கிடைக்கவில்லை. எங்கெங்கோ தேடினேன், யார் யாரையோ கேட்டேன், பயனில்லை.

தமிழகத்தையே ஒரு உலுக்கு உலுக்கிய அந்த வீர காவியத்தைப் புதிய பதிப்பாக வெளியிட்டு என் போன்ற லட்சோப லட்சம் தொண்டர்களின் ஆசையைப் பூர்த்தி செய்ய கேட்டுக் கொள்ளுகின்றேன்.

திரு. மணிமொழியார் அவர்களை நன்கு அறிந்தது மட்டுமல்லாமல், பல சந்தர்ப்பங்களில் அவரோடு சேர்ந்து இயக்கப்பணி புரியும் அரிய வாய்ப்பும் ஏற்பட்டிருக்கிறது. அவற்றில் கைத்தறி நெசவாளர் கண்ணீர் போக்கிட 1952ல் மாவட்டச் செயலாளராக இருந்த நானும், திரு. மணிமொழியார் அவர்களும் வேலூர் நகரில் வீடு வீடாக ஏறி தோளில் துணி சுமந்து 'கைத்தறித் துணி வாங்குங்கள்' என்று கூறி விற்ற நிகழ்ச்சி மறக்க முடியாத ஒன்று.

வாழ்க - பல்லாண்டு — வளர்க அவர் தொண்டு என வாழ்த்துகின்றேன்.

## கைத்தறித் துணி வாங்கலையோ!

எ.எல்.சி. கிருஷ்ணசாமி, எம்.எ.,

*(முன் பக்கத் தொடர்ச்சி)*

மாவட்ட அவைத் தலைவராக இருந்து பணி பல புரிந்தார். 1962-ல் சென்னை தியாகராய நகர்த் தொகுதியில் இருந்து சட்ட மன்றத்துக்கு தேர்ந்தெடுக்கப்பட்டார். சட்ட மன்றத்தில் இவர் கேட்ட கேள்விகளையும், ஆற்றிய சிறப்பான பணியையும் அனைவரும் அறிவார்கள். சென்னையில் வசித்துவரும் இவர் காப்பியே சாப்பிடுவதில்லை. இவரைப் போலவே இவரது இரு மகன்களும், ஒரு மகளும்கூட காப்பி சாப்பிடுவதில்லை. வயது 71 ஆனாலும் பார்ப்பதற்கு 40 வயது இளைஞரைப்போலவே இருப்பார். இதற்குக் காரணம் இவர் காப்பியை நீக்கி, பாலையும் மோரையும் அதிகமாகச் சாப்பிடுவதுதான் என்று எண்ணுகிறேன்.

பொதுநலப் பணிகளில் இளம் வயது முதலே தீவிரமாக ஈடுபட்டு சாதனைகள் பல புரிந்தவர். தமிழ் வளர்ச்சியிலும், கல்வி வளர்ச்சியிலும், தொழில் வளர்ச்சியிலும், நாட்டு நலனிலும் நல்ல ஆர்வமும், ஈடுபாடும் கொண்டவர். அனைவரிடமும் அன்பாகவும் பண்பாகவும் உரையாடுபவர். தாய்மொழியாகிய தமிழிலேயே எல்லாவகையான கல்விகளும் கற்றுக்கொடுக்கப்பட வேண்டும் என்று சொல்லுபவர். நாடு நலம் பெற பணி பல புரியும் இவர் பல்லாண்டு காலம் நீடூழி வாழவேண்டும் என்று வாழ்த்துகின்றேன்.

# அயராது பணியாற்றும் ஆற்றல் வீரர்

தூ. செ. கந்தசாமி,
(செயலாளர், செங்குந்த மகாஜன சங்கம், காஞ்சிபுரம்.)

"ஒரு மனிதன் வாழ்க்கையில் பெறத்தக்க தலைசிறந்த பேறுகளில் ஒன்று, உயர்ந்த நட்புடைமை. அத்தகைய நட்பு மட்டும் ஒருவனுக்குக் கிடைத்துவிட்டால் வாழ்க்கையில் அவன் பெறுகிற மகிழ்ச்சி இரண்டு மடங்காகப் பெருகிச் சிறக்கும் ; அவனைத் தாக்குகிற துயரமோ பாதியாகக் கரைந்து அழியும்?" என்று இத்தாலி நாட்டுப் பேரறிஞன் சிசரோ ஒருமுறை குறிப்பிட்டான். அப் பெருந்தகையாளனால் சுட்டிக்காட்டப்பட்ட அத்தகைய உயர்ந்த நட்புடைமையை வாழ்க்கையில் நுகர்ந்து மகிழும் பெரும்பேற்றைப் பெற்றவன் நான். ஓராண்டு ஈராண்டாக அல்ல, ஐம்பத்தொன்பது ஆண்டுகளாக அத்தகைய மிக இனிய—மிகச் சிறந்த—மிகத் தூய நட்பை எனக்கு அளித்து, என்னையும் மகிழ்வித்துத் தானும் மகிழ்ந்துவரும் தண்ணளி படைத்தவரே, திராவிட முன்னேற்றக் கழகத் தளபதிகளில் தலைசிறந்த ஒருவராகத் திகழும் காஞ்சி மணிமொழியார் அவர்கள்.

1912ஆம் ஆண்டு கல்வியிற் சிறந்த காஞ்சிமா நகரத்தில் நான் பத்து வயதுச் சிறுவனாகவும், மணிமொழியார் அவர்கள் பதினோரு வயதுச் சிறுவனாகவும் உலவிக் கொண்டிருந்த வேளை. அப்போதுதான் எங்கள் இருவருக்கிடையே நட்புணர்ச்சி அரும்பி மலர்ந்தது. நாங்கள் இருவரும் சின்னஞ்சிறு பாலகர்களாக இருந்த காலத்தில் எங்களிடையே தோன்றிய நட்புணர்வு நாளுக்கு நாள் ஓங்கிவளர்ந்து சிறந்து உயர்ந்திருக்கிறது என்பதையும், நாங்கள் இருவரும் முதிர்ந்த வயதை அடைந்து நிற்கும் இன்றளவும் அந்த நட்பு குன்றுமல் குறையாமல் அருஞ் சிறப்புடன் திகழ்ந்து வருகிறது என்பதையும் எண்ணும்போது என் உள்ளம் மகிழ்ச்சி வெள்ளத்தில் நீந்தி மகிழ்வதில் வியப்பென்ன இருக்கமுடியும் ?

'வளரும் பயிர் முளையிலே தெரியும்' என்னும் பழமொழி, மணிமொழியார் அவர்களின் வாழ்க்கையைப் பொறுத்தவரை நூற்றுக்கு நூறு உண்மையாகும். பிற்காலத்தில் அவருடைய வாழ்க்கையில் புகழொளி வீசித் திகழ்ந்து தமிழ் மக்களின் இதயங்களையெல்லாம் அள்ளிக்கொண்ட அவருடைய பேராற்றல்கள் அத்தனையும் அவருடைய உயர்நிலைப் பள்ளிப் பருவத்திலேயே அவரிடம் பூத்துக் குலுங்கியதை நான் நன்கறிவேன். பிறர்க்கு உதவும் பெருந்தகைமை, பொதுநலத் தொண்

டாற்றுவதில் பேரார்வம், எடுத்த பணியை முடித்தன்றி ஓயாத செயல்திறன், செந்தமிழைப் போற்றி வளர்ப்பதில் சீரிய ஈடுபாடு, கேட்டாரைப் பிணிக்கவைக்கும் பேச்சாற்றல் முதலிய அன்னாரின் சிறப்பியல்புகள். அத்தனையையும் அவர் ஒன்பது, பத்து, பதினோராவது வகுப்புகளிற் பயின்று கொண்டிருந்த காலத்திலேயே அவரிடம் பொலிவதைக் கண்டு பெருமையும் பூரிப்பும் அடைந்தவன் நான்.

நாடு வாழத் தான் வாழும் நல்லறிஞராகிய மணிமொழியார் அவர்கள், தலைசிறந்த வணிகத் திறன் படைத்தவர். அந்தத் திறமையைமட்டும் அவர் தன் குடும்ப நலனுக்காக முழு அளவில் பயன் படுத்தியிருப்பாரானால், இன்றையதினம் அவர் பல இலட்சங்களுக்கு அதிபதியாகச் சிற்றரசர் போல் வாழ்ந்திருக்க முடியும். ஆனால் அவருடைய உள்ளமோ சின்னஞ்சிறு வயதிலேயே பொதுவாழ்வு எனும் போர்க்களத்தில் குதித்துவிட்டது. இதனால் அவருடைய குடும்பத்திற்கு ஏற்பட்டது பேரிழப்பு என்பதை அக் குடும்பத்தோடு நெருங்கிப் பழகிய நான் நன்கறிவேன். ஆனால், நாட்டுக்கும், மொழிக்கும், சமுதாயத்திற்கும் இதனால் ஏற்பட்டது மிகப் பெரிய ஆதாயம் என்பதை, நான் மட்டுமல்ல, நாடே நன்கறியும்.

தலைசிறந்த பேச்சாளர்களாகப் புகழ் பெற்றுத் திகழும் பலர் ஆக்கவேலை புரிவதில் அதிகத் திறன் படைத்தவர்களாக இருப்பதில்லை. அதுபோலவே ஆக்கவேலை செய்வதில் ஆற்றல் வீரர்களாக இருப்பவர்களிற் பலர் சொற்பொழிவாற்றும் கலையில் சீரிய திறன் உடையவர்களாக விளங்குவதில்லை. ஆனால் மணிமொழியார் அவர்களோ இந்த இருவகைத் திறமைகளையும் ஒருங்கே பெற்றுள்ள பெருஞ் சிறப்புடையவர். எத்தனை ஆயிரம் மக்கள் திரண்டு குழுமியுள்ள மாபெருங் கூட்டங்களாகத்தான் இருக்கட்டுமே, மணிமொழியார் அவர்கள் கணீர் கணீர் என்று ஒலிக்கும் தன் கம்பீரக் குரலால் வீரமுழக்கம் செய்யத் தொடங்கிவிட்டால், அத்தனை ஆயிரம் மக்களின் உள்ளங்களும் அவர் பேச்சின் பின்னேதான் செல்லும். இத்தகைய பேச்சாற்றல் படைத்த மணிமொழியார், பொதுக்கூட்டங்களை அமைத்தல்—மாநாடுகளைக் கூட்டுதல் — ஊர்வலங்களை நடத்துதல்—முதலிய செயல் துறைகளிலும் தன்னிகரற்ற திறன் படைத்தவர்.

1947 முதல் 1958 வரை அவரால் பெருஞ் சிறப்புடன் நடத்தப்பட்டு வந்த **"போர்வாள்"** என்னும் வார இதழும், "பகுத்தறிவுப் பாசறை" என்னும் புத்தக வெளியீட்டு அமைப்பும் அவருடைய செயல் திறமையைச் செவ்விதின் எடுத்துக்காட்டும் சீரிய சான்றுகள் ஆகும். மணிமொழியார் அவர்களும், அவருடைய முதல் மகனார் **பேராசிரியர் மா. இளஞ்செழியன்** எம். ஏ. அவர்களும் இணை ஆசிரியர்களாக இருந்து நடத்திய "போர்வாள்" கிழமை இதழ், தமிழகத்தில் எத்தகைய வீர உலா வந்தது என்பதையும், சுண்டிச் சோர்ந்த நரம்புகளுக்கும் அது எவ்வாறு சுறுசுறுப்பூட்டும் "டானிக்"காக விளங்கியது என்பதையும், ஆயிரமாயிரம் இளைஞர்களின் இதயங்களை அது எவ்வாறு எழுச்சிக் காவியங்களாக மாற்றி அமைத்தது என்பதையும் நான் விளக்கிக்கூறத் தேவையில்லை. தமிழ் மக்கள் சொல்லிச் சொல்லிப் பாராட்டி மகிழ்ந்து கொண்டிருக்கும் செய்திகள் அவை.

மணிமொழியார் அவர்களால் எழிலும் பயனும் பொருந்திய முறையில் நடத்தப்பட்டு வந்த **பகுத்தறிவுப் பாசறை** என்னும் பதிப்பகம், சிந்திக்கத் தூண்டும் சிறந்த கருவூலங்கள் போன்ற அரிய நூல்கள் பலவற்றை அடுக்கடுக்காக வெளியிட்டு, அருந்தமிழ் மக்களின் உள்ளங்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வந்தது. பேராசிரியர் க. அன்பழகன் எம். ஏ., எம். பி. அவர்களால் இயற்றப்பட்ட 'வகுப்புரிமைப் போராட்டம்', சிறுகதைச் சிற்பி திரு. கே. ஜி. இராதாமணாளன் அவர்களால் எழுதப்பட்ட 'மனப்புயல்', 'இளவரசி', 'பொற்சிலை', 'தேன்மொழி', 'புதுவெள்ளம்', பேராசிரியர் மா. இளஞ்செழியன் எம்.ஏ. அவர்களால் தீட்டப்பட்ட 'தமிழன் தொடுத்த போர்', 'இந்திய அரசியல் திட்டம்', 'சரிந்த சாம்ராஜ்யம்', 'அறி

ஞர் அண்ணாதுரை', 'அஞ்சாநெஞ்சன் வால்டேர்' ஆகிய நூல்கள், பகுத்தறிவுப் பாசறையினின்று வெளிவந்த ஏடுகளில் சிறப்பாகக் குறிக்கத்தக்கன.

1950 முதல் 1958 வரை மணிமொழியார் அவர்களால் வெளியிடப்பட்டு வந்த 'திராவிடர் நாட்குறிப்பு' என்னும் டைரி, அப்பெருமகனாரின் புதியன புனையும் பேராற்றலுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். திராவிட முன்னேற்றக் கழகம் பற்றிய முழு விவரங்களையும், ஒரு நாளைக்கு ஒன்று என்னும் முறையில் உலகப் பேரறிஞர்களின் பொன்மொழிகளையும் கொண்டதாக வெளிவந்த அந் நாட்குறிப்பு தமிழக மக்களின் இதயங்களையெல்லாம் தன்பால் ஈர்த்துக் கொண்ட சிறப்பையறிந்து பெருமகிழ்ச்சி அடைந்தவர்களில் நானும் ஒருவன்.

1962 முதல் 1967 வரை சென்னை தியாகராய நகர் தொகுதியின் சார்பில் தமிழகச் சட்டமன்ற உறுப்பினராக அமர்ந்து மணிமொழியார் அவர்கள் ஆற்றிய தொண்டு, பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க பெற்றிமை படைத்ததாகும். இரவு பகல் என்று பாராமல், சில நாட்கள் செல்லட்டும்—பின்னர் பார்க்கலாம் என்று சொல்லித் தட்டிக் கழிக்காமல், தொகுதி மக்கள் வந்தபோதெல்லாம் புன்முறுவலுடன் அவர்களை வரவேற்று, அமைதியுடன் அவர்களின் குறைகளைக் கேட்டு, உடனுக்குடன் அவர்களின் துயர் களைய முயன்ற மணிமொழியாரின் தொண்டு உள்ளத்தைப் பல நாட்கள் நேரில் இருந்து கண்டு மகிழ்ந்தவன் நான்.

தன் ஆற்றல்மிக்க பேச்சாலும், ஆர்வம் மிக்க எழுத்தாலும், இடையீடற்ற உழைப்பாலும் தன்னலமற்ற தொண்டாலும் மணிமொழியார் அவர்கள் சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆற்றிவரும் அரும் பணிகளால், செங்குந்தர் சமூகம் தலை நிமிர்ந்து நிற்க முடிந்திருக்கிறது; திராவிடர் கழகம் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருக்கிறது; திராவிட முன்னேற்றக் கழகம் தன்னிகரற்ற வலிவும் பொலிவும் பெற்று ஆட்சிப்பீடத்தில் அமர்ந்து சிறக்கிறது; இந்தி எதிர்ப்பியக்கம் சீரிளமைத் திறம்பெற்றுத் திகழ்கிறது.

ஆயிரம் துன்பங்கள் அடுக்கடுக்காக வந்தாலும் அவற்றைக் கண்டு அணுவளவும் கலங்காமல் தொடர்ந்து பணியாற்றும் நெஞ்சு உரம் மணிமொழியார் அவர்களிடத்தில் இயல்பாகவே அமைந்திருக்கிறது. மலை குலையினும் மனம் குலையாத இந்தப் பேராண்மை அவரிடம் பொலிந்திருப்பதால் தான், அவருக்கு இப்போது வயது எழுபது முடிகிறது என்ற போதிலும், அவரைக் காணும் எவரும், "அவருக்கா—எழுபது வயதா—இருக்காதே—ஐம்பது அல்லது ஐம்பத்தைந்துதான் இருக்கும்" என்று சொல்லத்தக்க இளமை உருவமும், தோற்றப்பொலிவும் அவரிடம் காட்சி அளிக்கின்றன.

உயர்ந்த பண்புகள் யாவும் ஒன்றுதிரண்டு ஓர் உரு எடுத்தாற்போல் காட்சி தரும் என் கெழுதகை நண்பர்—காஞ்சி நகர் அளித்த கருத்துக் கருவூலம்—செந்தமிழர் போற்றும் சீர்திருத்தச் செல்மல்—காஞ்சி மணிமொழியார் அவர்கள் நீண்ட நெடுங்காலம் சிறப்புடன் வாழ்ந்து, தமிழ் மக்களையும் தமிழ் நாட்டையும் சிறப்பிக்க வேண்டும் என மனமார வாழ்த்துகிறேன். வாழ்க மணிமொழியார் வளமெலாம் பெற்று!

❋



தாத்தாவும்



பேரன் பேத்திகளும்




திராவிட முன்னேற்றக் கழகத்தின் மூலத் தூண்களுள் ஒருவரான செயல் நெறித் தீரர் காஞ்சி மணிமொழியார் அவர்களின் எழுபத்து ஒன்றும் பிறந்தநாள்மங்கலம் நடைபெற இருப்பதை, அறிவிப்புத்தாள்கள் வந்து தெரிவித்தபோது, என் உள்ளம் மிகுதிபெற்ற மகிழ்வு கொண்டு களித்தது. மேற்கிளர்ந்த வண்ணமலர்களுக்குப் போற்றிப்பா இசைப்பதே பெரிதும் வழக்கமாக இருந்துவரும் ஒரு சமுதாயத்தில், ஆணிவேருக்கும் விழுதுவேர்களுக்கும் விழாக்கள் நடைபெறுவது சமுதாயத்தில் செம்மைத்தெளிவு ஏற்படுகிறது என்பதற்கு முன் அறிகுறி அல்லவா ?- சமுதாய நற்போக்கில் நாட்டம் கொண்டோர்க்கு அது மகிழ்ச்சி தருவதும் இயல்பே அல்லவா ?

## இரண்டு சந்திப்புகள்

மணிமொழியார் அவர்களை நேரிற் சந்தித்துச் 'சில தமிழ்' பேச எனக்குக் கிடைத்த வாய்ப்புக்கள் (இதுவரை) இரண்டே இரண்டு: முதற்காட்சி, 1952-லோ) 53லோ நடந்தது. அப்போது அவர் நடத்தி வந்த "போர்வாள்" இதழில், ("பிரசண்ட விகடன்" இதழில் வெளிவந்த) எனது கவிதை ஒன்றை மறுவெளியீடு செய்து சிறப்பித்திருந்தார். அந்த அன்புக்கு நன்றி தெரிவிக்கும் முகமாக அவருடைய (போர்வாள்) அலுவலகத்திற்குச் சென்று அவரைக் கண்டு உரையாடி மகிழ்ந்தேன். இரண்டாம் காட்சி, 1968ல் நடைபெற்றது. பேராசிரியர் இலக்குவனார் அய்தராபாத்துக்குச் செல்வதை முன்னிட்டு அவருக்கு வழியனுப்புவிழா ஏற்பாடுசெய்த செந்தமிழ்க் கவிஞர் எழுத்தாளர் மன்றத்தின் உறுப்பினர்களாக, அதுபோது திருஅல்லிக்கேணியில் சந்தித்தோம்.

இரண்டு முறையுமே நாங்கள் நீளப் பேசிக் கொள்ளவில்லை ; சில சொற்களே பேசிப் பிரிந்தோம். ஆயினும் சந்திப்பு என்பது, அது நடைபெற்ற நேரத்தின் அளவைக் கொண்டு மதிப்பிடுவது அல்லவே ! சந்திக்கும் களம், சந்திக்கின்றவர்களின் பின்னணி ஆகியவைகளுக்கு ஏற்பத்தானே ஒரு சந்திப்பின் மதிப்பு கணிக்கப்படுகிறது ?

"அடகெடுவாய் பல துறையும் இருக்க இந்த அன்னக்காவடித் தமிழைக் கற்கின்ருயே, - கெட நினைவு கொண்டனையோ, பாவீ !" என்று அன்புக் கோபக்குரலெடுத்துத் தடுத்து நின்ற உற்ருரையும் உறவினரையும் மீறித், தமிழ் இலக்கியம்பயின்று அதன் வளத்திற்கு வளம் சேர்க்க "மடிதற்று" நிற்பவன் நான் ; "கெடல் எங்கே தமிழின் நலம், - அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்க !" என்னும் ஆணையையே வாழ்வாக்கிக் கொண்டு, தமிழ் வயலுக்குக் களையெடுப்புப் பணியும் காப்புப் பணியும் மேற்கொண்டவர் காஞ்சியார். எனவே, எங்கள் சந்திப்பில் நீண்ட பேச்சுக்கு இடமிருக்கவில்லை. என்னை அவர் அறிந்திருந்தாரோ இல்லையோ, அவரை நான் நன்கு அறிந்திருந்தேன். ஆதலால், அச்சந்திப்புகளின் பயனுக ஆர்வ ஏற்றத்தைச் சற்று மிகுதியாகவே நான் பெற்றுக்கொண்டேன்.

*

### நல்லுறவுக் கேடயம்

முதல்முறை அவரை எதிர்நோக்கிச் சந்தித்தபோதும், காஞ்சி மணிமொழியார் என்னும் மனிதரின் பின்னணியாக, அவருடைய வரலாற்று மணம் என்நெஞ்சில் நிரம்பி மகிழ்வைச் செய்தது. இப்போதும் அதை நினைத்துப் பார்க்கிறேன்...

**காங்கிரஸ் இயக்கத்துக்கு (கட்சிக்கு அல்ல) ஒரு திரு. வி. க. வும், பொதுவுடைமைக் கட்சிக்கு ஒரு ஜீவானந்தமும் எப்படியோ, அப்படியே தி. மு. க. வுக்கு ஒரு காஞ்சி மணிமொழியார். இது என் கணிப்பு. இந்தக் கணிப்பின் அடிப்படையிலேதான், குள்ளமான அந்த மனிதருக்குப் பின்னே உயரமாக எழுந்து நிற்கும் ஒளியை நான் அளவிடுகிறேன்.**

பழமைத்தடம் வலுவாகப் பதிந்து, பன்மை முகம் காட்டும் வாழ்வே நடைமுறையாக உள்ள நமது சமுதாயத்தில், ஓர் இயக்கத்தையோ அமைப்பையோ நிறுவி வளர்ப்பதில் பெரும்பல தொல்லைகள் உண்டு. அவைகளுள் முக்கியமானது, ஓர் இயக்கத்தினர் மற்றோர் இயக்கத்தைக் காழ்ப்போடும் கனலோடுமே நோக்குகிற போக்கு இந்தப் போக்கின் கூர்மை மழுக்கப்படாவிட்டால், எந்த இயக்கமும் நமது சமுதாயத்தில் நின்று நிலைக்க முடியாது. **மாற்றுப் பாசறை, வேற்றுப் பாசறைகளின் இத்தகைய வெறுப்புப் பார்வையை மாற்றித் தத்தம் இயக்கம், கட்சி ஆகியவற்றுக்கு வளர்ச்சிப்பாதை அமைத்தவர்கள் என்பதாலேயே, மேற்கண்ட மூவரையும் தனிப்பிரித்து எடுத்துரைத்தேன்; இந்தப் பணி எளிதானதல்ல என்பதாலேயே, இந்த மூவரையும் நான் உயர்வு சொல்லிப் பாராட்டுகிறேன்.**

ஓர் இயக்கத்தின் முக்கியமானவர் ஒருவர், மற்றோர் இயக்கத்தின் செயல்களை அவ்வப்போது போற்றுவதும் அவர்களின் நியாயமான போராட்டங்களில் அவர்களோடு ஒத்துழைப்பதும், தமது இயக்கத்தின் போராட்டங்களில் அவர்கள் வந்து கலந்துகொள்ளச் செய்வதும் ஆகிய இவைகளால் அவரைப் பற்றிய ஓர் நல்லெண்ணம் எல்லோருக்கும் ஏற்படுகிறது. இந்த நல்லெண்ணமே, அவர் சேர்ந்துள்ள இயக்கத்தோடு மற்றவர்கள் மாறுபடும் நேரங்களிலும், மிகக் கடுமையாக நடந்துகொள்ளாதவாறு அவர்களைத் தடுக்கிறது. தங்கள் இயக்கத்தின் வளர்ச்சிப் பாதையில், மாற்றுரின் ஏசல் கணைகளைத் தடுக்கும் கேடயமாகிய இந்த நல்லுறவை ஏற்படுத்தி வந்துள்ள தி. மு. க. தலைவர்களில் முக்கியமான ஒருவர் காஞ்சி மணிமொழியார் என்பது, என் போன்றோரின் கருத்து.

### திரும்பிப் பார்க்கையில்...

அவருடைய வரலாற்று வழியில் நின்று துலங்கும் நிகழ்ச்சிகளைப் பாருங்கள்: 1918ல் இவர் பார்ப்பனரல்லாத வாலிபர் சங்கமும், தியாகராயர் வாசகசாலையும் (காஞ்சியில்) தொடங்கியபோதே "இவர் யார்" என்பது பிறருக்குத் தெளிவாகத் தெரிந்துவிட்டது; இவர் எந்தெந்த நோக்கங்களோடு நடக்கப் போகிறார் என்பதும் தெளிவாகிவிட்டது. ஆனால், 1938ல் இந்தி எதிர்ப்பு ஊர்வலம் நடத்தி, பின்னர் "பிற்பட்ட சமூகங்கள் சங்கம்" சேர்ந்து, 1948ல் இந்தி எதிர்ப்பு மாநாட்டுக்கு வரும்போது, **கட்சிச் சார்புகள் உடையோரும் எந்தக் கட்சியோடும் தொடர்பு இல்லாதவர்களும் ஆன பலரை ஒருங்கிணைத்துச் செயற்படுத்தும் பாங்கு அவருக்கு அமைந்துவிட்டது. இந்து, முசுலீம், கிறித்தவர், அரசியல்வாதிகள், தமிழ்அறிஞர்கள் ஆகிய பல நிலையினரையும், தம்முடைய கட்சியின் போராட்டக் களத்தில் ஒன்று சேர்த்ததன் மூலம், தமது கட்சியின்பால் அவர்கள் அனைவரும் ஒருவிதமான பரிவுகொள்ளுமாறு அவரால் செய்ய முடிந்தது.**

**அதேபோல், 1949–ல் திருவள்ளுவர் மாநாடு கூட்டி—மேற்குறிப்பிட்ட பல நிலையினரையும் ஒருங்கிணைத்ததன் மூலம், அவருடைய கட்சியைப் பற்றிய நல்லெண்ணம் கட்சிச் சார்புகளே இல்லாதவர்களிடையேயும் பரவியது.** "சாமியைத் திட்டும் கழகம்" என்றும் "ஏதோ சமுதாயச் சீர்திருத்தம் பேசும் கழகம்" என்றும் கருதிய பக்தர்களும் (சமுதாய நோக்கே இல்லாத) அறிஞர்களும் தங்களுககு மிகவும் உவப்பான திருககுறளில் திராவிடர் கழகத்தார் ஈடுபாடு காட்டுவது கண்டு மகிழ்ந்தார்கள்; "இவர்களும் தமிழர் நலனுக்கு உகந்தவர்களே" என்றும் நினைக்கத் தொடங்கினார்கள். வரையறுத்த தங்கள் இயக்க நடைமுறைகளுக்கு அப்பால், மற்றவர்களுக்கு உவப்பானவற்றில் (தங்களுக்குப் பொருத்தமானவற்றின்பேரால்) அந்தப் பிறர்களைத் தழுவிச் செல்வதன் மூலம் தான் ஓர் இயக்கம் பல நெஞ்சங்களில் விழுதுவேர் விடுகிறது.

### அவர் நெறி தழைக!

இத்தகைய ஒரு பணியைச் செய்வது அவ்வளவு எளிதல்ல; உள்ளே இருப்போரும்

(அடுத்த பக்கம் பார்க்க)

# பராசக்திக்குப் பாதுகாப்பு

ஏ. ஆர். சேஷாசலம், செயலாளர்,
உதவிபெறும் தமிழ்நாடு
தொடக்கப்பள்ளி நிர்வாகிகள் சங்கம்

காஞ்சிப் பெரியார் மணிமொழியார் அவர்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு முப்பது ஆண்டுகட்கு முன்பே எனக்கு ஏற்பட்டது. அன்று முதல் அந்த நட்பு சிறிதும் குறையாமல் எங்கள் இரு குடும்பங்களும் இருந்து வருகின்றன. ஒருமுறை அவரோடு கொள்ளும் நட்பு என்றென்றும் குன்றுவதில்லை என மற்றவர்கள் சொல்வது என் வரையில் முழு உண்மையாகிவிட்டது. பெரியோர் கேண்மை இருநிலம் பிளக்க வேர் வீழ்க்கும் அல்லவா? பேச்சில் இனிமையும், இயல்பில் எளிமையும், செயலில் ஒளிவு மறைவு அற்ற தூய்மையும், அன்பில் அகநகப் பாராட்டும் பண்பும் எவரையும் அவரிடம் பாசங்கொண்டு பழகத் தூண்டுகின்றன.

அவரை நாடி வந்தவர்களுக்கு அவர் உதவி செய்யத் தயங்கியதே இல்லை. பிறருக்கு உதவுவதென்பது, இளமை முதலாகவே அவரிடம் அமைந்துவிட்ட இயற்கைப் பண்பாகும். காஞ்சியில் கால்வைக்கும் கற்ற மூதறிஞர் எவரும் இவர் குடும்பத்தில் சென்று தங்காமலும், நல்லுதவி பெறுமலும் சென்றதில்லை எனக் கூறப்படுவதுபோலவே இப்போதுள்ள கற்றவர்களும், அறிஞர்களும், அரசியல் தலைவர்களும், மணிமொழியாரிடம் மிக்க அன்பும் நட்பும் பாராட்டி வருகிறார்கள்.

இயக்க சம்பந்தமான பணிகளை அவருடன் இணைந்துநின்று செய்யும் வாய்ப்பு எனக்குப் பலமுறை ஏற்பட்டிருக்கிறது. முக்கிய பொறுப்புக்களையும் ஏற்று நடத்தியிருக்கிறேன். அப்படிப் பொறுப்பேற்கும்போது மணிமொழியார் கண்ணுங் கருத்துமாகக் கண்காணித்து அரிய ஆலோசனைகளைக் கூறி அந்தப் பணி செவ்வனே நிறைவேறத் துணையாக நிற்பார்கள்.

சு. ம. என்றோ, தி. க. என்றோ தெரிந்தால் அவருக்கு ஏசுதலும், தாக்குதலும் காத்துக் கொண்டிருந்த அந்தக் காலத்தில் மணிமொழியார் எதற்கும் அஞ்சாமல் தமிழ் மரபுக்கே உரிய வீரத்துடன் ஆற்றிய அருந் தொண்டுகள் இயக்க வரலாற்றில் சிறப்பானதொரு இடம் பெறத்தக்கவையாகும்.

கழகப் பணியில் நேரடியாகப் பங்கு கொள்ள இயலாத நிலையில் இருந்த அரசாங்க ஊழியர்கள் மறைமுகமாகக் கழகத்துக்கான ஆக்க வேலைகளைச் செய்வதற்கென்றே "தோழமைக் கழகம்" என்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தும்படி ஆலோசனை கூறினார்கள். அதன்படி அமைக்கப்பட்டு ஏராளமான உறுப்பினர்கள் சேர்ந்தனர். கழகப்பணி என் வட்டத்தில் சிறப்பாக நடைபெற்று வந்தது.

பேரறிஞர் அண்ணா அவர்களுடைய முயற்சியால் முதன்முதல் படத்தில் நடிப்பதற்கான வாய்ப்பு சிவாஜி கணேசன் அவர்களுக்குக் கிடைத்ததென்பதைப் பலர் அறிந்திருக்க மாட்டார்கள், நேஷனல் பிக்சர்ஸ் உரிமையாளர் திரு. பி. ஏ. பெருமாள் அவர்கள் எடுத்த பராசக்தி என்ற படந்தான் சிவாஜி நடித்த முதல் படமாகும். அந்த முதல் படத்திலேயே அவருக்குப் பெரும்புகழ் கிடைத்துவிட்டது, இதுகண்டு பொறாத ஒரு வகுப்பார் அந்தப் படத்தைக் கடுமையாகத் தாக்க

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

முணுமுணுப்பார்கள்; வெளியே உள்ளவர்களும் (அய்யக் கண்கொண்டே பார்த்துப்) பல முட்டுக்கட்டைகளைப் போடுவார்கள். அவை அனைத்தையும் ஏற்றுச் சீரணித்துக் கொண்டு, தொலைநோக்கோடு, நமது இயக்கத்தின் எதிர்கால வளர்ச்சியே குறியாக இருக்கும் செயல்நெறித் தீரர்கள் மட்டுமே இதில் வெற்றி பெறுவார்கள். இந்த வெற்றியை ஈட்டி, தி. மு. க -வின் பெருவளர்ச்சிக்குத் தோன்றும் துணையாக இருந்தே, தோன்றாத் துணைச் சூழ்நிலையை உருவாக்கி வந்துள்ள காஞ்சி மணிமொழியார் கழகத்தினரின் பாராட்டுக்கு உரியவர் என்பதோடு, நல்ல இயக்கங்களை நடத்த விரும்புவோர்க்குச் சிறந்த வழிகாட்டியாகவும் விளங்குகிறார் என்பதில் அய்யப்பாடே இல்லை. எனவே, "அவர் பணிசிறக்க, அவர் நெறி தழைக!" என்று வாழ்த்துகிறேன்; அவரை உள்ளார்ந்த உவப்போடு பாராட்டும் இதயங்களோடு என் இதயத்தையும் இழைய விடுகிறேன். O

ஆரம்பித்தனர். பத்திரிகைகள் அனைத்தும் கண்டன விமர்சனங்கள் எழுதிக் குவித்தன. இதைக்கண்ட மணிமொழியாருக்கு இருப்புக் கொள்ளவில்லை பராசக்தி படத்தின் சிறப்புகளையெல்லாம் விளக்கியும், படம் பற்றிய கருத்துரைகளைப் பொது மக்களிடமிருந்து திரட்டியும் **'போர்வாள் பராசக்தி மலர்'** ஒன்றை வெளியிட்டார். பல்லாயிரக் கணக்கானோர் அந்த மலரை வரவேற்றுப் பாராட்டுத் தெரிவித்தனர். அத்துடன் நில்லாது, பராசக்தி பாராட்டுக் கூட்டங்கள் பலவற்றை நடத்தினார். தோழமைக் கழகத்தின் சார்பிலும் ஒரு கூட்டம் நடத்துமாறு ஏற்பாடு செய்தார். அந்தக் கூட்டத்தில் சிவாஜி கணேசன், டைரக்டர் பஞ்சு ஆகியவர்கள் கலந்து கொண்டனர். மணிமொழியார் எதிர்ப்புக் கணைகளையெல்லாம் தவிடுபொடியாக்கினார். அதனால் புயலென எழுந்த எதிர்ப்புகள் புகைந்து சாம்பலாயின. நியாயமெனத் தன் உள்ளத்திற்குத் தோன்றும் எந்தச் செயலையும், தனக்கு அதனால் ஏற்படும் விளைவுகளைப் பற்றிக் கவலைப்படாமல் துணிவோடு செய்து முடிக்கும் உறுதி மணிமொழியாருக்கு இயற்கையாக அமைந்த ஒன்று. மணிமொழியாருடைய இந்தச் செயல் பராசக்திக்குப் பாதுகாப்பு அளித்ததென்றே கூறலாம்.

தி. மு. கழகத் துவக்கம் பற்றிய ஆலோசனைக் கூட்டம் பவழக்காரத் தெருவில் நடைபெற்றது. முக்கியமான கழகத் தோழர்கள் முந்நூறு பேர்கள் வரை அந்தக் கூட்டத்தில் பங்கு கொண்டனர். அவர்களை எல்லாம் மிக்க அன்போடு வரவேற்றும் உபசரித்தும் மணிமொழியார் ஆற்றிய தொண்டுகள் என் உள்ளத்தில் இன்னும் பசுமையாக இருக்கின்றன. அன்று கூட்டத்தில் கலந்துகொண்ட அவ்வளவு பேர்களுக்கும் மணிமொழியார் தன் சொந்தச் செலவிலேயே விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார் என்பதை இங்கே குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை. அதுபோலவே, 'மாலைமணி' பத்திரிகையை ஒரு கூட்டு நிறுவனம் அமைத்து நடத்த வேண்டும் என அறிஞர் அண்ணா விரும்பினார்கள். இயக்குனர் பங்காக ஒவ்வொருவரும் ஈராயிரம் ரூபாய் முதல் தவணையாக வழங்க வேண்டுமென அண்ணா விரும்பினார்கள். ஐந்தாறு பேர்கள் மட்டுமே அண்ணாவின் விருப்பத்தை நிறைவேற்றினார்கள். ஆனால் பின்பு அந்தக் கூட்டு முயற்சி கைவிடபபட்டபோது ஈராயிரம் வீதம் பணம் செலுத்தியவர்களில் காஞ்சி மணிமொழியாரும், இப்போது நிதி அமைச்சராகவுள்ள மாண்புமிகு மதியழகன் அவர்களும் தவிர மற்றவர்கள் திரும்பப் பெற்றுக் கொண்டனர். இவர்கள் இருவரும்மட்டும் இன்றளவும் அந்தத் தொகையைத் திரும்பப் பெறவில்லை என்பது மிகவும் குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

மணிமொழியார் மறுமலர்ச்சி இயக்கத்தை வளர்த்த மாவீரர்; அதன் முன்னோடி. யார் யாரோ, எப்படி எப்படியோ திடீரெனத் தலைவர்களாகி விடவேண்டுமென அலைந்து கொண்டிருக்கும் இக்காலத்தில் மணிமொழியார், 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற சிறந்த பாராட்டத்தக்க முறையில் சாதாரண மக்கள் தொண்டனாகவே இருந்து கழகத் தொண்டாற்றி வருவது நாமனைவரும் பின்பற்றத்தக்க நல்ல படிப்பினையும் முன் உதாரணமும் ஆகும்.

திராவிட இயக்கத்துக்குத் தன்னலம் கருதாமலும், உண்மையாகவும், தன்பொருள் இழந்தும் பணியாற்றி வருபவர் மணிமொழியார். அவர் நடத்திவந்த அச்சுக்கூடத்தைக் கழகத் தோழர்கள் கழகத்தின் சொந்த அச்சுக்கூடம் போல் பயனபடுத்திக் கொண்டார்கள். பல தோழர்கள் காசு தராமலே உரிமையோடு அச்சிட்டவைகளை எடுத்துச் சென்றிருக்கிறார்கள். பொருள் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு அவர் நடந்திருந்தால் இன்று அவர் ஏராளமான செலவம் படைத்த சீமானாக விளங்க முடியும்.

எல்லா நற்குணங்கட்கும் உறைவிடமாய் தொண்டுகளைச் செய்வதில் முன்மாதிரியாய், கழகக் கண்மணியாய், என் போன்றார்க்குப் பொன்னொளியாய்த் திகழும் அமைதிக்கடல், அன்பின் திருவுரு, ஆண்மைக்கு உறைவிடமான கெழுதகை நண்பர்—செந்தமிழ் அன்பர். பெரியார் காஞ்சி மணிமொழியார் அவர்கள் நெடுங்காலம் நன்கினிது வாழ்ந்து தமிழர்களையும் வாழ்விக்க வேண்டும் எனபது என் இதயமார்ந்த அவாவாகும். வாழ்க அந்த நல்ல வழிகாட்டி! வளர்ந்தோங்குக மேன்மேலும் அவர் புகழ்!

❋

# செந்தமிழ் வாழ்வு

டாக்டர் மே. சுந்தரம் எம்.ஏ., எம்.லிட்.

காஞ்சி மணிமொழியாருக்கு எழுபது ஆண்டுகள் நிறைவுற்றன என்பதை எவரும் எளிதில் நம்பமாட்டார்கள். காரணம், அவர்களின் ஆற்றலும், தோற்றமுமே ஆகும். இந்த வயதிலும் சுறுசுறுப்போடு அவர்கள் பணிபுரிந்து வருவது இளைஞர் உலகிற்கு ஓர் அறைகூவல் ஆகும். அவர்கள் பேச்சும், செயலும் அவர்களை 50 ஆண்டுகளுக்குமேல் மதிப்பிட முடியாதபடி செய்கின்றன. நடையோ 40 ஆண்டுகள் என்று நம்பச் செய்கின்றது. சிறகடிக்கும் அவர் சிந்தனையோ 20 ஆண்டுகளை எட்டிப் பிடிக்கின்றது. இத்தனைக்கும் மொத்தமாக உரிய மணிமொழியாரோ, மூத்துயர்ந்த தொண்டு மதிப்பால் எண்பதிற்கும் மேல் என்று எண்ணத்தக்க அளவிற்கு எண்ணத்தாலும், தொண்டாலும் ஏற்றம்பெற்று விளங்குகின்றார்.

## முதுபெருந் தொண்டர்

இம் முதுபெருந் தொண்டர் தம் சிந்தனையாலும் செயலாலும் கழகத்தைக் கட்டிக் காத்த தலைவர் பெருமக்களுள் முன்னணியில் நிற்கத்தக்கோராவர். தம் எழுபது ஆண்டிற்குள் ஏழு இயக்கங்களில் ஈடுபட்டு, குன்றாத ஆர்வம் காட்டி, குன்றுபோல் இருந்த அவற்றை மலையாக்கி, மற்றவர் அதனைக் கண்டு மலைக்கச்செய்த மாண்புடையவர் நம் மணிமொழியார் அவர்கள் ஆவார்கள். நீதிகட்சி தொடங்கித் தி. மு. கழகம் வரை அவர் தொண்டு படர்ந்து விரிந்த பழு ஆல மரம்போல் காட்சி அளிககிறது.

## ஆலமரம்

அந்த ஆலமரம் வேர் வீழ்ந்து, விழுது தாங்கி, கப்புங் கவடுமாகக் கொம்பும் கிளையும் பெருகி நிற்கும் காட்சியை மனக் கண்ணால் எண்ணிப் பார்க்கும்போது பழைய நினைவுகள் பசுமை முகங்காட்டி முறுவலிக்கின்றன.

## மொழி அறப்போர்

1937ஆம் ஆண்டு, செந்தமிழ் மொழி காக்கச் செந்தமிழ்ப் படை பாசறை அமைத்த நேரம். அந்த நேரத்தில் 'வெங்குருதிச் சாக்காட்டில் விளையாடும் தோள் எங்கள் வெற்றித் தோள்கள்' என்ற பரணிப் பண்பாடி வந்தார் மணிமொழியார். அகன்று திறந்து கிடந்த சிறைக்கோட்டத்தின் கதவங்கள் அந்தச் செந்தமிழன்பரை ஆரத் தழுவிக் கொண்டன. செந்தமிழ் தழுவிய தோளைச் சிறை தழுவியது. என்றாலும் செயல் வீரர் சிந்தை கலங்கவில்லை. 'மொழியன்னைக்கு முடிபுனையும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். வெற்றிவிழாக் கண்டன்றி வேறு விழாக் காணோம்' என்று சூளுரைத்துச் சிறை வாழ்வைச் செந்தமிழ் வாழ்வாக்கினார் சிந்தை எல்லாம் செந்தமிழே நிறைந்த செம்மல். அந்தச் சூளுரை அன்றோடு நிற்கவில்லை. அது தொடர்கதை யாயிற்று. ஆறுமுகம் போல் ஆறுமுறை சூளுரைத்து, சீறுமுகத்தைச் சிந்தனை முகமாக்கி, வேறு முகத்தையும் மாறுமுகமாககி வெற்றிபெற்றார் களங் கண்ட காவலன் மரபில் வந்தார். அந்த சூளுரை எழுத்தில் மின்னத் தொடங்கியது.

## 'போர்வாள்'

1947ஆம் ஆண்டு, இந்திய வரலாற்றில் பொன்னெழுத்தால் பொறிக்கத்தக்க நல்லாண்டு நற்றமிழ் வாழ்விலும் குறிக்கத்தக்க குறிக்கோள் ஆண்டு அது. இந்திய நாட்டு விடுதலை உரிமைபற்றிக் கருத்து வேறுபாடு தோன்றிய ஆண்டு. காஞ்சி மணிமொழியார் களத்தில் தொடவேண்டிய 'போர்வாளை'க் கரத்தில் தொட்டார். போர்க்களத்தில் ஒலிக்கவேண்டிய வாள் அவைக்களத்தில் ஒலிக்க முற்பட்டது. வீரர் ஏந்த வேண்டிய வாளைக் காளைகள் ஏந்தினர். மார்பிற்குள் பாயவேண்டிய வாள் சிந்தனை நெஞ்சின் ஆழம் பாய்ந்தது. இரத்தம் தோய வேண்டிய வாள் கருத்து மணம் கமழ்ந்தது.

## கைவண்ணம்

காஞ்சி மணிமொழியாரின் கைவண்ணம் போர்வாளில் புறப்படத் தொடங்கியது. அது நாடு முழுமையும் உலாவந்தது. கைவண்ணம் காட்டிய கருத்து வண்ணத்தால், பலர் தெளிவு பெற்றனர். பலர் சிந்தனை வளம் பெற்றனர். அது போர்வாளா, அன்றிக் கூர் வாளா என்று ஐயப்படத்தக்க

அளவிற்கு அதில் மாற்றுக் கொள்கைகள் பற்றிய திறனாய்வுக் கட்டுரைகள் பல தீட்டப் பட்டன. இதனால் பலருக்குத் தெளிவு ஊட் டப்பட்டது.

### சிந்தனைப் போராட்டம்

சிறைப் போராட்டம் சிந்தனைப் போராட்ட மாக மாறியது. எழுச்சிப் போர் எழுத்துப் போராக மாறியது. மாற்றிய பெருமை 'போர்வாளு'க்குரியது. போர்வாளைப் படித் துப் பாசறை அமைத்த மாணவர் பலர்; களங் காணத் துடித்த இளைஞர் பலர்; உணர்ச்சி பெற்றோர் சிலர். அந்த அள விற்கு மொழியுணர்ச்சியும், நாட்டுணர்ச்சி யும போர்வாளால் ஊட்டப்பட்டது. அதனால் திட்டங்கள் பல தீட்டப்பட்டன.

### பேராசிரியர் இளஞ்செழியன்

மணிமொழியார் அவர்களோடு இணைந்து நின்று "போர்வாள்" இதழைப் பேராற்ற லுடன் இயக்கிய பெருமை, மணிமொழியார் தம் அருமந்த தலைமகனார் பேராசிரியர் இளஞ் செழியன் அவர்களைச் சாரும். கொள்கைப் பிடிப்பில் தலைநின்ற 'குமாரசாமி,' இளஞ் செழியன் ஆனார். மொழியில் அவர் கொண டிருந்த ஊற்றம் அவர் பெயரையே தமிழ்ப் பெயராக மாற்றும்படிச் செய்தது. இளஞ் செழியன் அவர்களின் அறிவாராய்ச்சிக் கட்டுரைகள் பல, போர்வாளை அணி செய் தன; சீரிய தலையங்கங்கள் பல, சிந்தனை யைத் தூண்டின. எழுச்சி மிகுந்த அந்த எழுத்துக் களில்யாழிலும் கொழித்தது.தென்றல் அனைய தமிழ் அதில் தவழ்ந்தது. இளமை எழுததோவியங்கள் பல அதில் இடம்பெற்று வளம்பெற்றன. அதன் வாயிலாக எழுத்துல கில் நல்ல தமிழும், வல்ல தமிழும் நடமாடத் தொடங்கின. அரசியல் தொண்டு அருந் தமிழ்த் தொண்டாகவும் திகழ்ந்தது ; கழகத் தொணடு கன்னித்தமிழ்த தொண்டாக மலர்ந்தது. அந்த மலர்ச்சியின் விளைவுதான், கிளர்ச்சிகள் ஓய்ந்து, தளர்ச்சிகள் நீங்கி, அமைதியான முறையில் தமிழ் அத்தாணி மணடபம் ஏறியது; அருமைத் தமிழன்னை அத்தாணி மணடபம் அமர்ந்த வேளையில், அருமைத தலைமகன் எழுபது ஆண்டு நிறைவு எய்தி, விழாக் கோலம் பூணபது, தமிழ வரலாற்றில் வலிவும் பொலிவும் நிறைந்த செய்தியாகும்.

### மாநாடு கண்டார்

மணிமொழியாருக்கும் மாநாடுகளுக்கும் மனப் பொருத்தம் மிகவுண்டு. மாநாடு களையே அவர் மணந்து கொண்டாரோ என்று கருதத்தக்க அளவு, அவர் மாநாடு கண்டாராக விளங்கினார். 1948ஆம் ஆண்டு சூலைத்திங்கள் அவர் கூட்டிய வரலாற்றுச் சிறப்புடைய இந்தி எதிர்ப்பாளர் மாநாடு இதற்கோர் சான்றாகும். தமிழ் மலை யாகிய பேராசிரியர் மறைமலையடிகளார் தலைமையில் கூடிய இம்மொழி மாநாடு எதிர் கால முத்தமிழ்க் காப்பிற்கு அரண் அமைத் தது. அரண் அமைத்த மாநாட்டின் செயலா ளராக அமைந்தவர் நம் அருமை மணிமொழி யார் அவர்கள் ஆவார்கள். அடுத்தது, 1949 ஆம் ஆண்டு சனவரித் திங்களில் கூடிய திருவள்ளுவர் மாநாடு. தமிழகத்தின் தலை சிறந்த பேராசிரியப் பெருமக்கள் பலர் பங்கு கொண்ட இம் மாநாட்டின் செயலராக இருந்து அரும்பணியாற்றியவர் நம் அருமை அண்ணல் மணிமொழியார். இவ்விரு மொழி மாநாடுகளும் முத்தமிழ் மொழியை அத் தாணி மண்டபமேற்ற உறுதுணை புரிந்தன. உறுதுணைக்குப் பெருந்துணை நின்றவர், நம் மணிமொழியார்.

### காஞ்சி

இலக்கியச் சிறப்பும் வரலாற்றுச் சிறப்பும் பெற்றது காஞ்சி. 'உட்காது, எதிர் ஊன்றல் காஞ்சி' என்று காஞ்சித்திணைப்பற்றிப் புறப் பொருள் வெண்பாமாலை கூறும். பகை வருகைகு அஞ்சாது, எதிர்த்து நின்று போர் புரிதல் காஞ்சித்திணையின் இலக்கணமாகும். மணிமொழியாரும் தம் ஊர்ப் பெயருக்கேற்ப, மொழிப் போரிலும், சமுதாயப் போரிலும், களம் கண்டு, பாசறை அமைத்துப் போர் புரிந்தார். மொழிப் போரில் அவர் முன் வைத்த காலைப் பின் வைக்கவில்லை. சருககு மரமாகிய சமுதாயப் போரிலும் அவர் வழுக்கி விழாமல், உள்ள உரத்தோடு எதாத்து நினறார். வெற்றிக் கனியை இப் பொழுது சுவைத்துக் கொண்டிருக்கிறார்.

காஞ்சி என்றால் நிலையாமை என்றொரு பொருள் உண்டு. ஆம், அதுவும் இவர் வாழ்வில் பொருத்தமாக அமைந்திருந்தது. தன்னை எதிர்த்த மாற்றார்களுக்கு நிலை யாமையை அளித்துக் காஞ்சிக காவலன் ஆனார். தான் கண்ட களங்கள் அனைத்திலும் தோல்வி நிலையாமை அடையச் செய்தார்.

(அடுத்த பக்கம் பார்க்க)




(ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகாசாரிய சுவாமிகள்)

"தோன்றில் புகழொடு தோன்றுக
[அஃதிலார்
தோன்றலில் தோன்றுமை நன்று"

என்னும் மறைமொழிக்கேற்பத் தொண்டை நன்னாட்டின் தலைநகராய கச்சியம்பதியின் கண் பெருநகர்த் தமிழ்ப்புலவர் திருவாளர் செங்கல்வராய முதலியார்க்கு இளைய மகனாகத் தோன்றினார் காஞ்சி மணிமொழியார். நற்குடியிற்றோன்றிய இவர் பள்ளியில் கற்கும்போது மொழிப்பற்றும், நாட்டுப்பற்றும் கொண்டு தமிழ் வளர்ச்சி மன்றம், நூலகம் முதலியவற்றைத் தொடங்கிப் புலவர் பெருமக்கள் பலரை வரவழைத்து ஆண்டு விழாக்கள் பல நடத்தித் தொண்டாற்றினார்.

'விளையும் பயிர் முளையிலேயே தெரியும்' என்னும் முதுமொழிக்கேற்ப இவர் இளமையிலேயே அறிவுநலம் செழிக்க விளங்கினார். தந்தையும் அண்ணனும் இறந்துவிட்டதால் பட்டப்படிப்புக்கு வாய்ப்பற்றுப்போய்ப் பள்ளியிறுதி வகுப்போடு நின்றுவிட்டார். இவர் தம் சொந்தச் செலவில் 1921இல் தொடக்கப்பள்ளி ஒன்றைத் தொடங்கி ஒன்பது யாண்டுகள் தொடர்ந்து நடத்தினார். இதை நினைக்கும்போது எல்லையற்ற இன்பம் எல்லார்க்கும் உண்டாகும். இதனால் எல்லாரும் கல்விநலம் பெற வேண்டுமென்பதில் இவர் கொண்ட ஆர்வம் நன்கு புலனாகும். மேலும், இவர் ஆறு யாண்டுகள் பள்ளியாசிரியராகவும், இதழாசிரியராகவும் (பாரதம், செங்குந்த மித்திரன், போர்வாள்) பொறுப்பேற்றுச் சிறந்த கருத்துக்களை அறிஞர்க்குச் சீரிய முறையில் வழங்கி வந்தார்.

தென்னிந்திய செங்குந்தப் பெருமக்கள் சங்கத்தினரின் வற்புறுத்தலால் எட்டு யாண்டுகள் செங்குந்தர் முன்னேற்றத்திற்காகத் தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்தும், சொற்பொழிவாற்றியும் பெரிய தொரு விழிப்புணர்ச்சியை இயற்படுத்தினர். இதை என்றும் யாரும் மறக்க முடியாது. அமிழ்தினும் இனிய மொழியாய தாய்மொழி தமிழ்க்கு இடுக்கண் வருவதைக் காணப் பொறுக்கமாட்டாமல், ஈழத்தடிகளார் இந்தி

(முன் பக்கத் தொடர்ச்சி)

தமிழ்மொழிக் களத்தில் இந்தி நிலையாமை கண்டார். அரசியல் களத்தில், நீண்டநாள் ஆண்ட கட்சி நிலையாமை கண்டார். ஆதலின் காஞ்சியார் என்பது மிகவும் பொருத்தம்.

### மணிமொழியார்

இவர் உதிர்க்கும் சொற்கள் மணி போன்று ஒலிப்பன என்பது இவர் பேச்சைக் கேட்டாலே புரியும். ஒலிபெருக்கியில்லாமலே மணிக் கணக்காகக் கடல்போன்ற மக்கள் வெள்ளத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் இவருடைய வெண்கலத் தொண்டைக்கு உண்டு. ஆண்டு மிகுதியானாலும், இவர் குரலின் வெணகல ஒலி சிறிதும் மாறவில்லை. 'கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ' என்ற பழமொழியைச் 'சொல்லெல்லாம் இவர் சிந்தும் சொல்லாமோ' என்ற புதுமொழியாக மாற்றும் அளவிற்குச் சொல் ஒலியால் வெற்றி கண்ட குரிசில் இவர் ஆவார்.

### மணிவிழா நாயகர்

மணிவிழா நாயகராகத் திகழ்ந்த மாண்பமை நல்லோர், இன்று எழுபதாம் அணி விழாக் கொண்டாடுகின்றார். இவ்விழா, முயற்சிக்கு முடிசூட்டும் விழா; உழைப்பிற்கு விருது நல்கும் விழா. இவ் விழா நாயகர், நூற்றாண்டு விழாவும் கண்டு, தொண்டில் சிறந்து, மாண்புற்று வாழ வாழ்த்துகின்றேன்.



எதிர்ப்புக்கிளர்ச்சியைக் கரூரில் தொடங்கி னூர் என்றறிந்தவுடனே முதன் முறையாகச் சென்னையில் மாற்றுரும் வியக்கும் வண்ணம் இந்தி எதிர்ப்பு ஊர் வ ல ம் ஒன்றைத் தொடங்கி நடத்தினூர். இவரைப்பற்றி, முத லமைச்சராயிருந்து ம றை ந் த, மேன்மை பொருந்திய அறிஞர் அண்ணு அவர்கள் கூறியதாவது:—

''கல்லூரியை விட்டு வெளிவந்த என்னைப் பத்திரிகைத் துறையிலும் பொது வாழ்விலும் ஈடுபடுத்தி முன்னேற்றமடையச் செய்வதில் அவர் எவ்வளவு ஆர்வம் கொண்டிருந்தார் என்பதை எண்ணினுல் இப்போதும் எனக் குப் பெரியதொரு மகிழ்ச்சி ஏற்படுகின் றது.''

அறிஞர் அண்ணு அவர்களே இவ்வாறு இவரைப் பாராட்டியுள்ளார் என்றுல் மணி மொழியாரின் பெருமைக் களவும் உண்டோ?

1949 சனவரித் திங்களில் திருவள்ளுவர் மாநாடு என்ற பெ ய ரி ல் சிறந்த ஒரு மாநாட்டை நடத்தினூர். பேராசிரியர் சக்கிர வர்த்தி நயினூர். பேராசிரியர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனூர், அறிஞர் திரு. வி. க., நாவலர் சோமசுந்தரபாரதியார், அறிஞர் அண்ணு உள்ளிட்ட பல பெருமக்கள் கலந்துகொண்ட அம்மாநாட்டிற்குப் பின் னர்த்தான் திருக்குறளது முழுச்சிறப்பையும் தமிழகம் நன்குணர்ந்து போற்றத் தொடங்கி யது என்று கூறலாம்.

கல்வியை அளித்தும் விழிப்புணர்ச்சியை இயற்படுத்தியும் தமிழர்களை ஆற்றல் மிக் கோராய் ஆக்கிய இவர், ஏற்றமுடைய வாழ்க்கை இனிதே வாழ நூற்றுக்கணக்கில் தமிழ்த் திருமணங்களையும், தன்மானத் திரு மணங்களையும் தலைமை தாங்கி நடத்தி வைத் திருக்கிறூர்.

இந்தி மொழிக் கொடுமையிலிருந்து செந் தமிழைக் காப்பதற்காக இவர் சிறை செல்ல லூற்றூர். அத்துன்புறச் சிறிதும் தயங்கினு ரில்லை. அறுமுறை இவர் சிறை சென்றுள் ளார்.

இளமைப் பருவத்திலிருந்தே தமிழார்வத் துடன் தமிழர்க்குத் தம்மாலான உதவியைச் செய்தும், பொதுவாக 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்று மக்கள் நலத்தின் முன்னேற்றத்திற்காக உழைத்தும் வாழ்ந்து வரும் இவர், அத்தொண்டு காரணமாகவே இன்னும் பல பொறுப்புக்களையேற்றுச் சிறப் போடு பணியாற்றி வருகின்றூர். இத்தகு சீரிய மணிமொழியார்க்குத் தமிழகம் பாராட் டளிக்கக் கடமையுடையது அதைச் செய் யும் தமிழகத்தினரை யெல்லாரும் வாழ்த்தக் கடவர்.

வாழ்க மணிமொழியார்!

வாழ்க தமிழ் மக்கள்!

O

# இனியன் எளியன் பண்பாளன் தொண்டன்

கோ. இராமச்சந்திரன், எம்.ஏ.,

நடை உடை பாவனைகளே நாகரிக வளர்ச்சியைக் காட்டும் அளவுகோல்கள் என மக்களுள் பெரும்பாலோர் தவறுபட எண்ணிக் கொண்டு வாழும் இந்த நூற்றுண்டில், உழைப்பாலும், மொழிப் பற்றுலும், பகுத்தறிவாலும் உயர்ந்த நிலையில் சீர்திருத்தவாதிகளாகத் தொண்டு புரிந்து வாழுகின்ற சான்ரோர்களும் சிலர் இருந்து வருகின்றனர். "பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்." என்று சொன்னவர் திருவள்ளுவர். அவர் காட்டிய வழிநின்று 'பிறர்க்கென வாழும்' பெற்றியாளர்களாய்—நாட்டு மக்களுக்கென வாழும் பெருந்தகையாளர்களாய்—அவர்கள் விளங்கி வருகின்றனர். அத்தகைய சான்ரோர்களாலேயே நாட்டிற்கும் மொழிக்கும் நன்மைகள் ஏற்படுகின்றன. அவர்களிலே ஒருவராக விளங்குபவர் காஞ்சிமாநகர் தந்த மணிமொழியார் ஆவார்.

### தொண்டு :

மக்கள் அறிவு பெற்றுச் சிறப்படைய வழி கோலுபவர்கள், கண்களென விளங்கும் ஆசிரியர்களேயாவர்.

*"அன்ன யாவினும்*
*புண்ணியம் கோடி*
*ஆங்கோர் ஏழைக்கு*
*எழுத்து அறிவித்தல்,"*

எனப் பாடிச் சென்ருர் பாரதியார். எழுத்தறிவிக்கின்ற நல்ல பணியைச் செய்து முடிக்கும் பொறுப்பு இன்றும் ஆசிரியர்களுக்கே வழங்கப்பட்டுள்ளது. தொடக்க காலத்தில் அத்தகைய பொறுப்பினை ஏற்று, பல ஆயிர மாயிரம் பிள்ளைகளுக்கு ஆசிரியராக அமைந்து, தொண்டு புரிந்து அறிவு ஒளியை வழங்கியவர் காஞ்சி மணிமொழியார் அவர்கள். சில ஆண்டுகளுக்குப் பின்னர் எழுத்தாளராக—வார, மாத இதழ்களின் ஆசிரியராக—அமைந்து அரும்பணி புரிந்தார். கல்வி வாயிலாக எவ்வாறு பிள்ளைகளுக்கு அறிவு ஒளியை வழங்க முடியுமோ அவ்வாறே இதழ்கள்—ஏடுகள் வாயிலாகச் சிறிதளவே கற்ற பெரியவர்களுக்கும் மற்றவர்களுக்கும் அறிவுச் செல்வத்தை—அரசியலை—நாட்டு நடப்பினை, வழங்கி மகிழ்ச்சியை ஊட்ட முடியும் என்ற நம்பிக்கையோடு, அந்தப் பணியில் இவர் ஈடுபட்டார். தம்முடைய எழுத்துக்களின் மூலம்—சீர்திருத்தக் கொள்கைகளின் மூலம் மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஊட்டியும், வழிகாட்டியும் வாழ்ந்த எழுத்தாளர்களிலே இவர் தலை சிறநதவராக விளங்கினுர்.—இப்பொழுதும் விளங்குகிருர். வாழ்க்கையில் எழுபது ஆண்டுகளைக் கழித்துவிட்ட இந்தச் சான்ருேரை அவர்களுக்கெல்லாம் வழிகாட்டியவராய் விளங்குகிருர் எனக் கூறுவது மிகையன்று.

*"மாண்டவென் மனைவியொடு*
*மக்களும் நிரம்பினர்*
*யான்கண் டனையரென்*
*னிளையரும் வேந்தனும்*
*அல்லவை செய்யான் காக்கும்...,"*

எனும் புறநானூற்றுப் பாடலின் சிறப்பை விளக்கி நிற்கும் மணிமொழியார்—பேச்சாலும் அயராது உழைக்கும் ஆற்றலாலும், நரைதிரை இன்றி இளையவர் போலவே தோற்றந்தரும் தொண்டர்—வாய்ச்சொல்

வீரராக விளங்காமல், சீர்திருத்தக் கொள்கைகளைப் பொன்னேபோல் போற்றிப் பின்பற்றி வாழ்வதோடு, மற்றவர்களும் அவ்வாறு வாழ முற்படும் வண்ணம் பல திருமணங்களைச் சீர்திருத்த முறையிலே (பண்டைத் தமிழர்கள் கண்ட நெறிப்படி) நடத்திக் கொடுத்துள்ளார். சீர்திருத்தக் கொள்கைகளை விரும்பாதவராயின், 'பிற்பட்ட சமூகச் சங்கம்' என்னும் அமைப்பின் தலைவராக அமர்ந்து பணியாற்ற இவர் ஒருப்பட்டிருக்க மாட்டார் அல்லரோ?

**அரசியல் நெறி :**

பகுத்தறிவுக்குச் சிறப்புத் தராமல் அரசியலை நடத்துபவர்கள் பலர், அறிவியலின் துணையொடு நிலவுப் பயணத்தை மேற்கொண்டு மீளும் சாதனைமிக்க இந்த 70-ஆம் ஆண்டிலும் வாழ்ந்து வருகின்றனர். நம் நாட்டிலோ பகுத்தறிவுவாதிகளாக இருந்து கொண்டு அரசியலில் ஈடுபட்டு நாணயமுடன் நடந்துகொள்ளுபவர்கள் சிலரே உள்ளனர். அத்தகையவர்கள், தாம் சார்ந்து நிற்கும் அரசியல் நெறிகளுக்கு—கட்சிகளுக்கு—இடையூறுகளை விளைவிக்காமல், கொள்கைகளுக்கெனவே வாழ்ந்து வருகின்றனர். உள்ளத்தால் உயர்ந்து விளங்கும் அத்தகைய பண்பாளர்களுள் ஒருவராக—திருக்குறளின் மாண்பினை நாடெங்கும் உணர்த்திய பெரியோராக—(திருவள்ளுவர் கூறும் இலக்கியத்திற்கு இலக்கணமாக)விளங்குபவரே மணிமொழியார். உயர்வு உள்ளும், உள்ளத்தின் மாண்பினைக் குறள் பின்வருமாறு குறிப்பிடுகிறது :

> " *வெள்ளத் தனைய மலர் நீட்டம்*
> *[மாந்தர்தம்*
> *உள்ளத் தனைய துயர்வு.*"

மேலும், 'தெருவெல்லாம் தமிழ் முழக்கம்' செய்யவேண்டும் எனக் கூறிய பாரதியாரின் கூற்றைச் செயற்படுத்திக் காட்டும் நெறியாளராக இவர் திகழுகிறார். 'தமிழை,'இந்தி நசுக்கி விடக் கூடாது என்பதற்காக இவர் பட்ட தொல்லைகள் பலவாகும். இல்லையென்றால் இவர் சிறை சென்றிருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காதல்லவா?

**எளிமை :**

> " *காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல*
> *[னல்லனேல்*
> *மீக்கூறு மன்ன நிலம்.*"

மன்னன் மேற் கூறியவாறு வாழவேண்டும்; வாழ்ந்தால் அவனுடைய நாட்டை உலகம் புகழும் என்றார் திருவள்ளுவர். அது முடியாட்சி நிலவிய காலம். ஆனால் குடியாட்சி நடைபெறும் இந்தக் காலத்திலும் அரசியல்வாதி அப்படித்தான் வாழ வேண்டும் என்பதைக் குறிப்பினால் புலவர் புலப்படுத்தினார் எனக் கூறுவது தவறு அன்று. உணவு, உடை, பேச்சு ஆகிய எல்லாப் பழக்கங்களிலும் எளிமையைப் போற்றி மேற்கொண்டு வாழும் நெறியாளராகிய மணிமொழியார், அரசியலிலும் ஆடம்பரத்திற்கிடமின்றி எளிமை நெறியைப் போற்றித் தொண்டாற்றி வருகிறார். பிறருக்கு ஏற்படும் இடர்களைக் களையத் தம்மாலியன்ற அளவு இவர் உதவியளித்து வருகிறார். இவ்வாறு எளிமையைப் போற்றும் பண்புடையவர்கள் நம்முடைய நாட்டில் பெருக வேண்டும்.

> " *நல்லது செய்த லாற்றீ ராயினும்*
> *அல்லது செய்தல் ஓம்புமின்,*"

எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. மணிமொழியார் அவர்களோ புறநானூறு காட்டும் நெறிப்படி நன்மைகளைச் செய்வதோடு அமையாது—மேலும் ஒருபடி சென்று மற்றவர்களுக்குத் தீமைகளைச் செய்யாமல் வாழ்ந்து வருவதிலும் மனநிறைவு காணாது—பிறர் தமக்குச் செய்யும் இன்னாமை கண்டு வெகுளாமல் அமைதி காக்கும் மாண்புடையவராகவே இன்றளவும் வாழ்ந்து வருகிறார். இவர் மேலும் பல ஆண்டுகள் நலமுடன் வாழ்ந்து தொண்டாற்ற, இயற்கை அருள் புரிய வேண்டும். வளர்க இவர் புகழ்



# பழைய நினைவுகள்

ஏ. கே. சாமி, முன்னாள் மாநகராட்சி உறுப்பினர்

காஞ்சி மணிமொழியார் என்ற திருப்பெயரை அறியாத கழகத்தவர் இல்லை. சுயமரியாதை இயக்கம், நீதிக்கட்சி, திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் என்ற நீண்ட அரசியல் பாரம்பரையின் சொந்தக்காரர் பெரியவர் காஞ்சி மணிமொழியார் அவர்கள். 1927ல், சுயமரியாதை இயக்கம் தோன்றுவதற்குமுன் தன் தந்தையின் இறுதிச் சடங்கை, கொள்கைக்கேற்ப 1919லேயே செய்துமுடித்த செம்மல் அவர்.

பெரியார் திருமணம் செய்யப்போகும் விஷயத்தை முதன்முதலில் நான் வந்து அறிவித்ததும், போர்வாள் பத்திரிகை வேலைகளை அப்படியே போட்டுவிட்டு, மிகக் குறுகிய நேரத்தில் ஒரு படையே திரட்டினாற்போல் திருவாளர்கள் ஜக்கரியா, பாவலர் அப்துல் காதர், புலவர் செல்வராஜ், டி. எம். பார்த்தசாரதி, ஆர்பர் ஷண்முகம் மற்றும் பலருடன் துடிதுடித்த நெஞ்சத்தோடு திருமணப் பதிவாளர் அலுவலகம் சென்று உண்மையை உணர்ந்து, கொள்கைக்கு ஊறு நேராதிருக்க, எது எது செய்யவேண்டுமோ அது அத்தனையும் மின்னல் வேகத்தில் செய்ததோடு, சென்னை திராவிடர் கழக மாவட்டக் கமிட்டியைக் கூட்டுவதற்கு எடுத்துக் கொண்ட முயற்சி, அலைந்த அலைச்சல், செலவழித்த நாட்கள் முக்கியஸ்தர்களிடம் கலந்து பேசிய பேச்சுகள் நினைக்கத் தக்கனவாகும்.

அந்நாள் மாவட்டக் கமிட்டித் தலைவராக இருந்தவர் திரு. சி. தங்கராஜ். சரிக்கட்ட முடியாதவர்களாக இருந்த திருவாளர்கள் எஸ். குருசாமி, என். எஸ். தங்கரூபன், எம். கே. டி. சுப்ரமணியம், ஆர். கே. முனுசாமி, பெரியமெட் சுப்பராயலு, ஆர்பர் ஷண்முகம், குப்பம் குப்புசாமி, மயிலை தங்கவேலு, எம். எஸ். மணி, மூலக்கொத்தலம் வடிவேலு, சி. ஆர். சின்னப்பன் இவர்களிடம் மணிமொழியார் வாதிட்ட திறன் மறக்க முடியாததாகும். எங்களுடன் முழுமையாக ஒத்துழைத்தவர் அருமை நண்பர் காலஞ்சென்ற எம். எஸ். முத்து ஆவார்.

தனிக் கழகம் காண வித்திட்ட ஒரு சிலரில், பெரியவர் காஞ்சி மணிமொழியார் முதன்மையானவர் என்றால் அது மிகையாகாது. தனிக் கழகம் காண வித்திட்டதே சென்னைதான் என்பது எவராலும் மறக்கவோ, மறுக்கவோ முடியாதது.

என்னைத் தலைவனாகக் கொண்டிருந்த மேற்குச் சென்னை திராவிட கழகம், வாரந்தோறும் பேச்சுப் பயிற்சி, குறள் வகுப்பு, சொற்போர் நிகழ்ச்சிகளை நிலையாக நடத்தி வந்தது. அதில் பங்கேற்று பயிற்சியளித்த பல பெரியோர்களில், காஞ்சி மணிமொழியார் மிக முக்கியமானவர். அவர் மட்டும் அல்லாமல் தன் அருமை மகன் திரு. மா. இளஞ்செழியன் எம். ஏ. அவர்களையும் ஈடுபடுத்துவார். இருவருமே வண்டிச் செலவுக்குக்கூட காசு வாங்காமல் குறித்த நேரம் தவறாது வந்து கட்சிப்பணி ஆற்றியவர்கள்; உண்மையாகவே சேரிவாழ் மக்களிடம் நீங்காப் பற்றும் பாசமும் கொண்டு பழகும் தன்மை கொண்டவர்கள்.

அந்தக் காலத்தில் நம் பத்திரிகைகள் ஓகோ என்று விற்பனையாகிவிடவில்லை. கருத்துக் களஞ்சியமான, ஒப்பற்ற ஒரு 'போர்வாள்' பத்திரிகைகூட நஷ்டத்தில் தான் ஏறுநடை போட்டுவந்தது. கொள்கைக்காகவே, போர்வாள் தொடர்ந்து நடந்துவந்தது என்பது யாவரும் அறிந்ததே. சொந்தப் பணத்தைச் செலவிட்டு கட்சியை வளர்த்தவர்களின் வரிசையில் மிக முன் நிற்க வேண்டியவர்தான் பெரியவர் காஞ்சி மணிமொழியார் என்று தலைநிமிர்ந்து சொல்லலாம்.

கட்சிக்கும், கொள்கைக்கும், அறிவுக்கும், இலக்கியத்திற்கும் ஈடு இணையற்ற ஒப்பற்ற ஏடாக இருந்தது போர்வாள் என்ற வாரப பத்திரிகை. அதன் ஆசிரியர் திரு. காஞ்சி மணிமொழியார். அது, கழகத்தின் பிரச்சார பீரங்கி. அதிர்ச்சியை, காங்கிரஸ் ஆட்சியாளர்களுக்கும், மருட்சியைப் பிற்போக்கு மதவாதிகளுக்கும், எழுச்சியை-உணர்ச்சியை கழகத் தோழர்களுக்கும் உண்டாக்கும்

எழுத்தாற்றல் கொண்ட கழகப் பிரச்சார ஏடுதான் போர்வாள். அதில் வெளிவந்த கதைகள், கட்டுரைகள் நெஞ்சைத் தொடும் ஆற்றல் படைத்தவை. அதன் சிறப்பிற்குத் தகுந்த மாதிரிதான் கேலிச் சித்திரம் தீட்டச் செய்வார். கனல் தெறிக்கும் கட்டுரைகள், நெஞ்சை அள்ளும் கதைகள் வெளியிடுவார்.

இந்தி எழுத்துக்களை தார் கொண்டு அழிப்பது என்று கழகம் முடிவு செய்து முக்கியஸ்தர்கள் ஒவ்வொருவருக்கும் கழகம் ஒவ்வொரு இடம் குறித்தும் இருந்தது. எனக்கு, பெரம்பூர் ரயிலடி நிலையம். மணி மொழியார் அவர்களுக்கு கடற்கரைச் சாலை யிலுள்ள தலைமை அஞ்சல் அலுவலகம். மணிமொழியார் தார்கொண்டு இந்தி எழுத் துக்களை அழித்தபோது ஜி. பி. ஓ. மாடியி லிருந்து சோடா பாட்டில்கள், கண்ணாடி டம்ளர்கள், சன்னல் கண்ணாடிகள் துப்பாக் கியிலிருந்து வெளிப்படும் ரவைகள்போல் அவர்மேல் வீசப்பட்டன. நெஞ்சு திடுக்கிடும் காட்சி இது. கொஞ்சமும் அஞ்சாமல் கரு மமே கண்ணாக இருந்து இந்தி எழுத்துக் களை, தோழர்களின் ஆரவாரத்திடையே அழித்து முடித்தார்.

பவநகர் வந்தபோதும், திவாகர் வந்த போதும், மேத்தா வந்தபோதும், நேரு வந்த போதும் நடந்த கறுப்புக்கொடி நிகழ்ச்சிகள் மறக்கக் கூடியனவா? என்ன கொடூரமா னவை! கொலைக்கஞ்சாப் பாவிகளான காங் கிரஸ்காரர்கள் தேசிய கொடிக் கம்புகளில் கத்திகளைக் கட்டி வந்து, நம் தோழர்களை காயப்படுத்தினர்கள். இது போதாதென்று போலீசாரின் மிருகத்தனமான தடியடி வேறு. குதிரைப் படைகளை விட்டு விரட்டி விரட்டி அடித்த கொடுமைகள்தான் எப்படிப்பட்டது! இவை அத்தனையிலும் கடும் பங்கு ஏற்றவர் தான் பெரியவர் காஞ்சி மணிமொழியார். அவரைப்பற்றி நினைப்பதை எல்லாம் எழுதுவ தானல் ஏடு அடங்காது. தியாகத்தின் திரு உருவமே அவர்.

அவர்தம் உழைப்புக்குத் தகுந்த நன்றியை நாம் காட்டி இருக்கிறோமா? நினைத்தால் பெருமூச்சுதான் வெளிப்படுகிறது உழைத்த உள்ளங்களில்.

''என்னல் கட்சிக்கு என்ன லாபம் என்று எண்ணுபவரே கட்சிக்காரர். கட்சியால் எனக்கு என்ன லாபம் என்று எண்ணுபவர் கட்சிக்காரர் அல்ல.'' இது நம் முதல்வர் கலைஞரின் கருத்து. மிக இனிக்கிறது.




இன்று தமிழர் கொடி தமிழகத்திற் பறக் கிறது. தமிழ்நாடு தமிழர் ஆட்சியில் தழைத்து வருகிறது. மக்கள் மனத்தை இந்தத் தமிழாட்சி கவர்ந்துவிட்டது. அண்ணாவின் ஆவி கடற்கரையிற் காவலிருந்து தமிழ்ப் பண்பாட்டைக் காக்கிறது. தமிழர் இயக்கம் தொடங்கியவருள் நானும் ஒருவன். அல்லும் பகலும் தமிழ் முன்னேற்றத்திற்கே எனது பேரு உறங்கா நடைபோட்டு வீறுடன் முன் செல்லுகிறது. தமிழுக்கு நல்ல காலம் வந்து விட்டது. அதன் பெருமையில் எத்தனையோ அன்பு வீரர் இரத்தம் ஓடு கிறது. அவருள் தலையாயவர் காஞ்சி மணி மொழியார். அவர் முன்னேற்றப் படையின் முரசொலிக்கேற்ற நடை போட்டு எத்த னையோ அரிய தொண்டுகளைச் செய்துள் ளார். அண்ணாவின் கண்ணாக விளங்கியவர் மணிமொழியார். இவர் மொழியார் மட்டு மல்ல, நல்ல பணியாரும் ஆவார். பேச்சும் செயலும் பெருமிதக் கலப்புள்ள திருத் தொண்டரான மணிமொழியார் செய்த பணி நலம் பொலிக. அவர் 71-ம் அகவையர். அதைத் திருப்பிப் போட்டால் 17. என்றும் பதினேழாக இளம்பொலிவுடன் மணிமொழி யார் பணி பணிந்து வாழ்க, வாழ்க. *

இரண்டாமவர்கள் மலிந்துள்ள இந்நாளில் உழைத்தவர்கள் உருக்குலைந்து வாழ்நாளை முடிக்கத்தான் வேண்டும். எல்லாக் கட்சி யிலும் இன்று இருக்கும் நீதி இது. உழைத்த வர்கள் கண்ணுக்குத் தெரிய வாய்ப்பேது? அதட்டிப் பேசணும்; அடங்காப்பிடாரியாக இருக்கணும்; அல்லது பிள்ளையைக் கிள்ளி விட்டுவிட்டு தொட்டிலை ஆட்டத் தெரிந் திருக்கணும். துதிபாடி பெருமை செய்யக் கற்றிருக்கணும் இந்தக் கலைகளில் வல்ல வராக இருந்தால் ''இன்ப நிலைதானே வந்து எய்தும் பராபரமே,'' என்று நாமும் சிந்து பாடலாம்.

வாழ்க மணிமொழியார் திருநாமம்!
வளர்க அவர்தம் தொண்டு!

காஞ்சி மணிமொழியாரைப்பற்றி நினைக்கும்போது, எனது எண்ணம் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் ஓடிச் செல்கின்றது. எனது பத்தாவது வயதில் நான் வாலாசாபாத் இந்துமத பாடசாலையில் ஆறும் வகுப்பு மாணவனுகக் கால்வைத்த காலத்தில் என்னை அன்போடு அழைத்துத் தன் வகுப்பில் இருக்கச் செய்து வாழ்த்து வழங்கிய பெரியார் திரு. காஞ்சி மணிமொழியார் அவர்கள் ஆவார்கள். அவர்களிடம் ஒரு சில நாட்களே நான் பாடம் பயின்றேன் என்ருலும் என் உள்ளத்தில் நான் கண்டு கடந்த எத்தனையோ ஆசிரியர்களைக் காட்டிலும் அவர்கள் நிலைத்த இடம் பெற்றுவிட்டார்கள். அன்று தொடங்கி இன்று வரையில் அவர்கள் என் வாழ்வின் நலம் கண்டு மகிழ்ந்து வாழ்த்தி வருகிருர்கள்.

அவர்தம் அரசியல் வாழ்வு தமிழர்களால் போற்றக்கூடிய ஒன்று. பொன்னுர் தமிழ் நாடும், அதில் வழங்கும் தமிழ் மொழியும் அவர்தம் கண்ணுனவை. அவற்றிற்கு ஏதம் வரும்போதெல்லாம் பெற்றமகன் தாயைப் பேணும் பெருநிலையில் வீரத் தொண்டாற்றி விளங்கிவரும் செம்மலார் அவர்கள். அவர்கள். அத்தகைய அருந்தொண்டால் சிறைத் தண்டனை முதலியன ஏற்ற காலத்திலும் குன்ரு உளத்தொடு, குலையா நலத்தொடு அமைந்து தமிழ், தமிழர் நலங்காக்கும் தலைமைக் கடப்பாட்டில் நின்ற நிலைகளை மறக்க முடியுங் கொல்?

அவர்தம் அருமை மக்கள் இருவரும் பச்சையப்பரில் பயின்றபோது என்னிடம் பரிவு காட்டியவர்கள். அவர்தம் குடும்பத்தில் ஒருவனுகவே மணிமொழியார் அவர்களும், அவர்தம் மக்களும் என்னை ஏற்று நின்ற தகைமை என்னுல் மறக்கமுடியாதது. காஞ்சி நகரம் தந்த கண்மணிகளுள் உயர்ந்த பேரறிஞர் அண்ணுவுக்கு உறுதுணையாக நின்ற வெற்றித்தூணுகவே காஞ்சி மணிமொழியார் அவர்கள் திகழ்ந்தார்கள்.

காஞ்சி மணிமொழியார் அவர்தம் எழுத்தும் பேச்சும் யாவரையும் ஈர்க்கவல்லன. அவர் மகனுர் இளஞ்செழியன் அவர்களும்



அதே மரபினைக் கட்டிக்காத்துப் போற்றி வருகிருர்கள். மணிமொழியார்தம் பேச்சினைக் கேட்டும் இதழ்களில் வந்த அவர்தம் எழுத்துக்களைப் படித்தும் தம்மைமறந்து தமிழுக்குத் தொண்டாற்ற முன்வந்தவர் பலர்.

திராவிட முன்னேற்றக் கழகம் தொண்டின் வலிமையால் பின்னுள் பதவி ஏற்ற காலத்தில் காஞ்சி மணிமொழியார் சட்டமன்ற உறுப்பினராகத் திகழ்ந்தார். கழகத்திலும் பல பொறுப்புள்ள பதவிகளை வகித்தார்—வகிக்கிருர். அரசியலிலும் நல்ல செல்வாக்கு பெற்றுத் திகழ்கின்ருர். இத்தனையும் இருந்தும் அவர்தம் எளிமையும் பணிவார்ந்த பண்பாடும் அவரை மனிதருள் மாணிக்கமாக்குகின்றன. அவர் வாயில் கடுஞ்சொல் காண்பதரிது; கடமை வழியினின்று அவர் வழுவியவரல்லர். அவர் மனிதன் இவ்வாறு வாழவேண்டும் என்று உலகுக்கு எடுத்துக்காட்டாக அமைபவர். அவர்தம் நலமெலாம் சிறக்க என வாழ்த்துகின்றேன்.

காஞ்சிமணிமொழியார் எழுபதைக்கடந்து எழுபத்தொன்றில் கால்வைக்கப் போவதறிந்து மகிழ்கின்றேன். அவர்தம் வாழ்வு தமிழ் வாழ்வு. எனவே இன்னும் பன்னெடுங்கால் அவர்கள் பண்ணுர் தமிழகத்தில் நாடும் மொழியும் நாமும் சிறக்கும் வகையில் தொண்டாற்றித் தூய உளத்தொடு, நமக்கெல்லாம் வழிகாட்டியாக விளங்குவார்களாக!

வாழ்க மணிமொழியார்! வளர்க அவர்தம் தொண்டுகள்!

✽

**நண்பர் காஞ்சி மணிமொழியார்** அவர்கள்என் நினைவை விட்டு நீங்காத சிலருள் ஒருவர். தொண்டுள்ளம் கொண்டவர் - கடமையுணர்ச்சி மிக்கவர் - தந்நலம் பேணுதவர் - பொது வாழ்வு ஒன்றினையே குறிக்கோளாகக் கொண்டவர் - நகைத்த முகமும், நல்லவர்களைக் கண்டால், அவர்களை நாடித் தம் நண்பர்களாக்கிக் கொள்ளும் நற்பண்பும் பெற்றவர்.

இப்படிப்பட்ட சிறப்பியல்புகளைப் பெற்றுள்ள ஒரு நல்லவரின் எழுபத்தோராவது பிறந்தநாளை, அவருடைய நண்பர்கள் கொண்டாட முன் வந்திருப்பதறிந்து பெரு மகிழ்ச்சி அடைகிறேன் — அவர்களைப் பாராட்டுகிறேன் — நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறேன்.



**காஞ்சி மணிமொழியார்**, யார்? அவர் என்ன செய்தார்?— என்பதைத் தெரிந்து கொள்ளும் பேற்றினைப் பெருதவர்கள், இவ்விழாவின் வாயிலாக, அவரையும், அவர் நாட்டுக்கும், மக்களுக்கும் ஆற்றி வரும் நற்பணியினையும் அறிந்து மகிழும் ஒரு நல்ல வாய்ப்பு ஏற்படுகின்றது.

**காஞ்சி மணிமொழியார்** அவர்கள் முப்பது ஆண்டுகளுக்கு முன்பிருந்தே எனக்கு அறிமுகமானவர்- நண்பரானவர்.

எனக்கும் அவருக்கும் நட்புரிமை உண்டாகும் ஒரு நல்ல வாய்ப்பினை உண்டாக்கியவர் யார் என்பதை அறிந்தால், நீங்கள் வியப்பில் ஆழ்ந்து விடுவீர்கள்.

அது வேறு யாருமல்ல.

தமிழ் மொழிக்குப் பேரிடையூற்றினை விளைவிக்க, முதன் முதலில் முனைந்த - துணிந்த திருவாளர் ச. இராசகோபாலாச்சாரியார் அவர்களேதான்.

அவர், கட்டாய இந்தியைப் புகுத்தியிராவிட்டால், நான் எங்கோ! மணிமொழியார் எங்கோ! இதனைப் படிக்கும் நீங்கள் எங்கோ, திசைக் கொருவராக—ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெருதவர்களாக இருந்திருப்போம்.

மொழி ஆர்வம் கொண்டுள்ள தமிழ் மக்கள் அனைவரையும் ஒன்று சேர்க்கும் நல்ல செயலினைப் புரிந்த அன்பர் ஆச்சாரியார் அவர்களை இந்த வகையில் நாம் பாராட்ட வேண்டித்தான் இருக்கிறது.

கெட்ட எண்ணத்தோடு செய்யப்பட்ட ஒரு செயலாகக் கட்டாய இந்தி நுழைப்பு இருந்த போதிலும், அதன் வாயிலாகத்தானே நாம் அனைவரும் ஒன்று சேரும் வாய்ப்பு ஏற்பட்டதென்று அறிந்து மகிழ்கிறோம்.

இதனல்தானே என்னவோ, நம்மையெல்லாம் மீளாத்துயரில் ஆழ்த்திவிட்டு மறைந்த பேரறிஞர் அண்ணு அவர்கள், தாம் பதவி ஏற்றதும், முதன் முதலில் அன்பர் ஆச்சாரியார் அவர்களைப் பார்த்து நன்றி தெரிவித்திருக்கிறார்.

அப்போது, நானும் என்போன்ற சில சாதாரன மாணவர்களும், ஏன் இந்த அண்ணு அந்த ஆளைப் போய்ப் பார்த்தார் என்று எண்ணினோம்.

பின்னர்தான், அவருடைய பெருந்தன்மையும், அவர் போய்ப் பார்த்ததன் உட்கருத்தும் என்ன என்பதும், ஏன் என்பதும் தெரிந்தன.

**"அன்பரே! ஆச்சாரியார் அவர்களே! தங்களுக்கு என் நன்றி.**

# காஞ்சி மணிமொழியார்

தாங்கள் கட்டாய இந்தியை புகுத்தினீர்கள், அதனால் தமிழ் மக்களாகிய நாங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தோம்.

இன்று நானும் எனது தம்பிமார்களும் நாட்டை ஆளும் நல்ல வாய்ப்பினைப் பெற்றோம்.

இந்த நிலை, இனி என்றும் நீடிக்க வேண்டும்—நாட்டுக்கு நல்ல பல செயல்களைச் செய்யத் துணை புரியவேண்டும் ''

என்று கேட்டுக் கொள்வதுபோல் அமைந்திருந்தது—அண்ணா, ஆச்சாரியார் அவர்களைக் கண்டு அளவளாவிய நிகழ்ச்சி.

* * *

காஞ்சி மணிமொழியார் அவர்களின் தமிழ்த் தொண்டு என்னையும் அவரையும் பிரிக்க முடியாதபடி—பிரிய முடியாதபடி பிணைத்துவிட்டது.

கருவூரிலுள்ள ஒரு அன்னக் காவடி மடத்தில், எங்கோ மூலையில் அமர்ந்துகொண்டு, அவர்களிடும் பிச்சை உணவை உண்டு, தமிழ்ப்பணி ஆற்றிக்கொண்டு இருந்த நான், ஒருநாள், 10-2-37(என்று நினைக்கிறேன்).—அன்று வெளிவந்த நாள் இதழினைப் பார்த்த போது, திரு. ச. இராசகோபாலாச்சாரி அவர்கள், தாம் தமிழ்நாட்டின் முதல் அமைச்சராகும் வாய்ப்புக் கிடைத்ததால், தமிழ் நாட்டில் உள்ள உயர்நிலைப் பள்ளிக்கூடங்களில், இந்தி மொழியைக் கட்டாயப் பாடமாக ஆக்கப் போவதாகவும், அதுதான் தம்முடைய முதற் பணியென்றும் கூறி, ஒரு அறிகை வெளியிட்டிருந்தார். இதனைப் பார்த்ததும் நான் பெரும் அதிர்ச்சிக்குள்ளானேன்.

இங்கு, தமிழ் நாட்டில் தமிழே இன்னும் கட்டாயப் பாடமாக இல்லாத ஒரு இரங்கத் தக்க நிலையில், எங்கோ, வடக்கே ஒரு சிலரால் மட்டுமே பேசப்படும் ஒரு மொழியைக் கட்டாயப் பாடமாக ஆக்குவதா என்றெண்ணியபோது என் உள்ளம் குமுறிற்று—குருதி கொதித்தது.

உடனே அஞ்சல் நிலையத்திற்கு விரைந்து சென்று, ஒரு கம்பிச் செய்தி (தந்தி) வாயிலாக இந்த வேண்டாத—விரும்பத்தகாத திட்டத்தைக் கைவிடும்படி அறிவித்துவிட்டு, அந்தச் செய்தியைத் தமிழில் மொழி பெயர்த்து, அதனை ஒரு சிறிய அறிக்கையாக அச்சிட்டுத் தமிழ் நாட்டின் பல பகுதிகளுக்கும், அப்போது எனக்குத் தெரிந்திருந்த முகவரிகளை வைத்துக்கொண்டு, அதனை அனுப்பி வைத்தேன். அப்படி அனுப்பி வைக்கப்பட்டவர்களில் காஞ்சி மணிமொழியாரும் ஒருவர் என்பதை இங்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

காஞ்சி மணிமொழியார் அவர்களை எனக்கு முதலில் அறிமுகஞ் செய்து வைத்தவர், சென்னை பவளக்காரத் தெருவிலுள்ள சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பொறுப்பாளராக இருக்கும் திரு. சுப்பையா அவர்களே என்பதையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

அன்று முதலே, எனக்கும் காஞ்சி மணிமொழியார் அவர்களுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டுக் கட்டாய இந்தியை எதிர்ப்பதில் ஒருங்கிணைந்து பணிபுரியலானோம்.

எங்கோ, முகவரி தெரியாத ஒருவனால் துவக்கப்பட்ட இந்தி எதிர்ப்புக்குத் தமிழகத்தின் தலைநகரான சென்னையில் இவ்வளவு பெரிய ஆதரவு இருக்கிறதே எனபதை, நமது நணபர் காஞ்சி மணிமொழியார் நடத்திக் காட்டிய ஒரு மாபெரும் இந்தி எதிர்ப்பு ஊர்வலத்தின் வாயிலாக அறிந்த எனக்கு மேலும் இந்தி எதிர்ப்பை நல்ல முறையில் நடத்தும் ஊக்கத்தையும், உற்சாகத்தையும் அளித்தது.

ஏறக்குறைய ஒரு கல் நீளத்திற்கு நிரம்பி வழிந்த அந்த ஊர்வலத்தில், சாதி சமய வேறுபாடின்றி, எல்லாப் பிரிவினரும்—காங்கிரசிலே இருந்த தமிழ்ப் பற்றுள்ளவர்களும், தாய்மாரும், மாணவர்களும் இளைஞர்களும், முதியவர்களுமாக ஆர்வத்தோடு, தமிழ்க் கொடியைக் கைகளில் ஏந்திய வண்ணம் கலந்து கொண்ட காட்சி, இன்றும் பெருமிதம் கொள்ளச் செய்கிறது.

ஒரு மொழிக்கு இடுக்கண் வந்துற்றதென்றால், அதிலும், தங்களால் பேசப்படும் உயர் தனிச் செம்மொழியாம் தமிழுக்குப் பேரிடையூறு,—இன்னொரு வேற்று மொழியால் ஏற்படப் போகிறதென்பதனை உணர்ந்த மொழிப் பற்றுடையோர், எத்துணை ஆர்வத்தோடு அதனை எதிர்த்தொழிக்க முன்வருகின்றனர் என்பதனை அன்று—அந்த ஊர்வலத்தின் வாயிலாகக் கணடு களிபேருவகை அடைந்தேன்.

இந்த எழுச்சியும், விழிப்பும் காஞ்சி மணிமொழியார் அவர்களால்தானே ஏற்பட்டதென்பதனை எண்ணும்போது, அவரது பிறந்த நாளை

**மட்டும் கொண்டாடுவதோடு இருந்து விட்டால் போதுமா என்று நினைக்கத் தோன்றுகிறது.**

* * *

அன்று, 1938–ல் நமக்கு எந்தவிதமான அரசியல் தொடர்பும் இருந்ததில்லை.

அப்போது, தமிழ்நாட்டில் இயங்கி வந்த தன்மான இயக்கம், இந்தி எதிர்ப்புக்குத் தன்னுடைய ஒத்துழைப்பைத் தந்து உதவியது தன்மான இயக்கத் தோழர்கள் பலர் இந்தி எதிர்ப்பு அறப் போராட்டத்தில் கலந்து சிறைக்குச் சென்றனர்.

அன்று நீதிக்கட்சியில் இருந்த பல தலைவர்கள் மறைமுகமாகவும், சிலர் வெளிப்படையாகவும் துணைபுரிந்தனர்.

பொதுமக்களோடு தொடர்பு வைத்துக் கொள்ள விரும்பாத சிலர், ஒரு மொழியைக் காக்கச் சிறைக்குத்தான் செல்லவேண்டுமா என்ற ஒரு தவறான கருத்தினைக் கொண்டிருந்தனர்.

என்றபோதிலும், தினைத்துணை நன்றி செய்யினும் அதனைப் பனைத் துணையாக மதிக்கும் பண்பினைப் பெற்ற தமிழ் மக்கள், மொழிக்காக, அவர்கள், தங்களால் முடிந்த அளவு செய்த உதவியை என்றைக்கும் மறக்கமாட்டார்கள்.

எல்லோரும் காஞ்சி மணிமொழியார்களானால், அவருக்கென்று தனியாகச்—சிறப்பான ஒரு விழாவினைக் கொண்டாடும் நிலை ஏற்பட்டிருக்காதல்லவா ?

காஞ்சி மணிமொழியார் அவர்களின் பிறந்த நாளைக கொண்டாடும் இந்த நேரத்தில்......

**மொழியையே தன் உயிராக மதித்துக் காலம் முழுவதும் பணியாற்றிய நமது பேரறிஞர் அண்ணா அவர்களை நாம் மறந்துவிட முடியாது.**

இந்தி நுழைவால் தமிழ்மொழியின் வளர்ச்சியும், வளமும் கெட்டுச் சீரழிந்துவிடுமென்பதனை உணர்ந்த அண்ணா அவர்கள், தம்முடைய அறிவாற்றல் மிக்க பேச்சாலும், எழுத்தாலும் தமிழ் மக்களைத் தட்டி எழுப்பி, நமது அருமைத் தமிழ்மொழியைக் காக்கும் பணியில் ஈடுபடச் செய்தார்.

அதுமட்டுமல்ல!

நேரடியாகவே இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து—அவருடைய அன்னையார், சிற்றன்னையார் (தொத்தா) ஆகியவர்களின் வேண்டுகோளையும் மீறித்,தமிழ்மொழிஒன்றே தம் அன்னையும் தந்தையுமாவார்கள் என்று சூளுரைத்துச் சிறை சென்றார் என்றால், அவருக்கிருந்த தமிழ்ப்பற்று எத்தகையது என்பதனை விளக்க நம்போன்ற சாதாரண மானவர்களால் முடியவே முடியாது.

* * *

**காஞ்சி மணிமொழியார்** அவர்களும் **அண்ணா** அவர்களும் தங்கள் இளமைப் பருவத்திலிருந்தே ஒருவரோடொருவர் பழகி அளவளாவும் வாய்ப்பினைப் பெற்றிருந்தனர்.

காஞ்சிபுரத்திலுள்ள பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளிக்கூடத்தில் தனது இறுதி வகுப்பை முடித்துக்கொண்ட **அண்ணா** அவர்கள் உயர்படிப்புக்காகச் சென்னை சென்ற பின், **காஞ்சி மணிமொழியார்** அவர்கள் அப்பள்ளிக்கூடத்திலேயே ஆசிரியர் பணியாற்றி வந்தார்.

* * *

1934-ல் காஞ்சி மணிமொழியார் சென்னைக்கு—ஒரு மாத இதழின் ஆசிரியராகச் சென்றதிலிருந்து, மீண்டும் அவர்கள் நட்பு நெருக்கமாகி வளரலாயிற்று. **அண்ணா** அவர்களை ஆசிரியராகக் கொண்டு துவககப்பட்ட '**நவயுகம்**' என்ற இதழுக்கு உறுதுணையாக இருந்து, உற்ற நண்பராகப் பணியாற்றியவர் **காஞ்சி மணிமொழியார்** அவர்களே ஆவார்.

* * *

அன்று மாணவர்களுக்கு மட்டுமே ஆசிரியராக இருந்து பணியாற்றிய நமது அருமை நண்பர் **காஞ்சி மணிமொழியார்** அவர்கள், இன்று தமிழ் மககள் அனைவருக்குமே ஆசிரியர் நிலையிலிருந்து பணியாற்றி வருகின்றார்.

எழுத்தறிவித்தவன் இறைவன் என்பதற்கேற்ப, இன்று, தமிழ்மொழிக்குற்ற இடுக்கணை விளக்கிப், பிற மொழிகளின் படையெடுப்பிலிருந்து தமிழ்மொழியினைக் காக்கும் பெரும் பணியில் ஈடுபடும்படி—பங்கு கொள்ளும்படி, தமிழ் மக்கள் அனைவரையும் தட்டி எழுப்பும் பெரும் பேராசிரியராக விளங்குகிறார் **காஞ்சி மணிமொழியார்** அவர்கள்

வாழ்க அவர் மேலும் பல்லாண்டுகள் !

வளர்க அவர் தமிழ்த் தொண்டு வையமெலாம் !

வெல்க ! வெற்றி பெறுக ! என்று வாழ்த்துகிறேன்.

❋

ஆசிரியர் மணிமொழியார்



கருஞ்சட்டை வீரர் மணி மொழியார்



முதல் மாநில மாநாட்டுப்பணி








இந்தி எதிர்ப்பு ஊர்வலமும் மறியலும்

# மொழிப் போர் தொடங்கிய மாவீரர்

---

## தமிழகத்தின் இன்றைய எழுச்சிக்கு அன்றே உழைத்தவர்

---

### அறிஞர் அண்ணாவின் சொற்பொழிவு

---

17—5—60 அன்று சென்னை செயின்ட் மேரிமண்டபத்தில் மட்டற்ற சிறப்புடன் நடை பெற்ற காஞ்சி மணிமொழியார் அவர்களின் மணிவிழாவின்போது மணிமொழியார் அவர் களுக்குப் பொன்னுடை போர்த்திய அறிஞர் **அண்ணு அவர்கள்** ஆற்றிய பாராட்டுச் சொற்பொழிவின் விவரம் :—

"அன்புள்ள தலைவர்கள் அவர்களே! அருமை நண்பர்களே ! நம்முடைய மதிப்பிற் குரிய நணபர் மணிமொழியார் அவர் களுடைய மணிவிழா மிக உற்சாகமான முறையில் இன்று இம் மணிமண்டபத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. நீங்க ளெல்லாம் வெள்ளம்போல் திரண்டு நின்று இந்த மணிவிழாவில் இத்தகைய பேரார்வம் காட்டுவது கண்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

இன்றைய தினம் மணிமொழியார் அவர் கள் அறுபது ஆண்டுகள் நிறைந்தவராக நம்மிடையே காட்சி தருகிருர். அவருக்கு அறுபது வயது நிரம்பிவிட்டது என்னும் உண்மையை, அறிந்தவர்கள் எடுத்துச் சொன்னுல்தான் நமக்குப் புரிகிறதே தவிர, அவரைப பார்த்தவுடனே அவருக்கு வயது அறுபது இருக்கும் என்று எளிதில் நாம் கூறிவிட முடியாது. அறுபதாண்டு நிறைவு பெற்ற மணிமொழியார் அவர்கள், அவ ருடைய வயது நாற்பது அல்லது நாற்பத் தைந்துதான் இருக்கும் என்று எவரும் மதிப் பிடத்தக்க இளமைத் தோற்றத்தோடும், உடல் வலிவோடும் பொலிவோடும் இருப்பது, நமக்கெல்லாம் மட்டற்ற மகிழ்ச்சியையும் பெருமிதத்தையும் தருவதாக அமைந் துள்ளது. நாற்பது ஆண்டுகளாகவும் அதற்கு மேலாகவும் பொதுவாழ்வின் பல்வேறு துறை களில் அவரோடு ஒன்றுபட்டுப் பணியாற்றிய பல நண்பர்களும் தாய்மார்களும் தவருமல் வந்திருந்து, உற்சாகத்தோடு இந்த விழாவில் பங்கேற்றிருப்பது, மேலும் பல மடங்கு மகிழ்ச்சியை நமக்கு அளிப்பதாக இருக்கிறது.

நெருக்கடி மிக்க இந்தக் காலத்தில் ஒருவர் அறுபது ஆண்டுகள் வாழ்வதே அரிய செயல் என்று உடல்நூலார் கருதுகின்றனர். அப்படி அறுபது ஆண்டுகள் வாழ்வதே அரிது என்ருல், அந்த வாழ்க்கையைப் பயனுள்ள வாழ்க்கையாக வாழ்வது அதை விட அரிதாகும். அந்தப் பயனுள்ள வாழ்க் கையை மற்றவர்கள் அறிந்துகொள்ளும் வகையில் வாழ்வது அதைவிட அரிதாகும். அப்படி அறிந்ததை, மற்றவர்கள் எடுத்துச் சொல்லிப் போற்றிப் புகழும் பெருந்தன்மை படைத்தவர்களாக இருப்பதைக் கண்டு மகிழும் நிலையில் வாழ்வது. எல்லாவற்றை விட அரிதாகும். அத்தகைய தலைசிறந்த நிலையைப் பெற்று அறுபதாண்டு வாலிபராக

நம்மிடையே இப்போது காட்சி தருகிறார் மணிமொழியார்.

மணிமொழியார் அவர்கள், சென்ற நாற்பது ஆண்டுகளில், தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகவும் தமிழ் நாட்டின் முன்னேற்றத்திற்காகவும் அருந்தொண்டு, எழிலும் ஏற்றமும் மிகுந்ததாகும். தமிழ் நாட்டின் சென்ற நாற்பதாண்டுக்கால வரலாற்றினை எதிர்காலத்தில் யாராவது எழுதுவார்களானால் அந்த வரலாற்றில் மணிமொழியாரின் தொண்டு சிறப்பானதோர் இடம்பெறும் என்பதில் துளியும் ஐயமில்லை.

பொது வாழ்வில் புகழொளி நிரம்பிய 'இடம்' ஒன்று தனக்கு இருந்தாக வேண்டும் என்று அதனைத் தேடி அலைந்தவர் அல்லர் அவர். எப்போதுமே அவர், அவருக்கென்று ஓர் 'இடம்' தந்தால், ஏற்றுக்கொள்வார் இல்லையேல் அதைப்பற்றிச் சிறிதளவும் கவலைப்படாமல், தான் இருக்கும் இடத்திலிருந்தே சிறந்த முறையில் பணியாற்றுவார். அவர் பெரும்பாலும் மேடையின் முன் வரிசையில் இருப்பதில்லை. அவருடைய குரலை நாம் அதிகமாகக் கேட்பதுமில்லை. கூட்டங்களைக் கூட்டி, பிறர் பலரைப் பேசவைத்து, அப்படிப் பேசவைப்பதன்மூலம் இயக்கத்தை வளர்த்து, அந்த வளர்ச்சியைக் கண்டு பெரு மகிழ்ச்சியடைந்து, அந்த மகிழ்ச்சியால் தன் உடலுக்கு உறுதியும், உள்ளத்திற்கு ஊக்கமும் பெற்றுத் திகழ்பவர் மணிமொழியார் அவர்கள்.

இங்கே பேசிய நண்பர்கள் பலர், மணிமொழியார், என்னுடைய ஊராகிய காஞ்சிபுரத்தில் பிறந்தவர் என்பதைப் பெருமிதத்தோடு எடுத்துச் சொன்னார்கள். காஞ்சி என்ற சொல்லுக்கு, போர்க்களத்தில் நின்று மாற்றாரை எதிர்த்துப் போரிடுவது என்பது தான் பொருள் என்று பிங்கல நிகண்டு தெரிவிக்கிறது. காஞ்சி என்னும் அந்தச் சொல்லின் பொருளுக்கேற்ப, காஞ்சியில் பிறந்த மணிமொழியார், பலமுறை போர்க்களங்களில் நின்று, மாற்றாரை எதிர்த்துப் போராடி, அவர்களில் எண்ணற்றோரை வீழ்த்தி, விழுப்புண் பல பெற்று, அப்படிப் பெற்றதன்மூலம் அவருடைய உள்ளத்திற்கு உறுதியையும், அவருடைய குடும்பத்தாருக்கு மகிழ்ச்சியையும், நாட்டு மக்களுக்கு நல்ல எழுச்சியையும் தேடித்தந்த பெருமை படைத்தவர்.

1938-ஆம் ஆண்டில் மணிமொழியார் அவர்கள் வேறு பல நண்பர்களுடன் இணைந்து நின்று இந்தி எதிர்ப்புப் போராட்டத்தைத் துவக்கிய நேரத்தில், தமிழகத்தில் இன்றைய தினம் காணப்படுவது போன்ற மாபெரும் எழுச்சி உருவாகும் என்று அவரும் கருதியதில்லை;நானும் எண்ணியதில்லை. உண்மையிலேயே அந்தக் காலத்தில் மணிமொழியாரும் பிறரும், சென்னைப் பெத்து நாயக்கன் பேட்டையில் உள்ள காசி விசுவநாதர் கோவில் எதிரிலிருந்து, ஏழெட்டு வாலிபர்களும், இரண்டு மூன்று தாய்மார்களும் பின்தொடர ஊர்வலங்களைத் தொடங்கி நடத்தியபோது, தமிழகத்தில் இத்தகைய மாபெரும் எழுச்சி ஏற்படுமென்று—அதுவும் இவ்வளவு விரைவில் ஏற்படுமென்று—அதிலும் இந்த அளவு விறுவிறுப்போடு ஏற்படுமென்று யாரும் கருதியதில்லை. ஆனால் இன்றோ, நாமே கண்டு மலைக்கும் அளவுக்கு எழுச்சி ஏற்பட்டுள்ளது. தமிழ் மக்கள் அனைவரும், நாங்கள் தமிழர்கள் என்று மார்தட்டிக் கூறுமளவுக்கு விழிப்புணர்ச்சி உருவாகியிருக்கிறது. நாம் யாரையாவது பார்த்து, "உங்கள் பேச்சு ஒரு மாதிரியாக இருக்கிறதே! உங்கள் நடை என்னவோபோல் காணப்படுகிறதே! ஐயன்மீர்! நீவிர் தமிழர் அல்லரோ?" என்று கேட்டால், உடனே அவர்கள் சீறியெழுந்து "நாங்களா தமிழர்கள் அல்ல? எப்படிக் கூறலாம் அப்படி?" என்று கேட்கிற அளவுக்கு, தமிழ் மொழிக்கும் தமிழன் என்ற சொல்லுக்கும் நல்லதோர் ஏற்றமும் செல்வாக்கும் ஏற்பட்டிருக்கின்றன. தமிழகம் இத்தகைய எழில்மிகு நிலையைப் பெறுவதற்காக உழைத்தவர்களில் முன்வரிசையில் இருப்போரில் முதலிடம் பெற்றவர் நம் மணிமொழியார் அவர்கள். சென்ற நாற்பது ஆண்டுகளாக நற்பணி ஆற்றியுள்ள மணி

மொழியார் அவர்கள், அப்படிப் பணியாற்றியதால் ஏற்பட்ட உற்சாகம் காரணமாக இன்னமும் நாற்பது ஆண்டுகள் உடல் வளத்தோடும், உள்ள உரத்தோடும் திகழ்ந்து தொடர்ந்து பணியாற்றக்கூடிய நிலை பெற்றிருக்கிறார்.

தனி வாழ்வில் உள்ளோருடைய வயதைச் சொன்னால் அதனால் அவர்களுக்கு நஷ்டம் ஏற்படக்கூடும். ஆனால் பொதுவாழ்வில் உள்ளோருடைய வயதைச் சொன்னால் அதனால் பொதுவாழ்வுக்கு இலாபம் உண்டு. இந்த வகையில் மணிமொழியாருடைய வயது அறுபது முடிந்துவிட்டது என்னும் உண்மை, நம்முடைய திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு இலாபம் தரும் உண்மையே ஆகும். இந்தக் கழகத்தில் இருப்பவர்களெல்லாம் இளைஞர்கள்—அனுபவம் இல்லாதவர்கள்—இளம் பருவத்தில் ஏற்படக்கூடிய ஆசாபாசங்களுக்கு ஆட்பட்டவர்கள் என்னும் ஒரு குற்றச்சாட்டு நம் கழகத்தின்மீது சில சமயங்களில் வீசப்படுகிறது. அத்தகைய குற்றச்சாட்டுக்குத் தானும் இலக்காகாமல், நம் இயக்கத்தையும் அக் குற்றச்சாட்டிலிருந்து காப்பாற்றுகிறார் மணிமொழியார்—அவருடைய வயதின் மூலம்.

இருபத்திமூன்று ஆண்டுகளுக்கு முன்னால் மணிமொழியார் அவர்களும்நானும் இணைந்து நின்று நவயுகம் என்னும் வார இதழை நடத்தியது பற்றி நண்பர்கள் பலர் இங்கே தங்கள் சொற்பொழிவுகளில் குறிப்பிட்டார்கள். அப்போதுதான் நான் கல்லூரியிலிருந்து வெளிவந்த காலம். மணிமொழியார் அவர்களும் அப்போதுதான் புதியதாக அச்சகம் ஒன்றைத் தொடங்கி வேறு ஓர் அமைப்புக்காக அதை நடத்திவந்த நேரம். அந்தக் காலம் என்னிடம் எழுதும் ஆற்றல் இருக்கிறதா என்பது தெளிவாகத் தெரியாத காலம். அவரிடமோ பண வசதி இல்லாத நேரம். இப்படிப்பட்ட நாங்கள் இருவரும் சேர்ந்துதான்—நான் ஆசிரியராகவும், மணிமொழியார் வெளியிடுபவராகவும் இருந்து பத்திரிகையைத் தொடங்கினோம். அதுவும் நாங்கள் அந்தக் கிழமை இதழைத் தொடங்கிய நேரம், காங்கிரஸ் கட்சி தேர்தலில் மாபெரும் வெற்றி பெற்று வீர உலா வந்துகொண்டிருந்த நேரம். நாங்கள் சேர்ந்திருந்த நீதிக்கட்சியோ,பிழைத்திருக்கிறதா இல்லையா என்று ஐயுறத்தக்க நிலைக்கு ஆட்பட்டுத் தத்தளித்த நேரம். இத்தகைய நெருக்கடியான நிலையில்தான், நம் இயக்கக் கருத்துக்களைப் பரப்புவதற்காகக் கிழமை இதழ் ஒன்று தொடங்கவேண்டும் என்றும், அதற்கு நான் ஆசிரியராக இருக்க வேண்டும் என்றும் அவர் கூறினார். நானும் இணங்கினேன். ஒரு பத்திரிகையை நடத்துவதற்குத் தேவையான அளவு பணம் அவரிடம் அப்போது இல்லை. ஆனால் அதை நான் உணர முடியாத வகையில் அவர் நடந்துகொண்டார். பணநெருக்கடி பலமுறை பத்திரிகையைத் தாக்கியது என்றாலும், அதனை அவர் என்னிடம் கூறியதில்லை. பத்திரிகையின் வரவு செலவுக் கணக்கு எப்படி இருக்கிறது என்று நானாகக் கேட்ட நேரங்களிலும் ஒரே ஒரு புன்னகையைத்தான் விடையாக அளிப்பார். இப்படியெல்லாம் 'நிதிநிலை'யைப் பற்றி அவர் என்னிடம் தெரிவிக்காமல் இருந்ததற்குக் காரணம், அதனைத் தெரிவித்தால் இளைஞனாகிய நான் பத்திரிகை நடத்தும் ஆர்வத்தை இழந்து விடுவேனோ என்கிற அச்சம் அவருக்கு இருந்ததுதான். இந்த உண்மையை நான் இப்போது எடுத்துக் கூறுவதற்குக் காரணம், அந்தக் காலத்திலேயே பத்திரிகை நடத்துவதில் அவருக்கு எவ்வளவு ஆர்வம் இருந்தது என்பதை எடுத்துக்காட்ட அல்ல. கடன் வாங்கியாவது பத்திரிகை நடத்துவது என்பது தமிழகத்தில் நெடுநாட்களாகஇருந்து வருகிற வழக்கம். ஆகவே அது அல்ல இங்கே கவனிக்கப்பட வேண்டிய உண்மை. அப்போதுதான் கல்லூரியை விட்டு வெளிவந்த என்னைப் பத்திரிகைத் துறையிலும், பொது வாழ்விலும் ஈடுபடுத்தி முன்னேற்றமடையச் செய்வதில் அவர் எவ்வளவு ஆர்வம் கொண்டிருந்தார் என்பதை எடுத்துக் காட்டத்தான் இந்த உண்மையைக் கூறுகிறேன். அவர் அந்தக் காலத்தில் எனக்கு ஊட்டிய ஆர்வத்தையும் உற்சாகத்தையும் எண்ணினால் இப்போதுகூட எனக்குப் பெரியதோர் மகிழ்ச்சி ஏற்படுகிறது.

அவரும் நானும் சேர்ந்து பத்திரிகை நடத்திய அந்த நாட்கள், நம் அருமை நண்பர் இளஞ்செழியன், அவருடைய இல்லத்தில் சின்னஞ்சிறு பாலகனுக உலவிக்கொண்டிருந்த காலம்; இளஞ்செழியனின் தம்பியோ தொட்டிலிலோ, கட்டிலிலோ தவழ்ந்து கொண்டிருந்த நேரம். அவ்வளவு நீண்ட காலத்திற்கு முன்னுலேயே நாங்கள் இருவருமாகச் சேர்ந்து பத்திரிகை நடத்தினேம் என்கிற செய்தியை இன்றையத் தினம் உங்களிடம் தெரிவித்துக் கொள்வதில் உண்மையிலேயே நான் பூரிப்படைகிறேன்

மணிமொழியார் அவர்கள் பத்திரிகை ஒன்றை நடத்தி அதன்மூலம் தன் கைப் பொருளை இழப்பது கண்டு அவர்களுடைய வாழ்க்கைத் துணைவியார் அந்த நாட்களில் ஓரளவுக்காவது மனவருத்தம் கொண்டே இருப்பார்கள். எந்தப் பெண்மணியும், தன் துணைவர், இருக்கும் பொருளை மேலும் வளர்த்து, வீட்டை மாளிகையாக்கி, தோட்டத்தை நிலபுலமாக்கி, நிம்மதியான வாழ்க்கை வாழவேண்டும் என்று ஆசைப்படுவது இயற்கை. அந்த ஆசைக்குத் தன் துணைவரின் பொது வாழ்வால் இடையூறு நேரிடும்போது வருத்தப்படுவதும் இயற்கை. அத்தகைய வருத்தம் அந்த நாட்களில் மணிமொழியாரின் குடும்பத்திற்கும் ஏற்பட்டிருக்கும். ஆனுல் அந்த வருத்தம் காரணமாக மணிமொழியாரின் வாழ்க்கைத் துணைவியாரோ, குடும்பத்தாரோ, எந்தக் காலத்திலும், அவருடைய பொதுவாழ்வுக்கு இடையூருக இருந்ததில்லை; அவருடைய பொது வாழ்வுக்கு உற்சாகமூட்டி உறுதுணையாகவே விளங்கி வந்திருக்கிருர்கள். இன்றைய மணிவிழாவுக்கு நடுநாயகராக விளங்கும் மணிமொழியார் மட்டுமல்ல, அவருடைய அருமைத் துனைவியார்கூடப் பொதுவாழ்வில ஈடுபட்டுப் பல நற்பணிகளை ஆற்றியிருக்கிருர்கள். பொதுவாழ்வில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு அவர்களுடைய குடும்பத்தாரிடமிருந்து நல்ல ஒத்துழைப்பு கிடைக்கவில்லையென்றுல், அவர்கள் பெருந் துயரத்திற்கு ஆளாகித் திண்டாட வேண்டியிருக்கும். ஆனுல் நம்முடைய இயக்கத்தில் ஈடுபட்டுள்ள நண்பர்களுக்கெல்லாம், அவரவர்களுடைய குடும்பத்தாரிடமிருந்தும் மகளிரிடமிருந்தும் மிகச் சிறந்த ஒத்துழைப்பு கிடைத்து வருகிறது. அத்தகைய ஒத்துழைப்பு மணிமொழியாருக்கும் கிடைத்திருக்கிறது. அப்படிக் கிடைத்திருப்பதால்தான் இத்தகைய அரும்பணிகளையெல்லாம் அவரால் ஆற்ற முடிந்திருக்கிறது இந்தத் துறையில் மணிமொழியாருடைய குடும்பம் தலைசிறந்ததோர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்திருக்கிறது.

மணிமொழியார் அவர்கள் அறுபது வயது நிறைந்தவராகக் காட்சி தரும் இந்த நேரத்தில், அவரால் கட்டிக்காத்து வளர்க்கப்பட்ட இரண்டு குடும்பங்களில், அவருடைய தனிப்பட்ட குடும்பத்தைப் பார்த்தாலும் சரி, திராவிட இயக்கம் என்கிற பெரிய குடும்பத்தைப் பார்த்தாலும் சரி, அவருக்குப் பூரிப்பும் பெருமையும்தான் ஏற்படுமே தவிர, ஒரு துளி கவலையும் ஏற்பட நியாயமில்லை. மணிமொழியார் கல்லூரியிற் பயின்றதில்லை. ஆனுல் அவருடைய அருமைத் திருமகனுர் இளஞ்செழியனே கல்லூரிப் பேராசிரியராகப் புகழ் பெற்று விளங்குகிருர். அதுமட்டுமல்ல, மணிமொழியாரைப் போலவே இளஞ்செழியனும் அவருடைய இளமையிலிருந்தே சிறந்த அறிவாற்றலைப் பெற்றுத் திகழ்கிருர். மற்ருேர் மகனும் கல்லூரிக் கல்வி பெற்று அரசாங்க அலுவலில் அமர்ந்து நன்முறையில் வாழ்கிருர். இப்படிப்பட்ட தலைசிறந்த நிலையில் தன் குடும்பம் விளங்குவதைக் காணும்போது மணிமொழியாருக்குப் பூரிப்பு ஏற்படாமலா இருக்கும்?

மணிமொழியாரால் வளர்க்கப்பட்ட மற்ருெரு குடும்பமும்—திராவிடர் இயக்கம் என்கிற குடும்பமும் மிகச் சிறந்த நிலையிலேயே உள்ளது இன்றைய தினம். இருபது ஆண்டுகளுக்கு முன்னுல் சென்னை மாநகராட்சி மன்றத் தேர்தலில் நான் வெற்றி பெறுவதற்காக அவர் அரும்பணி ஆற்றினுர். ஆனுல் அப்போது அவரால் என்னை வெற்றிபெற வைக்க முடியவில்லை. பிறகோர்

சமயம் அவரே அத் தேர்தலுக்கு நின்றார். அப்போது அவராலும் வெற்றிபெற இயல வில்லை. ஆனால், இந்நாளிலோ, மணிமொழி யார் அவர்களே, மணிவிழாக் கோலத்தில் உள்ள தங்களை வாழ்த்த, சென்னை நகர மேயரும், துணை மேயரும், நாற்பத்தி ஐந்து தி. மு. க. உறுப்பினர்களும், நீங்கள் பெற் றெடுத்த பிள்ளைகளைப்போல்—உங்களுடைய அடையாளச் சின்னங்களைப்போல்—உங்க ளுடைய ஓயாத உழைப்பின் விளைவாக நக ராட்சி மன்றத்தின் ஆட்சிப்பீடத்தில் அமர்ந் திருக்கிறார்கள். இரண்டு பேர் பாராளு மன் றத்திலேயும், பதினைந்து பேர் சட்டமன்றத்தி லேயும், எத்தனையோ பேர் நகராட்சி மன்றங் களிலேயும், ஏராளமானோர் ஊராட்சி மன்றங் களிலேயும் தங்களை வாழ்த்தியபடி வீற்றிருக் கிறார்கள். இதைவிடச் சிறந்த பேற்றை, அறுபது வயது நிரம்பிய சீமான்கள்கூடப் பெற்றதில்லை. அதுமட்டுமல்ல; பல சீமான் களை, உங்களுடைய ஆற்றலின் துணையால், நம் இயக்கத்தைச் சேர்ந்த பல சாதாரண உறுப்பினர்கள் தோற்கடித்திருக்கிறார்கள். மணிவிழாக் கோலத்தில் நீங்கள் வீற்றிருக் கும் இந்த நேரத்தில் நான் பெருமிதத்தோடு தெரிவித்துக்கொள்ள விழைகிறேன்; நீங்கள் வளர்த்த பிள்ளைகள் ஒரு காலத்தில் இந்த நாட்டை ஆள இருக்கிறார்கள். ஒரு காலத் தில்......என்று நான் குறிப்பிட்டேன்— அடக்கம் காரணமாக, மிக விரைவில் என்று கருதுகிறார்கள், மற்றார்—மருட்சி காரண மாக.

தமிழகம் இன்றையதினம் எழுச்சி பெற்றி ருக்கிறது என்பதை மட்டுமல்ல, அந்த எழுச் சிக்கும் விழிப்புணர்ச்சிக்கும் யார் காரணம் என்பதைக் கண்டறிந்து போற்றி மகிழ்கிற சிறந்த பண்பையும் பெற்றிருக்கிறது என்ப தைத்தான் இந்த மணிவிழா எழில்பட எடுத்துக் காட்டுகிறது.

இந்த மணிவிழாவை நடத்தும் குழுவின் தலைவராக இங்கே வீற்றிருக்கும் **என் அருமை நண்பர் மயிலை சிவமுத்து அவர்கள்,** இருபது ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கப்பட்ட இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின்போது கையிலே ஒரு சிறு சாக்குத் துண்டை எடுத்துக்கொண்டு வீதிதோறும் சென்று பலகைகளில் தமிழ் முழக்கங்களை எழுதி எழுதித் தமிழ்ப் பற்றை ஊட்டிய பெருமகனார் ஆவார். இங்கே அமர்ந்திருக்கின்ற பல தாய் மார்கள், அந்தக் காலத்தில் இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் ஈடுபட்டுத் தமிழுணர்ச்சியை எங்கெங்கும் பரப்பிய பெருமை படைத்தவர் கள் ஆவார்கள். இவர்களெல்லாம் அந்தக் காலத்தில் ஆற்றிய அரும்பணியின் விளை வாக, இன்றையதினம், சட்டமன்றத்தின் தலைவர் கன்னட மாநிலத்தைச் சேர்ந்தவர் என்றாலும், அவர்கூட அழகு தமிழில் பேசுகிற அரிய காட்சி உருவாகியிருக்கிறது. இவ்வாறு மணிமொழியாரோடு சேர்ந்து நின்று தமிழ்நாட்டின் முன்னேற்றத்திற்காக அரும்பணி புரிந்தவர்களெல்லாம் இங்கே வீற்றிருப்பதைக் காணும்போது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது என்பதை மீண்டும் தெரிவித்துக் கொள்கிறேன்.

உயர்ந்த பண்பாளராகிய மணிமொழியார் என்னுடைய நீண்ட கால நண்பர் என்பதால் மட்டுமல்ல ; நாட்டின் நல்வாழ்வுக்காகத்தலை சிறந்த தொண்டாற்றியிருப்பவர் என்பதால் மட்டுமல்ல ; என்னுடைய ஊராகிய காஞ்சி புரத்தில் பிறந்தவர் என்பதாலும் நான் பெரு மகிழ்ச்சி கொள்கிறேன். பலநூற்றாண்டுகட்கு முன்னாலேயே ஒரு தமிழ்ப் பெரும் புலவர், தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளைப்பற்றிப் பாடத் தொடங்கியவர், சோழநாட்டைப் பற்றிக் கூறிப்பிடும்போது, 'சோழ வளநாடு சோறுடைத்து' என்று இயம்பினார். பாண்டிய நாட்டைப் பற்றிப் பாடுகையில் 'பாண்டிய நாடு முத்துடைத்து' என்று கூறினார். சேர நாட்டைப் பற்றிக் கூறுகையில், 'சேரநாடு வேழமுடைத்து' என்று பாடினார். ஆனால் காஞ்சிபுரத்தைத் தலைநகரமாகக் கொண்ட தொண்டை நாட்டைப்பற்றிக்கூறும்போதோ 'தொண்டை நாடு சான்றோருடைத்து' என்று இயம்பினார். இதிலிருந்து காஞ்சி மாநகரம் பண்டைக் காலத்திலிருந்தே சான்றோர்களை உடையதாக இருப்பதை நாம் நன்கறிகிறோம். நீண்ட காலமாகத் தொடர்ந்து வருகிற அந்தச் சான்றோர் வரிசையைச் சேர்ந்த அருமை நண்பர் மணிமொழியாருக்கு, அவருடைய மணிவிழா மாண்புற நடை பெறும் இந்த நேரத்தில், இந்தப் பொன்னு டையை அணிவித்து, அப்படி அணிவிப்ப தன்மூலம் நானும் மகிழ்ச்சியடைந்து உங் களுக்கும் மகிழ்ச்சியளிக்கிறேன்.'' வணக்கம்

# ஐம்பது ஆண்டுகளாக அரும்பணி புரிபவர்

—

## கழகக் கட்டளைகளைத் தட்டாது நிறைவேற்றுபவர்

—

## மணிமொழியார் பாராட்டு விழாவில் அறிஞர் அண்ணாவின் புகழ்மாலை

—

**1962** முதல் 1967 வரை சென்னைத் தியாகராயநகர் தொகுதியின் சார்பில் தமிழகச் சட்டமன்ற உறுப்பினராகத் திகழ்ந்த பெருந்தகையாளர் காஞ்சி மணிமொழியார் அவர்கள். அத் தொகுதி மக்களின் நன்மைக் காக அயராது ஆற்றிய அரும்பெரும்பணி களைப் பாராட்டி மகிழ்வதற்காக, அத் தொகுதி மக்களால் ஏற்பாடு செய்யப்பட்ட மாபெரும் பொதுக்கூட்டம், 5-9-1967 அன்று, சென்னை வடபழனி சிங்காரவேலர் திடலில் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் நடைபெற்றது. வெள்ளம்போல் தமிழர் கூட்டம்—வீரம் கொள் கூட்டம் அங்கே பல்லாயிரக் கணக்கில் திரண்டு குழுமியிருந்தது. செம்மை சான்ற அப் பாராட்டு விழாவிற்குத் தி. மு. க வின் அப் போதைய அமைப்புச் செயலாளரும், தற் போது பிற்பட்ட வகுப்புகள் நல அமைச்ச ராக இருப்பவரும் ஆகிய மாண்புமிகு திரு என். வி. நடராசன் அவர்கள் தலைமை தாங் கினார்.

விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றுத் திரு. தூயமணி உரையாற்றிய பின், விழாத் தலைவர் அவர்களும், அப் போதையஉணவு அமைச்சரும், தற்போதைய நிதியமைச்சருமாகிய மாண்புமிகு திருவாளர் கே. ஏ. மதியழகன் பி. ஏ., அப்போதைய பொதுப்பணித் துறை அமைச்சரும், தற்போதைய முதலமைச்சருமாகிய கலைஞர் மு. கருணாநிதி, நாடாளுமன்ற உறுப்பினர் திரு. எஸ். கே. சம்பந்தன் பி ஏ. எம். பி., காஞ்சீபுரம் தொகுதிச் சட்டமன்ற உறுப் பினர் திரு. என். கிருஷ்ணன், எம். ஏ., பி. எல்., எம் எல். ஏ.,—முகவை மாவட்டத் தி. மு. க. அவைத் தலைவர் திரு சிவ. சண்முகசுந்தரன், விருகம்பாக்கம் தி. மு. க. செயலாளரும், நகரப் பஞ்சாயத்துத் துணைத் தலைவரும் ஆகிய திரு. வி. லோகநாதன், " நம்நாடு " துணையாசிரியர் திரு. மா. செங் குட்டுவன், தியாகராயநகர் பகுதித் தி.மு க. செயலாளரும், சென்னை நகர மேயருமாகிய திரு. வை. பாலசுந்தரம், பிற்பட்டவகுப்பினர் சங்கச்செயலாளர் திரு. வி. எம். கடிகாசலம், வடபழனி நாவலர் நெடுஞ்செழியன் மன்றச் செயலாளர் திரு. தங்கையன், மாணவ நண்பர் திரு. சின்னச்சாமி ஆகியோரும் மணிமொழியார் அவர்களின் ஆற்றல்மிகு பணிகளின் சிறப்பையும், செம்மையையும் அடுக்கடுக்காக எடுத்துக்காட்டிச் சொற் பொழிவுகள் ஆற்றினர்.

இறுதியில் அப்போதைய தமிழக முதலமைச்சர் **பேரறிஞர் அண்ணா அவர்கள்**

மணிமொழியார் அவர்களுக்குப் பெரு மகிழ்ச்சியுடன் பொன்னுடை போர்த்தி, மக்கள் மன்றத்தை மகிழ்ச்சிப் பெருவெள்ளத்தில் ஆழ்த்திவிட்டு ஆற்றிய விரிவுரையின் சில பகுதிகள் பின்வருமாறு :—

"இங்கே சொற்பொழிவாற்றிய நண்பர்கள் அனைவரும் காஞ்சி மணிமொழியார் அவர்களுக்கு அறுபத்தெட்டு வயதாகிவிட்டது என்று குறிப்பிட்டபோது நம்மால் அதை எளிதில் நம்ப முடியவில்லை. மணிமொழியாருக்கா—அறுபத்தெட்டு வயதா—உண்மையாகவா என்றே வியப்புடன் கேட்கத் தோன்றுகிறது. அந்த அளவுக்குக் கட்டான உடலோடும், இளமைத் தோற்றத்தோடும் காட்சி அளிப்பவர் மணிமொழியார். அவரைவிட எத்தனையோ ஆண்டுகள் இளையவர்களாக இருப்பவர்கள்கூட முதுமை தோற்றத்தோடு இருப்பதை நாம் காண்கிறோம். ஆனால் அவரோ அறுபத்தெட்டு என்கிற இந்த வயதிலேகூடக் கட்டிளங் காளைபோல ஓடியாடிப் பணியாற்றுகிறார்—ஓயாமல் தொண்டு புரிகிறார். அவருடைய இந்த இளமை உள்ளமும் தோற்றமும் நமக்கெல்லாம் மட்டற்ற மகிழ்ச்சியை அளிக்கின்றன; பெருமையையும் பூரிப்பையும் தருகின்றன. என்றேனும் ஒரு நாள் மணிமொழியார் அவர்களைத் தனியாகச் சந்தித்து, இத்துணை முதிர்ந்த வயதிலேயும் இவ்வளவு இளமைப் பொலிவுடன் அவர் காட்சி அளிப்பதன் இரகசியங்கள் என்ன என்பதைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று நான் அடிக்கடி நினைத்துக்கொள்வதுண்டு.

"ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளாக மணிமொழியார் தமிழகத்திற்கு எந்த வகையான அருந்தொண்டை ஆற்றியிருக்கிறாரோ, அதே தொண்டைத் தொடர்ந்து ஆற்றி, எந்தவிமான இலட்சிய நாட்டைக் காண வேண்டும் என்று கனவு கண்டாரோ அந்தக் கனவு நனவாகும்வரை அவர் இடைவிடாது பாடுபட வேண்டும் என்று அப் பெருமகனாரை நாம் பணிவுடன் வேண்டிக்கொள்வதுதான், அவருக்கு நாம் அளிக்கத்தக்க தலைசிறந்த பாராட்டாக இருக்க முடியும். அத்தகைய பாராட்டைத்தான் அவரும் விரும்புவார். எப்போதுமே அவர், 'இயக்கம் தனக்காக என்ன செய்தது என்பதைப்பற்றிக் கவலைப்படாமல், இயக்கத்திற்காகத் தான் என்னென்ன செய்ய முடியும்' என்பதைப்பற்றியே சிந்திக்கும் இயல்புடையவர்.

"திராவிட முன்னேற்றக் கழகம் எந்தெந்த நேரங்களில் என்னென்ன கட்டளைகளை இட்டதோ அவற்றையெல்லாம் தயங்காமல் உடனுக்குடன் நிறைவேற்றி வைத்தவர் மணிமொழியார்.

"தடியடி படுவதுதான் தமிழ் காக்கும் முறை என்றால், தடியடிபடத் தயாரானார் அவர்.

"சிறை செல்வதுதான் செந்தமிழ் காக்கும் வழி என்றால், சிறை செல்லத் தயாரானார்.

"காடுமேடு சுற்றிப் பட்டி தொட்டியெல்லாம்சென்றுபிரசாரம் செய்வதுதான் தமிழின் பெருமையை உணரச்செய்யும் வழி என்றால், அப்படிப்பட்ட கடுமையான பிரசாரத்தைச் செய்யத் துள்ளியெழுந்து முன்வந்தார்.

"ஏடுகளை வெளியிடுவதுதான் இன்தமிழை வளர்க்கும் பணி என்றால், ஏடுகளை நடத்தியிருக்கிறார்.

"தமிழ்ப் பாதுகாப்புப் பணிக்காக மணிமொழியார் நூல்கள் பல வெளியிட்டிருக்கிறார்; ஊர்வலங்கள் பல நடத்தியிருக்கிறார்; பொதுக்கூட்டங்கள் பல கூட்டியிருக்கிறார்; மாநாடுகள் பல நடத்தியிருக்கிறார்.

"சாதாரண மக்களின் நன்மைக்காக மிகச் சாதாரண மக்கள் சிலரால் துவக்கப்பட்ட திராவிட முன்னேற்றக் கழகம் இன்றைய தினம் அரசாளும் பொறுப்பை ஏற்றிருக்கிறது என்றால், அது மணிமொழியாரும், அவர் போன்றார் பலரும் ஆற்றிய அரும் பணியின் விளைவு என்பதை நான் பெருமையோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

" 'சிட்டுக் குருவிகள் வல்லூறைப்போல் கொத்தும் திறனற்றவை; கூர்மையான நகமற்றவை; ஆற்றலில் மிக மிகக் குறைந்

தவை. ஆனல் ஒரு காலம் வரும். அப்போது சிட்டுக் குருவிகள் வல்லூறை வெல்லும்; பாமர மக்கள் பாராள்வார்கள்' என்று இஸ்லாமியப் பெருங் கவிஞர் இக்பால், இரு பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே பாடியுள்ளார்.

''இக்பால் அன்று பாடியதற்கு இணங்க இன்று தமிழகத்தில் சிட்டுக் குருவிகள் வல்லூறை வென்றுவிட்டன; பாமர மக்கள் பாராளத் தொடங்கிவிட்டார்கள்; தி. மு. க. ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்துவிட்டது.

''சிட்டுக் குருவிகள் இன்று வல்லூறை வென்றிருக்கின்றன என்றல் அதற்கு மணிமொழியார் போன்றவர்களின் தளராத தொண்டே தலையாய காரணம் என்பதை யாரும் மறுத்துவிட முடியாது; மறந்துவிடவும் முடியாது.

''ஏறத்தாழ முப்பது ஆண்டுகளுக்கு முன்னலேயே மணிமொழியார் அவர்கள் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டது பற்றி நண்பர்கள் பலர் இங்கே பெருமையோடு குறிப்பிட்டார்கள் நம்முடைய இயக்கம் இப்போது இருப்பதைப் போல ஓங்கி வளர்ந்திராத காலம் அது. மிகச் சிலரே நம்மை ஆதரித்து வந்த காலம். அத்தகைய காலத்தில் மணிமொழியார் அவர்கள், அளவற்ற துணிச்சலுடன், நண்பர்கள் சிலரை மட்டும் துணைக்கு வைத்துக் கொண்டு, இந்தி எதிர்ப்பு ஊர்வலங்களையும், பொதுக் கூட்டங்களையும் நடத்தி, தமிழ் மக்களுக்கு உற்சாகத்தையும் உணர்ச்சியையும் ஊட்டியவர். அந்தக் காலத்தில் அவர் ஊர்வலங்களை நடத்தியபோது, தமிழ் என்று ஒருவர் குரல் எழுப்பினல், வாழ்க என்று பலர் பதில் குரல் எழுப்புவார்கள். ஆனல் அந்தக் குரல்கள் யாவும் உரத்த குரல்களாக இருக்கமாட்டா. ஆனல் ஒரே ஒரு குரல் மட்டும் கணீர் என்ற முறையில்—தெள்ளத் தெளிவாக—மணியோசை போலக் கேட்கும். அந்தக் கம்பீரக் குரல் வேறு யாருடையதும் அல்ல. மணிமொழியார் அவர்களுடையது தான். எப்படியெல்லாம் மணிமொழியார் அந்தக் காலத்தில் பணியாற்ற வேண்டியிருந்தது என்பதை எடுத்துக்காட்டவே இதனைக் குறிப்பிடுகிறேன். இப்படியெல்லாம் அந்தக் காலத்தில் அவர் அளவற்ற ஆர்வத்துடன் ஆற்றிய தமிழ்ப் பாதுகாப்புப் பணியை இப்போது நினைத்தாலும் எனக்குப் பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது.

''மணிமொழியார் அவர்களே! நீங்களும் உங்கள் போன்றவர்களும் ஆற்றிய அரும் பணியின் விளைவாக, உங்கள் போன்றோரின் சார்பில், உங்களுடைய அடையாளச் சின்னங்களைப் போல், உங்களுடைய இளமை உருவங்களைப் போல் நாங்கள் எட்டுப் பேர் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்திருக்கிறோம். நாங்கள் நாட்டு மக்களின் கேட்டினைப் போக்கவல்ல நற்செயல்களில் ஈடுபடும்போது எங்களைத் தட்டிக் கொடுங்கள். நாங்கள் எப்போதேனும் தவறுகள் செய்தால் எங்களைத் தடுத்து நிறுத்துங்கள். எங்களுக்கு உற்சாகம் தேவைப்படும்போது உற்சாகத்தை ஊட்டுங்கள்; ஆலோசனைகள் தேவைப்படும்போது ஆலோசனைகளைத் தாருங்கள். நீண்ட பொது வாழ்வும், முதிர்ந்த அனுபவமும் படைத்த தங்களிடம், தங்கள் பாராட்டு விழா நடைபெறுகிற இந்த நேரத்தில் இந்த வேண்டுகோளைத் தான் நான் விடுக்க விரும்புகிறேன் தாங்கள் எங்களுக்கு வழிகாட்டியாக விளங்குங்கள்.''

அறிஞர் அண்ணு அவர்களின் இந்த அரிய பாராட்டுரையுடன் முடிவுற்ற பொதுக் கூட்டம் தொடங்குவதற்கு முன்னல் வடபழனி நாவலர் நெடுஞ்செழியன் மன்றத் தலைவர் திரு. இரா. சங்கரலிங்கம் அவர்களால், விழாவிற் கலந்துகொண்ட பெருமக்கள்—தி. மு. க. பிரமுகர்கள்—மணிமொழியார் அவர்களின் நீண்ட கால நண்பர்கள் ஆகிய அனைவருக்கும் பெரிய அளவில் தேநீர் விருந்து ஒன்று அளிக்கப்பட்டது. அவ் விருந்திற்கும் திரு என். வி. நடராசன் அவர்கள் தலைமை தாங்கி அரியதோர் உரையாற்றினர்.

❋















மணிமொழியாரின் பிறந்தநாள் பெருவிழா









மாநகராட்சி நிகழ்ச்சிகளில் மணிமொழியார்



தி.மு.க. துணைப்பொதுச்செயலாளர்
உயர்திரு

# காஞ்சி மணிமொழியார் வாழ்க்கை வரலாறு

இயற்றியோர்:
கே.ஜி.இராதாமணாளன்-மா.சு.சம்பந்தன்.

## பேராற்றல் படைத்த பொதுத் தொண்டு

அள்ளும் சுவை நிறைந்த தெள்ளு தமிழ்க் காவியம்

1912ஆம் ஆண்டில் ஒரு நாள். பண்டைக் காலத்திலிருந்தே பெரும்புகழ் பெற்றுத் திகழும் தொண்டை நன்னாட்டின் தலைநகராகிய காஞ்சிபுரத்தில் சைவ சித்தாந்த மகா சமாஜ மாநாடு ஒன்று சீரும் சிறப்பும் பொருந்திய முறையில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. பிற்பகல் இடைவேளையின்போது மாநாட்டை நடத்தியவர்களும், மாநாட்டின் தலைவர்—திறப்பாளர் முதலிய அறிஞர் பெருமக்களும்—அவர்கள் அனைவரும் பார்ப்பனரல்லாத சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள்—

மாநாட்டு மேடையை விட்டுக் கீழே இறங்கி விட்டனர். விரல்விட்டு எண்ணத்தக்க சில பார்ப்பன மாந்தர்கள்மட்டும் மேலே ஏற்றப்பட்டு அவர்கட்குமட்டும் உணவு பரி மாறப் பட்டது. மாநாட்டுத் தலைவர்கள் உட்படப் பார்ப்பனரல்லாத பெருங்குடி மக்கள் அனைவரும் கீழே சிற்றுண்டிக்காகக் காத்துக் கொண்டிருந்தனர். ஏன் இந்த வேறுபாடு என்று மெதுவாகச் சிலர் வினவிய போது, ''பார்ப்பன மக்களுக்கு முதலில் உண வளித்துவிட்டு அதன் பின்னர்தான் மற்றவர் கட்கு உணவளிக்கப்படும்'' என்று மா நாட்டை நடத்தியவர்கள் விடை அளித்த னர். மாநாட்டை நடத்தியவர்கள் அத் தனைப் பேரும் பார்ப்பனரல்லாத சமுதாயத் தைச் சேர்ந்தவர்களாக இருந்தும், அவர் களிடமிருந்து இத்தகைய விடை பிறந்ததைக் கண்டதும் ஆர்த்தெழுந்த அடலேறுபோல் சீறியெழுந்தார் அக்கால இளைஞர் தலைவர் களில் ஒருவராகிய திருவாளர் ஜே. என். இராமநாதன் அவர்கள். வில்லிலிருந்து தெறித்த அம்புகள்போல் கேள்விக் கணைகள் மளமளவெனப் புறப்பட்டன அவரிடமிருந்து. ''பார்ப்பன மாந்தருக்கு ஒரு நீதி—மற்றவர் கட்கு வேறு ஒரு நீதியா? அவர்களுக்கு மட் டும் பசி முன்னல் வரும்--மற்றவர்களுக்குப் பின்னல் வருமா? அவர்கள் மட்டும் உயர்ந்த குலத்தவர்—மற்றவர்கள் தாழ்ந்த குலத்த வரா? பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்னும் வள்ளுவனின் குறளைப் படித்துவிட் டால் போதுமா? இது என்ன அநீதி—அக்கி ரமம்?'' என்று வீராவேசத்தோடு கேள்விகளை எழுப்பிக்கொண்டே வந்த தோழர் இராம நாதன், திடீரென்று மேடைமீது பாய்ந்து, அங்கிருந்த பலகாரக் கூடையைக் கைப் பற்றி, அதில் இருந்த சிற்றுண்டி வகைகளைக் கீழே பசியோடு காத்துக் கொண்டிருந்த பார்ப்பனரல்லாத மக்களிடம் மடமட வென வழங்கத் தொடங்கினர். அவருடைய இச் செயலால் அங்குப் பெருங் குழப்பம் ஏற் பட்டு, மாநாட்டை நடத்தியவர்களுக்கும் அவருக்கும் இடையே ஒரு சிறு போராட் டமே நடைபெறலாயிற்று.




மாநாட்டுக்கு வந்திருந்த ஆயிரக்கணக் கான மக்களில் ஒரு சிறுவனும் இருந்தான். அவன் அதே காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவன் தான். அவனுக்கு அப்போது பதினேரு வயதுதான் நிரம்பியிருந்தது. என்றுலும் மேலே குறிப்பிடப்பட்ட நிகழ்ச்சி முழுவதை யும் அவன் கூர்ந்து கவனித்தான். தோழர் இராமநாதனின் செயல் அவனுடைய பிஞ்சு உள்ளத்திற்கு முற்றிலும் நியாயமானதாகத் தோன்றியது. மாநாட்டு அமைப்பாளர் களைப் பார்த்து மளமளவென அவர் எழுப்பிய கேள்விகள் அவனுடைய இளம் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டன.

ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர் 1917ல் ஒரு நாள். அதே காஞ்சிமாநகரில் ஈடு இணையற்ற ஊர்வலம் ஒன்று செல்லலா யிற்று. ஆயிரமாயிரம் மக்கள் அணி அணி யாகத் திரண்டு சென்றனர் அந்த மாபெரும் ஊர்வலத்தில். அவர்களுடைய உள்ளங்கள் அத்தனையிலும் உற்சாக வெள்ளம் கரை புரண்டு ஓடியது. அவர்களுடைய முகங்கள் ஒவ்வொன்றிலும் ஓர் உணர்ச்சிக் காவியம் அறிவொளி பரப்பித் திகழ்ந்தது. அவர்களு டைய உரத்த குரல்களிலோ வீர முழக்கங் கள் ஒன்றன்பின் ஒன்ருக வீறி வெடித்தன. ''திராவிடத் தந்தை தியாகராயரே வாழ்க—

பார்ப்பனரல்லாத சமுதாயத்தின் இணையற்ற வழிகாட்டியே வாழ்க—தென்னகம் பெற்ற தன்னிகரற்ற தலைவரே வாழ்க—மலை குலை யினும் மனம் குலையாத மாவீரரே வாழ்க'' என்றெல்லாம் வாழ்த்தொலிகள் அவர்களிட மிருந்து எழுந்தபடி இருந்தன. ஊர்வலத் தின் நடுவில், ஒப்பற்ற முறையில் அலங்கரிக் கப்பட்டிருந்த எழில்தவழும் வண்டி ஒன்றில் வீழ்ச்சியுற்ற திராவிடத்தை எழுச்சியுறச் செய்த உதயசூரியன்—தனக்கென வாழாத பிறர்க்குரியாளர் — அஞ்சாத நெஞ்சமும் அசையாத உறுதியும் படைத்த மாபெருந் தலைவர் சர். பி. தியாகராயர், அவர் எனறென் றும் அணியும் வெண்ணிற உடையில், அவ ருக்கே உரிய கம்பீரமான தோற்றத்துடன் அமர்ந்தபடி சென்று கொண்டிருந்தார்.



ஊர்வலத்தின் முடிவில் மாபெரும் பொதுக்கூட்டம் ஒன்று மட்டற்ற சிறப்புடன் நடைபெற்றது. அப் பொதுக் கூட்டத்தில் அறிஞர் பெருமக்கள் பலர், திராவிட சமு தாயத்தின் முன்னேற்றத்திற்காகத் தலைவர் தியாகராயர் ஆற்றிவந்த தன்னிகரற்ற தொண்டின் தனிச் சிறப்புகளை எடுத்து விளக்கி அரிய உரைகள் ஆற்றினர். குறிப் பாகவும் சிறப்பாகவும் அக்காலத்தின் தலை சிறந்த பேச்சாளர்களில் ஒருவராகத் திகழ்ந்த திருவாளர் டி. வி. சுப்ரமணியம் அவர்கள், இடி முழக்கம் போன்ற தன் குரலால் அன்றைய தினம் ஆற்றிய சொற்பொழிவு அற்புதமான ஆற்றல் படைத்ததாக அமைந்திருந்தது.

இந்த மாபெரும் ஊர்வலத்திலும் மாண்பு மிகு பொதுக்கூட்டத்திலும் கலந்துகொண்ட ஆயிரமாயிரம் பொதுமக்களில் நாம் தொடக் கத்தில் குறிப்பிட்ட சிறுவனும் ஒருவன். அவனுக்கு இப்போது பதினாறு வயது நிரம்பி யிருந்தது. ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் சைவ சித்தாந்த மாநாட்டில் தோழர் ஜே. என். இராமநாதன் எழுப்பிய கேள்விகளால் திராவிட இன எழுச்சி விதைகள் தூவப்பட்டிருந்த அவனு டைய பிஞ்சு உள்ளத்தில் இந்த இணையற்ற ஊர் வலமும், மாபெரும் பொதுக்கூட்டமும், அந்தப் பொதுக்கூட்டத்தில் திருவாளர் டி வி. சுப்ரமணி யம் ஆற்றிய வீரமுழக்கமும் மட்டற்ற ஆர்வத் தைப் பாய்ச்சின. தென்னக மக்களின் முன்னேற் றத்திற்காக அல்லும் பகலும் அரும்பணியாற்றி வந்த சர் தியாகராயரின் கொள்கைகள் வெற்றி பெறத் தானும் தன்னாலியன்ற தொண்டுகளைப் புரிய வேண்டும்—அப்படிப் புரிவதுதான் தன்னு டைய தனிப் பெருங் கடமை என்னும் முடிவுக்கு அன்றே வந்துவிட்டான் அந்தச் சிறுவன். அது மட்டுமன்று. அடுத்த வாரமே, சர். பி. தியாக ராயர் வாசகசாலை என்னும் பெயரில் படிப்பகம் ஒன்றையும், பார்ப்பனரல்லாத வாலிபர் சங்கம் என்னும் பெயரில் கழகம் ஒன்றையும் தொடங்கித் திராவிடர் இயக்கக் கருத்துக் களைத் தீவிரமாகப் பரப்பும் பணியில் மும்முர மாக ஈடுபட்டுவிட்டான் அச் சிறுவன்.

இவ்வாறாகத் தன் பதினாறுவது வயதி லேயே- காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் ஒன்பதாவது வகுப்பிற் பயின்று கொண்டிருந்த பிஞ்சுப் பருவத்திலேயே திராவிடர் இயக்கப் பணிக்குத் தன் வாழ்க் கையை அர்ப்பணித்துக் கொண்டுவிட்ட அச் சிறுவன்தான், நாடு வாழத் தான் வாழும் நல்லறிஞராய்—உயர்ந்த பண்பு களின் உறைவிடம் அனையவராய்—எழுத் திலும் பேச்சிலும் ஆற்றல் நிறைந்தவராய்— தனக்கு உவமையில்லாத தனிச் சிறப்புகள்

படைத்தவராய்—திராவிட முன்னேற்றக் கழகத் தளபதிகளில் ஒருவராய்ப் பெரும் புகழ்பெற்றுத் திகழும் ஓய்வறியா உழைப் பினர்—தளராத துணிவினர்—காஞ்சி மணி மொழியார் அவர்கள்.

பேராற்றல் படைத்த அப் பெருமகனுர் தம் பொதுத் தொண்டைத் தொடங்கிய ஆண்டு, 1917.

இப்போது நடைபெறும் ஆண்டோ, 1970.

இடையே சென்று மறைந்தவை ஐம் பத்திமூன்று ஆண்டுகள்.

இந்த ஐம்பத்திமூன்று ஆண்டுகளாக அப் பெருந்தகையாளரின் பொதுத் தொண்டு, எழிலும் ஏற்றமும் பொருந்திய முறையில், சுவையும் பயனும் நிறைந்த வகை யில், நாடும் ஏடும போற்றும் நிலையில் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக் கிறது.

அரை நூற்ருண்டுக் காலத்திற்கும் கூடுதலாக நடைபெற்றுக் கொணடிருக் கும் அப் பொதுவாழ்வில், ஒருமுறைகூட, சோர்வோ சோகமோ தலைகாட்டியதில்லை; அலுப்போ சலிப்போ ஏற்பட்டதிலலை; மயக்கமோ தயக்கமோ உருவானதில்லை. விரைவாகவும் விறுவிறுப்பாகவும் ஆழமாக வும் அகலமாகவும் ஓடிக்கொண்டேயிருக்கிற காவிரி ஆறுபோல அப் பொதுத் தொண்டு இடையீடின்றி நடைபெற்றுக் கொண்டிருக் கிறது.

நீதிக் கட்சியில் பிறந்து, தன்மான இயக்கத் தில் தோய்ந்து, செங்குந்தர் இயக்கத்தில் சிறந்து, இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பொலிந்து, திராவிடர் கழகத்தில் உயர்ந்து, திராவிட முன்னேற்றக் கழகத்தில் தன்னிகரற்ற ஒளி பரப்பி நிற்கும் அப் பொதுவாழ்வு, அள்ளும் சுவை நிறைந்த ஒரு தெள்ளுதமிழ்க் காவியம்.

புகழ் மிகுந்த அக் காவியத்தின் பெருமை மிகுந்த ஏடுகளைச் சற்றே புரட்டிப் பார்ப்போமா?

**காஞ்சிநகர் அளித்த கருத்துக் கருவூலம்:**

சங்க காலத்திலிருந்து இன்றைய தினம் வரையில், தமிழகத்தின் வரலாற்றில், காஞ்சி புரம் எப்போதுமே தனிச் சிறப்புமிக்க ஓர் இடத்தைப் பெற்று வந்திருக்கிறது. காஞ்சி மாநகரை எண்ணியவுடன், பல நூறு ஆண்டுகட்கு முன்னரே, அது பல்லவப் பேரரசர்களின் தலைநகரமாய் வீறுபெற்று விளங்கிய காட்சியும், அறப்பெருஞ்செல்வி மணிமேகலை அங்கே உலவி உயர்ந்த கருத் துக்களைப் பரப்பிய மாட்சியும், சென்ற ஈராயிரம் ஆண்டுகளாகவே தொடர்ச்சியாக சமண—பௌத்த—சைவ— வைணவப் பெரும் புலவர்களும் துறவோர்களும் அங்கே வீற்றிருந்து அறிவு ஒளி பரப்பிய நிகழ்ச்சி களும், தென்னகத்தின் கலை எழில் முழுவதை யும் ஒன்ருகத் திரட்டி ஒரே உருவில் அமைத் ததுபோல் அங்கே உள்ள ஏராளமான கோயில்கள் அழகின் சின்னங்களாகத் திகழும் நிலைமையும் எவருடைய உள்ளத் திலும் தோன்றுவது இயற்கை. பல நூற் ருண்டுகட்கு முன்னரே திருநாவுக்கரசர், தம்முடைய திருமேற்றளிப் பதிகத்தில், **கல்வியிற் கரையிலாத காஞ்சி மாநகர்** என்று பாடியுள்ளார் என்ருல் அது வெறும் புகழ்ச்சியன்று; எழுத்துக்கு எழுத்து உண்மை என்பதைத் தமிழ்நாட்டின் வரலாற்றை அறிந்த எவரும் அறிவர். பண் டைக் காலத்தில் மட்டுமன்று; இந்தக் காலத் திலும் காஞ்சி மாநகரமே தமிழகத்தின் அறிவுத் தலைநகரமாகத் திகழ்கிறது என்னும் உண்மையை மெய்ப்பிப்பதற்கு ஆயிரம் எடுத்துக்காட்டுகள் தேவையில்லை. தென்ன வர் நாட்டின் தன்னிகரற்ற தலைவராய்—வாலிபா உலகத்தின் வசீகர கீதமாய்—அறிஞர் பெருமக்கள் அனைவராலும் பேரறி ஞர் எனப் போற்றிப் புகழப்படும் சிந்தனைக்

கருவூலமாய்த் திகழ்ந்த செந்தமிழ்த் தென்றல் **அறிஞர் அண்ணுத்துரை** அவர்களைப் பெற்றெடுத்துத் தந்த பெறற்கரிய பேறு காஞ்சிபுரத்திற்கு உரியது என்னும் ஓர் உண்மையே போதும். ஒரே ஒரு உண்மைதான் என்ருலும் ஒப்பற்ற உண்மையல்லவா அது!

**பெற்ற தந்தையும் உடன்பிறந்தாரும்:—**

இத்தகைய பெரும் புகழ்படைத்த காஞ்சிபுரத்தில் இந் நூற்றுண்டின் தொடக்கத்தில் மிகப் பெரிய மொத்த வாணிப ஜவுளிக்கடை ஒன்று இருந்தது. அந்தக் கடையின் உரிமையாளராய் — பெரும் புகழ்பெற்ற பெருஞ் செல்வராய்த் திகழ்ந்தவர் **பிரமநகர் செங்கல்வராய முதலியார்** அவர்கள் ஆகும். அந்தக் காலத்தில் அவருடைய ஜவுளிக் கடையே காஞ்சி மாநகரின் முதற்பெரும் அறுவை வாணிபக் கடை என்று கூறினுல் அது மிகையாகாது. வாணிபத் துறையில் இவ்வண்ணம் பெரு வெற்றி பெற்றுத் திகழ்ந்த அவர், தமிழ் இலக்கியத் துறையிலும் ஆழ்ந்த புலமை பெற்றவராக விளங்கினர். சென்ற நூற்றுண்டில், காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையம் மண்டபத் தெருவில் வாழ்ந்த தமிழ்ப் பேரறிஞர் பூசை நமசிவாயப் புலவரிடத்தில் முறையாகத் தமிழ் நூல்களைக் கற்றுணர்ந்த பெருமை படைத்தவா செங்கல்வராயனுர். திருக்குறள், திருவாசகம் ஆகிய இரு நூல்களையும் அவர் தன் இரு கண்களென எண்ணிப் போற்றி வந்தார். அறிவுச் செல்வமும் பொருட் செல்வமும் ஒருங்கே அமையப் பெற்றிருந்த அப் பெருந்தகையார், **அரசாலை அம்மையார்** என்னும் நற்குணச் செல்வியாரை மணந்து இல்லற வாழ்வை நல்லறப் பாதையில் நன்கினிது நடத்தி வந்தார். அன்பும் இன்பும் பொருந்தி வாழ்ந்த அந்தத் தம்பதிகளுக்குப் பெண்மகள் ஒருவரும் ஆண்மக்கள எழுவருமாக எட்டுப்பேர், மக்களாகப் பிறந்தனா. அந்த எண்மரில் எட்டாவது பிள்ளையாகவும் கடைசிப் பிள்ளையாகவும் பிறந்தவரே, இதுபோது பிறந்தநாள் விழாக் கொள்ளும் மாண்புடையவராகத் திகழும் காஞ்சி மணிமொழியார் அவர்கள் ஆவர்.

மணிமொழியாரின் மூத்த அண்ணுகிய திருவாளர் பி. செ. **வீராசாமி முதலியாரும்** அதற்கடுத்த அண்ணனுகிய திருவாளர் பி. செ. **முருகேச முதலியாரும்** பண்டைத் தமிழ் இலக்கியங்களை முறைப்படிக் கற்றுத் தேர்ந்து தெளிந்த புலமை படைத்தவர்களாகத் திகழ்ந்தார்கள். பொன்னேரியில் நிலவரிக் கண்காணிப்பாளராக (Revenue Inspector) பணியாற்றி வந்த வீராசாமியார் 'காயாரோகண புராணம்' என்ற நூல் ஒன்றை யாத்துள்ளார். திருவாளர் பி. செ. முருகேசனுரோ பூசை நமசிவாயனுரின் மகன் பெரும்புலவர் பூசை கந் சாமி முதலியார் அவர்களின் சிறந்த மாணவராய் அமர்ந்து தமிழ் இலக்கியங்களை ஐயம்திரிபறக் கற்றுணர்ந்தவர். "இவர் தமிழும் சைவமும் தழைக்க வேண்டும் என்னும் கருத்துடைய கழகங்கள் அனைத்திலும் முன்னின்று உழைக்கும் இயல்புடையார். இவரது முயற்சியாலேயே முதன் முதல் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகள் காஞ்சியில் பல இடங்களிலும் சொற்பொழிவாற்றும் வாய்ப்பு ஏற்பட்டது. காஞ்சிபுரத்தில் ஞானியார் அடிகளுக்கு இவர் செய்த சிறப்பு வேறு இடங்களில் நிகழ்ந்ததில்லை என அடிகளே கூறக் கேட்டிருக்கிறேன். ஏகாம்பரநாதர் திருவிழாப்பா நூல் இயற்றியும், இரட்டைப் புலவர் வரலாறு முதலிய பல நூல்களை வெளியிட்டும், பல சைவ சபைகளையும் தேவார சபைகளையும் தோற்றுவித்தும் தமிழ் மொழிக்கும் சைவத்திற்கும் தொண்டாற்றி வந்தார்." என்று இவரைப் பற்றித் தன்னுடைய வாழ்க்கை வரலாற்றில் சிறப்பான முறையில் எழுதியுள்ள வண்ணக் களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவா அவர்கள், "காஞ்சியிற் கால்வைக்கும் அறிஞர்கள்— கல்வியாளர்கள் எவரும் இவரைக் காணுமலும், இவருடைய நல்லுதவி பெறுமலும் இருந்ததில்லை" என்றும் எழிலும் சுவை



யும் ததும்பும் முறையில் குறிப்பிட்டுள்ளார்கள். யாழ்ப்பாணம் பொன்னம்பலம்பிள்ளை, அட்டாவதானம் நா. கதிரைவேற்பிள்ளை, திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகள், சுவாமி உருத்திர கோடீசுரர், ஜே. நல்லசாமிப் பிள்ளை, பூவை கலியாணசுந்தர யதீந்திரர், கிழப்பாக்கம் சதாசிவ செட்டியார், பேராசிரியர் நமச்சிவாய முதலியார், 'தமிழ் வேர்ச்சொல் அகராதி' வெளியிட்ட மாகறல் கார்த்திகேய முதலியார், வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முனிவர் போன்ற பேரறிஞர்கள் பலர் முருகேச முதலியாரோடு நட்பு கொண்டிருந்தார்கள். நீதிக்கட்சி தொடங்கப்படுகிற வரையில் அளவு கடந்த வைதீக உணர்ச்சியும் பார்ப்பன பக்தியும் கொண்டவராகக் காட்சியளித்த இவர், ஆண்டுதோறும் பொங்கல் திருநாள் அன்றுமட்டும் இரண்டாயிரம் ரூபாய் பணமும் ஏராளமான வேட்டி சேலை முதலியனவும் பார்ப்பனருக்குத் தானமாக அளித்து வந்தார். புராணச் சொற்பொழிவுகளும் ஏராளமாகச் செய்து வந்தார். ஆனால் 1916ல் சர். தியாகராயர் தலைமையில் நீதிக்கட்சி எனப்படும் பார்ப்பனரல்லாதார் இயக்கம் தொடங்கப்பட்டதும் பி. செ. முருகேசனுடைய பிராமண பக்தி அடியோடு மறைந்துவிட்டது. அது முதல் ஒவ்வோராண்டும் பார்ப்பனரல்லாத ஏழை மக்களுக்கே ஈராயிரம் ரூபாய் பணமும் ஆடை முதலியனவும் வழங்கலானார். நீதிக்கட்சியின் வளர்ச்சிக்கும் எழுச்சிக்கும் முழுமூச்சோடு உழைக்கத் தொடங்கிக் கிளைக் கழகங்கள் அமைத்தும், ஏராளமான உறுப்பினர்களைச் சேர்த்தும் திராவிடர் இயக்கத்தைக் காஞ்சியில் வளரச் செய்தார். 1917ல் அவருடைய தந்தையார் இயற்கை எய்தியபோது, பார்ப்பனப் புரோகிதரை அழைக்காமல் தமிழ்ப் பெரியார் ஒருவரை வைத்தே நீத்தார் இறுதிக் கடன்களை அவர் நிகழ்த்தியதைக் கண்டு காஞ்சி மாநகரமே பெருவியப்பு எய்தியது. வைதீக உணர்ச்சி பெருவெள்ளமாகப் பெருகிக் காஞ்சி நகரத்தையே சுற்றிவளைத்துக் கொண்டிருந்த அந்தக் காலத்தில் இந்த நிகழ்ச்சி பெரியதோர் புரட்சியாகக் கருதப்பட்டுக் காஞ்சி நகரத்தையேஒரு குலுக்குக் குலுக்கி விட்டதில் வியப்பொன்றும் இல்லை. காஞ்சிபுரத்தில் பார்ப்பனப் புரோகிதரின்றிச் செய்யப்பட்ட முதல் நீத்தார் வழிபாடு இதுவேயாகும்.

மணிமொழியாரின் உடன் பிறந்தார் பிறருள், பட்டம்மாள் என்னும் பெயர் படைத்த சகோதரியார் திருமணமாகிச் சில ஆண்டுகள் வாழ்ந்து அதன் பின் இறந்துவிட்டார். அண்ணன் ஒருவர் சிறு வயதிலேயே மறைவு எய்தினர். பி. செ. திருநாவுக்கரசு முதலியார், பி. செ. சம்பந்த முதலியார் ஆகிய இரண்டு அண்ணன்மாரும் மனைவி மக்களுடன் மிகச் சிறப்பாக வாழ்ந்து முதிர்ந்த வயதிலேயே இயற்கை எய்தினர். முன்னவரின் மக்கள் வந்தவாசியை அடுத்த கொடுங்காலூரிலும், பின்னவரின் மக்கள் காஞ்சிபுரத்திலும் இதுபோது நன்முறையில் வாழ்ந்து வருகின்றனர்.

மணிமொழியாரின் உடன்பிறந்தாருள் இறுதியாக இறந்தவர், பி. செ. அருணசல முதலியார் என்னும் பெயர் படைத்தவர். காஞ்சிபுரத்தில் வாழ்ந்து வந்த அன்னார், 1963ஆம் ஆண்டு, தம் 73ஆம் வயதில் இயற்கை எய்தினர். அன்னாரின் மக்கள் கொடுங்காலூரிலும் திருமழிசையிலும் வாழ்ந்து வருகின்றனர்.

மணிமொழியாரின் தந்தையார், அவருடைய 84-வது வயதிலும் (மணிமொழியார் ஒன்பதாவது வகுப்பிற் பயின்று கொண்டிருக்கும்போது) தாயார் 1938-ல் அவருடைய 91-வது வயதிலும் (மணிமொழியார் சென்னையில் செங்குந்த மித்திரன் அச்சகப் பொறுப்பாளராக இருந்தபோது) இயற்கை எய்தினர். மணிமொழியாரின தாயார், 91 என்கிற மிக முதிர்ந்த வயதை அடைந்த பிறகுங்கூட, மரணமடைவதற்கு முன்னாள் வரையிலும் தன்னுடைய உணவைத் தானே சமைத்து உண்டார் என்பதும், மிகத்

திண்ணிய உடல் நலத்தோடு திகழ்ந்தார் என்பதும், கண்பார்வை சிறிதளவும் மங்காமல் தெள்ளத் தெளிவாக இருந்தது என்பதும் இங்கே சிறப்பாகக் குறிக்கத்தக்கன ஆகும்.

### ''பச்சையப்பன்'' ஈந்த செல்வம் :

அறிஞர் அண்ணு அவர்கள் எவ்வாறு தன் கல்வி முழுவதையும் பச்சையப்பன் கல்வி நிலையங்களில் பெற்று 'பச்சையப்பன்' நாட்டிற்கு அளித்த நன்கொடையாகத் திகழ்கிருரோ அவ்வாறேதான் மணிமொழியார் அவர்களும் அவருடைய கல்வி முழுவதையும் பச்சையப்பன் கல்வி நிலையத்திலேயே பெற்ருர். 1900-ஆம் ஆண்டு மே திங்கள் 9-ஆம் நாளன்று பிறந்த மணிமொழியார், முதல் வகுப்பிலிருந்து எஸ். எஸ். எல். சி வகுப்பு வரையில் காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியிலேயே பயின்ருர். பிற்கால வாழ்க்கையில் பேரும் புகழும் பெற்றுத் திகழும் பலர் தங்களுடைய இளமைக் காலத்தில்—அதிலும் சிறப்பாகப் பள்ளிக்கூடத்தில் சிறப்புற்றுத் திகழ்வதில்லை, ஆனல் மணிமொழியார் அவர்களோ இந்தப் பொது விதிக்கு நேர்மாருனவர். பள்ளிக்கூடத்திற் பயிலும்போதே பிற்கால வாழ்க்கையில் ஒளி வீசித் திகழ்வார் அவர் என்பதைச் சுட்டிக் காட்டுவதற்குரிய பல அறிகுறிகள் அவரிடம் தென்படலாயின. ஒவ்வொரு வகுப்பிலும் ஒவ்வொரு பாடத்திலும் அவரே முதல் மாணவராக விளங்கி ஏராளமான பரிசுகளைத் தட்டிப் பறித்துக்கொள்ளும் சிறப்புடையவராக இருந்தார். எஸ். எஸ். எல். சி இறுதித் தேர்வில் கணக்குப் பாடத்தில் 100 க்கு 100 வாங்கித் தேர்வுற்ருர் என்பது இங்கே குறிப்பிடத் தக்கதாகும்.

பொதுவாக எல்லாப் பாடங்களிலும் சிறந்து விளங்கிய மணிமொழியார் தமிழ்ப் பாடத்தில் தலைசிறந்த மாணவராக விளங்கினுர். தமிழார்வத்தின் மிகுதியால், அந்தப் பள்ளியில் அப்போது தமிழாசிரியராகப் பணியாற்றிய தமிழ்ப் பேரறிஞர் வெண்பாப் புலி வேலுசாமிப் பிள்ளையிடம் வகுப்பில் தமிழ் கற்றதோடு நில்லாமல், மாலை வேளைகளில் அன்னரின் இல்லத்திற்கே சென்று, முறைப்படித் தமிழ் நூல்கள் பலவற்றைக் கற்று அறிந்து தேர்ச்சி பெறலானுர். நினைத்தவுடன் நூற்றுக்கணக்கில் வெண்பாக்களை இயற்ற வல்ல பேராற்றல் படைத்திருந்த வெண்பாப் புலி அவர்கள், மணிமொழியாரின் தமிழ்ப் பற்றையும் ஆர்வத்தையும் திறமையையும் கண்டு பெரிதும் மகிழ்ந்து விடுமுறை நாட்களில் அவரைத் தன் இல்லத்திலேயே இருக்கச் செய்து பல நூல்களை அவருக்குக் கற்பிப்பாராம். வெண்பாப் புலியார் 3663 வெண்பாக்களாலாகிய 'கந்தபுராண வெண்பா' நூலும், திருக்கச்சூராலக் கோயிற் புராணம் போன்ற நூல்களும் இயற்றிப் புகழ்பெற்றவர்.

### பொது வாழ்வின் தொடக்கம் :

வகுப்பில் முதல் மாணவராக விளங்கிய மணிமொழியார், அப்படி விளங்கும் பல மாணவர்களைப்போல, வெறும் ''புத்தகப் பூச்சி''யாக இல்லாமல் பல பொது நடவடிக்கைகளிலும் பேரார்வத்துடன் ஈடுபட்டு அரும்பணிகள் பல ஆற்றி வந்தார். பத்தாவது வகுப்பு, எஸ். எஸ். எல். சி. வகுப்பு ஆகியவற்றிற் படித்த இரண்டு ஆண்டுகளிலும் அவரே அவருடைய பள்ளிக்கூட மாணவர் தமிழ்ச் சங்கத்தின் செயலாளராக இருந்து சங்கத்தைத் திறம்பட நடத்தலானுர். இந்த வாழ்க்கை வரலாற்றின் தொடக்கத்தில் நாம் குறிப்பிட்டபடி, அவர் ஒன்பதாவது வகுப்பிற் பயிலும்போது, காஞ்சி நகரில் சர். தியாகராயருக்கு அளிக்கப்பட்ட இணையற்ற வரவேற்பால் கவரப்பட்டு, தியாகராயரின் கொள்கைகளை நன்கு அறிந்து, அதுமுதல் அக் கொள்கைகளைப் பரப்பும் பெரும் பணியில் மும்முரமாக ஈடுபடத் தொடங்கி விட்டார். அந்தப் பணியின் வளர்ச்சிக்காக நாம் ஏற்கெனவே தெரிவித்ததைப்போல— பள்ளியிற் பயின்றுகொண்டிருந்த அந்தப் பருவத்திலேயே (1917-ல்) சர். பி. தியாகராயர்

1937ல் அறிஞர் அண்ணா அவர்களை ஆசிரியராகக் கொண்டு "நவயுகம்" என்னும் வார இதழை நடத்திய பெருமையும் சிறப்பும் மணிமொழியாருக்கு உண்டு. அறிஞர் அண்ணா அவர்களை ஓர் ஒப்பற்ற பேச்சாளர் என்று மட்டுமே அதுவரை அறிந்து மகிழ்ந்திருந்த தமிழகம், அவர் ஆற்றல்மிக்க ஓர் எழுத்துச் சிற்பியும் ஆவார் என்பதை உணர்ந்து களிப்பதற்குரிய வாய்ப்பை முதன் முதல் அளித்தது அந்த ஏடே ஆகும்.

இவ்வாறு பத்திரிகை உலகோடு நெடுங்காலத் தொடர்புகொண்டிருந்த மணிமொழியார் அவர்கள், அவருடைய முதல் மகனார் பேராசிரியர் மா. இளஞ்செழியன் அவர்களோடு இணைந்து நின்று 1947 ஆகஸ்டு 16ஆம் நாளன்று "போர்வாள்" என்னும்




அரியதோர் வார வெளியீட்டைத் தொடங்கி ஈடு இணையற்ற முறையில் அதை நடத்திய போது, திராவிட இளைஞர்களின் உள்ளத்திலெல்லாம் புத்தம் புதியதோர் ஆர்வமும் உணர்ச்சியும் பொங்கியெழலாயின. "உண்மையை ஒளிக்காது எடுத்துச் சொல்வதே நமது இலட்சியம். அது யாருக்கு எவ்வளவு குமட்டலாய் இருந்தாலும் சரி, அதைப்பற்றி நமக்குக் கவலையில்லை. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுதல், இரட்டுற மொழிதல், ஒன்றுக்கொன்று நேர்முரணான எட்டுக் கருத்தை உள்ளமைத்துச் சொற்றொடர்கள் தீட்டுதல் முதலிய வழிகள் நமக்குத் தெரியா. நெஞ்சில் பட்டதைப் பட்டாங்கு உரைக்கும் நேரிய வழி ஒன்றுதான் நமக்குத் தெரியும். அது ஒன்றே போதும். புத்துலகப் பாதையில் தமிழகத்தைச் செலுத்தும் சீரிய பணியை மேற்கொண்டுள்ள நமக்கு வேறு வழிகள் ஏனோ?" என்கிற இவ் வாக்கியங்கள் அந்தப் பத்திரிகையின் முதல் இதழ் தலையங்கத்தில் காணப்பட்டவையாகும். அந்த இதழ், அது தொடங்கப்பட்ட 16-8-1947 முதல் அது நிறுத்தப்பட்ட 14-4-1958 வரை, இந்த இலட்சிய கீதத்தையே நடைமுறை நாதமாகக் கொண்டிருந்தது என்பதை நாடு நன்கறியும்.

1947 முதல் 1949 வரை திராவிடர் கழகத்தின் வளர்ச்சிக்காகவும், 1949ல் திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்கப்பட்டதிலிருந்து அந்தக் கழகத்தின் செழிப்புக்காகவும், "போர்வாள்," சுழன்று சுழன்று பணியாற்றியிருக்கிறது. அன்பர் அவினாசிலிங்கனார் கல்வியமைச்சராக இருந்தபோது (1948ல்) தொடங்கப்பட்ட இரண்டாவது இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை வளர்ப்பதற்காக அந்த இதழில் தீட்டப்பட்ட தலையங்கக் கட்டுரைகள், உணர்ச்சி வேகம் நிறைந்தனவாயும், சிந்திக்கத் தூண்டும் சிறந்த எழுத்தோவியங்களாயும் திகழ்ந்தன. மாற்றுக் கட்சியினரின் பொருத்தமற்ற வாதங்களைப் பொடிப் பொடியாக்குவதில் "போர்வாள்" தனக்குவமையில்லாத திறமை பெற்றிருந்தது. எதிர்க்கட்சிகளின் ஏராளமான ஏடுகள் திராவிட இயக்கத்தைத் தூற்றித் திரிவதையே தங்களுடைய தனிப்பெருங் கடமையாகக் கருதிய அந்தக் காலத்தில், அந்தத் தாக்குதல்களையெல்லாம் தொகையாக எதிர் நிறுத்தித் தூள்தூளாக்கி வந்தது "போர்வாள்." திராவிடத் தனிநாடு அமைந்தாக வேண்டியதன் அவசியத்தையும், சுயமரியாதை வாழ்வே சுகவாழ்வு என்பதன் மெய்ம்மையையும் பல்வேறு வகைகளாலும், முறைகளாலும், எழிலும் சுவையும் ஒருங்கே

ததும்பும் இனிய செந்தமிழ் நடையாலும் எடுத்தெடுத்து விளக்கி வந்தது அந்த இதழ்.

அரசியல் கருத்து விளக்கக் கேலிச் சித்திரங்களைக் கிழமைதோறும் தவறாமல் வெளியிட்டு, அவற்றின் வாயிலாக அந்த ஏடு சிறந்ததோர் விழிப்புணர்ச்சியை உண் டாக்கியதை எவரும் மறத்தல் இயலாது.

இன்றையதினம் பெயரும் புகழும் பெற்றுத் திகழும் எத்தனையோ எழுத்தாளர் களின் இலக்கியப் படைப்புகளை முதன் முதலில் வெளியிட்டு அவர்களை நாட்டுக்கு அறிமுகப்படுத்திய பெருமை, போர்வாளின் தனி உரிமை என்றே சொல்லவேண்டும். திண்டுக்கல் தங்கவேலர், திருவனந்தபுரம் இளஞ்சேரன், தில்லை வில்லாளன், தில்லை மறைமுதல்வன், டி. கே. சீனிவாசன், கே. ஜி. இராதாமணாளன், நா. ஜகந்நாதன், ஆ. ல. நாராயணன், க. அறிவழகன், கௌதமன், பி. சி. கணேசன், தாமரைக் கண்ணன், எஸ். எஸ். தென்னரசு முதலிய இக்காலச் சிறந்த எழுத்தாளர்கள் பலருடைய கட்டுரை களை அப்போதே வெளியிட்டு, அவர்க ளுடைய பேராற்றலை மக்கள் மன்றத்திற்கு எடுத்துக் காட்டியது அந்த இதழ்.

எழில் குலுங்கும் மலர்களை வெளியிட ஒரு குறிப்பிட்ட சமூகத்தாரால் நடத்தப் படும் பத்திரிகைகளால் மட்டுமே முடியும் என்று நெடுங்காலமாக இருந்த நிலையை மாற்றி, நம்மாலும் அது இயலும் என்பதை, வெறும் பேச்சால் அல்ல—பல்வேறு மலர் களை அழகு ததும்பும் வகையில் வெளியிட்ட தன் வாயிலாக மெய்ப்பித்திருக்கிறது "போர் வாள்." போர்வாள் அலுவலகத்திலிருந்து 1947 செப்டம்பரில் வெளியான பெரியார் பிறந்த நாள் மலரும், 1948—1951—1958 ஆகிய ஆண்டுகளில் வெளியான பொங்கல் மலர்களும், 1950 செப்டம்பரில் வெளியான தி. மு. க. முதலாண்டு நிறைவுநாள் மலரும், 1951 டிசம்பரில் வெளியான தி. மு. க. முத லாவது மாநில மாநாட்டு மலரும், 1952 டிசம்பரில் வெளியான "பராசக்தி" திரைப் பட வெற்றிவிழா மலரும், 1957 செப்டம் பரில் வெளியான கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் நினைவு மலரும், ஆயிரமாயிரம் இளைஞர்களின் இதயங்களை அள்ளிக் கொண்டுவிட்ட அருஞ்சிறப்புடையவை யாகும்.

வெறியன் ஒருவனால் காந்தியடிகள் சுட் டுக் கொல்லப்பட்டபோது 'மறைந்தது ஞாயிறு' என்னும் தலைப்பில் வெளியான 'போர்வாள்' தலையங்கம், அதனைப் படித்தவர்களின் உள் ளங்களை உருகவைக்கும் தன்மை படைத்த தாக இருந்தது. அதுபோலவே ஜனாப் ஜின்னா, சுயமரியாதை வீரர் அழகிரிசாமி, அறிஞர் திரு வி க. ஆகியோரின் மறைவு குறித்து எழுதப்பட்ட தலையங்கங்களும் உணர்ச்சிச் சித்திரங்களாக விளங்கின.

காஞ்சி மணிமொழியாரும், அவருடைய முதல் மகனார் **பேராசிரியர் மா. இளஞ்செழியன் எம். ஏ.** அவர்களும் அந்த இதழின் இணை ஆசிரியர்களாக இருந்து அந்த இதழை நடத்திய செம்மையையும் சிறப்பையும் கண்டு தமிழகம் மட்டற்ற மகிழ்ச்சி எய்தி யது.

**பகுத்தறிவுப் பாசறையும்**
**திராவிடர் நாட்குறிப்பும்**

"போர்வாள்" கிழமை இதழைத் தமிழ கமே வியந்து போற்றும் முறையில் மிகச் சிறப்பாக நடத்திவந்த அதே சமயத்தில், மணிமொழியார் ஆற்றிவந்த மற்றோர் அரிய பணி, "**பகுத்தறிவுப் பாசறை**" என்னும் புத்தக வெளியீட்டு நிறுவனம் ஒன்றை நிறுவி, அதன் வாயிலாகத் தமிழ் மக்களின் முன் னேற்றத்திற்கும் நல்வாழ்வுக்கும் பெருந்துணை புரியவல்ல அருந்தமிழ் நூல்கள் பலவற்றை அணி அணியாக வெளியிட்டு வந்ததாகும். பேராசிரியர் க. அன்பழகன் எம்.ஏ., எம். பி.

அவர்கள் இயற்றிய ''வகுப்புரிமைப் போராட்டம்'', பேராசிரியர் மா. இளஞ்செழியன் எம். ஏ. அவர்கள் இயற்றிய ''தமிழன் தொடுத்த போர்'', ''ஈரோட்டுப் பாதை'', ''சரிந்த சாம்ராஜ்யம்'', ''அறிஞர் அண்ணுதுரை'', ''இந்திய அரசியல் திட்டம்'', ''அஞ்சா நெஞ்சன் வால்டேர்'', இராதா மணளன் இயற்றிய ''மனப் புயல்'', ''இளவரசி'', ''தேன்மொழி'', ''புதுவெள்ளம்'', ''பொற்சிலே'', ''ருஷ்ய நாட்டு அழகி'' முதலிய பெரும்புகழ் படைத்த நூல்கள் பலவும் இப் பதிப்பகத்தின் வாயிலாக வெளியிடப் பட்டவையே.

மணிமொழியார் அவர்களால் திறம் படச் செய்து காட்டப்பட்ட மற்ருெரு புதுமை, ''**திராவிடர் நாட்குறிப்பு**'' என்னும் டைரியை வெளியிட்டு வந்ததாகும். 1950 முதல் 1958 வரை மணிமொழியாரால் வெளியிடப்பட்டுவந்த இந் நாட்குறிப்பு, திராவிட முன்னேற்றக் கழகத்தின் சட்டதிட்டங்கள், தி. மு. க. சொற்பொழிவாளர்களின் முகவரிகள், தமிழகம் முழுவதுமுள்ள தி. மு. க. கிளேகளின் செயலாளர்கள் முதலிய அலுவலர்களின் பெயர்கள், தி. மு. க. பற்றிய ஏனேய விவரங்கள் யாவற்றையும் ஒன்ருகத் திரட்டி அனேவரும் போற்றும் முறையில் அளித்து வந்தது. தி. மு. க. பற்றிய தொகுப்பு நூலாக அது விளங்கி வந்ததோடு பேரறிஞர் அண்ணு அவர்களின் அமுத மொழிகளேயும் ஏனேய உலக அறிஞர் பெருமக்களின் பொன் மொழிகளேயும் ஒரு நாளேக்கு ஒன்று என்னும் முறையில் அது அளித்துவந்ததால் அறிவுக் கருவூலமாகவும் அது ஒளிவீசித் திகழ்ந்தது. இந் நிலேயில் திராவிடர் இயக்கத் தோழர்கள் ஒவ்வொருவரின் இல்லத்திலே மட்டுமல்ல, உள்ளத்திலேயும் அது இடம் பெற்றது இயற்கையே அல்லவா?

**தி. மு. க. வைத் தொடங்கியதில் மணிமொழியாரின் பெரும் பங்கு**

தென்னகம் பெற்ற தன்னிகரற்ற இயக்கமாகத் திகழும் திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்கப்பட்ட நாளிலிருந்து இன்றுவரையில் அதன் செல்வாக்கும் புகழும் தமிழ் நாடெங்கும் பரவுவதற்காகப் பல்வேறு துறைகளாலும் முறைகளாலும் ஓய்வறியாமல் உழைத்து வருபவர் மணிமொழியார். தி. மு. க. தளபதிகளில் தன்னிகரற்ற சிறப்புடையவராகத் திகழும் மணிமொழியார் அதன் எழுச்சிக்காகவும் ஏற்றத்திற்காகவும் ஆற்றியுள்ள அரும்பணிகளே நாடு நன்கறியும். ஆனல் அக் கழகம் தொடங்கப்படுவதற்கே காரணகர்த்தாக்களாக விளங்கிய மிகச் சில முக்கியமான தலேவர்களில் முன் வரிசையில் இருந்தவர் அவர் என்னும் பேருண்மை, பலருக்குத் தெரியாமல் இருக்கக்கூடும்.

பெரியார் ஈ. வே. ரா. அவர்கள் மணி அம்மையாரைத் திருமணம் செய்துகொள்ள இருக்கும் செய்தியைக் கேள்விப்பட்டவுடன் மணிமொழியார் அத்தகைய திருமணத்தால் திராவிட இயக்கத்துக்குப் பெருங்கேடு விளேவது உறுதி என்று எண்ணினர். அறிஞர் அண்ணு அவர்களேயும் இயக்கத்தின் ஏனேய முன்னணித் தலேவர்களேயும் கலந்து ஆலோசித்த பிறகு அத்தகைய திருமணத்தைத் தவிர்க்க வேண்டியது பெரியார் அவர்களின் பெருங்கடமை என்பதை வற்புறுத்தித் தம் ''**போர்வாள்**'' இதழில், பல்வேறு காரணங்களேயும் நியாயங்களேயும எடுத்துக்காட்டிக் கட்டுரைகளும் தலேயங்கங்களும் தீட்டினர்.

அப்போது ஏற்காட்டில் தங்கியிருந்த பெரியார் அவர்களே நேரிற் கண்டு திருமண ஏற்பாட்டைக் கைவிடுமாறு கேட்டுக் கொண்ட முதல் தூதுக்குழுவினர்—திருவாளர்கள் கே. கே. நீலமேகம், என். வி. நட

ராசன், எஸ். குருசாமி, வேலூர் திருநாவுக்கரசு, கடலூர் குருசாமி ஆகியோர் தங்கள் முயற்சியில் வெற்றிபெற இயலாமல் திரும்பிய பின்னர், அறிஞர் அண்ணு அவர்களின் ஆலோசனைப்படி, காஞ்சி மணிமொழியார் அவர்கள், திருவாளர்கள் டி. எம். பார்த்தசாரதி, கே. எம். கண்ணபிரான், சி. வி. இராஜன் ஆகியோருடன் சேர்ந்து, மற்ரெரு தூதுக்குழுவாக ஏற்காடு சென்று, பெரியார் அவர்களிடம் இயக்கத் தோழர்களின் உள்ளக் கொதிப்பைத் தெளிவாக எடுத்துரைத்தார்.

பெரியார்—மணிஅம்மையார் திருமணம் நடந்துவிட்டபிறகு, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் முதலிய பலர், பெரியாரின் கருத்துக்கும் போக்குக்கும் மாறுபட்டவர்களே பெரும்பான்மையினராக இருப்பதால், பெரியாரிடமிருந்து திராவிடர் கழகத்தைக் கைப்பற்றுவதே உடனடியாகச் செய்ய வேண்டிய செயல் என்று வாதாடியபோது, மணிமொழியார், அத்தகைய போக்கு பல தவருன விளைவுகளுக்கு இடம் அளித்து விடும் என்பதை மறுக்கமுடியாத பல சான்றுகளுடன் எடுத்துக் காட்டினர்; தனிக் கழகம் துவக்குவதே சாலச் சிறந்த ஏற்பாடு என்பதை வற்புறுத்திப் பலரும் அக் கருத்தை ஏற்குமாறு செய்தார். அறிஞர் பெருந்தகை அண்ணு அவர்களும் அதே கருத்தைத்தான கொண்டிருந்தார்கள். எனினும் எக் காரணத்தாலோ அத் திட்டத்தைச் செயற்படுத்தும் கட்டத்தை அண்ணு அவர்கள் ஒத்திப் போட்டுக்கொண்டே வந்தார்கள். இதனுல் இயக்கத்தின் முக்கிய தோழர்களிடையே ஏமாற்றமும் சலிப்பும் ஏற்படலாயின. இந்நிலையைத் தவிர்க்கவும், விரைந்து செயலாற்றும் கட்டத்திற்கு அண்ணு அவர்களைத் தூண்டவும் மணிமொழியார் அவர்கள் ஓர் தந்திரத்தைக் கையாண்டார்கள்,

மணிமொழியார், சென்னை மாவட்டத் தி. மு. க. முன்னுள் செயலாளர் திரு கே. கோவிந்தசாமி, பொதுக்குழு உறுப்பினர் திரு ஏ. எஸ். இராமன் ஆகியோரை உடன் அழைத்துக்கொண்டு, இப்போது பிற்பட்ட வகுப்பினர் நலத்துறை அமைச்சராக விளங்கும் மாண்புமிகு திரு என். வி. நடராசன் அவர்களால் அப்போது நடத்தப்பட்டு வந்த "திராவிடன்" கிழமை இதழின் அலுவலகத்திற்குச் சென்று, (திரு நடராசன் அவர்கள அச் சமயம் வெளியூர் சென்றிருந்தார்.) அந்தக் கிழமை வெளியீட்டிற்கான கடைசி "பாரம்" அச்சாகப் போகும் சமயத்தில் அதை நிறுத்தி, "பெரியாரின் திருமணத்தால் அவரிடமிருந்து விலகி நிற்கும் தோழர்களின் தனிக் கட்சியைத் தொடங்குவதற்கான ஆலோசனைக் கூட்டம் அடுத்த கிழமை சென்னையில் நடைபெறும்" என்பதாகத் திரு என். வி. நடராசன் அவர்கள் பெயரால் ஓர் அறிக்கையை வெளியிடும்படிச் செய்தார்.

அண்ணு அவர்களுக்குத் தெரியாமலே வெளியான இந்த அறிக்கையைத் 'திராவிடன்' இதழில் கண்டதும் அண்ணு அவர்கள் சற்றுக் கோபம் கொண்டார்கள் என்றபோதிலும் தனி இயக்கம் தொடங்கும் முயற்சியைத் தான் ஒத்திப்போட்டு வருவதால் இயக்க முன்னணித் தலைவர்களிடம் எவ்வளவு சலிப்புணர்ச்சி ஏற்பட்டுவிட்டது என்பதை அந்த அறிக்கையின் வாயிலாக நன்கு உணர்ந்துகொண்டார்கள்; தனிக் கழகம் தொடங்கும் முயற்சியில் அதன்பின் மிகத் தீவிரமாக ஈடுபடலானுர்கள். இரணடொரு வாரங்களில் திராவிட முன்னேற்றக் கழகத் தொடக்கவிழா சென்னை இராபின்சன் பூங்காவில் அலைகடலெனத் திரண்டிருந்த மக்கள் பெருங்கூட்டத்தின் மகிழ்ச்சி வெள்ளத்திற்கிடையே மிகச் சிறப்பாக நடைபெறலாயிற்று. ஆம்! எக் காரணத்தாலோ

சற்றே தயங்கியிருந்த அண்ணா அவர்களைத் தூண்டுவதற்காக மணிமொழியார் கையாண்ட தந்திரம் முழு வெற்றியை அளித்துவிட்டது

''அந்த நாட்களில் நம் மணிமொழியார்'' என்னும் தலைப்பில், 1960ல் வெளிவந்த மணிமொழியார் அவர்களின் மணிவிழா மலரில் பாராட்டுக் கட்டுரை தீட்டியிருந்த அப்போதைய தி. மு. க. அமைப்புச் செயலாளர் திரு என். வி. நடராசன் அவர்கள் அக் கட்டுரையில் மணிமொழியாரின் இந்த அருஞ்செயலை மிக விரிவாக எடுத்துக் கூறியிருப்பதோடு, ''இவ் விவரம் நம் கழகத் தோழர்களில் பெரும்பாலோருக்கு இதுவரை தெரிந்திருக்கமுடியாதென்றே எண்ணுகிறேன். இதில் குறிப்பிடத்தக்கது என்னவெனில், திராவிடன் இதழில் அச் செய்தி வெளிவந்த பிறகே அண்ணா அவர்கள் தனி இயக்கம் துவக்கும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டார்கள். இதிலிருந்து நண்பர் காஞ்சி மணிமொழியார் அவர்கள் இயக்க வளர்ச்சியில் கொண்டிருக்கும் அக்கறை எத்தன்மையது என்பது நன்கு விளங்கும்'' என்றும் தெரிவித்துள்ளார்.

### கழக வளர்ச்சியும் காஞ்சி மணிமொழியாரும்

திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்கப்பட்ட ஆண்டிலிருந்து (1949) இன்று வரை அதன் சீரிய வளர்ச்சிக்காகவும் சிறந்த வெற்றிக்காகவும் மணிமொழியார் ஆற்றியுள்ள தொண்டுகள், தி. மு. க. வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கத் தக்க பெற்றிமை படைத்தன என்று கூறுவது முழு உண்மை, வெறும் பாராட்டு அன்று.

திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்கப் பட்டபோது அதன் பொதுச்செயலாளராக அறிஞர் அண்ணா அவர்களும், அவருக்குத் துணையாக நான்கு குழுவினரும் ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவ்வாறு அமைக்கப்பட்ட நான்கு குழுக்களில் ஒன்று, நிதிக்குழு. அதன் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு மூன்று ஆண்டுகள் திறம்படப் பணியாற்றிக் கழகத்தை ஓங்கி வளரச் செய்தார் மணிமொழியார். அப்போது அமைக்கப்பட்ட ஏனைய மூன்று குழுக்களில், அமைப்புக் குழுவின் செயலாளராகத் திரு என். வி. நடராசன் அவர்களும், பிரசாரக் குழுவின் செயலாளராக நாவலர் திரு நெடுஞ்செழியன் அவர்களும், சட்ட திட்டக் குழுவின் செயலாளராகத் திரு கே. ஏ. மதியழகன் அவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கழகத்தின் தொடக்க காலத்தில் அதன் ஐம்பெருந் தலைவர்களில் ஒருவராகத் திகழ்ந்தவர் மணிமொழியார் என்பதை இந்தக் குழுக்களின் அமைப்பு முறை தெள்ளத் தெளிவாக எடுத்து விளக்குகிறது.

மணிமொழியார் அவர்கள், தி. மு க. தலைமைக் கழகத்தின் நிதிக் குழுச் செயலாளராக இருந்து அதன் நிதி நிலையைச் செழித்து ஓங்கச் செய்ததோடு, திரு மதியழகன் அவர்களைச் செயலாளராகக் கொண்ட தி. மு. க. வின் முதல் சட்ட திட்டக் குழுவிலும் உறுப்பினராக இருந்து. கழகத்தின் சட்டதிட்டங்களைச் செம்மையான முறையில் வகுக்கவும் துணை புரிந்துள்ளார்.

1951 டிசம்பர் 13, 14, 15, 16 ஆகிய நாட்களில் சென்னை மாநகரில் மட்டற்ற சிறப்புடன் நடைபெற்ற தி. மு. க. முதல் மாநில மாநாட்டின் செயலாளராக இருந்து அம் மாநாட்டின் மாபெரும் வெற்றிக்காக இரண்டு மாத காலம் இரவும் பகலும் அரும்பாடுபட்டார். 2, 37, 700 சதுர அடி பரப்புள்ள பிரம்மாண்டமான பந்தலில் நூறுயிரத்

திற்கு மேற்பட்ட மக்கள் வெள்ளம் பொங்கிப் பெருகி காட்சியளித்தது. தமிழகத்தின் அரசியல் வரலாற்றிலேயே அதுவரை அத்தகைய மாபெரும் மாநாடு நடைபெற்றதில்லை என்று திராவிட இயக்கத்தினர் மட்டும் அல்லர், மாற்றாரும் வேற்றாரும்கூடப் புகழ்மாலைகளைச் சூட்டி மகிழ்ந்தனர். அம் மாநாட்டை ஒட்டி மிகச் சிறந்த 'அறிவுக் கண்காட்சி' ஒன்றும் நடத்தப்பட்டது. கண்காட்சியை ஒன்றே கால் லட்சம் மக்கள் கண்டு களித்தனர். இத்தகைய மகத்தான மாநாடும் கண்காட்சியும் மணிமொழியாரின் செயல் திறமைக்குத் தலைசிறந்த எடுத்துக்காட்டுகள் ஆகும்.

இந்தியப் பேரரசு தமிழகத்தைப் புறக்கணிப்பதைக் கண்டிப்பதன் அறிகுறியாகத் தமிழ் நாட்டுக்கு வருகிற டில்லி அமைச்சர்கள் அனைவருக்கும் கறுப்புக் கொடி காட்டுவது என்று திராவிட முன்னேற்றக் கழகம் எடுத்த முடிவுக்கு ஏற்ப, 1950–51ஆம் ஆண்டுகளில் மத்திய அமைச்சர்கள் சென்னைக்கு வந்த போதெல்லாம் மணிமொழியார் கறுப்புக் கொடி நிகழ்ச்சிகளில் தவறாது பங்கேற்றார். தாமே கறுப்புக் கொடி காட்டுதல் —ஆயிரக் கணக்கானவர்களைக் கறுப்புக் கொடி காட்டுமாறு செய்தல்—கறுப்புக் கொடிகளை ஆயத்தம் செய்து தக்கவர்களிடம் வழங்குதல்—கறுப்புக்கொடி காட்டும் நிகழ்சசியை ஒழுங்காகவும் அமைதியாகவும் நடக்கும்படி அணி வகுத்தல் முதலிய பணிகளில் மணிமொழியார் முழு ஆர்வத்துடன் ஈடுபட்டார்.

குறிப்பாக 24–10—1950 அன்று, அப்போது இந்தியப் பேரரசில் அமைச்சராக விளங்கிய திரு சி. இராசகோபாலாச்சாரியார் சென்னை கோட்டை புகை வண்டி நிலையத்திற்கு அருகில் உள்ள ஒய். எம். சி. ஏ. மாணவர் விடுதி விழாவில் கலந்துகொள்ள வந்தபோது காட்டப்பட்ட கறுப்புக் கொடி நிகழ்ச்சியில் மணிமொழியார் ஆற்றிய பங்கு மறக்க இயலாத மாண்புடையது. காலை 9 மணிக்குத்தான் ஆச்சாரியார் அவர்கள் அங்கு வருவதாக இருந்தார் என்ற போதிலும், காலை 7-30 மணி முதலே, அவர் வரும் பாதை நெடுகத் தி. மு. க முன்னணித் தலைவர்களும் பல்லாயிரம் தொண்டர்களும் அணிவகுத்து நின்றனர். ஆச்சாரியார் வருவதற்கு அரைமணி நேரத்திற்கு முன்னர் போலீஸ் அதிகாரிகள் கறுப்புக்கொடி ஏந்தி இருந்தவர்களை யெல்லாம் அப்புறப் படுத்தத் தொடங்கினார்கள்; அவர்கள் அங்கிருந்து அகல மறுத்தபோது தடிகொண்டு தாக்கினார்கள். போலீசாரின் இந்தப் பயங்கரமான தாக்குதலுக்கு உள்ளான மக்கள்



நாலாபக்கமும் சிதறி ஓடத் தொடங்கிய போது அவர்களைப் போலீசார் துரத்திச் சென்று, விழா நடக்கும் இடத்திலிருந்து ஒரு பர்லாங் தூரத்திற்கு அப்பால் நிற்கும்படிச் செய்துவிட்டனர். கறுப்புக்கொடி ஏந்தியிருந்தவர்கள் அனைவரையும் அப்புறப்படுத்தியாகிவிட்டது—நெடுந் தொலைவுக்கு அப்


நீதிக்கட்சி
செங்குந்தர் இயக்கம்
சுயமரியாதை இயக்கம்
தமிழர் இயக்கம்
திராவிடர் கழகம்
கருஞ்சட்டைப் படை
தி.மு.க
அறிவகம்
உறவுக்குக் கை கொடுப்போம்
உரிமைக்குக் குரல் கொடுப்போம்
சமுதாய இழிவு ஒழிக
திராவிட நாடு திராவிடருக்கே
தமிழ்நாடு தமிழருக்கே
பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்
வீழ்ச்சியுற்ற சமுதாயங்கள் எழுச்சி பெறுக
சமத்துவம் - சகோதரத்துவம் - முன்னேற்றம்
காஞ்சி மணிமொழியார் அவர்களின் அரசியல் பாதை ..........

பால் அவர்களை நிறுத்தியாகி விட்டது—இனி என்ன கவலை—அமைச்சர் வரும்போது அவர் கண்ணெதிரே கறுப்புக் கொடியே தென்படாது—இது உறுதி என்று எண்ணிப் பெருங்களிப்பும் பெருமிதமும் கொண்டனர் போலீஸ் அதிகாரிகள். ஆனல், அந்தோ பரிதாபம்—எத்துணை ஏமாற்றம் அவர்களுக்கு—விழா நிகழ்ச்சியில் ஆச்சாரியார் அவர்கள் பேசத் தொடங்கியதும் விழாவிற் கூடியிருந்த மக்கள் திரளிலிருந்து இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட கறுப்புக் கொடிகள் ஒரே நேரத்தில் உயர்ந்து எழுந்து அலை அலையாக ஆடின. போலீசார் எவ்வளவோ எச்சரிக்கையாக இருந்தும் கறுப்புக்கொடி காட்டும் நிகழ்ச்சி மிகச் சிறப்பாக நிறைவேறி விட்டது. அப்படி நிறைவேற்றி வைத்தவர் மணிமொழியார் அவர்களே ஆகும். தம் சொந்தச் செலவில் இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட காகிதக் கறுப்புக் கொடிகளைத் தயாரித்து, முந்திய நாளே வட்டந்தோறும் சென்று அவற்றைக் குறிப்பிட்ட தொண்டர்களிடம் வழங்கி, கொடிகளை வைத்திருப்பது வெளிப்படையாகத் தெரிந்தால் போலீசார் அவர்களை அப்புறப்படுத்திவிடக்கூடும்- ஆதலால் பிறர் கண்களுக்குப் புலப்படாவண்ணம் அவற்றை மறைத்து வைத்திருக்க வேண்டும் என்கிற அறிவுரையையும் அளித்து, ஆச்சாரியார் பேசத் தொடங்கும் போது திடீரென்று அத்தனைப் பேரும் கொடிகளை உயர்த்த வேண்டும் என்கிற ஆலோசனையையும் மணிமொழியார் அவர்களுக்குத் தந்திருந்தார். மணிமொழியாரின் இந்த முன் எச்சரிக்கையான ஏற்பாடுகள்தாம், அன்றைய கறுப்புக் கொடி நிகழ்ச்சியின் சிறப்பு மிக்க வெற்றிக்கான அடிப்படைகளாக அமைந்தன.

1952ல் மத்திய அரசாங்க அலுவலகப் பெயர்ப் பலகைகளில் உள்ள இந்தி எழுத்து அழிப்பு இயக்கத்தைத் தி. மு. க. ஏற்று நடத்தியபோது, மணிமொழியார் மக்கள் புடைசூழச் சென்னை பிராட்வேயில் அப்போதிருந்த "போர்வாள்" அலுவலகத்திலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு, ஜி. பி. ஓ. அலுவலகம் சென்று, அங்கிருந்த இந்திப் பெயர்



களைத் தார் கொண்டு அழிக்கத் தொடங்கினார். அவ்வாறு அழித்துக் கொண்டிருந்த போது நூலக மாடியிலிருந்து கண்ணாடித் துண்டுகள் அவர்மீது வீசப்பட்டன. என்றாலும் அதற்கு அஞ்சாது தான் எடுத்த செயலைச் செவ்வையாக நிறைவேற்றி முடித்தார் மணிமொழியார்.

1949ல் தி. மு. க. தொடங்கப்பட்ட நாளிலிருந்து 1969 வரை அதன் பொதுக் குழு உறுப்பினராகப் பணியாற்றிய மணிமொழியார், 1959ல் நடைபெற்ற தி. மு. க. தேர்தல்களின்போது சென்னை மாவட்டத் தி மு. க. அவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு எழிலும் ஏற்றமும் மிக்க முறையில் தொண்டாற்றி வந்தார். அதன் விளைவாக அடுத்த முறை—1968ல்—தி. மு. க. தேர்தல்கள் நடைபெற்றபோது சென்னை மாவட்டத் தி மு. க. அவைத் தலைவராக மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஒரே ஒரு வேறுபாடு. முதல் முறை, வேறு பலர் போட்டியிட, இவர் பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டார். இம்முறை,

போட்டியில்லாமலே ஒருமனதாகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

மணிமொழியார் அவர்கள், 1969ல் பொதுச் செயலாளர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களால் தி. மு. க. தலைமைக் கழகத்தின் துணைப் பொதுச் செயலாளர்களில் ஒருவராக நியமிக்கப்பட்டுத் தலைமைக் கழகப் பொறுப்புகளைத் திறமையான முறையில் நிறைவேற்றி வருகிறார்.

### தேர்தல்களில் வெற்றிபெறத் தளராது உழைத்தவர்

நகராட்சி மன்றத் தேர்தல்களிலும், சட்ட மன்ற-நாடாளு மன்றப் பொதுத் தேர்தல்களிலும் திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளர்களின் வெற்றிக்காக, இரவு பகல் என்று பாராமல், இன்று வேண்டாம் நாளை பார்ப்போம் என்று எண்ணாமல், பம்பரம் போல் சுழன்று சுழன்று பணியாற்றிய தொண்டின் செல்வர்—ஓய்வறியாத உழைப்பின் உத்தம உருவம்—மணிமொழியார் அவர்கள்.

1952ல் நடைபெற்ற பொதுத் தேர்தலின் போது திராவிட முன்னேற்றக் கழகம் தன் வேட்பாளர்களை நிறுத்தவில்லை; ஆனால் தன் கொள்கைகளை ஏற்றுக்கொள்ள இசைவு கூறும் சுயேச்சை வேட்பாளர்களை ஆதரித்துப் பணியாற்றியது. சென்னை நகரிலும் சுற்றுப்புறங்களிலும் நின்ற அத்தகைய வேட்பாளர்களுக்காக மணிமொழியார் அயராது பணிபுரிந்தார்.

1957ல் நடைபெற்ற பொதுத் தேர்தலின் போதுதான் தி. மு. க. முதல் முறையாகத் தமிழகச் சட்ட மன்றத்திற்கும் இந்தியப் பாராளுமன்றத்திற்குமான இடங்களுக்குத் தன் வேட்பாளர்களை நிறுத்தி வைத்தது. அந்தப் பொதுத் தேர்தலிலும், 1962, 1967 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற பொதுத் தேர்தல்களிலும், மணிமொழியார் அவர்கள் தி. மு. க. வேட்பாளர்களின் வெற்றிக்காக, எறும்பு போன்ற சுறுசுறுப்புடனும் தேனீ போன்ற ஆர்வத்துடனும் சிங்க ஏறு போன்ற அஞ்சா நெஞ்சத்துடனும் அயராது பணி புரிந்தார்.

1957ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் காஞ்சிபுரம் தொகுதியிலிருந்து பேரறிஞர் அண்ணா அவர்கள் போட்டியிட்டபோது மணிமொழியார் அவர்கள், பல நாட்கள் காஞ்சிபுரத்திலேயே தங்கி, வீடு வீடாகச் சென்று அண்ணா அவர்களுக்காகத் தேர்தல் பிரசாரம் செய்தார்; வாக்குகளைத் திரட்டினார்.

1967 பொதுத் தேர்தலின்போது பகுத்தறிவுப் பேரொளி அண்ணா அவர்கள் தென் சென்னைப் பாராளுமன்றத் தொகுதியிலிருந்தும் தமிழகத்தின் இன்றைய முதல்வர் கலைஞர் கருணாநிதி அவர்கள் சென்னை சைதாப்பேட்டை சட்டமன்றத் தொகுதியிலிருந்தும் போட்டியிட்டார்கள் அல்லவா? இந்த இருவரின் வெற்றிக்காக மணிமொழியார் அவர்கள், ஏறத்தாழ இரண்டு மாத காலம், காலை 6 மணியிலிருந்து இரவு 12 மணி வரையில், ஒரு துளியும் சலிப்போ களைப்போ இன்றி ஓயாது பணிபுரிந்தார். சென்னை நகரின் பிற தொகுதிகளிலிருந்து போட்டியிட்ட ஏனைய வேட்பாளர்களின் வெற்றிக்காகவும் அது போலவே பாடுபட்டார்.

1959ல் நடைபெற்ற சென்னை மாநகராட்சி மன்றத் தேர்தலின் விளைவாகத்தான் அம் மாநகராட்சி மன்றத்தின் ஆட்சிப் பீடத்தில் தி. மு. க. முதல் முறையாக அமர முடிந்தது; திரு அ. பொ. அரசு அவர்கள் தி.மு க. வின் முதல் மேயர் என்னும் மேன்மை மிகு நிலையையும் அடைய முடிந்தது. அந்தத் தேர்தலின்போது மணிமொழியார், மாநகரத் தி. மு. க. தேர்தல் குழுவின் உறுப்பினராக அமர்ந்து, அப்போது அவருக்கு வயது ஐம

பத்தி ஒன்பது என்றாலும், இருபத்தி ஒன்பது வயது இளைஞரைப் போல் சுறுசுறுப்பாகப் பணியாற்றி, தேர்தலில் கழகம் மாபெரும் வெற்றிபெற்று ஆளும் கட்சியாக அமர்வதற்கு உரிய சூழ்நிலையை ஏற்படுத்தினர்.

அதுபோலவே 1964, 1968 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற சென்னை மாநகராட்சி மன்றத் தேர்தல்களிலும், மணிமொழியாரின் தொண்டு, தி. மு. க. வேட்பாளர்கள் வெற்றிக் கனியைக் கொய்வதற்குப் பெரிதும் பயன்பட்டது.

### சீர்மிகு பணிபுரிந்த
### சட்டமன்ற உறுப்பினர்

1962-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலின்போது தமிழகச் சட்ட மன்றத்திற்கு இருந்த மொத்தத் தொகுதிகள் 206. அந்தத் தொகுதிகளிற் பெரும்பாலானவற்றின் வாக்காளர் எண்ணிக்கை 75000, 80000, 85000 என்பனபோல நூறாயிரத்திற்கும் குறைவாகவே இருந்தன. 31 தொகுதிகளில மட்டுமே வாக்காளர்களின் எண்ணிக்கை நூறாயிரம் அல்லது அதனினும் மிகுதி என்கிற நிலையைப் பெற்றிருந்தது. அந்த 31 தொகுதிகளிலும் மிக அதிக வாக்காளர்களைப் பெற்றிருந்த தொகுதி, சென்னை நகரைச் சேர்ந்த தியாகராய நகர் தொகுதியே. தமிழகச் சட்டமன்றத் தொகுதிகள் அத்தனையிலும் மிகப் பெரியதாக விளங்கிய இந்தத் தொகுதியிலிருந்துதான் காஞ்சி மணிமொழியார் அவர்கள் 1962 பொதுத் தேர்தலின்போது திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளராகப் போட்டியிட்டார். அவரை எதிர்த்து நின்றவர்கள் எழுவர். அவர்களில் ஒருவர்—காங்கிரஸ் வேட்பாளர்—ஏராளமான செல்வமும் செல்வாக்கும் நிரம்பியவர். மற்றொருவர்—ஒரு சுயேச்சை வேட்பாளர்—தொழிற் சங்க இயக்கத்தில் நீண்ட நெடுங்காலமாக ஈடுபட்டு அத் துறையில் பெயரும் புகழும் பெற்றுத் திகழ்ந்தவர்; சில ஆண்டுகளுக்குப் பின்னர் சென்னை நகர மேயராக அமரும் நல் வாய்ப்பைப் பெற்றவர். தொகுதியில் காஞ்சி மணிமொழியாரை எதிர்த்துக் காங்கிரஸ் தரப்பில் செய்யப்பட்ட பிரச்சாரம் மிக மும்முரமாக இருந்தது. மிகப் பெரிய தொகுதி—எல்லையற்ற எதிர்ப்பு—கடுமையான போட்டி—என்றாலும் மணிமொழியார் காங்கிரஸ் வேட்பாளரைவிட ஏறத்தாழ ஒன்பதாயிரம் வாக்குகள் கூடுதலாகப் பெற்று வெற்றிமுரசு கொட்டினர். ''தமிழகத்தின் மிகப் பெரிய தொகுதியில் தி.மு-க.வின் வெற்றி'' என்னும் தனித் தலைப்பிட்டு இச்செய்தியை வெளியிட்டன பல நாளிதழ்கள். 1962 பொதுத் தேர்தலின்போது தி. மு. க. பெற்ற வெற்றிகளில் தனிச் சிறப்பு மிக்கதாக இவ் வெற்றி போற்றிப் புகழ்ந்து பாராட்டப்பட்டது அனைத்துக் கட்சியினராலும்.

அந்தத் தேர்தல் நடைபெற்ற நேரத்தில் மணிமொழியாரின் வயது, 62. ஆனல் தேர்தலுக்கு முன்னர், ஏறத்தாழ இரண்டு மாத காலம், தொகுதி முழுவதும் சுழன்று சுழன்று அவர் ஓய்வறியாது உழைத்த அதிசயத்தைக் கண்டு கட்டிளங் காளைகள்கூடப் பெரு வியப்பு எய்தினர். அத் தொகுதி வாக்காளர்களின் மொத்த எண்ணிக்கை, 1,28,854. அவர்களிற் பெரும்பாலோரை வீடு வீடாகச் சென்று நேரிலேயே கண்டு தமக்கு வாக்களிக்குமாறு கேட்டுக்கொண்டார் மணிமொழியார் என்றால்—அந்த அளவுக்கு அவரால் கடுமையான உழைப்பை எளிதாக அளிக்க முடிந்தது என்றால்—அவ்வளவு உழைப்பிற்கும் பிறகு நாள்தோறும் ஐந்தாறு பொதுக் கூட்டங்களில் கலந்து கொண்டு தனக்காகவும் பிற தொகுதிகளிற் போட்டியிட்ட ஏனைய தி. மு. க. வேட்பாளர்களுக்காகவும் சொற்போர் முழக்கமும் புரிந்து வந்தார் என்றால்—அவருடைய பேருழைப்பின் திறம் கண்டு, அப்பப்பா—

இதுபோல உழைக்க நம்மாலே ஆகாது என்று எண்ணி இளைஞர் கூட்டம் வியப் பெய்தி நின்றதில் வியப்பென்ன இருக்க முடியும்?

பெருவெற்றி பெற்ற மணிமொழியார், சட்டமன்றக் கூட்டங்கள் ஒவ்வொன்றிற்கும் தவறுமல் சென்று அங்கு நடைபெற்ற விவா தங்களில் முழுப் பங்கு ஏற்ருர். பொதுவா கத் தமிழகத்தின் முன்னேற்றத்திற்காகவும் சிறப்பாகத் தன் தொகுதி மக்களின் மேம் பாட்டுக்காகவும் தேவையான திட்டங்கள் பலவற்றை அங்கு எடுத்துக்காட்டி வாதாடி ஞர். ஆரம்ப ஆசிரியர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டியதன் உடனடி இன்றியமையாமை—கைத்தறி நெசவாளர் களின் வாழ்க்கையை வதைத்து வரும் தொல்லைகளையும் துயரங்களையும் அகற்ற வேண்டியதன் அவசியம்—சென்னை நகரத் தின் குடிதண்ணீர்ப் பஞ்சத்தை நீக்குவதற் கான ஏற்பாடுகளில் மாநில அரசு முழுக் கவ னம் செலுத்தியாக வேண்டும் என்பதற்கான காரணங்கள்—மாநகராட்சி மன்றத்தின் நிதி வசதிகளைப் பெருக்குவதற்குத் தேவையான திட்டங்கள்—குடிசைவாழ் மக்கள் வாழ்வுக் கான ஆலோசனைகள் முதலிய கருத்துக்கள் அவருடைய சட்டமன்றச் சொற்பொழிவு களில் சிறப்பிடம் பெற்றன.

1963-ஆம் ஆண்டில் அப்போதைய நிதி யமைச்சர் திரு. பக்தவத்சலம் சட்டமன்றத் தின்முன்வைத்த நிதிநிலை அறிக்கையில் காணப்பட்ட பல்வேறு குறைபாடுகளைச் சட்டமன்றத் தி. மு. க. உறுப்பினர்கள் வரிசை வரிசையாக எடுத்துக்காட்டிச் சொற் பொழிவாற்றியபோது, காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் பலர், ஓயாமல் குறைகூறிக் கொண் டிருப்பதுதாஞ எதிர்க் கட்சியினர் வேலை என்று கேலிக் குரல் எழுப்பிக் கண்டனக் கணைகள் தொடுத்தனர். அந்தக் கேலிக் குரலை ஒடுக்கிக் கண்டனக் கணைகளை முறித் தெறியும் வகையில் 5—3—1963 அன்று தமிழகச் சட்டமன்றத்தில் மணிமொழியார் ஆற்றிய ஆற்றல்மிக்க உரையின் ஒரு பகுதி இது:—

"மேசை நாற்காலி முதலிய மரச் சாமான்களை ஆயத்தமாகச் செய்து விற்கும் கடைகளில், அந்தப் பொருள்களின் ஓட்டை உடைசல்கள் பிறருக்குத் தெரியாமல் இருக் கும் பொருட்டு அழுத்தமான முறையில் வண்ணங்களையும் வார்னிஷையும் அடித்து வைத்திருப்பார்கள். அத் துறையில் அனு பவம் அற்றவர்கள் அவற்றைச் சென்று பார்த்தால் அந்த ஓட்டை உடைசல்கள் கண் ணுக்குத் தெரிவதில்லை. ஆனுல் அதே பொருள்களை ஒரு தச்சர் சென்று பார்த்தால் எங்கெங்கே ஓட்டை உடைசல்கள் இருக் கின்றன என்பதை எளிதில் கூறிவிடுவார். அந்தத் தச்சரின் நிலையில்தான் எதிர்க்கட்சி யினராகிய நாங்கள் இருக்கிறேம். சட்ட மன்றத்தின்முன் வைக்கப்பட்டுள்ள நிதிநிலை அறிக்கையின் உள்ளே மறைந்து காணப்படு கிற ஓட்டை உடைசல்களைக் கண்டுபிடித்துக் கூறவேண்டிய பொறுப்பு எதிர்க்கட்சியின ராகிய எங்களுக்கு இருக்கிறது. அந்தக் குறைகளை நாங்கள் எடுத்துக்காட்டாவிட் டால் ஓட்டை உடைசல்களே இல்லாத அழகான அறிக்கை இது என்று பொது மக்கள் தவருக நினைத்துவிடக்கூடும். ஆனுல் இக்குறைகளை நாங்கள் எடுத்துக்காட்டுவது, எவையேனும் சில குறைகளை எடுத்துக்காட் டியாக வேண்டும் என்பதற்காக அல்ல. குறைகள் இருப்பதை அரசினர் தெரிந்து கொண்டு, அக்குறைகளைப் போக்குவதற்குத் தேவையான முயற்சிகளில் அவர்கள் ஈடுபட வேண்டும் என்பதற்காகத்தான்."

ஆரம்ப ஆசிரியர்கள் அடைகிற அல் லல்களையும் துயரங்களையும் எடுத்துக்காட்டி

மணிமொழியார் தமிழகச் சட்ட மன்றத்தில் மற்ெருரு முறை ஆற்றிய சொற்பொழிவில் பின்வருமாறு தெரிவித்துள்ளார் :—

''ஆரம்பக் கல்வியை அள்ளி வழங்கு கிற ஆசிரியர்களின் உள்ளத்தில் துயரக் கோடு படாமலும் துன்பச் சாயல் படியா மலும் இருந்தால்தான் அக் கல்வியைப் பெற்று வளர்கிற இளம் மாணவர்களின் பிஞ்சு உள்ளங்களில் ஆழ்ந்த அறிவும் சிறந்த பண்பாடும் உயர்ந்த நோக்கமும் உறுதியான தன்னம்பிக்கையும் உரம்பெற்று வளர முடியும். ஆனுல் இன்றைய தினம் ஆரம்ப ஆசிரியர்களிடம் துன்பமும் துயரமும் அகன்று இன்பமும் எழுச்சியும் காணப்படு கின்றனவா என்ருல் இல்லை என்றே கூற வேண்டியிருக்கிறது... பொதுவாக இப்போது எல்லோருக்கும் ஏற்பட்டிருக்கிற பொருளா தார நெருக்கடி ஆரம்ப ஆசிரியர்களுக்கும் இயற்கையாக ஏற்பட்டிருக்கிறது. பண்டங் களின் விலைகள் நாளுக்கு நாள் ஏறிக் கொண்டே போவதால் தங்களுடைய குறைந்த வருமானத்தைக் கொண்டு தங்கள் வாழ்க்கையைச் சீராகவும் சிறப்பாகவும் நடத்த முடியாமல் அவர்கள் தவித்துக் கொண்டிருக்கிருர்கள். இத்துயரத்தை மேலும் பெருக்கும் வகையில் அதிகாரிகளின் ஆணைகள் பல வந்துகொண்டிருக்கின்றன. காட்டு விலங்குகளிடமிருந்து எப்படியோ தப்பி ஓடி வருபவன் காலில் கூரிய கற்களும் பயங்கர முட்களும் குத்திஞல் எப்படி இருக் குமோ அப்படி இருக்கிறது இந்த நிலைமை. பொதுக் கல்வி வளர்ச்சிக்காக அரசினரின் வரவு செலவுத் திட்டத்தில் ரூபா 25 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றும், அதில் ஆரம்பக் கல்வியின் வளர்ச்சிக்காக மட்டும் ஒதுக்கப்பட்டுள்ள தொகை ரூபா 18 கோடி என்றும் பெருமையோடு புகலப்படுகிறது. ஆனுல் இத்துணைப் பெருந்தொகை செலவு செய்யப்பட்டும், ஆரம்ப ஆசிரியர்கட்குக் கிடைக்கவேண்டிய அளவு நிம்மதி கிடைக்க வில்லையே, அது ஏன் என்று கேட்காமல் இருக்க முடியவில்லை.''

இவ்வாறெல்லாம் நாட்டின் நலன் பெருக்கும் நற்கருத்துக்கள் பலவற்றைச் சட்ட மன்றத்தின் வாயிலாக எடுத்துக் காட் டியும் இடித்துக் கூறியும் அரும்பணி ஆற்றி வந்த அண்ணல் மணிமொழியார், அந்த அளவோடு தன் சட்ட மன்றப்பணி முடிந்து விட்டது என்று கருதி அமைதி அடைந்த வர் அல்லர். எந்த நேரத்தில் என்னென்ன குறைகளை ஏந்திக்கொண்டு தொகுதி மக்கள் அப் பெருமகனுரின் இல்லத்திற்கு வந்த போதிலும், அவர்கள் அனைவரையும் அன் புடன் வரவேற்று, இன்முகத்துடன் அவர்கள் மனக்குறைகளைக் கேட்டறிந்து, உடனுக் குடன் அக் குறைகளை அகற்றுவதற்கான முயற்சிகளில் முழு மனதுடன் ஈடுபட்டவர் மணிமொழியார். பார்க்க வேண்டியவர் களைப் பார்த்து, சொல்ல வேண்டியவற்றைச் சொல்லி, முடிக்க வேண்டிய செயல்களை முடித்து வைத்துத் தொகுதிமக்கள் அனை வரின் மதிப்புக்கும் பாராட்டுக்கும் உரிய வராகத் திகழ்ந்த அந்த ஆற்றல் வீரரின் அருந்திறன், எண்ணி மகிழ்வதற்கு மட்டும் அன்று, ஏனைய சட்ட மன்ற உறுப்பினர் களால் பின்பற்றி நடப்பதற்கும் உரிய ஒன்று. ஒரே வாக்கியத்திற் கூற வேண்டுமானுல், சட்ட மன்ற உறுப்பினர் ஒருவர் எவ்வாறு திகழ்தல் வேண்டும் என்னும் இலக்கணத் திற்கு உரிய தலைசிறந்த இலக்கியமாகப் பொலிந்தது மணிமொழியாரின் சட்ட மன் றப் பணி. அவருடைய தொகுதி மக்களின் குறைகளை மட்டுமல்ல, சென்னை மாநகரின் ஏனைய தொகுதிகளைச் சார்ந்த மக்களின் குறைகளை அகற்றவும் தன்ஞல் இயன்ற உதவிகளை அவர் தளராமல் புரிந்துள்ளார்.

**தொகுதியை விட்டுக் கொடுத்த**

**தனிப் பெருஞ் சிறப்பு**

தொகுதிவாழ் மக்களுக்காக ஓயாமல் பாடுபட்டு அனைவரின் பாராட்டையும் முழு

அளவில் பெற்றிருந்த மணிமொழியார், 1967 பொதுத் தேர்தலின்போது கலைஞர் கருணாநிதி அவர்களுக்காக அந்தத் தொகுதியை முழு மனதுடன் விட்டுக் கொடுத்த தியாக உணர்வை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அறிஞர் அண்ணா அவர்கள் மணிமொழியாரை அழைத்து, சில காரணங்களால் கலைஞர் கருணாநிதியை அந்தத் தொகுதியின் தி. மு. க. வேட்பாளராக நிறுத்த வேண்டியிருக்கிறது என்றும், அன்புகூர்ந்து மணிமொழியார் அவருக்கு உரிய அத்தொகுதியை விட்டுக் கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டபோது, தனக்கு முழு ஆதரவு தொகுதி மக்களிடம் இருப்பதறிந்தும் தினையளவும் தயங்காமல் அந்த விநாடியிலேயே தன் ஒப்புதலைத் தந்துவிட்டவர் மணிமொழியார். தன்னிகரற்ற இத் தியாக உணர்வும், தன் நலனைவிடக் கட்சி நலனே பெரிது என எண்ணும் பெருந்தகைமையும் மணிமொழியாரின் ஐம்பதாண்டுப் பொதுவாழ்வில் தொடக்க நாட்கள் முதலாகவே இடையறாது இருந்து வருபவை. எனவே அவர் துளியளவும் தயங்காமல் தன் தொகுதியை விட்டுக் கொடுத்ததில் சிறிதளவும் வியப்பில்லை. ஆனால் இத்தகைய தியாக உணர்வும் தூய உள்ளமும் இக்காலப் பொதுவாழ்வில் எத்துணை அரிதாக இருக்கின்றன என்பதை எண்ணிப் பார்க்கும்போதுதான், மணிமொழியாரின் இப் போக்கு எத்துணை உயர்ந்தது என்பது விளங்கும்.

### பொதுத் தேர்தலுக்குமுன் நடைபெற்ற படுகொலை முயற்சி

1967-ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலில் சென்னை நகரைச் சேர்ந்த சைதாப்பேட்டைத் தொகுதியிலிருந்து தமிழகச் சட்டமன்றத்திற்குக் கலைஞர் கருணாநிதி அவர்கள் வேட்பாளராகப் போட்டியிட்டார் என்பதையும், அன்னாருக்கு ஆதரவு தேடி ஆற்றல் வீரர் மணிமொழியார் அவர்கள் அல்லும் பகலுமாக அரும்பாடுபட்டு வந்தார் என்பதையும் முன்னரே குறிப்பிட்டிருந்தோம் அல்லவா? அந்தப் பொதுத் தேர்தலில் சென்னை நகரில் வாக்குப் பதிவு நடைபெற்ற நாள், 15—2—67. அதற்கு முந்திய நாள் இரவு, வேட்பாளர் கலைஞர் கருணாநிதி அவர்களையும் அன்னாரின் ஆதரவாளர் காஞ்சி மணிமொழியார் அவர்களையும் படுகொலை செய்வதற்கான ஒரு பயங்கர முயற்சி நடைபெற்றிருக்கிறது. நினைக்கும்போதே நெஞ்சு நடுங்குகிறது— அந்தப் படுகொலை முயற்சி மட்டும் வெற்றி பெற்றிருந்தால்—அந்தத் திராவிடத் தளபதிகள் இருவரின் வாழ்க்கை வரலாறுகளும் அன்றோடு முடிந்து போயிருக்கும். ஆனால் தமிழகத்தின் நற்காலம்—அந்த அறிஞர் பெருமக்கள் இருவரும் படுகொலை முயற்சியிலிருந்து மயிரிழையில் தப்பிவிட்டனர்.

14-2-67 அன்று இரவு. மறுநாள் நடைபெறவிருந்த வாக்குப் பதிவின் தொடர்பான வேலைகள் குறித்துக் காஞ்சி மணிமொழியார் அவர்களிடம் கலந்து உரையாடச் சென்னை கோடம்பாக்கத்தில் உள்ள அன்னாரின் இல்லத்திற்கு வந்திருந்த கலைஞர் கருணாநிதி, சிறிது நேரத்திற்குப் பின்னர் மணிமொழியாரை அழைத்துக்கொண்டு நுங்கம்பாக்கத்தில் உள்ள அறிஞர் அண்ணா அவர்களின் இல்லத்திற்குச் சென்றார். மறுநாள் நடைபெறவிருந்த தேர்தல் தொடர்பான ஏற்பாடுகள்—திட்டங்கள் பற்றி அங்கு அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, பெருந்தகையாளர் மணிமொழியார் ஆகிய மூவரும் நெடுநேரம் உரையாடிக் கொண்டிருந்தனர்.

கலைஞர் அவர்களும் மணிமொழியார் அவர்களும் ஒரு காரில் இரவு 11 மணி அளவில் அங்கிருந்து புறப்பட்டபோது, கோடம்பாக்கத்திலிருந்து தங்களைப் பின் தொடர்ந்து வந்த—காங்கிரஸ் கொடியுடன் காணப்பட்ட கார் ஒன்று இவ்வளவு நேரத்திற்குப் பிறகு இப்போதும் தங்கள் காரைப் பின் தொடர்ந்து

வரக் கண்டனர். தாங்கள் தேர்தல் வேலை களில் மும்முரமாக ஈடுபட்டிருப்பதைப் போலவே அந்தக் காரில் இருக்கக்கூடிய காங்கிரஸ் அன்பர்களும் அவர்களுடைய கட்சி வேட்பாளர்களுக்கு ஆதரவாகப் பணி யாற்றிக் கொண்டிருக்கக்கூடும் என்றும், அந்தக் கார் தங்கள் பின்னாலேயே வருவதில் வேறு மர்மம் ஏதும் இராது என்றும் தங்க ளுக்கிடையே பேசிக்கொண்ட மணிமொழி யார் அவர்களும், கலைஞர் அவர்களும் மயிலாப்பூர் சென்று அத் தொகுதி வேட்பா ளராகப் போட்டியிட்ட திரு. இராம. அரங் கண்ணல் அவர்களைக் கண்டு பேசிவிட்டு, அங்கிருந்து அடையாறு வழியாகச் சைதாப் பேட்டைக்குச் செல்லத் தொடங்கினர். அவர் களுடைய கார் அடையாறு வழியாகச் சென்று கொண்டிருந்தபோது முன்னர் தங்க ளைப் பின் தொடர்ந்து வந்த காங்கிரஸ் கார் இப்போதும் தங்களைத் தொடர்ந்து வருவ தோடு மேலும் இரண்டு கார்கள் சேர்ந்து வரு வதைக் கலைஞரும் மணிமொழியாரும் கண்டு திடுக்கிட்டனர். அந்த மூன்று கார்களில் இருந்தவர்கள் தக்க இடத்தில் தங்களுடைய காரை மடக்கி நிறுத்தித் தங்களைத் தாக்கு வதற்காகவே வந்து கொண்டிருக்கின்றனர் என்பதை உடனடியாக உணர்ந்த மணி மொழியார், தாங்கள் முதலில் எண்ணி யிருந்தபடி கிண்டி வழியாகச் சைதாப்பேட் டைக்குச் செல்வது பேராபத்தைத் தரக்கூடி யது என்றும், கிண்டி பொறிஇயல் கல் லூரிப் பகுதியில் மக்கட் குடியிருப்புப் பகுதி கள் எவையும் இல்லை என்றும், அத்தகைய சூழ்நிலையில் தாங்கள் எவ்வளவுதான் கூக் குரல் இட்டாலும் துளியேனும் பயன் இராது என்றும், அதற்கு மாறாகக் கோட்டூர் வழி யாகச் சென்றால் அங்குள்ள குடிசை வாழ் மக்கள் தங்கள் ஆதரவுக்குத் திரண்டு வரு வர் என்றும் கலைஞரிடம் தெரிவித்து, கோட்டூர் வழியாகக் காரைச் செலுத்துமாறு செய்தார்.

கோட்டூரில் உள்ள நகராட்சிமன்ற மகப்பேறு விடுதிக்கு அருகில் தங்கள் காரை நிறுத்தி, தேர்தல் அலுவலகத்தில் பணியாற்றிக்கொண்டிருந்த கழகத் தொண் டர் ஒருவரை அழைத்து, கலைஞரும் மணி மொழியாரும், தேர்தல் வேலைகள் எப்படி நடந்துகொண்டிருக்கின்றன என்று கேட்கத் தொடங்கினர். அதற்குள் அவர்களைப் பின் தொடர்ந்துவந்த — காங்கிரஸ் கொடியுடன் கூடிய கார்கள் மூன்றில், ஒன்று அவர்கள்



காருக்கு முன்னாலேயும் மற்றொன்று அதன் பின்னாலேயும் நிறுத்தப்பட்டன. மூன்றாவது கார், அந்த நெடுஞ்சாலையிலிருந்து வடக்கு நோக்கிப் பிரிந்துசெல்லும் வீதி ஒன்றை அடைக்கும் முறையில் நிறுத்தப்பட்டது. தங்களுடைய காரைச் சுற்றி வளைக்கும் முறையில் இந்த மூன்று கார்களும் நிறுத்தப் பட்டது பேராபத்திற்கு அறிகுறி என்பதை நன்குணர்ந்த மணிமொழியார், உடனடி யாகத் தங்களுடைய காரின் கதவைத் திறந்து, கலைஞர் அவர்களை அழைத்துக் கொண்டு கீழே இறங்கி, மடமடவென ஓடி, அருகே இருந்த மகப்பேறு விடுதியின் கத வைத் தடதடவெனத் தட்டினார். அப்போது இரவு 12 மணி. எங்கும் பேரிருள். நல்ல வேளை; உள்ளே இருந்த விடுதிக் காவலர் உடனே கதவைத் திறந்தார். கதவு திறக்கப் பட்டதும், முதலிற் குறிப்பிடப்பட்ட கழகத் தொண்டரையும் கலைஞர் அவர்களையும்

உள்ளே பிடித்துத் தள்ளிவிட்டு, தானும் உள்ளே வந்து கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டார் மணிமொழியார்.

விடுதியில் இருந்த தொலைபேசி மூலம், கலைஞர் அவர்கள் அடையாறு காவல் நிலையத்திற்குத் தங்கள் உயிர்களுக்கு ஏற்பட்டுள்ள பேராபத்தை எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, வெளியிலிருந்து, "உடைத்து எறியுங்கள் கதவை" "விடாதே அவர்களை" என்றெல்லாம் வெறி பிடித்த குரல்கள் வீறிவெடித்துக் கொண்டிருப்பதைச் செவிமடுத்த மணிமொழியார், "தொலைபேசியின்மூலம் நான் பேசிக்கொள்கிறேன். இவ் விடுதியின் புழக்கடை வழியாக நீங்கள் உடனே தப்பிச் செல்லுங்கள். இனி ஒரு கணம் தாமதித்தாலும் ஆபத்து" என்று கூறி, கலைஞர் அவர்களைக் கழகத் தொண்டரோடு வெளியே அனுப்பிவிட்டார். அதன பின் அடையாறு காவல் நிலையத்திற்கும் கழக முன்னணித் தலைவர்களுக்கும் தொலைபேசி மூலம் நிலைமையை அறிவித்துவிட்டு, சற்றுமுன் சென்ற கலைஞரின் நிலை என்ன வாயிற்றோ என்று அஞ்சிக் கொண்டே பின்புறக் கதவைத் திறந்த மணிமொழியார், அங்கே நான்கு குண்டர்கள் நின்று கொண்டிருப்பதையும் ஒருவர் கையில் பயங்கரமான கத்தி மின்னுவதையும், மற்றொருவர் கையில் ஐந்து செல் கொண்ட பெரிய 'டார்ச்' விளக்கு ஒளி வீசிக்கொண்டிருப்பதையும், ஏனையோர் கைகளில் சவுக்குத் தடிகள் சுழன்று கொண்டிருப்பதையும் கண்டு ஒரு கணம் செய்வகை அறியாது திகைத்து நின்றுவிட்டார். ஆனால் மறுகணம் தன்னை ஒருவாறு சமாளித்துக்கொண்டு, "கொலை! கொலை! ஓடி வாங்க!" என்று மிக உரத்த குரலில் கூச்சலிடத் தொடங்கினார். நள்ளிரவு நேரமாக இருந்தபோதிலும் அவருடைய கூக்குரலைக் கேட்டதும் அருகிலிருந்த குடிசைப் பகுதியிலிருந்து ஏராளமானவர்கள் ஓடிவரத் தொடங்கினர். மக்கட் கூட்டம் தங்களை நோக்கித் திரண்டுவருவதைக் கண்டதும் கொலைவெறியுடன் இருந்த குண்டர்கள் ஓடி மறைந்தனர். அந்த மையிருட்டில் அங்கு ஓடோடிவந்த கழகத்தோழர்கள் மணிமொழியாரை அழைத்துச்சென்று, பொழுது விடியும் வரையில் குடிசை ஒன்றில் மறைத்து வைத்துப் புகலிடம் தந்தனர். விடுதியிலிருந்து வெளியேறிவந்த கலைஞர் அவர்களையும் மற்றொரு குடிசையில் மிக்க பாதுகாப்புடன் மறைத்துவைத்திருப்பதாக அவரிடம் தெரிவித்தனர்.

பொழுது விடிந்தது—தேர்தல் நடந்தது -தமிழகத்தின் ஆட்சிப் பொறுப்பு திராவிட முன்னேற்றக் கழகத்திற்கே உரியது என்று பொதுமக்கள் நல்ல தீர்ப்பு அளித்தனர். ஆனால் வரலாற்றுப் புகழ்மிக்க அந்த அற்புதமான தீர்ப்பைப் பெறுவதற்கு முந்திய நாள் இரவு, கலைஞர் அவர்களும் மணிமொழியார் அவர்களும் சந்திக்க நேர்ந்த பயங்கரக் கொலை முயற்சியைத் தமிழக வரலாறு எவ்வாறு மறக்க இயலும்? ஆம், வரலாறு மறக்காது. ஆனால், 'மறப்போம் மன்னிப்போம்' என்பது அறிஞர் அண்ணாவின் தத்துவமாயிற்றே; படுகொலை செய்வதற்கு உடந்தையாக இருந்த சதிகாரர்களையெல்லாம் அண்ணா மன்னித்துவிட்டார்கள். வழக்குத் தொடரும் முயற்சியைக் கைவிடுமாறு காவல் துறையினருக்கு ஆட்சிப்பீடம் ஏறியதும் அண்ணா அறிவித்துவிட்டார்கள். 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக் கால் என்ன பயத்ததோ சால்பு?' என்ற குறள் நெறியில் நிற்பவரல்லவா நம் அண்ணன்.

### அறிஞர் அண்ணா—காஞ்சி மணிமொழியார் அரும்பெரும் நட்பு

தென்னகத்தின் பொன்னொளி பேரறிஞர் அண்ணா அவர்களுக்கும் பகுத்தறிவுப் பெரு

1952-ல்
'' போர்வாள் ''
அலுவலகத்தால்

# திராவிட நாடு திராவிடருக்கே

வெளியிடப்பட்ட
காலண்டர்களில்
ஒன்று.

கே. கோவிந்தசாமி

ஏ.வி.பி. ஆசைத்தம்பி

எஸ்.எஸ். இராஜேந்திரன்

டி.வி. நாராயணசாமி

கே.ஏ. மதியழகன்

சத்தியவாணிமுத்து

எம்.ஜி. இராமச்சந்திரன்

அண்ணா

மு. கருணாநிதி

நெடுஞ்செழியன்

என்.வி. நடராசன்

க. அன்பழகன்

வீரர் காஞ்சி மணிமொழியார் அவர்களுக்கும் இடையே இருந்துவந்த இடையருத நட்பும் இணையற்ற தோழமையும் இயக்கத் தோழர்கள் யாவருக்கும் பெருமையும் பூரிப்பும் அளிக்கவல்ல பெற்றிமை படைத் தனவாகும்.

அண்ணு அவர்களைவிட மணிமொழி யார் ஒன்பது வயது மூத்தவர். அண்ணு அவர்கள் உயர் நிலைப்பள்ளியிலும் கல்லூரியி லும் பயின்று கொண்டிருந்த காலத்திலேயே, மணிமொழியார், பொதுவாழ்வில் மும்முர மாக ஈடுபட்டு, நீதிக்கட்சி - சுயமரியாதை இயக்கம் ஆகிய இருபெரும் இயக்கங்களின் வளர்ச்சிக்காக ஓய்வறியாது பாடுபட்டு வந்தவர். கல்லூரியிற் பயின்று கொண்டி ருந்தபோதே அந்த இரு இயக்கங்களின் சீரிய கொள்கைகளுக்குத் தன் உள்ளக் கோயிலில் உயரிய இடத்தை அளித்துவிட்ட அண்ணு அவர்கள், அதே கொள்கை களின் வெற்றிக்காக எண்ணற்ற பொதுக் கூட்டங்களில் வீர முழக்கம் புரிந்து வந்த வரும், தான் பிறந்த அதே காஞ்சியைச் சேர்ந்தவருமான மணிமொழியாரோடு அப் போதே தொடர்பு கொள்ள வேண்டிய நிலை இயற்கையாக ஏற்பட்டுவிட்டது. இளமை யில் இருவருக்கும் ஏற்பட்ட அந்த நட்பு, ஒத்த கொள்கை காரணமாக மேலும் வளர்ந்து வரலாயிற்று.

1934 - ஆம் ஆண்டில் அண்ணு அவர்கள் சென்னைப் பச்சையப்பன் கல்லூரி யில் பி. ஏ. ஆனர்ஸ் வகுப்பின் இறுதி ஆண் டில் பயின்று கொண்டிருந்தார். அப்போது அவருடையகுடும்பம் முதலில் சென்னை தங்க சாலைத் தெருவிலும் பின்னர் பெத்துநாய்க்கன் பேட்டையிலும் வாடகை வீடுகளில் குடி யிருந்து வந்தது. அதே சமயத்தில் மணி மொழியார் சென்னை முத்தியாலுப்பேட்டை யில் ஒரு வாடகை வீட்டில் வாழ்ந்துவந்தார். அருகருகே வாழ்ந்துவந்த இத்தகைய சூழ் நிலையில் அவர்களிடையே தோழமை உணர்வு பெருகியதில் வியப்பேது ?

1935 - ல் நடைபெற்ற செங்கற்பட்டு மாவட்ட ஆட்சி மன்ற (ஜில்லா போர்டு) தேர்தலில், அந்தக் காலத்து நீதிக் கட்சித் தலைவர்களில் ஒருவராக விளங்கிய செங்கற் பட்டு திரு. எம். வேதாசல முதலியார் அவர்களை ஆதரித்து, செங்கற்பட்டு, திருக் கழுக்குன்றம் முதலிய பகுதிகளில் மூன்று நாட்கள் தங்கி, ஏறத்தாழ இருபது கூட்டங் களில் மணிமொழியார் விரிவுரைகள் நிகழ்த் தினர். அக் கூட்டங்கள் அத்தனையிலும் அண்ணு அவர்களும் கலந்துகொண்டு தன் இணையற்ற சொல்விருந்தை அள்ளி வழங் கினர். அண்ணு அவர்கள் அதற்குமுன்னரே அவ்வப்போது பல பொதுக்கூட்டங்களில் கலந்துகொண்டு சொல்மாரி பொழிந்திருக் கிருர் என்றபோதிலும், ஒரு சுற்றுப்பயணம் என்னும் முறையில் தொடர்ச்சியாக இருபது கூட்டங்களில் அவர் பங்கேற்றுப் பேரு ரைகள் ஆற்றியது இதுவே முதல்முறை. அண்ணு அவர்களுக்கும் மணிமொழியாருக் கும் முன்னரே ஏற்பட்டிருந்த தோழமை உணர்வு, மூன்று நாட்கள் ஒன்ருகத் தங்கி, இருபது கூட்டங்களில் இணைந்து சொற் பொழிவாற்றிய இச் சூழ்நிலையில், வாழ்நாள் முழுவதும் நீடித்து நிற்கத்தக்க அரும்பெரும் நட்பாக மலர்ந்து மணம் வீசிற்று.

1935 ஆம் ஆண்டின் இறுதியில் காஞ்சிபுரம் விளக்கொளிப்பெருமாள் கோயில் தெருவில் காஞ்சிமாநகர் கைத்தறி நெச வாளர் சங்கப் பொதுக்கூட்டம் ஒன்று எழிலும் ஏற்றமும் மிக்க முறையில் நடை பெற்றது. அந்தக் கூட்டத்தின் தலைவர், மணிமொழியார். சொற்பொழிவாளர்கள், அறிஞர் அண்ணு அவர்களும், அக் காலத் தில் தமிழகத்தின் புகழ்மிக்க தொழிற்சங்கத் தலைவர்களில் ஒருவராகவும் சென்னை மாநக ராட்சித் தலைவராகவும் விளங்கிய திரு வாளர் சி. பாசுதேவ் அவர்களுமாவர்.

1936 ஆம் ஆண்டில் சென்னை மாநகராட்சி மன்றத் தேர்தல் நடைபெற்றபோது பெத்துநாயக்கன் பேட்டைத் தொகுதியிலிருந்து நீதிக்கட்சியின் வேட்பாளராக அண்ணா அவர்கள் போட்டியிட்டார்கள். அச் சமயத்தில் அண்ணா அவர்களை வெற்றி பெற வைப்பதற்காக மணிமொழியார் அவர்கள் இரவு பகலாகப் பாடுபட்டார். அம்முறை அண்ணா அவர்கள் வெற்றி வாய்ப்பை இழந்துவிட்டார் என்றபோதிலும் அண்ணா அவர்களின் சொற்பொழிவுத் திறன் எத்துணை உயர்ந்தது என்பதைச் சென்னை நகர மக்கள் மீண்டும் மீண்டும் அனுபவித்து அறிவதற்கான ஒரு சிறந்த வாய்ப்பாக அத் தேர்தல் அமைந்தது.

1937 ஆம் ஆண்டு. அண்ணா அவர்களின் பேச்சாற்றலை ஓரளவுக்கு அறிந்திருந்த தமிழகம், அவரிடம் பொதிந்து கிடந்த எழுத்தாற்றலைச் சிறிதளவும் அறியாதிருந்த நேரம். அவருடைய பலதுறைப் புலமையைத் தமிழக மக்கள் அனைவரும் அறியும்படிச் செய்யவேண்டும்—அப்படிச் செய்வதன் வாயிலாக அண்ணா அவர்களின் பொதுத் தொண்டு ஆர்வத்தை ஓங்கி வளரச் செய்ய வேண்டும் என்னும் பெருநோக்கம் கொண்ட மணிமொழியார், அண்ணா அவர்களை ஆசிரியராகக் கொண்டு ''நவயுகம்'' என்னும் வார இதழைத் தொடங்கி நடத்தினர்.

மணிமொழியாரின் இந்த மாண்புமிகு தொண்டின் சிறப்பை, 1960ல் சென்னை செயின்ட் மேரி மண்டபத்தில் அன்னாரின் மணிவிழா அருஞ் சிறப்புடன் நடைபெற்ற போது, அந்த விழாவிற் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றிய அறிஞர் அண்ணா அவர்களே பெருமகிழ்ச்சியுடன எடுத்துக் கூறியுள்ளார். அண்ணா அவர்கள் அப்போது ஆற்றிய அருந்தமிழ்ச் சொற்பொழிவின் ஒரு பகுதி இது:—

''இருபத்திமூன்று ஆண்டுகளுக்கு முன்னல் மணிமொழியார் அவர்களும் நானும் இணைந்துநின்று நவயுகம் என்னும் வார இதழை நடத்தியதுபற்றி நண்பர்கள் பலர் இங்கே தங்கள் சொற்பொழிவுகளில் குறிப்பிட்டார்கள்.




அப்போது தான் நான் கல்லூரியிலிருந்து வெளிவந்த காலம். மணிமொழியார் அவர்களும் அப்போதுதான் புதியதாக அச்சகம் ஒன்றைத் தொடங்கி வேறு ஓர் அமைப்புக்காக அதை நடத்திவந்த நேரம். அந்தக் காலம், என்னிடம் எழுதும் ஆற்றல் இருக்கிறதா என்று தெளிவாகத் தெரியாத காலம்! அவரிடமோ பண வசதி இல்லாத நேரம்.. ....நாங்கள் சேர்ந்திருந்த நீதிக்கட்சியோ, பிழைத்திருக்கிறதா இல்லையா என்று ஐயுறத்தக்க நிலைக்கு ஆட்பட்டுத் தத்தளித்த நேரம். இத்தகைய நெருக்கடியான நிலையில்தான், நம் இயக்கக் கருத்துக்களைப் பரப்புவதற்காகக் கிழமை இதழ் ஒன்று தொடங்கவேண்டும் என்றும், அதற்கு நான் ஆசிரியராக இருக்கவேண்டும் என்றும் அவர் கூறினர். நானும் இணங்கினேன். பண நெருக்கடி பலமுறை பத்திரிகையைத் தாக்கியது என்றாலும், அதனை அவர் என்னிடம் கூறியதில்லை. பத்திரிகையின் வரவு செலவுக் கணக்கு எப்படி இருக்கிறது என்று நானாகக் கேட்ட நேரங்களிலும், ஒரே ஒரு புன்னகையைத்தான் விடையாக அளிப்பார். இப்படியெல்லாம் நிதி நிலையைப்பற்றி அவர் என்னிடம் தெரிவிக்காமல் இருந்ததற்குக் காரணம் அதனைத் தெரிவித்தால் இளைஞனாகிய நான் பத்திரிகை நடத்தும் ஆர்வத்தை இழந்துவிடுவேனோ என்கிற அச்சம் அவருக்கு இருந்ததுதான்......அப்போதுதான் கல்லூரியைவிட்டு வெளிவந்த என்னைப் பத்திரிகைத் துறையிலும் பொதுவாழ்விலும் ஈடுபடுத்தி முன்னேற்றமடையச் செய்வதில்

அவர் எவ்வளவு ஆர்வம் கொண்டிருந்தார் என்பதை எடுத்துக்காட்டத்தான் இந்த உண்மையைக் கூறுகிறேன். அவர் அந்தக் காலத்தில் எனக்கு ஊட்டிய ஆர்வத்தையும் உற்சாகத்தையும் எண்ணினல் இப்போது கூட எனக்குப் பெரியதோர் மகிழ்ச்சி ஏற்படுகிறது.''

மணிமொழியார் அவர்களுக்கும் அண்ணு அவர்களுக்கும் இருந்துவந்த அருமையான தொடர்பின் இனிமையான இயல்பை, அண்ணு அவர்களின் இவ் வாக்கியங்கள் எவ்வளவு சுவையான முறையில் எடுத்துக் காட்டியுள்ளன!

அவர்கள் இருவருக்கிடையே இளமையில் தோன்றிய நட்பு சிறுகச் சிறுக வளர்ந்து, 1937 ல் ''நவயுகம்'' கிழமை இதழ் வாயிலாக வேரூன்றியது. அந் நட்பு, 1938—39 ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பு இயக்கம், 1940 முதல் 1944 வரை நீதிக் கட்சி என அழைக்கப்பட்ட தென்னிந்திய நலவுரிமைச் சங்கத் தொண்டு, 1944 முதல் 1949 வரை திராவிடர் கழகப் பணி, 1949 முதல் திராவிட முன்னேற்றக் கழகத் தொண்டு என்னும் ஒவ்வொரு கட்டத்திலேயும், வலிவும் பொலிவும் பெற்று மேலும் ஓங்கி வளர்ந்தது. பேரறிஞர் அண்ணு அவர்கள் தமிழகம் முழுவதையும் கண்ணீர்க் கடலில் ஆழ்த்தி மறைந்துவிட்ட அந்த இறுதிநாள் வரை இந்த நட்புச்சுடர் குன்ருமல் குறையாமல் தொடர்ந்து ஒளி வீசி வந்தது என்பது பெருமகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

### ''அண்ணு நகர்'' அமைத்த அருந்திறல் அண்ணல்

1954 ஆம் ஆண்டில் திராவிட முன்னேற்றக் கழகம் தமிழகத்தை ஆளும் பொறுப்பைப் பெற்றிருக்கவில்லை; சட்ட மன்ற எதிர்க்கட்சி என்னும் நிலையைக்கூட அடையவில்லை. அவ்வளவு ஏன்-சட்ட மன்றத்தில் நுழையக்கூட இல்லை; பொதுத் தேர்தலில் போட்டியிடவே இல்லை. சென்னை மாநகராட்சி மன்றமும் அப்போது காங்கிரஸ் கட்சியின் ஆட்சிப் பொறுப்பில்தான் சிக்குண்டு கிடந்தது. தி. மு. க.வுக்குச் சாதகமான சூழ்நிலை அமையப்பெற்றிராத அந்தக் காலத்திலேயே, சென்னை நகரில் கோடம்பாக்கம் பகுதியில் அறிஞர் அண்ணு அவர்களின் பெயரால் ஒரு குடியிருப்புப் பகுதியை உருவாக்குதல், மறக்க இயலாத ஒரு மாபெருஞ் செயல் என்பதை யாரும் மறுக்க முடியாது. அத்தகைய அருஞ்செயலை முடித்துக் காட்டியவர் காஞ்சி மணிமொழியார்.

தனிப்பட்ட சிலருக்குச் சொந்தமான மிகப் பெரிய நிலப்பரப்பை விலைக்கு வாங்கி, அதனைப் பல்வேறு வீட்டு மனைகளாகப் பிரித்து அமைத்து, கூடியவரை அந்த மனைகள் அத்தனையையும் தி. மு. க. தோழர்களே வாங்கும்படிச் செய்த மணிமொழியார் அவர்கள், அப்படி உருவாகிய புதிய பகுதிக்கு ''அண்ணு நகர்'' என்னும் அழகிய பெயரைச் சூட்டி மகிழ்ந்தார்கள்.

1968ல் சென்னையில் உலகத் தொழில் கண்காட்சி நடைபெற்ற நிலப் பகுதி—ஷெனுய் நகருக்கு அருகில் உள்ள இடம்—1969 முதல் ''அறிஞர் அண்ணு நகர்'' என்னும் பெயர் பெற்றுப் பொலிகிறது என்பதும், அப்படிப் பொலிவது நற்றமிழ் மக்களின் உள்ளங்களில் இன்பத் தேன் பாய்ச்சுகிறது என்பதும் உண்மையே என்ற போதிலும், அந்த **''அறிஞர் அண்ணு நகர்'' அமைவதற்குப் பதினைந்து ஆண்டுகட்கு முன்னரே கோடம்பாக்கம் ''அண்ணு நகர்'' அமைந்துவிட்டது என்பது மட்டிலாத மகிழ்ச்சிக்குரிய மாண்புமிகு செய்தியாகும்.** அந்த ''அண்ணு நகர்'' அமைப்பில் மணிமொழியார் அவர்களுக்குப் பெருந்துணையாக இருந்தவர் குன்றத்தூர் தொகுதித் தி. மு. க. சட்ட மன்ற உறுப்பினர் திரு எம். கோபால் அவர்கள் ஆவார்.

மணிமொழியார் அண்ணா அவர்கள் பெயரால் நகர் ஒன்று அமைத்தது பற்றி அண்ணா அவர்களே, மணிமொழி யார் அவர்களுடைய புது மனை புகுவிழா வில் தலைமை வகித்து உரையாற்றிய போது, "ஒரு பெரிய காலி இடத்தைப் பார்த் தால் அதில் எந்தக் கூட்டத்தை அல்லது மாநாட்டை நடத்தலாம் என நான் சிந்திப் பேன். மணிமொழியார் அதே இடத்தைப் பார்த்தால் அங்கு எவ்வளவு நல்ல அழகான நகர் ஒன்றை அமைக்க முடியும்—எத்தனைக் கழகத் தோழர்களுக்குக் குடியிருக்க வசதி யான வீடுகள் கட்ட இயலும் என்று திட்ட மிடுவார். இதோ இங்கே அவர் அமைத்திருக் கிற அண்ணா நகரே இதற்குச் சாட்சியாக இருக்கிறது" என்று வேடிக்கையகக் குறிப் பிட்டார்கள்.

திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் அறிஞர் அண்ணா அவர்கள் தலை மையில் சென்னை கோடம்பாக்கத்தில் 31-7-1960 அன்று மாபெரும் அளவில் நடை பெற்ற இந்தி எதிர்ப்பு மாநாடு தி. மு. க.வின வரலாற்றில தனிச் சிறபபு மிக்க ஓர் அத்தி யாயமாகப் பொலிவதை அனைவரும் அறிவர். திரு கே. ஏ. மதியழகன் அவர்களைச் செய லாளராகவும் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்களைத் திறப்பாளராகவும் கொண்டி ருந்த அந்த மாநாடு, மணிமொழியார் அவர் களால் அமைக்கப்பட்ட அண்ணா நகரில் தான் நடைபெற்றது. மாநாட்டுக்கு அலை அலையாகத் திரண்டு வந்த ஆயிரமாயிரம் மக்கள், மாநாட்டுக்கு வரும்போதே, "மாநாடு நடைபெறும் இடம் எது தெரியுமா? அண்ணா நகர்!" என்று நா இனிக்க, மனம் இனிக்க ஒருவர்க்கொருவர் சொல்லிச் சொல்லிப் பூரிப்பு அடைந்தார்கள். அத்தகைய அள விலா மகிழ்ச்சியை அவர்களுக்கு அளித்த மணிமொழியார்தான், அந்த மாநாட்டை நடத்தும் நிர்வாகப் பொறுப்பு முழுவதையும் ஏற்று, மாநாட்டை எழிலோவியமாக அமைத் துக் காட்டினார். அது மட்டுமல்ல. அம் மாநாட்டு அலுவலகமே அன்னாரின் இல்லத் தில்தான் அமைந்திருந்தது. சென்னை மாவட்டத் தி. மு. க. வின் இரண்டாவது மாநாடும் அதே அண்ணா நகரில்தான் எழில் குலுங்கும் முறையில் நடைபெற்றது.

'அண்ணா நகர்' அமைத்ததுபோலவே விருகம்பாக்கத்தில் பெரியதொரு நிலப்பரப் பில் மனைகளைப் பிரித்து எம். ஜி. ஆர். நகர் ஒன்று அமைத்த பெருமையும் மணிமொழி யாருக்கு உண்டு. எம். ஜி. ஆர். நகரை நாவலர் அவர்கள் தலைமையில் கலைஞர் அவர்கள் திறந்து வைத்தார்கள்.

### ஆறுமுறை சிறை புகுந்த அஞ்சாத நெஞ்சினர்

இரண்டாவது இந்தி எதிர்ப்புப் போராட் டத்தின் போது (1948) மணிமொழியார் அவர்கள், தமிழ்மொழியைப் பாதுகாத்த "பெருங் குற்றத்"திற்காக இரண்டுமுறை சிறைத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறார் என்பதை முன்னரே குறிப்பிட்டிருந்தோம் அல்லவா? மூன்று வது முறையாகச் சிறை செல்லும் வாய்ப்பு, 7-1-51 அன்று ஆட்சியாளர்க ளால் அவருக்கு அளிக்கப் பட்டது. அன்றைய தினம் டில்லி அமைச்சர் ஹரி கிருஷ்ண மேதாப் சென்னை



சட்டக் கல்லூரிக்குப் பக்கத்தில் உள்ள யுனை டெட் இந்தியா இன்ஷ்யூரன்ஸ் கட்டிடத் திற்கு வந்தபோது, தி. மு. க. திட்டத்தின்படி அவருக்குக் கறுப்புக் கொடி காட்டும் நிகழ்ச்சியை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்த மணிமொழியார் அவர்கள் கைது செய்யப்

பட்டு அன்று முழுதும் காவலில் வைக்கப்பட்டிருந்தார்.

1958 ஜனவரி முதல் வாரத்தில் பண்டித நேரு சென்னை வரும்போது அவருக்குக் கறுப்புக் கொடி காட்டுவது என்று தி. மு. க. ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சியைத் தடுக்க ஆட்சியாளர்கள் மேற்கொண்ட பல முயற்சிகளில் ஒன்றாக, மணிமொழியார் அவர்களை, 2-1-58 அன்று "போர்வாள்" அலுவலகத்தில் வந்து கைது செய்தனர். இம்முறை இரண்டு வார காலம் சிறைவாசம் செய்தார் மணிமொழியார் அவர்கள். இது அவரது நான்காவது சிறைவாசமாகும்.

1962 ஜூலை 19 ஆம் நாள், திராவிட முன்னேற்றக் கழகத்தால் நடத்தப்பட்ட விலைவாசிப் போராட்டத்தின்போது, அப்போது சென்னை சைதாப்பேட்டையிலிருந்த செங்கற்பட்டு மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்தின் முன் நடைபெற்ற மறியலை முன்நின்று நடத்தியதற்காக மணிமொழியார் அவர்கள் கைது செய்யப்பட்டு, சென்னை மத்திய சிறைச்சாலையிலும் பூவிருந்தவல்லி துணைச் சிறையிலுமாக ஏறத்தாழ நான்கு மாதங்கள் சிறை வாழ்க்கையை நுகர்ந்தார். அவருக்கு ஏற்பட்ட ஐந்தாவது சிறை அனுபவம் இது.

ஆறாவது முறை சிறை புகவேண்டிய தேவையும் மணிமொழியாருக்கு ஏற்பட்டிருக்கிறது. 1965 ஜனவரி 26 ஆம் நாள் இந்தி மொழித் திணிப்பை எதிர்க்கும் வகையில் தி. மு. க. கொண்டாட இருந்த துக்கநாள நிகழ்ச்சியை யொட்டி முன்னாள் நடுஇரவில் மணிமொழியார் அண்ணா அவர்களோடு ஒன்றாகக் கைது செய்யப்பட்டுச் சிறை வைக்கப்பட்டார்.

**பலதுறைத் தொண்டாற்றிய பெருமகனார்:—**

செங்குந்தர் இயக்கம்—நீதிக் கட்சி—சுயமரியாதை இயக்கம்—திராவிடர் கழகம்—திராவிட முன்னேற்றக் கழகம்—இந்தி எதிர்ப்புப் போராட்டங்கள் ஆகியவற்றில் பெரிய அளவில் ஈடுபட்டு அரும்பணிகள் பல ஆற்றியுள்ள மணிமொழியார், வேறு பற்பல பொதுநலப் பணிகளிலும் தன்னுடைய நேரத்தையும் உழைப்பையும் செலவிட்டிருக்கின்றார்.

நாட்டின் முன்னேற்றம் கல்வியின் முன்னேற்றத்தையே பொறுத்திருக்கிறது என்பதையும், கல்வியின் முன்னேற்றம் ஆரம்பக் கல்வியின் முன்னேற்றத்தையே பொறுத்திருக்கிறது என்பதையும் நன்கறிந்த மணிமொழியார், காஞ்சிபுரம் கருக்கினில் அமர்ந்தவள் கோயில் தெருவில் தம்முடைய சொந்தச் செலவில் 1921-ல் கலைமகள் துவக்கப்பள்ளி என்னும் ஆரம்பப் பள்ளிக்கூடம் ஒன்றைத் தொடங்கி ஒன்பது ஆண்டுகள் அதைத் திறம்பட நடத்திவந்தார். 1930 முதல் அவர் செங்குந்தர் சங்கத்தின் முழு நேரப் பிரசாரகராகப் பணியேற்றுக்கொண்டதால் அந்த ஆண்டில் அந்தப் பள்ளியைப் பக்கத்துத் தெருவில் இருந்த நகராட்சிப் பள்ளியோடு இணைத்துவிட்டார்.

1935 ஏப்ரல் திங்களில் சென்னையில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக நிர்வாகத் தலைவர் திருவாளர் வ. சுப்பையாப் பிள்ளை அவர்களுடைய பெருமுயற்சியால், தமிழ்ப் பேரறிஞர் கா. நமசிவாய முதலியார் அவர்களைத் தலைவராகவும், அறிஞர் திரு வி. க., ரெவரண்ட் பாப்ளி, திருவாளர் ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ. எல். டி. ஆகியோரைத் துணைத் தலைவர்களாகவும் கொண்டு தொடங்கப்பட்ட திருவள்ளுவர் திருநாட் கழகம் என்னும் அமைப்பில், தமிழ்ப் பெரும் புலவர்கள் மயிலை சிவ



முத்து, மே. வீ. வேணுகோபாலனுர், எஸ். எஸ். அருணகிரிநாதர், தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் ஆகியோருடன் இணைந்து நின்று, மணிமொழியார், ஆண்டுதோறும் திரு வள்ளுவர் திருநாளைச் சிறப்பாகக் கொண் டாடி, திருக்குறட் கருநூலத்தின் அருமை பெருமைகளை மக்கள் மன்றத்திற்கு விளக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிருர்.

கல்வியில் பின் தங்கியுள்ள வகுப்பினரின் முன்னேற்றத்திற்காக, 1938-ல் **பிற்பட்ட வகுப் பினர் சங்கம்** என்னும் சிறந்த அமைப்பொன் றைச் சென்னை பவழக்காரத் தெருவில், அவரும் அவருடைய நண்பர் திருவாளர் வி. எம். கடிகாசலம் அவர்களுமாகச் சேர்ந்து தொடங்கினர். 10-7-35ல் தொடங்கப்பட்ட அச் சங்கத்திற்குத் திருவாளர் எச். பி. அரி கவுடர் பி.ஏ., எம். எல். சி. அவர்கள் தலைவ ராகவும், அண்மைக் காலம் வரையில் தமிழகச் சட்டமன்ற மேலவைத் தலைவராகப் பணிபுரிந்த திருவாளர் எம். ஏ. மாணிக்க வேலர் பி. ஏ., பி. எல். அவர்கள் உள்ளிட்ட மூவர் துணைத் தலைவர்களாகவும், மணி மொழியார் அவர்களும் வி. எம். கடிகாசலம் அவர்களும் கூட்டுச் செயலாளர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டு நற்ருெண்டு புரிந்தனா.

1943 - ல், பவழக்காரத் தெருவில் அவர் குடியிருந்த 147 - ஆம் எண் இல்லத் தில், திரு. வ. சுப்பையாப் பிள்ளை அவர் களின் துணையுடன் மணிமொழியாரால் தொடங்கி நடத்தப்பட்ட **தமிழறிஞர் கழகம்** என்னும் நல்லமைப்பு, 1. தமிழரின் பெயரும் தமிழரின் நாட்டுப்பிரிவு — ஊர் — தெரு—வீடு முதலிய இடப் பெயர்களும் தூய தமிழ்ச் சொற்களாயிருத்தல் வேண்டும் 2. தமிழரின் உரையாடல் ஆங்கில வடமொழிக் கலவை யாக இருக்கும் நிலைமாறித் தூய தமிழில் அமைதல் வேண்டும். 3. தமிழர் வழிபாடு களும் சடங்குகளும் தமிழிலேயே நடை பெறல் வேண்டும் 4. தமிழைப் பிழைபட வழங்குபவரைத் திருத்தல் வேண்டும் என் னும் நான்கு நோக்கங்களை நிறைவேற்ற ஒல்லும் வகையெல்லாம் ஓயாது பாடு பட்டது.

கைத்தறி நெசவாளர்களின் வாழ்க் கையை வதைத்துவரும் வேதனையும் விம்மலும் குறைந்து, வளமும் வசதியும் மிகுந்ததாக அது மாறவேண்டும் என்பதற் காகச் சென்ற நாற்பது ஆண்டுகளாக அவர் செய்துவரும் தொண்டுகளை இந்த இடத்தில் குறிப்பிடாமல் இருத்தல் முறையன்று. கைத்தறி நெசவாளர்களுக்கு நெருக்கடி ஏற் பட்ட நேரத்தில் எல்லாம், ஊர்வலம் — பொதுக்கூட்டம் — மாநாடு — பத்திரிகைக் கட்டுரை — அமைச்சர்களைத் தூது குழுவினர் மூலம் காணல் முதலிய பல்வேறு கிளர்ச்சி முறைகளைக் கையாண்டு நற்பணி புரிந்துள் ளார் மணிமொழியார் என்பதை நெசவாளர் உலகம் நன்கறியும். 1930 - ஆம் ஆண்டு முதல் மணிமொழியார் கைத்தறி ஆடைகளை மட்டுமே அணிந்து வருகிருர் என்பதும், மில் துணிகளை ஏறெடுத்தும் பார்ப்பதில்லை என்பதும் அவரோடு நெருங்கிப் பழகிய அனைவரும் அறிந்த உண்மைகளாகும். சொல்வேறு செயல்வேறு என்கிற போல் லாத பழக்கம் மணிமொழியாரிடம் கிடை யாது என்பதற்கு இந்தச் செய்தி ஒரு சிறந்த எடுத்துக்காட்டு ஆகும்.

நெசவாளர்களின் முன்னேற்றத்திற்காகச் சென்ற நாற்பது ஆண்டுகளாக இடையருது பணியாற்றி வரும் மணிமொழியார் அவர் கள், திராவிட முன்னேற்றக் கழகம் அதே பணியில் ஈடுபட முன்வந்தபோது மட்டற்ற மகிழ்ச்சியடைந்து, தி. மு. க. வாயிலாக அப் பணியை முன்னிலும் பல மடங்கு ஆர்வத் தோடு தொடர்ந்து செய்யலானுர். பதி னைந்து ஆண்டுகளுக்கு முன்னர், இலட்சக்

கணக்கான ரூபா மதிப்புள்ள கைத்தறித் துணிகள் விற்பனையாகாமல் தேங்கி, அப்படித் தேங்கியதன் விளைவாகக் கைத்தறி நெசவாளர்களின் குடும்பங்களில் பெருக்கெடுத்தோடிய கண்ணீர் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்துவதற்காகத் தி. மு. க. தலைவர்கள் யாவரும் ஒரு நாள் வெவ்வேறு ஊர்களில், தெருத் தெருவாகச் சென்று கைத்தறித் துணிகளை ஏராளமான அளவில்



விற்றுக் கொடுத்தார்கள். பெரும் பயன் நல்கிய அக் 'கைத்தறித் துணி விற்பனை நாளின்'போது, மணிமொழியார் அவர்கள், வேலூர் நகரில் பல்லாயிரக்கணக்கான ரூபா மதிப்புள்ள கைத்தறி ஆடைகளைத் தோள் மேல் சுமந்து வீதி வீதியாகச் சென்று விற்கும் பணியில் ஈடுபட்டார். இந்த அரும்பணியில் அப்போது அவருக்குத் துணையாக இருந்தவர், அந்நாளில் வடார்க்காடு மாவட்டத் தி. மு. க. செயலாளராக இருந்த திரு ஏ. எல். சி. கிருஷ்ணசாமி அவர்கள் ஆவர்.

1938-ல், பிரிக்கப்படாதிருந்த அப்போதைய சென்னை மாநிலத்தின் முதலமைச்சராக இருந்த திருவாளர் சி. இராசகோபாலாச்சாரியார், இந்தியாவிலேயே முதல் முறையாக **விற்பனை வரி விதிப்பதற்கான மசோதா** ஒன்றைக் கொண்டு வந்தபோது, அத்தகைய வரி விதிப்பால் பொதுமக்களுக்கு ஏற்படக்கூடிய இடையூறுகளை எடுத்துக் காட்டும் கண்டனப் பொதுக்கூட்டங்களைச் சென்னை விக்டோரியா பொது மண்டபத்திலும் திருவல்லிக்கேணிக் கடற்கரையிலும் ஆட்சியாளர்கள் கண்டு அஞ்சும் வகையில் நடத்திக் காட்டினார் மணிமொழியார். அம்மாபெருங் கூட்டங்களில் சர். ஏ. டி. பன்னீர் செல்வம், ராஜா சர். முத்தையா செட்டியார், திரு எஸ். முத்தைய முதலியார், திரு கி. ஆ. பெ. விசுவநாதம் முதலிய பெருந் தலைவர்களையெல்லாம் பங்கேற்கச் செய்து, பயன்மிக்க முறையில் அவற்றை நடத்திக் காட்டிய மணிமொழியாரின் செயல்திறமை, அக் கால அரசியல் உலகில் பெரிதும் பாராட்டப்பட்டது.

தென்னகத்து அரசியல் உலகத்தில் திராவிட இயக்கத்தைச் சேர்ந்த இதழாசிரியர்களின் குரல் அதற்கு உரிய செல்வாக்கைப் பெற வேண்டுமானால் அவர்கள் அனைவரும் ஓர் அமைப்பின் கீழ் வரவேண்டியது இன்றியமையாதது என்பதை நன்குணர்ந்த மணிமொழியார், 1948ல், அப்போது ''கதிரவன்'' என்னும் திங்கள் இருமுறை இதழை நடத்திக் கொண்டிருந்த புலவர் பு. செல்வராஜ் அவர்களோடு சேர்ந்து **திராவிடப் பத்திரிகையாசிரியர் சங்கம்** என்னும் அமைப்பைத் துவக்கி நடத்தினார்.

வடமொழி மந்திரங்களையும் வடமொழிப் புரோகிதரையும் நீக்கித் தமிழ் மக்கள் தங்கள் குடும்பத் திருமணங்களைத் தூய இனிய தமிழில் நடத்துவதே முறை என்னும் கருத்தைப் பொதுமக்களிடம் பரப்புவதற்காக, 1940—43 ஆம் ஆண்டுகளில், திரு மா. அ. கனகசபை முதலியார், திரு பி. என். குருசாமி, முதுபெரும் புலவர் மயிலை சிவமுத்து, டாக்டர் மா. இராசமாணிக்கனார் முதலிய பெருமக்களுடன் இணைந்து நின்று, மணிமொழியார் அவர்கள், **தமிழர் திருமணக் கழகம்** என்னும் அமைப்பைத் தொடங்கி நடத்தி

வந்தார். அக் கழகத்தின் சார்பாகத் 'தமிழர் திருமண முறை' என்னும் நூலும் வெளியிடப்பட்டது.

1930ல், அப்போது சென்னை மாநில அமைச்சராக விளங்கிய திருவாளர் எஸ். முத்தையா முதலியார் அவர்களால் கொண்டு வரப்பட்டு, பிற்பட்ட சமுதாயங்களைச் சேர்ந்த பல்லாயிரக்கணக்கான மாணவர்களுக்கு ஆண்டுதோறும் பெரு நன்மை புரிந்து வந்த கம்யூனல் ஜி. ஒ. என்னும் வகுப்பு நீதிச் சட்டத்திற்கு 1950ல் பேராபத்து ஏற்பட்டபோது அந்த ஆபத்தைத் தூள் தூளாக்குவதற்காகக் கொதித்தெழுந்த மணிமொழியார், அச் சட்டத்தை ஆதரித்து ஏராளமான கூட்டங்களை நடத்தினார். ''வகுப்புரிமைப் போராட்டம்'' என்னும் பெயரில் பெரியதொரு நூலைப் பேராசிரியர் அன்பழகன் அவர்களை எழுதுமாறு கேட்டு, அதனைத் தம் 'பகுத்தறிவுப் பாசறை' மூலம் வெளியிட்டு நாட்டு மக்களிடம் பரப்பினார்.

பல்வேறு துறைகளிலும் சமுதாயத் தொண்டாற்றி வந்துள்ள மணிமொழியார், நடிப்புத் துறையை மட்டும் மிச்சமாகவா விட்டுவைப்பார்? நடிப்பு உலகிலும் அவ



ருக்கு ஒரு நல்ல இடமுண்டு. அறிஞர் அண்ணா அவர்களால் இயற்றப்பட்டு 1951 - ல் சென்னை மாவட்டத் தி. மு. க. முதல் மாநாட்டில் நடிக்கப்பட்ட 'வழக்கு வாபஸ்' என்னும் ஓரங்க நாடகத்தில் மாணிக்கம் செட்டியார் என்னும் கதை உறுப்பினராகவும், 1952 - ல் சென்னையில் அண்ணா அவர்கள் தலைமையில் நடைபெற்ற 'வாழ்க்கைப் புயல்' என்னும் முழு நீள நாடகத்தில் டாக்டர் இராமமூர்த்தி என்னும் கதை உறுப்பினராகவும் மணிமொழியார் நடித்துள்ளார்.

தமிழ் மக்கள் தங்கள் பெயர்களைத் தூய தமிழில் அமைத்துக்கொள்வதே முறை என்னும் கருத்துடைய மணிமொழியார், மாணிக்கவாசகம் என்று இருந்த தம்முடைய பெயரை 1938 - ல் **மணிமொழியார்** என்னும் நற்றமிழ் வடிவினதாக மாற்றி அமைத்துக் கொண்டதோடு, 1943 - ல் பிறந்த அவருடைய திருமகளுக்கும் **தமிழ்ச் செல்வி** என்னும் தூய தமிழ்ப் பெயரையே சூட்டியுள்ளார்.

1949 ஜனவரி 15, 16 தேதிகளில் சென்னை பிராட்வேயில் இருந்த மாபெருந் திடலில், மணிமொழியார் அவர்கள் செயலாளராக இருந்து நடத்திய **திருவள்ளுவர் மாநாடு**, தமிழ் நாட்டின் இலக்கிய வரலாற்றிலும் சரி, சமூக சீர்திருத்த வரலாற்றிலும் சரி, புத்தம் புதியதோர் பொன்னேடாக அமையத் தக்கதாகும். சென்ற இருபதாண்டுகளாகத் திருக்குறட் பதிப்புக்களும், விளக்க வுரைகளும், ஆராய்ச்சி நூல்களும் ஏராளமாக வெளிவருகின்றன அல்லவா—அப்படி வெளியாவதற்குரிய பேரெழுச்சியைத் தமிழர் சமுதாயத்தில் உருவாக்கித் தந்தது இத் திருவள்ளுவர் மாநாடே ஆகும். பேராசிரியர் சக்கரவர்த்தி நயினார், பேராசிரியர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், தமிழறிஞர் திரு. வி. க., பெரியார் ஈ. வெ. ரா., நாவலர் சோமசுந்தர பாரதியார், தென்னவர் தலைவர் அண்ணா, டாக்டர் இராசமாணிக்கம், பேராசிரியர் இலக்குவனார் முதலியோர் கலந்துகொண்ட

இம் மாநாட்டுக்குப் பிறகே திருக்குறளின் முழுச் சிறப்பையும் தமிழகம் அறிந்து போற்றத் தொடங்கியது எனலாம்.

1929 ஜனவரி 19, 20 தேதிகளில் ஈரோட்டில் நடைபெற்ற தென்னிந்திய செங்குந்தர் முதலாவது மாநாடு, 1941-ல் சென்னையில் நடைபெற்ற தமிழ் நாடு கைத்தறி நெசவாளர் மாநாடு, 1948-ல் சென்னை செயிண்ட் மேரி மண்டபத்தில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பாளர் மாநாடு, 1949-ல் சென்னை பிராட்வேயில் நடைபெற்ற திருவள்ளுவர் மாநாடு, 1951-ல் சென்னை எஸ்.ஐ.ஏ.ஏ. திடலில் நடைபெற்ற தி. மு. க. முதலாவது மாநில மாநாடு ஆகிய ஐந்தும் மட்டற்ற சிறப்புடன் நடைபெற்றன என்பதையும், அந்த ஐந்து மாநாடுகளுக்கும் செயலாளராக இருந்து அவற்றை எழில்பெற நடத்தித் தந்தவர் மணிமொழியாரே என்பதையும் அறி ◦த பலர், மாநாடுகட்குத் தேவை மணிமொழியாரின் சேவை என்று சொல்லிச் சொல்லி மகிழ்வது இயற்கையே அல்லவா ?

**நாவிறு படைத்த நல்லறிவாளர் :—**

ஒலிபெருக்கியே தேவையில்லாத கணீர் என்ற குரல், அழுத்தந் திருத்தமான சொற்கள், தெள்ளத் தெளிவான கருத்துக்கள், கேட்பவர்தம் உள்ளங்களில் பசுமரத்தாணி போற் சென்று பதியும் பேச்சுமுறை, நெஞ்சத்தில் தோன்றியதைத் தோன்றியவாறே வெளியிடும் அஞ்சாமைப் பண்பாடு, இத்தனையும் படைத்த மணிமொழியார் பேசத் தொடங்கிவிட்டால், எத்துணைப் பெரிய கூட்டமானாலும்தான் என்ன, முழு அமைதி அங்கே குடிகொள்ளும். அவருடைய சொற்பொழிவுகள் எவ்வளவு ஆற்றல் மிக்கனவாக அமைந்திருக்கும் என்பதை விளக்க ஒரே ஒரு எடுத்துக்காட்டு. அவர் 25 ஆண்டுகட்கு முன் செங்கற்பட்டு ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் நடைபெற்ற திருவள்ளுவர் விழாவில் சொற்பொழிவாற்றச் சென்றபோது அங்கு தமிழ் மரபுக்கு மாறான ஆரியக்கோலத்துடன் வள்ளுவர் படம் இருக்கக் கண்டு, 'வள்ளுவர் கண்ணீர்' என்ற தலைப்பில் பேசத்தொடங்கி, அந்தப் படத்தில் உள்ள குறைபாடுகளையெல்லாம் சுட்டிக்காட்டி, அத்தகைய பொருத்தமற்ற கோலத்தில் தம்மை உருவாக்கிக் காட்டியிருப்பதை வள்ளுவர் காண முடியுமானால் அவர் கண்ணீர் வடித்துக் கலங்குவது உறுதி என்று விளக்கிக்கூறினார். அந்தச் சொற்பொழிவைக் கேட்டு வெட்கமும் துக்கமும் அடைந்த பள்ளி நிர்வாகிகள், ஒரு திங்களுக்குள் தமிழ் மரபுக்கு ஏற்ற வேறோர் படம் வரைந்து அதன் திறப்புவிழா ஆற்றும் பணியையும் அவருக்கே வழங்கினார்கள். வாளினும் வன்மை மிக்கது சிறந்த பேச்சாளர்தம் சொல் என்பதற்கு இந்த நிகழ்ச்சி நல்லதோர் உதாரணம் அல்லவா ?

இனி, தான் சொற்பொழிவாற்றுகின்ற அரசியல் கூட்டங்களில் பகைவர்களால் குழப்பம் விளைவிக்கப்படுமானால் அதனை மிகத் திறமையாகச் சமாளிக்கின்ற ஆற்றலும் அவரிடம் உண்டு என்பதை விளக்கும் ஒரு நிகழ்ச்சியைக் காண்போம் :

1926 - ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் ஒரு நாள். காஞ்சிபுரம் ஆடிசன் பேட்டை சவுளிக்கடைச் சத்திரத்தின் முன்பு பார்ப்பனரல்லாத வாலிபர் சங்கத்தின் சார்பில் நீதிக் கட்சியின் மாபெரும் கூட்டம் ஒன்று நடைபெறுகிறது. கூட்டத் தலைவர் மணிமொழியார் தமது உரையை நிகழ்த்திக்கொண்டிருக்கிறார். காங்கிரஸ் காரர்கள் கூட்டத்தின் பல பகுதிகளிலிருந்து குழப்பம் விளைக்க முயல்கிறார்கள். தலைவர் அதனைச் சிறிதும் பொருட்படுத்தாது தமது கம்பீரமான உரத்த குரலில் பேசிக்கொண்டே இருக்கிறார். குழப்பக்காரர்கள் திடீரென எழுந்து நின்று கூச்சலிடத் தொடங்கினர். தலைவர் கூட்டத்தைச்சுற்றிக் கண்ணோட்டம் விட்டார். சப்இன்ஸ்பெக்டர்

கூட்டத்தின் ஒரு மூலையில் கைகட்டி நின்று கொண்டிருந்தார். தலைவர் ஆத்திரத்துடன், ''சப் இன்ஸ்பெக்டர் அவர்களே! நீங்கள் இங்கே யாருக்குப் பாதுகாப்பு அளிக்க வந்திருக்கிறீர்கள்? கூட்டம் நடத்துகின்றவர்களுக்கா? அல்லது குழப்பக்காரர்களுக்கா? என் இயக்கத் தோழர்கள் என் வேண்டுகோளுக்காக நெடுநேரமாகப் பொறுமையோடு இருக்கிறார்கள். குழப்பம் விளைவிக்க முயல்பவர்களை அடக்குவதற்கு உங்களுக்கு முடியவில்லையா? அல்லது விருப்பமில்லையா? அடக்க முடியாவிட்டால் இங்கிருந்து நீங்கள் தயவுசெய்து வெளியேறிவிடுங்கள்! அவர்களை நாங்கள் பார்த்துக்கொள்கிறோம்'' என்று வீரமுழக்கம் செய்தார். போலீசார் அதன் பின்பும் தீவிர நடவடிக்கை எடுக்காமல் குழப்பக்காரர்களுக்குச் சமாதானம் கூறிக்கொண்டிருந்தனர். உடனே தலைவர் கூட்டத்தினரைப் பார்த்து, ''தோழர்களே! போலீசார் தங்கள் இயற்கையான கையாலாகாத் தன்மையைச் சொல்லாமற் சொல்லிக் காட்டிவிட்டார்கள். உங்களை இனி நான் சாந்தப்படுத்தவோ கட்டுப்படுத்தவோ முடியாதென்பதை உணர்கிறேன். காங்கிரஸ்காரர்கள் அமைதியாக இருப்பது நல்லதென அவர்கள் நன்மையைக் கருதியே தெரிவித்துக்கொள்ளுகிறேன். இல்லையேல் ஆத்திரப்பட்டு என் இயக்கத் தோழர்கள் ஏதாவது கண்ணியக் குறைவாக நடந்துகொள்ள முற்பட்டால் கூட்டத்தை நடத்தும் நாங்கள் அதற்குப் பொறுப்பாளிகளாக மாட்டோம் என்பதைக் காங்கிரஸ்காரர்களுக்கு அன்புடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்'' என்று கூறிக்கொண்டு வரும்போதே காங்கிரஸ்காரர்களில் சிலர் எழுந்து 'அதையும் பார்த்து விடுவோம்' என்று கூச்சலிட்டனர். கூச்சல் கிளம்பிய பக்கங்களிலெல்லாம் இயக்கத் தோழர்கள் பாய்ந்தனர். குழப்பக்காரர்கட்கு என்னென்ன பரிசுகள் கிடைத்தனவோ தெரியாது! சிலர் ஓடினர்; மற்றவர்கள் அனைவரும் அமைதியாக அமர்ந்தனர். கூட்டம் தொடர்ந்து இரவு 11 மணிவரை நடைபெற்று முடிந்தது. காஞ்சிபுரம் தோழர் ஏ. கே. தங்கவேலனார் அவர்கள் கூட்டத்தில் இறுதிவரை இருந்து அமைதியை நிலைநாட்டி வந்ததை இங்குக் குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை.

**கவிதை புனையும் கவின்மிகு ஆற்றல்:—**

வெண்பாப் புலி வேலுசாமிப் பிள்ளையிடம் தமிழ் நூல்களை முறைப்படிப் பயின்ற காரணத்தால் சின்னஞ்சிறு வயதிலிருந்தே கவிதை புனையும் ஆற்றல் மணிமொழியாரிடம் சிறந்து விளங்கியது. 1916ல் ஒன்பதாவது வகுப்பில் அவர் பயின்றுகொண்டிருந்தபோது அவருடைய தந்தையார் இயற்கை யெய்தினர் என்னும் செய்தி ஏற்கெனவே குறிக்கப்பட்டுள்ளது அல்லவா? அச் சமயத்தில் மணிமொழியார் கீழ்க்கண்ட கையறு நிலைப் பாடல்களைத் தானே இயற்றி அச்சிட்டார்:—

பிங்கலமே பங்குனியே என்செய்தீ
 ரெந்தையினைக்
கங்கைச் சடையனடி காட்டினிரோ—
 தங்கமர
சட்டியோடு கேட்டையே சந்ததமு
 நல்லுரைகள்
தொட்டணைத்தார் கூறிடுவார் சொல் 1

அப்பாவோ! எனைப்பயந்த வருட் செல்வா!
 குணக்குன்றே அறிவி னூற்றே!
எப்போதுந் தமிழோதி குறளருட்பா
 வாசகத்தேன் பாய்ச்சி யென்னை
இப்பாரி லொருமகனாய் வாழவைத்த
 வெந்தாய்! நீ யெங்குச் சென்றாய்?
ஒப்பாரைக் காணாதே யுளஞ்சோர
 வுடல்வாட உணர்வற் றேனே. 2

எங்குற்ரு ரெந்தந்தை எங்கொளிந்தார்
தாத்தாவே எவரே கொண்டார்
பங்குற்றுக் கைப்பிடித்த பர்த்தாவை
வற்ருத பாசத் தோடு
பொங்குற்ரு ரெங்கேநல்ல புலவருநண்
பருமெங்கே பொரேமென் றேங்கி
இங்குற்ருர்க் கருள்புரிவீ ரெழில்வதனங்
காட்டுவீ ரெந்தாய் நீரே. 3

பதினேழு வயது இளைஞனக இருந்த போதே இத்தகைய அரிய பாடல்களைப் பாடும் திறமை மணிமொழியாரிடம் காணப் பட்டது வியப்புக்குரிய செய்தியே அல்லவா?

அவருடைய அண்ணனர் பி. செ. முரு கேசனர் 19.9ல் இயற்கை எய்தியபோது 11 பாடல்களைக் கொண்ட கையறு நிலை ஒன்றையும் அவர் இயற்றி வெளியிட்டார். அந்தப் பாடல்களுள் இரண்டு வருமாறு:—

சித்தார்த்தி தையமரஞ் சேர்முன்ன
ளிற்பரையற்
சித்தார்த்தி மேவுகின்ற சீர்மகத்தில்—
சித்தார்ந்த
முந்தை முருகேசன் முற்குரிசில்
ஏகம்பன்
சந்தமலர்த் தாளடைந்தான் சார்ந்து. 1

முருகேசா என்றழைப்ப முன்பார்ப்
புலவர்
அருகேசார்ந் தாவனசெய் தாய்கா—
மருகேசா
விண்புலவர் தம்பால் விருந்துண்ணச்
சென்றனையோ
நண்புலவும் அண்ண நயந்து. 2

காஞ்சிபுரம் பச்சையப்பன் பள்ளியில் அவர் தமிழாசிரியராகப் பணியாற்றியபோது அவர் இயற்றிய வெண்பா ஒன்று செயற் கரிய செயலைச் சாதித்திருக்கிறது. அந்தக் காலத்தில் காஞ்சிபுரம் நகரசபைத் தலைவராக இருந்த திரு. சி. சாம்பசிவச் செட்டியார் அவர்கள் இவருக்கு நெருங்கிய நண்பராக இருந்தார். எனினும் இவர் வாழ்ந்துவந்த விளக்கொளிப் பெருமாள் சந்நிதி வீதியில் விளக்கின்றி இருள் கவ்வியிருந்தது. இதை நகரசபைத் தலைவருக்கு எப்படி உணர்த்துவ தெனப் பல நாள் சிந்தித்துவந்த மணிமொழி யார், ஒருநாள்,

விளக்கா ரொளிப்பெருமாள்! வீண்
பெயரே கொண்டீர்!
விளக்கற் றிருப்பதுகாண் வீதி—அளப்
பரிய
நன்றே புரியும் நகர்த்தலைவ ரீதறிந்தா
லின்றே விளக்கெரியு மிங்கு.

என்ற வெண்பாப் பாடலொன்றை எழுதி ஒருவர் மூலம் நகரசபைத் தலைவரிடம் சேர்ப் பித்தார். பாடலை எழுதியனுப்பிய அன்றிரவு 10 மணி வரை நண்பர்களோடு தெருவில் மணிமொழியார் அளவளாவிக் கொண்டிருந் தார். என்றும் போலவே அன்றும் தெருவில் இருள் சூழ்ந்திருந்தது. மறுநாள் விடியற் காலை 4 மணிக்கு வழக்கம்போல் மணி மொழியார் குளிப்பதற்குப் புறப்பட்டுத் தெருவில் வந்தபோது மணிமொழியாரின் வீட்டெதிரே நகரசபையின் விளக்குக் கம்பம் ஒன்று நாட்டப்பட்டு, அதன் உச்சியில் விளக்கொன்று சுடர்விட் டெரிந்துகொண் டிருக்கக் கண்டு பெருவியப் பெய்தினர்; வெண்பாவின் ஈற்றில் '**நகர்த்தலைவர் ஈதறிந் தால், இன்றே விளக்கெரியும் இங்கு**' என்றிருந்த கருத்து செட்டியாரவர்கள் உள்ளத்தில் எத் தகைய உணர்ச்சியைத் தந்ததோ என வியந்தபடி அன்று பகலே தமது நன்றியறி தலைக் காட்டும் கீழ்க்கண்ட வெண்பாவை எழுதித் தலைவரவர்க்கு அனுப்பிவைத்தார்.

காலன் றனைக்கடிந்த கம்பன் பலப கற்பின்
னேலவா ரின்குழலிக் கீந்தனனேசீலன்

றிருநகரின் றந்தை தெருவிளக்கைத்
தந்தா
ஞெருநொடியி லன்பவர்க்கே யோது.

ஒரே இரவில் அதுவும் பத்துமணிக்குமேல், விளக்குக் கம்பம் ஒன்றை நாட்டி, அதன் உச்சியில் விளக்கைப் பொருத்தி, அதை எரியவும் வைத்த நகரமன்றத் தலைவரின் பொதுநல நோக்கும், அத்தகைய பெருஞ் செயலைச் சாதித்த மணிமொழியாரின் வெண் பாவும், அத்தகைய பேராற்றல் படைத்த பாவினை இயற்றவல்ல அவருடைய செந் தமிழ்ப் புலமையும், எண்ணும்போதெல்லாம் சிந்தை அணு ஒவ்வொன்றையும் சிலிர்க்க வைக்கும் உண்மைகளாகும்.

1935 ஆம் ஆண்டு ஜனவரி மாத "செங்குந்த மித்திரன்" தலையங்கத்தில் பொங்கற் புதுநாளின் சிறப்புக்களை எழுதிய மணிமொழியார், அதன் இறுதியில் இயற்றித் தந்திருந்த கீழ்க்கண்ட பொங்கல் வாழ்த்துப் பாடலும் சிறப்பாக அமைந்திருப்பதைக் காண்க:

பொங்கலோ பொங்கல், பொங்கலோ
பொங்கல்!
எங்கும் இன்பம் இனிதே பொங்குக!
மங்கலம் பெருகுக; மழைவளம் சுரக்குக!
செந்தமிழ்த் தாய்மொழி செழுமையின்
உயர்க!
கைத்தொழில் வளர்க; கனகம் நிறைக!
இத்தரை எங்கணும் இன்றமிழ் மக்கள்
ஓங்குக! செல்வம் உயர்க! சீர்த்தி
பாங்குறப் பொலிக! பல்வளந் தோன்றுக!
சந்தா தார்கள் தனிச்சிறப் புறுக!
சிந்தை யருள்கூர் போஷகர் செழிக்க!
பெரும்போ ஷகர்கள் பெருமையும் பேறும்
திருவும் தாங்கி தினமும் தழைக்க!
கட்டுரை பலப்பல கவினுற வழங்கும்
இட்டர்கள் நலமெலாம் ஏந்தி வாழ்கென
அங்கங் குளிர வாழ்த்தி
பொங்கலோ பொங்கல் என்றுபொங்
குவனே!

**எழுத்தாற்றலிற் சிறந்த ஏந்தல்:--**

சீரிய கருத்துக்கள் அமைந்த சிறந்த எழுத்தோவியங்கள் தீட்டுவதில் வல்லமை மிக்கவராகத் திகழும் மணிமொழியார், அவற்றை மிக விரைவாக எழுதும் ஆற்றலும் இயற்கையாகவே அமையப் பெற்றுள்ளார். அவர் தன் கட்டுரைகளை மடமடவென எழுதுவார். அச்சுக்கூடத்தின் முன் அறை யில் அமர்ந்து அவர் வேகமாக எழுதிக் கொண்டே இருக்க, பத்து மணித்துளி களுக்கு ஒருமுறை, அச்சுக்கூடத்தின் பின் அறையிலிருந்து எழுத்துக் கோப்பவர் ஒருவர் அவரிடம் வந்து எழுதப்பட்ட தாள்களை வாங்கிச் சென்று அச்சுக் கோத்துக்கொண் டிருப்பார். எழுதிய கட்டுரையைத் திரும்ப வும் ஒருமுறை படித்துப் பார்த்துத் திருத்து வதற்கோ, அடித்து எழுதுவதற்கோ வாய்ப் பளிக்காத நிலை அது. அவ்வாறு அடித்தும் திருத்தியும் எழுதவேண்டிய அவசியமும் அவருடைய கட்டுரைகளுக்கு இருப்பதில்லை. முதலில் எழுதும்போதே அவை தெளிவும் எழிலும் திட்பமும் நுட்பமும் வாய்ந்தனவாக அமைந்துவிடும்.

இன்ன துண்டறிக்கையை இன்ன முறையில் அச்சிட்டுத் தரவேண்டும்— அதற்கு எவ்வளவு 'சார்ஜ்' என்று ஒருவர் கேட்பார். அடுத்த மாதம் முதல் ஞாயிற்றுக் கிழமை எங்கள் ஊரில் பொதுக் கூட்டம்— தாங்கள் தவறாமல் கலந்துகொள்ளவேண்டும் என்று வேறொருவர் தேதி கேட்க வந்திருப் பார். இந்த 'பாரம்' 'ரெடி' செய்திருப்பது சரிதானா—கொஞ்சம் பார்த்துச் சொல்லுங் கள் என்று அச்சுப் பொறியை இயக்குபவர் ஒரு புறம் வினவுவார். இந்த வகையில்

பல்வேறு நிலையினர் வந்து கேட்கும் பல திறக் கேள்விகளுக்கும் விடை சொல்லிக் கொண்டேதான்—அப்படி விடை சொல்லும் பணிக்கு இடையிடையே உள்ள நேரத்தில் தான் மணிமொழியார் தன் தலையங்கங்களை எழுதுவது வழக்கம். எழுதுவதற்கென்று தனியாக ஓர் இடத்தில் அமர்ந்து, அமைதி யான முறையில் சிந்தித்து எழுதுவதற்குரிய ஓய்வு அவருக்குக் கிடைப்பதே கிடையாது. பலரும் வந்து இடையிடையே 'தொந்தரவு' செய்யும் சூழ்நிலையில்தான் அவருடைய கட்டுரைகள் தீட்டப்படும் என்றாலும் அந்தக் காரணத்தால் அவற்றின் அமைப்பு முறையோ, நடையழகோ, கருத்துச் செறிவோ, சிறிதளவும் பாதிக்கப்படமாட்டா.

காஞ்சிபுரத்தில் அவர் தமிழாசிரியராக இருந்த காலத்தில் ஒரு நாள் மாலை, வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் செய லாளரும் மணிமொழியாரின் கெழுதகை நண்பருமாகிய திருவாளர் வா. தி. மாசிலா மணியார் அவர்கள் மணிமொழியாரிடம் வந்து, மறுநாள் காலை வாலாஜாபாத் பள்ளிக் கூடத்தைப் பார்வையிட்டு மகிழ்வதற்காகப் பதின்மூன்று அறிஞர் பெருமக்கள் வர இருப்பதாகவும், அவர்கள் அத்தனைப் பேருக் கும் மணிமொழியார் தனித்தனியே 13 வரவேற்பு இதழ்களை அன்றைய இரவே எழுதித் தரவேண்டுமென்றும், அவர் தன் வீட்டில் இருந்து எழுதிக்கொண்டே இருந் தால் ஒவ்வோர் தாள் எழுதி முடிக்கப்பட்ட தும் குமரன் அச்சுக்கூடத்திலிருந்து ஓர் ஆள் வந்து அவற்றைப் பெற்றுச் சென்றபடி இருப்பார் என்றும், அன்று இரவே அத்தனை யும் அச்சாகி முடியவேண்டும் என்றும், மணிமொழியார் கண் விழித்திருந்து 13 வரவேற்பிதழ்களையும் எப்படியாவது எழுதி முடித்தால், அவை அத்தனையையும் அன்று இரவே அச்சிட்டு முடிக்க அச்சக உரிமை யாளர் ஒப்புக்கொண்டிருப்பதாகவும் தெரி வித்தார். வாலாஜாபாத் பாடசாலையின்பால் பேரன்பு கொண்ட மணிமொழியார், இந்த வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு அன்றைய இரவே 13 வரவேற்புத் தாள்களையும் எழுதி முடித்தார். இவ்வளவு விரைவிலும், ஒன்றன் பின் ஒன்றாக உடனடியாகவும் எழுதப்பட் டிருந்தபோதிலும், அந்தத் தாள்கள் ஒவ் வொன்றும் ஒவ்வொரு வகைச் சிறப்புடைய தாகத் தனி எழிலுடன் திகழ்ந்தது என்பதை வா. தி. மாசிலாமணியார் அடிக்கடி சொல்லி மகிழ்வது வழக்கம். ஒரே இரவில் 13 வர வேற்புத் தாள்கள் எழுதுவது எவ்வளவு செயற்கரிய செயல் என்பதை எழுத்தாளர் களாக இருப்பவர்களே நன்குணர முடியும். அவர் தமிழாசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தபோதுதான் தந்தை பெரி யார் அவர்கள் 'இராமாயண ஆராய்ச்சி' என்னும் அரிய நூலின் முதல் பாகத்தை வெளியிட்டார்கள். அந்த ஆராய்ச்சிநூல் மணிமொழியாருடைய பாராட்டுரை பெற்று வெளிவந்தது குறிப்பிடத் தக்கதாகும்.

## செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கிய குடும்பங்கள்

காஞ்சிபுரத்தில் மணிமொழியார் அறுவை வாணிபத்தில் ஈடுபட்டிருந்தபோது, 1923ல் அவருடைய திருமணம் நடை பெற்றது. அவருடைய தந்தையார் பிறந்த ஊரும், காஞ்சிபுரத்திலிருந்து 13 கல் தொலை வில் சேயாற்றின் கரையில் அதன் சேய் போல் அமைந்திருப்பதுமாகிய பெருநகர் என்னும் சிற்றூரில் செம்மை சான்ற முறை யில் தன் வாழ்க்கைப் படகைச் செலுத்தி வந்தவர் வி. ஆ. கனகசபை முதலியார் என்னும் நல்லறச் செல்வர். செந்நிற மேனி யும் புன்முறுவல் பூத்த முகமும் அன்பு தவழும் நெஞ்சமும் அறம் பிறழா வாழ்க்கை யும் படைத்த அப் பெருந்தகையாளரின்

இரண்டாவது மகளாகிய **அபிராமி அம்மை** என்னும் அருங்குண நங்கையே, மணி மொழியாரின் வாழ்க்கைத் துணைவியாக அமையும் பேறு பெற்றவர்.

மணிமொழியாரின் தந்தையாரும் அண்ணன்மாரில் இருவரும் செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து உயர்ந்து பொலிந்தவர்கள் என்பதைத் தொடக்கத்திலேயே குறிப்பிட் டிருந்தோம் அல்லவா? மணிமொழியாரின் முன்னோர்கள் மட்டுமன்றி, அவருடைய வாழ்க்கைத் துணைவியாரின் முன்னோர்களும் நற்றமிழ்ப் புலமையில் நனிசிறந்து விளங்கி யவர்களே என்பது, பெருமகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். முன்னர்க் குறிப்பிடப்பட்ட பெருநகர் என்னும் சிற்றூரில் இந் நூற்றாண் டின் தொடக்கத்தில், மணிமொழியாரின் வாழ்க்கைத் துணைவியாரின் பாட்டனர் **திருவாளர் சொக்கலிங்க முதலியார்** என்பவரும் அன்னரின் இரண்டு உடன்பிறந்தாரும் ஆழ்ந்து அகன்ற அருந்தமிழ்ப் புலமை படைத்தவர்களாகப் பேரொளி பரப்பித் திகழ்ந்தனர். அம் மூன்று சகோதரர்களின் தமிழ்ப் புலமை குறித்து மற்றொரு பெரும் புலவராகிய வண்ணக்களஞ்சியம் **காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள்**, 1944ல் வெளி யிடப்பட்ட அன்னரின் 80 ஆம் ஆண்டு நிறைவு விழா முத்து மலரில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:—

"பெருநகர்ச் சந்நிதி வீதியில் வைத்திய லிங்க முதலியார், அம்பலவாண முதலியார், சொக்கலிங்க முதலியார் என்னும் சகோதர ராகிய மூவரும் தமிழ்ப் பெரும் புலவராக விளங்கி வந்தார்கள். இம் மூவரைப் பற்றி யும் யான் எண்ணுந்தோறும் சிவப்பிரகாச சுவாமிகள், வேலையர், கருணைப் பிரகாசர் ஆகிய மூன்று புலவர் பெருமக்களின் நினைவு வருவதுண்டு. உடன்பிறந்தாராகிய இம் மூவரும் ஒரே சகோதரியை உடையவர்களா கவும், புலவர்களாகவும், வீர சைவக் கொள்கையினராகவும் விளங்கியதனுலும், இம் மூவருள் முன்னவரும் பின்னவரும் காலஞ்சென்ற பின்னர் இடைப்பட்டவராகிய அம்பலவாண முதலியார் என்பவர் மட்டும் பின்னும் வாழ்ந்தமையாலும், சிவப்பிரகாசர் முதலிய மூவர் வரலாற்றுடன் இம் மூவர் வரலாறும் ஒத்துநிற்றல் காணலாம். இவர் களுள் மூத்தவராகிய வைத்தியலிங்க முதலி யார், மைசூர், பெங்களூர் முதலிய இடங் களுக்குச் சென்று வீர சைவ நூல்களையும் பிற சாத்திரங்களையும் பிரசங்கம் செய்தும் உபதேசித்தும் வந்தார். இவர் திருப் பாதிரிப்புலியூரை அடுத்த வண்டிப்பாளையத் தில் ஆறு திங்கள் வரையில் தங்கியிருந்து பல நூல்களைப் பிரசங்கம் செய்து வந்த போது இவரது முயற்சியாலேயே அவ்வூரில் சுப்பிரமணியர் கோவிலுக்குக் கடைக்கால் எடுக்கப்பட்டது. பின்னவராகிய சொக்க லிங்க முதலியாரின் மகள் வயிற்றுப் பெயர்த்தியே காஞ்சி மணிமொழியாரின் மனைவியாவார். இச் சகோதரர் மூவர் பாலும் தமிழ் பயின்ற மாணவர் பலராவர்."

மணிமொழியார் அவர்களின் இல்லத் தரசியார், இத்தகைய புலவர் பெருங்குடியிற் பிறந்தவர் என்பதால், தன் குடும்பத்தைப் பயனும் பண்பும் பொருந்திய முறையில் நடத்திச் செல்லும் திறமையும், செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் பழந் தமிழ்ப் பண்பாடும், தன் வாழ்க்கைத் துணை வரின பொது வாழ்வுக்கு உற்சாகமூட்டி உறுதுணையாக இருக்கும் உயரிய இயல்பும் அவரிடம் தாமாகவே அமைந்துவிட்டன. சிறப்புமிக்க குடும்பத்தைச் செம்மை சான்ற முறையில் நடத்திச் செல்லும் அந்த அம்மை யார், பல சமயங்களில் பொதுநலப் பணி களிலும் ஈடுபட்டிருக்கிறார்கள். 3-9-1939ல் திருச்சி திருவானைக்காவில் நடைபெற்ற தென்னிந்திய செங்குந்தர் மூன்றாவது மாதர் மாநாட்டின் திறப்பாளராக இருந்து அம்

மாநாட்டை வெற்றியுற நடத்தி வைத்தவர் அந்த அம்மையார் என்பது மகிழ்ச்சிக்குரிய ஒரு செய்தியாகும்.

**மணிமொழியாரின் மைந்தர்**

**பேராசிரியர் இளஞ்செழியன்**

காஞ்சி பச்சையப்பன் கல்லூரிப் பொருளியல் துறைத் தலைவராகவும் பொருளியல் பேராசிரியராகவும் தற்போது திகழ்ந்துவரும் திருவாளர் மா. இளஞ்செழியன், எம். ஏ. அவர்கள் மணிமொழியாரின் முதல் மைந்தராவார். "தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து முந்தி இருப்பச் செயல்" என்றும், "மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை என் நோற்ருன்கொல் எனும் சொல்" என்றும் வள்ளுவப் பெருந் தகையார் தெள்ளுதமிழால் தெரிவித்துள்ள இலக்கணங்களுக்கு முற்றிலும் பொருத்தமான இலக்கியங்களாகத் தந்தை மணிமொழியாரின் வாழ்க்கையும் தனயன் இளஞ்செழியனின் வாழ்க்கையும் அமைந்து, பேரொளி வீசித் திகழ்வதைத் தமிழ்த்திருநாடு நன்கறியும்.

சென்னைப் பச்சையப்பன் கல்லூரியிற் பயின்று கொண்டிருந்த இளஞ்செழியனர் 1947ல் பி. ஏ. (ஆனர்ஸ்) பட்டம் பெற்றுக் கல்லூரி மாளிகையை விட்டு வெளிவந்தவுடன் தம் தந்தை மணிமொழியாரோடு கூட்டாசிரியராக இணைந்துநின்று "போர் வாள்" என்னும் பேராற்றல் படைத்த வார இதழைத் தொடங்கிப் பல ஆண்டுகள் சீர் மிகு முறையில் அதை நடத்திவந்தது கண்டு தமிழகமே பெருமையும் பூரிப்பும் அடைந்து நின்றது. "போர்வாள்" இதழின் வாயிலாகப் பேராசிரியர் இளஞ்செழியனர் கிழமை தோறும் தீட்டி வந்த தலையங்கங்களும் பிற அரசியல் கட்டுரைகளும், எழுச்சியும் கிளர்ச்சியும் நிறைந்தனவாய், சுண்டிச் சோர்ந்த உள்ளங்களுக்கும் சுறுசுறுப்பை யூட்டும் பேராற்றல் மிகுந்தனவாய் விளங்கி வந்தன.

பெரும்புகழ் படைத்த பத்திரிகாசிரியராகத் திகழ்ந்த பேராசிரியர் இளஞ்செழியன், செந்தமிழ் மக்களின் சிந்தனைக்கு விருந்தாகத் திகழும் சீரிய நூல்கள் பலவற்றையும் இயற்றியுள்ளார். அவர் இயற்றியுள்ள நூல்களுள் "தமிழன் தொடுத்த போர்" என்னும் உரைநடைக் காவியம் தனிச் சிறப்பு மிக்க ஒன்ருகும். 1938—39 ஆம் ஆண்டுகளில் சுழன்றடிக்கும் ஒரு சூருவளியாகத் தோன்றித் தமிழகத்தையே ஒரு குலுக்குக் குலுக்கிய இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் வரலாற்றை, வீரச்சுவையும் இன்பச் சுவையும் பொங்கித் ததும்பும் முறையில் எடுத்து விளக்கும் எழில்மிகு நூல் இது. "இந் நூலின்மூலம் தமிழருக்கும் தமிழ் மொழிக்கும் நண்பர் இளஞ்செழியன் நற்ருெண்டு ஆற்றியுள்ளார். என் பாராட்டுதல். தமிழரின் இல்லந்தோறும் இந் நூலிருந்து, உள்ளந்தோறும் உணர்ச்சியை ஊட்டி, நாட்டின்மீது பூட்டப்பட்டுள்ள தளைகளை அறுத்தெறிவதற்கான அறப்போர் புரியும் ஆற்றலைத் தரும்—நிச்சயம்! ஏனெனில் இளஞ்செழியன் போர் பற்றிய விளக்கம் தந்ததோடு நிற்கவில்லை, போர் வாள் தந்து வருகிருர். எனவே இளஞ்செழியனுடைய நற்ருெண்டு நற்பயனைத் தரும் என்று கூறத் தேவையில்லை. தமிழகம் தழைக்க இந்த ஏடு பெரிதும் பயன்படும்" என்று அந்த அழகிய நூலுக்கு அளித்த அணிந்துரையில் அறிஞர் அண்ணு அவர்கள் பூரிப்புடன் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு அண்ணு அவர்களாலேயே பாராட்டிப் புகழப்பட்ட பெருமை படைத்தது அந்த இனிய நூல்.

"அறிஞர் அண்ணுதுரை", "சரிந்த சாம்ராஜ்யம்," "ஈரோட்டுப் பாதை", "இந்திய அரசியல் திட்டம்", "அஞ்சா

நெஞ்சன் வால்டேர்'' முதலியன, இளஞ் செழியனின் எழுதுகோல் வழியாகத் தமிழ கத்திற்குக் கிடைத்துள்ள வேறு சில அரிய எழுத்தோவியங்களாகும்.

உலகப் புகழ்பெற்ற—அமெரிக்க நாட் டைச்சேர்ந்த—பொருளியல் பேராசிரியர் களாகிய பிலிப் டெய்லர், ரக்னர் நர்க்ஸ் ஆகியோரால் இயற்றப்பட்ட தலைசிறந்த இரண்டு பொருளியல் நூல்களை, முறையே ''அரசாங்க நிதி இயலின் பொருளாதாரம்'', ''வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கச் சிக்கல்கள்'' என்னும் பெயரில் தமிழாக்கம் செய்துள்ளார் பேராசிரியர் இளஞ்செழியன். சுவை ததும்பும்முறையில் அவரால் வடித்துத் தரப்பட்டுள்ள அந்நூல்கள் இரண்டும் தமிழக அரசின் தமிழ் வெளியீட்டுக் கழகத் தால் வெளியிடப்பட்டுள்ளன. எம். ஏ. வகுப் பிற் பொருளியல் பயிலும் மாணவர்கட்கும், எம். ஏ. பட்டம் பெற்றபின் ஆராய்ச்சித் துறையில் ஈடுபடும் பொருளியல் வல்லுநர்க் கும் பயன்படவல்லவை அந் நூல்கள். பி. ஏ., எம். ஏ. முதலிய கல்லூரி வகுப்புகளில் பொருளியல் முதலிய இயல்களைத் தமிழில் சொல்லித் தர முடியுமா—இயல்கிற செயலா அது—என்றெல்லாம் குறுகிய மதியினர் சிலர் கோணல் கேள்விகளை எழுப்புகின்றனர் அல்லவா? அத்தகையவர்களின் அசட்டு வாதங்களைத் தவிடுபொடியாக்கவல்ல திற னும் தகுதியும் மிகுந்த அந் நூல்கள் கல்லூரி களில் தமிழைப் பயிற்று மொழியாக்கும் திட்டத்திற்குப் பெருந்துணைபுரிய வல்லவை.

தந்தை மணிமொழியாரைப்போலவே தனயன் இளஞ்செழியனும், உயர்நிலைப்பள்ளி யிற் பயின்று கொண்டிருந்தபோதே பொது நல ஆர்வமும் பேச்சுத் திறனும் எழுத்தாற்ற லும் கொண்டவராய், பொதுத் தொண்டிற் பங்கேற்கத் தொடங்கியவர் ஆவார். 1937ல் ஏழாவது வகுப்பிற் பயின்றுகொண்டிருந்த போதே, இளஞ்செழியனார், சென்னை முத்தி யாலுப்பேட்டையில் இளைஞர் ஒற்றுமைக் கழகம் என்னும் அமைப்பு ஒன்றை நிறுவி, அதன் வாயிலாகத் திருக்குறள் வகுப்புகளை யும் இலக்கியக் கூட்டங்களையும் நடத்தி வந்ததோடு, பேராசிரியர் பாலூர் கண்ணப்ப முதலியார், பேராசிரியர் மயிலை சிவமுத்து, பெரும் புலவர் பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியார், பேராசிரியர் மு. இராசாக் கண்ணு முதலிய தமிழறிஞர்களை அழைத் துச் சொற்பொழிவுகள் ஆற்ற வைத்திருக் கிறார்.

பேராசிரியர் இளஞ்செழியன் தம் கல்லூ ரிக் கல்வியை முடித்துக்கொண்டு வெளி வந்த 1947 முதல் 1949 வரை திராவிடர் கழகப் பணியிலும் 1949 முதல் பல ஆண் டுகள் திராவிட முன்னேற்றக் கழகத் தொண் டிலும் மும்முரமாக ஈடுபட்டு, தமிழகம் முழுவதிலும் சுற்றிச் சுழன்று, நூற்றுக் கணக்கான பொதுக்கூட்டங்களில் வீர வுரைகளாற்றி, திராவிடர் இயக்க வளர்ச் சிக்கு அருந்துணை புரிந்துள்ளார்.

1951-ல் திராவிட முன்னேற்றக் கழக ஆதரவில் திண்டிவனத்தில் நடைபெற்ற சமூக சீர்திருத்த மாநாட்டில் தி. மு. க. முன்னணித் தலைவர்கள் ஒவ்வொருவரும், உலகைத் திருத்திய உத்தமர்கள் ஒவ்வொரு வரின் உயர் பணிபற்றிச் சொற்பொழிவு ஆற்றினர். அந்த வரிசையில் அறிஞர் அண்ணா அவர்களின் அன்புக் கட்டளைக்கு இணங்கப் பேராசிரியர் இளஞ்செழியனால் ஆற்றப்பட்ட சொற்பொழிவு ''சிந்தனைச் சிற்பி ரூசோ'' பற்றியதாகும். அந்தச் சொற் பொழிவு அறிஞர் அண்ணா அவர்களால் பெரிதும் பாராட்டப்பட்டது என்பது இச் சமயத்தில் சிறப்பாகக் குறிக்கத்தக்க ஒரு செய்தியாகும்.

சென்னை நகரில் திராவிட மாணவர் இயக் கத்தை முதன் முதலில் தொடங்கி நடத்தியவர்

பேராசிரியர் இளஞ்செழியனே ஆவர். அவர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பி.ஏ. (ஆனர்ஸ்) வகுப்பின் முதலாண்டிற் பயின்று கொண்டிருந்தபோது, 1944ல், திராவிட மாணவர் கழகம் (Dravidian Students' Organisation) என்னும் அமைப்பை உருவாக்கி மூன்று ஆண்டுகள் அதைத் திறம்பட நடத்திவந்தார். பேராசிரியர் அன்பழகன் அவர்கள் அதன் தலைவராகவும் பேராசிரியர் இளஞ்செழியன் அதன் பொதுச் செயலாளராகவும் விளங்கிச் சென்னை நகர மாணவர்களிடையே அக் காலத்தில் திராவிட இன எழுச்சி உணர்வை ஊட்டி வந்தனர். அக் கழகத்தின் தொடக்கவிழா சென்னைக் கோகலே மன்றத்தில், அறிஞர் அண்ணா அவர்களின் கல்லூரி ஆசிரியரும் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் அப் போது ஆங்கிலப் பேராசிரியராக விளங்கிய வரும் ஆகிய திருவாளர் வரதராசன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அறிஞர் பெருந்தகை அண்ணா அவர்கள் அவ் விழாவில் அளவற்ற மகிழ்ச்சியுடன் கலந்துகொண்டு, அரியதோர் உரையாற்றி, மாணவர் கழகத்தைத் தொடங்கி வைத்தார்.

தம் தந்தையாரைப் போலவே இளஞ் செழியனும் நூற்றுக்கணக்கான சீர்திருத் தத் திருமணங்களுக்குத் தலைமை தாங்கி நடத்தியிருக்கிறார். எத்தனையோ திருமணங் களில் தந்தையும் மகனுமாக இருவரும் சொற்பொழிவாற்றியிருக்கின்றனர்.

### மக்கட் செல்வங்களும் திருமண நிகழ்ச்சிகளும்

மணிமொழியாருக்குப் பிறந்த மக்கள் ஐவர். அவர்களுள் முதலாவதாகப் பிறந்த வரே பேராசிரியர் இளஞ்செழியன். அன்னா ருக்கு இரண்டாவது குழந்தையாகப் பிறந்த காமாட்சி என்னும் பெண் மகவு இரண்டு வயதிலேயும், மூன்றுவதாகப் பிறந்த ஆண் குழந்தை பிறந்த சில மாதங்களிலும் இயற்கை எய்திவிட்டன.

மணிமொழியாரின் நான்காவது குழந் தையாகப் பிறந்தவரே, கல்வியிற் சிறந்து கல்லூரியிற் பயின்று பட்டம் பெற்றுப் பல ஆண்டுகள் இந்திய அரசாங்க வருமான வரித்துறையில் பணியாற்றி, இப்போது தனி முறையில் தொழில் நடத்திவரும் திருவாளர் மா. நடராசன் பி. எஸ்ஸி. ஆவார். திருவா ளர் நடராசன் பழகுவதற்கு இனிய பண் புகள் படைத்தவர்; உயரிய நட்புக்குச் சீரிய இலக்கணமாகத் திகழ்பவர்.

மணிமொழியாருக்கு ஐந்தாவது மகளா கவும் கடைசிக் குழந்தையாகவும் பிறந்த திருமகளார் — தமிழ்ச் செல்வி என்னும் பெய ருடையவர் — கல்வி கற்பதில் பேரூக்கம் உடையவராகத் திகழ்ந்து, பி. ஏ., பி. டி. பட்டம் பெற்றுச் சிறந்த முறையில் வாழ்ந்து வருகிறார்.

திருவாளர் இளஞ்செழியனுக்கும் காஞ்சிபுரம் நூல் வணிகர் திருவாளர் குப்பு சாமி முதலியார் அவர்களின் மூத்த மகள் திருமிகு சுந்தராம்பாளுக்கும் திருமணம், நாவலர் நெடுஞ்செழியன் அவர்களுடைய உயரிய தலைமையில் சென்னை கோகலே மன்றத்தில் 12—9—1951 அன்று, பல்லா யிரம் மக்களின் வாழ்த்துக்களோடு மிகச் சிறப்பாக நடைபெற்றது.

திருவாளர் நடராசனுக்கும் வேலூரை அடுத்த பூட்டுத்தாக்கு என்னும் சிற்றூரைச் சேர்ந்த திருவாளர் கண்ணப்ப முதலியார் அவர்களுடைய மூத்தமகள் திருமிகு பவுனம் பாளுக்கும் திருமணம் 6—6—1958 அன்று, பூட்டுத்தாக்கு கிராமத்தில் எழில்மிகு முறை யில் நடைபெற்றது. இந்தத் திருமணத்திற்

கும் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களே தலைமை தாங்கி நடத்திக்கொடுத்தார்கள்.

திருமிகு தமிழ்ச் செல்விக்கும், தற்போது பாளையங்கோட்டைச் சிறையின் கண்காணிப்பு அலுவலராகத் திகழும் திருவாளர் டி. இராமநாதன் பி. ஏ., அவர்களின் இளவல் திருவாளர் டி. சண்முகம் பி.ஏ.. அவர்களுக்கும் திருமணம், 1966 செப்டம்பர் 2-ஆம் நாள் சென்னை கோடம்பாக்கத்தில் டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் சீரிய தலைமையில் நடைபெற்றது.

மணிமொழியாரின் குடும்பத்தில் நடைபெற்ற இம் மூன்று திருமணங்களிலும் பேரறிஞர் அண்ணா அவர்கள் கலந்துகொண்டு தமக்கே உரிய தேன்சுவை மொழியில் சொன்மாரி பொழிந்து மணமக்களை வாழ்த்தியிருக்கிறார்கள். அதுபோலவே நாவலர் நெடுஞ்செழியன் அவர்களும், முதல் இரு திருமணங்களுக்குத் தலைமை தாங்கியும் மூன்றாவது திருமணத்தில் சொற்பெருக்கு ஆற்றியும் மூன்று திருமணங்களிலும் கலந்துகொண்டிருக்கிறார்கள். கலைஞர் கருணாநிதி அவர்கள் பேராசிரியர் இளஞ்செழியன் திருமணத்திலும் திருமிகு தமிழ்ச் செல்வியின் திருமணத்திலும் மட்டற்ற மகிழ்ச்சியுடன் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கியுள்ளார்கள்.

1933 ஆம் ஆண்டுவரையில் காஞ்சிபுரத்தில் வாழ்ந்துவந்த மணிமொழியார் அவர்கள், அந்த ஆண்டின் இறுதியிலிருந்து 1958 வரையில் சென்னை முத்தியாலுப்பேட்டையில் வாழ்ந்துவந்தார்; 1958 முதல் சென்னை கோடம்பாக்கத்தில் வாழ்ந்து வருகிறார். கோடம்பாக்கம் ஆற்காட்டுச் சாலையில் அவர் கட்டிய 'குறளகம்' என்ற புதுமனையின் குடிபுகுவிழா 1961 ல் அறிஞர் அண்ணா அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அந்த எழில்மிகு விழாவில், கலைஞர் கருணாநிதி, நாவலர் நெடுஞ்செழியன் ஆகியோரும் திருவாளர் மதியழகன் அவர்களும் வேறுபல தி. மு. க. தலைவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

**உயரிய பண்புகளின் உறைவிடம் அனையவர்**

பலவகை நெருக்கடிகள் நிறைந்த இந்தக் காலத்தில் ஏற்றம் மிக்க முறையில் எழுபது ஆண்டுகள் வாழ்ந்து, பொதுமக்களால் போற்றிப் புகழ்ந்து பாராட்டப்படும் பெரும் பேறு மிகச் சிலருக்கே கிடைக்கமுடிகிறது. அத்தகைய பெறற்கரிய பேற்றைப் பெற்றுப் பேரொளி வீசிப் பொலியும் மணிமொழியார் அவர்கள், பிறர்க்கு உதவி செய்வதில் பேரார்வம் படைத்தவர். அவரிடம் பொருளுதவி பெற்றுப் பெருநிலை எய்தியோர் எண்ணற்றோர்; அவருடைய பரிந்துரைக் கடிதங்களாலும் நேர்முக அறிமுகத்தாலும் வாழ்வில் உயர்ந்தவர்கள் பன்னூற்றுக் கணக்கினர்; அவருடைய அறிவுரைகளாலும் ஆய்வுரைகளாலும் தங்கள் துயரங்கள் தீர்ந்து இன்பபுரியில் உலவியவர்கள் எத்தனையோ பேர். 'இன்ன கல்லூரியில் இன்ன வகுப்பில் என் மகனுக்கு இடம் பெற்றுத் தரவேண்டும்' என்றும், 'இன்ன அலுவலகத்தில் இன்ன வேலை காலியாக இருக்கிறது; இன்னாரிடம் ஒரு வார்த்தை சொன்னால் என் மைத்துனனுக்கு அது கிடைத்துவிடும்' என்றும், 'என் அண்ணன் பிள்ளைக்குப் பதவி உயர்வு கிடைக்க உங்கள் உதவி தேவை' என்றும் வேண்டுகோள் விடுத்தபடி நாள்தோறும் மணிமொழியார் அவர்களிடம் எண்ணற்றோர் வந்தபடி இருக்கின்றனர்—சென்ற நாற்பது ஆண்டுகளாக. அத்தனைப் பேரையும் அன்புடன் வரவேற்று, புன்முறுவலுடன் அவர்களுடன் உரையாடி, தன்னால் இயன்ற உதவிகள் அத்தனையையும் அவர்களுக்குச் செய்து, அவர்களுக்கு மகிழ்

வூட்டித் தானும் மகிழ்ச்சி அடைந்து வருபவர் மணிமொழியார் அவர்கள்.

''தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்காக்கு ஒன்று வேளாண்மை செய்தற் பொருட்டு'' என்னும் திருக்குறளின் செவ்விய கருத்தைத் தன் அன்றாட வாழ்வின் அடிப் படையாக அமைத்துக்கொண்ட மணிமொழி யார், உயரிய பண்புகள் அத்தனையும் ஒன்று திரண்டு ஓர் உரு எடுத்தாற்போல அமைந் திருப்பவர்; எண்ணற்ற துயரங்கள் அணி அணியாக வந்தாலும் அணுவளவும் கலங் காமற் பணியாற்றும் உள்ள உறுதி படைத் தவர்; இன்னுச் செயல் செய்தார்க்கும் இனியவே செய்து, இன்னுச் சொல் புகன்ற வர்க்கும் இனியவே புகலும் சால்புடைமை வாய்ந்தவர்; விடியற்காலை 5 மணி முதல் இரவு 11 மணிவரை அலுப்பின்றி உழைக்கும் ஆர்வமும் ஆற்றலும் உடையவர்; துளியள வும் பழுது கூறமுடியாத தூய வாழ்வு வாழ் பவர்; ''ஒழுக்கம் விழுப்பம் தரலால் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்'' என்னும் பொய்யா மொழியாரின் பொன்மொழியையே தன் வாழ்க்கைக்கு வழிகாட்டும் வான் பொரு ளாகக் கொண்டு உன்னத முறையில் வாழ்ந்துவரும் விழுமிய நிலையினர். தூய்மை, வாய்மை, இனிமை, எளிமை, ஒப்புரவு, சான்ருண்மை, உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசாத உயர் தன்மை, பிறர் வாழத் தான் வாழும் பெருந்தகைமை, இன்னபிற சீரிய இயல்புகளை யெல்லாம் பெற்று, அரசியல உலகத்திற்கு ஒரு கலங்கரை விளக்கமாய், திராவிடர் இயக்கத்திற்கு ஒரு தன்னிகரற்ற வழிகாட்டியாய், பொதுவாழ் வின் பேராற்றலுக்கு ஓர் உயரிய எடுத்துக் காட்டாய், இளைஞர்களெல்லாம் பார்த்துப் பின்பற்றத்தக்க இலட்சிய வாழ்வை உடை யவராய்த் திகழ்ந்துவரும் பெருமகளுர் மணி மொழியார் அவர்கள்.

இருபதாம் நூற்ருண்டில் தமிழகத் திற்குக் கிடைத்துள்ள கிடைத்தற்கரிய செல்வமாகப் பொலியும் மணிமொழியார் அவர்கள், எழுபது வயதை முடித்துவிட்டு, எழுபத்தோராம் வயதில் அடியெடுத்து வைப்பதைக் கண்டு பெருமகிழ்ச்சியடைந் துள்ள தமிழ்த் திருநாடு, அன்னாரின் எழுபத் தோராவது பிறந்தநாள் விழாவைப் பீடும் பெருமையும் பின்னிய முறையில் கொண் டாடுவதில் வியப்பென்ன இருக்கமுடியும்? கதிரவன் வருகை கண்ட கமலங்கள் மகிழ்ச்சியால் மலர்ந்து மணம் வீசித் திகழ்வது இயற்கை. கார்மேகங்கள் வானகத் தில் திரள்வதைக் கண்டதும் கானகத்து மயில்கள் தோகை விரித்துத் துள்ளியாடு வதும் இயற்கை. இவற்றைப்போலத்தான் சென்ற ஐம்பத்திமூன்று ஆண்டுகளாகச் செம்மை சான்ற பணிகளை இடைவிடாது ஆற்றிவரும் இணையற்ற வரலாற்றை உடைய மணிமொழியார் அவர்களுக்கு எழுபத்தோ ராவது பிறந்தநாள் விழா என்றதும் செந் தமிழ் நாட்டின் சிந்தையில் தேனுறு பாய்ந்து, தென்றல் வீசுவதும் இயற்கை. தமிழகம் முழுவதும் பொங்கிப் பெருகிப் பரவியுள்ள இம் மகிழ்ச்சி வெள்ளத்தில் நாமும் நம் இன்பத் துள்ளலை இணைத்துக்கொள்ள விழைகிறேம். பெருந்தகையாளர் மணி மொழியார் அவர்கள், எல்லாவகை வளங் களும் முழு அளவிற் பெற்று, நீண்ட நெடுங் காலம் நன்கினிது வாழ்க என மனமார வாழ்த்துகிறேம்.

வாழ்க மணிமொழியார்!

வெல்க அவர் தொண்டு!



## காஞ்சி மணிமொழியார் அவர்கட்கு

அன்னாரின் 71ஆம் ஆண்டுப் பிறந்த நாள் விழாவின் போது

### எங்கள் நல்வாழ்த்துக்கள்



# சென்டெக்ஸ்

கைத்தறி துணிகள்

- படுக்கை விரிப்பு
- அலங்கார துணிகள்
- தலை அணை உறைகள்



*சென்டெக்ஸ் — உலகெங்கிலும் உள்ள இல்லங்களை அழகுபடுத்துகிறது*

சென்னிமலை நெசவாளர் கூட்டுறவு உற்பத்தி & விற்பனைச் சங்கம் லிமிடெட்., சென்னிமலை

ELEGANT



MOULIS

×





காஞ்சி மணிமொழியாரின் தந்தை செங்கல்வராயனும், மூத்த அண்ணன் முருகேசனும்





காஞ்சி மணிமொழியார் தலைமையில் தொடக்கப்பள்ளி நிர்வாகிகள் மாநாடு

வாழ்க பல்லாண்டு காஞ்சியின் மணி விளக்கு திரு. காஞ்சி மணிமொழியார்

காஞ்சியின் தர ான பட்டுச் சேலை உற்பத்தியாளர்கள் :

**காஞ்சிபுரம் திருவள்ளுவர் பட்டு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு உற்பத்தி விற்பனைச் சங்கம் லிமிடெட்** நெ. G. 2054

207, காந்தி ரோடு; காஞ்சிபுரம்-1.

போன் : 222

தந்தி :. திருகோசில்க்

---

*With best compliments from*

**RAJHANS CORPORATION**

MANUFACTURERS, AGENTS, SUPPLIERS AND CONTRACTORS

10, TREVELEYAN BASIN STREET

MADRAS - 1

Phone: 34807 (3 Lines)

35046 (Factory)

---

Estd: 1931

Phone: 25730 Grams: COOPLOOM

**கோயமுத்தூர் தேவாங்கநெசவாளர் கூட்டுறவு உற்பத்தி & விற்பனை சொசைட்டி**

15137, ஒப்பணக்கார வீதி,

கோயமுத்தூர்-1

100s நூல், கோரு சில்க் சேலைகள் நவீன டிசைன்களில் 88" ஸ்டில் பண்ணையில் தயாரிப்பவர்கள்



39 வருடங்களாக புகழ்பெற்று விளங்கி வரும் நம்பிக்கையான "கோவை தேவாங்க" சேலைகளையே கேட்டு வாங்குங்கள்.

S. V. நடராஜன், தலைவர்.

---

**REPUTED FOR QUALITY PRODUCTION**

Phone : 331.

Grams : Power Loom

H. O : SANKARANAINAR KOIL Phone : 243

**SANKARA SUBBIAH & CO.,**

Prop : GOMATHY SANKAR WEAVING MILLS.

SAKTHI NAGAR, RAJAPALAIYAM.

Manufacturers of:

**Superior Quality Powerloom Dhothies, Longcloth and Grey Gadas**

OUR MOTTO : CUSTOMER'S SATISFACTION.

"நாட்டிலே உற்பத்தி பெருக்கென்றால் -
அதைவிடுத்து
வீட்டிலே உற்பத்தி பெருக்குகின்றார்...



முத்தென்றும்
மணியென்றும்
சிட்டென்றும்
சிமிழென்றும்
கண் என்றும்
மூக்கென்றும்
கணக்கின்றிப் பெறுதல் விட்டு
நெல் என்றும்
வரகென்றும்
கரும்பென்றும்
உளுந்தென்றும்
பருப்பென்றும்
எள் என்றும்
கொள் என்றும்
உணவைப் பெருக்கிடுவீர்
உற்பத்தி செய்திடுவீர்...."



தமிழக முதல்வர்

கலைஞர் மு. கருணாநிதி.

அடுத்த குழந்தை இப்போது வேண்டாம்
மூன்றுக்குமேல் எப்போதும் வேண்டாம்.

M. Gurusamy

தமிழ்நாடு சுகாதார குடும்பநலத்துறை அலுவலகம், சென்னை-6.

Radha Offset Press, Madras-13